| | | |
|---|---|---|
| பதிப்பு | : | முதல் பதிப்பு : திபி.2027. மீனம் 3 (16.3.96) |
| நூல் தலைப்பு | : | நூறாசிரியம் |
| உள்ளடக்கம் | : | இலக்கியம் (செய்யுள் –உரையுடன்) |
| ஆசிரியர் | : | பாவலரேறு பெருஞ்சித்திரனார் |
| வெளியீடு | : | தென்மொழி நூல் வெளியீட்டு, விற்பனையகம், 5, அருணாசலத் தெரு, சென்னை- 600 005. |
| அச்சாக்கம் | : | தென்மொழி அச்சகம் சென்னை -5 |
| உரிமை | : | தாமரை பெருஞ்சித்திரனார். |
| தாள் | : | வெள்ளைத்தாள், 60 பரப்பெடை(G.S.M) எண் மடிதெம்மி |
| பக்கங்கள் | : | 24 + 432 |
| அளவு | : | ‘21 செமீ. X 13 செமீ’ |
| படிகள் | : | 1500 |
| விலை | : | உரு. **100/-** மட்டும் |

# பதிப்புரை

பாவலரேறு ஐயா அவர்களின் மறைவிற்குப் பிறகு அவர்தம் முதற் (64-ஆம் அகவை) பிறந்த நாளை யொட்டி, விரிவான உரையுடன் கூடிய *'நூறாசிரியம்'* என்னும் இச் சிறந்த பா நூலை முழுமையாக வெளிக்கொணர்வதில் பெருமை கொள்கிறோம்!

இந் நூலின் முதற்பத்துப் பாக்கள் முதற்பகுதி-முதற் பதிப்பாக, திபி. 2010 (1979) ஆம் ஆண்டு வெளிவந்தது. அதைத் தென்மொழி அன்பரான புலவர் வண்ணாங்குண்டு திரு.சிவசண்முகம் - கலாவதி இணையர் தம் திருமண பரிசாக வெளியிட்டு வழங்கினார். அதன் இரண்டாம் பதிப்பு, தென்மொழி அமைச்சராக இருந்த சீரிய தமிழ்த்தொண்டர் திரு. அழ.இளமுருகன் தம் அச்சகத்தில் அச்சிட்டு, திபி. 2017 (1986). இல் வெளிக்கொணர்ந்தார். அடுத்த பத்துப் பாக்கள் கொண்ட இரண்டாம் பகுதி திபி. 2012 (1981)இல் ***'கோவை – பெருஞ்சித்திரனார் நூல் வெளியீட்டுக் குழு'*** வினரால் வெளியிடப் பெற்றது. அவற்றில் ஐயா அவர்களின் பதிப்பு முன்னுரைகள் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு:

**முதற் பதிப்பு முன்னுரை**

***'நூறாசிரியம்'*** எனும் இந் நூல் நூறு ஆசிரியப் பாக்களைக் கொண்டது. ஆசிரியப்பாக்கள் அகவற்பாக்கள். ஆசிரியம் என்பது யாப்பையும் அகவல் என்பது ஓசையையும் குறிக்கும். ஓசையால் பெயர் பெறுவது ஆசிரியம் ஒன்றே. 'சீர்சால் அகவல்' எனும் சிறப்புற பேசப் பெறுவதிப் பா வகை. இப்பாவகை 'ஆசிரியம் ' எனப்படுவதால் இதன் தலைமை நிலை விளங்கும். பழஞ் செய்யுட்களுள் இதுவே பெரும்பான்மையாக நிற்கும் பா வகையாம். எளியார்க்கு எளியதும் வலியார்க்கு வலியதுமான இப் பா வகை, தமிழ் யாப்பு முறையில் முதல் தோற்றமாகவும் இருத்தல் வேண்டும் என்றும் கருதற்பாலது.

இதன் பெரும்பாலான பாக்கள், 'தென்மொழி' முதன் முதல் தொடங்கப் பெற்று, இடைநின்ற ஓராண்டுக் காலத்து (5-9-61-இல் தொடங்கி 21-11-62 முடிய) எழுதப்பெற்றன. (பிற, சில ஆங்காங்கே காலங்கருதி எழுதப்பெற்று, இதனுள் சேர்க்கப் பெற்றன.) கிடைத்த ஓய்வு வீணே கழிய ஒருப்படாத என் உணர்வுள்ளம் இந்நூலின்கண் நின்று திளைத்தது என்று கூறின் மிகையாகாது.

பாகுபாடின்றி அவ்வக்கால் எழுந்த உணர்வுகளை யெல்லாம் ஒருங்கு

திரட்டி எழுதப் பெற்றது இந்நூல். உண்மையும் திண்மையும் வாய்ந்த கருத்துகளை யாவரும் அறிதற்பொருட்டு இந்த யாப்பைத் தேர்ந்தெடுத்தேன். பாத்தளைகளால் பெரிதும் கட்டப்பெறாமல் சிறுசிறு சீர்களால் தொடுக்கப் பெற்ற பா வடிகள் நிரம்பியவாகலின் இப்பாக்கள் அருமுயற்சியின்றி ஐந்தாறு முறை படித்த அளவிலேயே மனத்தகப்படுக்கும் தன்மை வாய்ந்தவை. இவற்றின் பிற சிறப்புகள் படிப்பாரின் உணர்வுக்கும் அறிவுக்கும் கண்ணோட்டத்திற்கும் உரைகற்களாக நிறுத்தப்பட்டன.

இதிலுள்ள நூறு பாக்களும் வேறு வேறு கருத்துகள் பற்றியியங்குவன. பாடல்கள் அகம். புறம் என்னும் இருதிணைகளாகவும், பல்வேறு துறைகளாகவும் பகுக்கப்பெற்றுள்ளன. காலம் ஒட்டிச், சில புதுமுறைக் கருத்துகளும் இதில் சேர்க்கப்பெற்றுள்ளன.

பாடல்களுக்குப் பொழிப்பும் விரிப்பும் கொடுக்கப் பெற்றுள்ளன. தமிழ் நலம் நாடுவோர்க்கும், இலக்கிய நலந் துய்ப்பார்க்கும் அவை பெரிதும் துணையாகவிருக்கும். புரையும் கறையும் நிறைந்த போலி இலக்கியப் படைப்பு மிகுந்த இக்காலத்து நிறையும் விரையும் கலந்த இத்தகைய நூற்கள் வாழ்க்கைக்கு ஒளியும் வழியும் காட்டுவன என்பதைப் படிப்பார் தெள்ளிதின் உணர்வார்.

*நூறாசிரியம் – முதல் பகுதி* எனும் இந்நூல், முதற் பத்துப் பாட்டுகளையும் உரைகளையுமே கொண்டது.

இது, நெடுநாளைய தென்மொழி அன்பரும், சிறந்த தனித்தமிழ்ப் பற்றாளரும், புலவரும் ஆகிய வண்ணாங்குண்டு, திரு.சிவசண்முகம்–செல்வி கலாவதி ஆகியோர் திருமண விழாவில் வெளியிடப் பெறுகிறது. தம் திருமண மங்கல விழாவின் அன்புப் பரிசாக இதனை அச்சிட்டு வழங்குவித்த மணமகன் புலவர் திரு.சிவசண்முகம் அவர்களுக்கும், அவர்களின் தமிழ் விழைவிற்கிசைந்த அவர் தந்தையார் திரு.அ.மு.இராமமூர்த்தி அவர்களுக்கும் என் நெஞ்சு நிறைந்த நன்றியும் வாழ்த்துகளும் என்றும் உரியவாகுக.

*திபி. 2010. விடை, 24 (7–6–79)*

## இரண்டாம் பதிப்பு முன்னுரை

உரைநடை என்பது ஒரு செடி போன்றது என்றால் அதன் பூக்களைப் போன்றவையே பாடல்கள்.

முழுமையான பொருள் தரும் பொருத்தமான அழகிய சொற்கள். தகுதியான முறையில், நிரல் நிறையாக உணர்வு ஒழுங்கிற்கு ஏற்ப அமைக்கப் பெறுவதே பாட்டு. இதில் கருத்துகள் பூக்களின் மணத்தைப் போன்றவை.

உரைநடையில் தனித்த ஓர் அடியே முழுப்பொருளையும் தந்துவிட

முடியாது. பாட்டில் இணைந்த இரு சொற்களே, சில விடங்களில் ஒரே சொல்கூட, முழுப் பொருளையும் தந்துவிடும்.

உரைநடையில் ஒருபக்கம் எழுதுவதைப் பாட்டில் ஒரு வரியில் எழுதிக் காட்டிவிட முடியும்.

*"பகுத்தாய் வார்க்குத் தொகுத்தவை விளங்கா"* (பாடல் 1; வரி 10) என்னும் ஒரு வரியில் உள்ள கருத்தை உரை நடையில் எத்தனைப் பக்கம் எழுதினாலும் விளக்குவது கடினம். எனவே பாடல் விதை போன்றது; உரைநடை அதனின்று வளர்ந்து எழும் மரம் போன்றது. கருத்துகளை நன்கு மனத்தில் அடக்கிக் கொள்ளவும், மீண்டும் அதை நினைவுகூரவும், பிறரிடம் எடுத்துக் கூறவும், காலத்தால் நிலைத்து நிற்கவும், பாடல் வடிவம் துணை நிற்கிறது.

எனவே, பாடல் நிலைக்கிறது; சுவை தருகிறது; அது தொடர்பான கருத்துகள் விரிய அடித்தளமாகிறது.

முன்னோர் கருத்துகளை அடக்கிய பாடல், உரைநடை என்னும் இரண்டு எழுத்து வடிவங்களின் பாடலே மிகுதி; பல்லோராலும் படிக்கப்பெறுகிறது; காலங்காலமாய் நினைவுகூரப்பெறுகிறது; காலத்தாலும், இடத்தாலும், மக்கள் பெருக்கத்தாலும், உலகியல் நடை மாற்றங்களாலும் அழிந்து போகாமல் பாடல் தன்னை மீண்டும் மீண்டும் உயிர்ப்பித்துக் கொள்கிறது.

நல்ல பாடல், பொதுவான பாடலை விட இன்னும் மிகுதியான உள்ளுயிர்ப்பும் ஆற்றலும் கொண்டு விளங்குகிறது.

*நூறாசிரியப்* பாடல் ஒவ்வொன்றும் அந்த வகையைச் சேர்ந்தது.

படிப்பதற்கும், மனத்தில் பதிப்பதற்கும், பயில்வதற்கும் எளிமையும், இனிமையும், சுவையும், ஆழமும், அகற்சியும் கொண்டு விளங்குபவை இப் பாடல்கள்!

பேச்சு ஆரவாரமும், உரைநடை அகற்சியும், உணர்வுச் சிதர்வுகளும் பரவலாகக் குமிழியிடும் இக்காலத்திற்கு, இத்தகைய பாடல்கள், படிப்பதற்கு கடினமாகவும், விளங்கிக் கொள்வதற்குச் சற்று ஆழமாகவும் இருப்பன போல் தோன்றலாம்.

ஆனால். அறிவு வளமும் மனநலமும் கொண்ட, தமிழ் இலக்கிய ஈடுபாடுடையவர்களுக்கு, இப்பாடல்கள் மிகு சுவையும் இன்பமும் பயப்பவை! அறிவுணர்வை வளர்த்தெடுப்பவை! மனத்தை மேலும் நலமடையச் செய்பவை!

நேரடியாக இதுபோலும் இலக்கிய வடிவங்களைச் சுவைக்க இயலாதவர்கள்

இவற்றின் ஈடுபாடுடைய பிறர் வாயிலாக இவ்விலக்கியத்தின் சுவை நலன்களையும் கருத்து வளங்களையும் கேட்டுணர்வார்களாயின், பின்னர் அவர்களும் தாமே இவைபோலும் இலக்கியங்களைப் படிக்க அவாவி நிற்பார்கள் என்பது உண்மை.

இலக்கியங்கள் இயற்கைக் காட்சிகளைப் போன்றவை!

பொருள் நசையும் உலகியல் நாட்டமும் உடைய புல்லிய அறிவுடையவர்கள், இயற்கையின் அழகையும் அமைதியையும் உணர முடியாதது போலவே, இலக்கிய நயங்களையும் உணர்ந்து சுவைக்க இயலாது! அவர்கள் போன்றவர்களுக்கு இப் பாடல்கள் ஒரு கால் தேவை இல்லாமல் போகலாம்!

ஆனால், அத்தகையவர்களும் இப் பாடல் வரிசையுள் உள்ள ஒரு பாடலை மட்டும், பிறர் வழியாகச் சுவைத்துப் பார்ப்பார்களாயின், கட்டாயம், அவர்களையும் இப் பாடல்கள் ஈர்த்துத் தம்முள் அடக்கும் என்பதில் ஐயமில்லை.

இவ்விரண்டாம் பதிப்பை முன்னாள் தென்மொழி அமைச்சரும், உறைத்த தென்மொழித் தொண்டரும் எமக்குப் பல்லாற்றானும் துணை நின்று நலம் பயக்கும், தூய மெய்த்தமிழ் அன்பரும், ஆகிய திரு. அழ.இளமுருகன் தம் அச்சகத்திலேயே அச்சிட்டு உதவியுள்ளார்.

அவர்க்கு எம் வாழ்த்தும் நன்றியும் உரியவாகுக.

*நளி. 8. தி.பி. 2017 (24.11.86)*

## இரண்டாம் பகுதிச் சிறப்பு முன்னுரை

*நூறாசிரியம் – இரண்டாம்பகுதி* எனும் இந்நூல் இரண்டாம் பத்துப் பாட்டுகளையும் உரைகளையும் கொண்டது.

இது, கோவை, பெருஞ்சித்திரனார் நூல் வெளியீட்டுக் குழுவினரால் வெளியிடப் பெறுகிறது.

நம் நூல்கள் காலத்தால் வெளிவர வேண்டும் என்பதும், அவற்றால் தமிழின மக்கள் பயன்பெற வேண்டும் என்பதும், நூல் வெளியிட்டுக் குழுவினின் கொள்கை. வாணிக நோக்கமும், மிகுந்த ஊதியக் கொள்ளையடிப்பும் அவர்களின் மன விருப்பமாக இருத்தல் இயலாது. ஏனெனில், நம் நூல்கள் அவற்றிற்கு நேர்மாறான விளைவுகளையே அவர்களுக்கு உண்டாக்கித் தருவன.

எனவே, உண்மைத் தமிழ்த் தொண்டும், நேர்மையான முன்னேற்றமுமே கருதி, பெருஞ்சித்திரனார் நூல் வெளியீட்டுக் குழு, இது போலும் நூல்களை வெளியிட உறுதி கொண்டிருத்தல் வேண்டும்.

அவர்களின் உறுதிக்கும், துணிவிற்கும் என்றும் நம் நன்றியும் வாழ்த்தும் அவர்களுக்கு உண்டு.

அவர்கள் முயற்சி வெல்க.

தமிழினம் அவர்கள் முயற்சிக்குத் தோள்தந்து துணை நிற்குமாக!

*மேழம் 19, தி.பி. 2012 (1–4–81)*

*நூறாசிரியத்தின் பாடல்கள் யாவும் செறிவாக அமைந்திருத்தலின் அவை தெளிவான பொருள் விளக்கத்துடன் வெளிவர வேண்டும் என்னும் நோக்கொடு ஐயா அவர்கள் தென்மொழியில் இடையிடையே வெளியிட்டு வந்தார்கள் அவ்வாறு வெளிவந்தன அறுபத்தாறு பாடல்கள் ஆகும்.*

*அவ்வாறு உரையுடன் வெளிவந்த அறுபத்தாறு பாடல்கள் போக ஏனைய பாடல்கள் உரையெழுதப் படாமலே இருந்தன. அம் முப்பத்து நான்கு பாடல்களுக்கும் திருக்குறள் மணி புலவர் **இறைக்குருவனார்** அவர்கள், ஐயா அவர்களின் நோக்கிலும் போக்கிலுமாக உரை எழுதி நிறைவுபடுத்தியிருக்கிறார்கள். ஐயா அவர்களின் இந் நூறாசிரியப் பாக்களுக்கு அறிவியல் அறிவொடு, வாழ்வியல் நுண்மாண் நுழைபுலம் சான்ற, தமிழ்ப் புலமையிலும் வல்லாரே உரையெழுதவியலும். இத் தகுதிகளுக்குரிய புலவர் இறைக்குருவனார் இக்குறுகிய காலத்து வலிய பணியை எடுத்துக் கொண்டு, அதைச் செவ்வனே செய்துள்ளார்.*

*இந்நூறு பாடல்களுக்குமேல் இத்துடன் இணைந்துள்ள 24 பாடல்கள் பின்னிணைப்பாக இந்நூலிலேயே அமைந்துள்ளன. அவை காலத்தால் உரையுடன் பின்பு வெளியிடப்பெறும்.*

*இந்நூலை, ஐயா அவர்களின் மறைவிற்குப் பிறகு முதல் நூலாகத் 'தென்மொழி நூல் வெளியீட்டு விற்பனையகம்' வெளிக் கொணர்ந்துள்ளது.*

*இந்நூலைப் பதிப்பித்து வெளிக்கொணர்தற்கு இதன், வடிவமைப்பு, அச்சீடு, பிழைதிருத்தம் முதலான பல்வேறு பணிகளில் திருவாளர்கள் மா.பூங்குன்றன், பாவலர் முல்லைவாணன், கி. குணத்தொகையன், மா.பொழிலன், திருவாட்டி குணவழகி, திரு. ஈகவரசன், வேங்கடேசன், இளங்கோவன் ஆகியோர் மனம் ஒன்றி ஈடுபட்டது குறிப்பிடத்தக்கது.*

*தமிழ் கூறும் நல்லுலகம் இந்நூற்பயன் கொண்டு சிறக்கும் என்று பெரிதும் நம்புகிறோம்.*

***தென்மொழி நூல் வெளியீட்டகத்தினர்***

# அணிந்துரை

**ப. அருளி**
ஆய்வறிஞர்/துறைத்தலைவர்
தூயதமிழ்ச் சொல்லாக்க அகரமுதலிகள் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம் – தஞ்சாவூர்.

இவ் ஆசிரியப்பாத் தொகையை யாத்தளித்த ஆசிரியர் பெருந்தகையாகிய நம் பாவலரேறு ஐயா அவர்கள் இன்று நம்மிடையே இல்லை!- என்னும் நெஞ்சக் குமுறலோடு இவ் அணிந்துரை ஈண்டுப் புறம்பெயர்கின்றது! தொண்டு என்பதையே வாழ்க்கைப்பாடாய்க் கொண்டு- பீடு நிரம்பிய அப் பெரும்பணியில் தம்மையும் தமரையும் பின்னிப் பிணைத்திழுத்தவாறு நடையிட்ட நம் தூய்தமிழ்ச் செம்மல் - நம்மைத் தவிர்த்து முதற்புறம் பெயர்ந்து தொண்டு மாதங்கள் (ஒன்பது திங்கள்கள்) தொலைந்தன!....

இந்நூல் உள்ளடக்கிய பாட்டுகள் யாவும் தென்மொழியிதழ் தொடங்கப்பெற்று ( 1.8.59. திபி. 1990. நளி: 16) இடையறவுற்ற காலத்திற்குப் பிற்பாடு (15.4.60. திபி.1991-மேழம்:3) யாக்கப் பெற்றனவாகும். இக்காலங்களில் அவரெழுதித் தொகுத்து - வைத்துள்ள-கையால் தைத்துக் களிநிறவுரை போர்த்திய கையேடு காட்டும் உண்மையிது! முத்து முத்தாக- எழிற்பெற எழுதிச் சேர்த்து வைத்த அச் சொத்துத் திரட்சியினின்று தான்- இப்பாக்களை ஒவ்வொன்றாகத் தெரிந்தெடுத்தும் பொழிப்பும் உரைவிளக்கமும் திணை, துறை குறிப்பீடுகளும் வரைந்து தென்மொழி- சுவடி: 5 ஓலை:1- இலிருந்து வெளிப்படுத்தி வந்தார். சுவடி: 26-ஓலை: 5- வரை இவ்வகையிலான அறுபத்தாறு அருந்திறப்பாக்களுக்கு இந்நடைமுறை அடர்ந்து தொடர்ந்தது! (திபி2023. கும்பம் 1992 மார்ச்சு வரை) இவற்றின் எழுத்து வழி வெளிப்பாட்டு எழுச்சிக் காலங்களாக 1961-1962 என்னும் ஈராண்டுகளையும் குறிக்கலாம்.

இவற்றிற்கும் முன்னாண்டாகிய 1960-இல் (திபி1991-தைத் திங்களில்) வெளிப்படுத்திய பொங்கல் சிறப்பு மலரில்தான் இந்நூல் உள்ளடக்கியுள்ள பழஞ்சிறப்பு வகை நடைகொண்ட பா ஒன்று- முதன் முதலாகப் பதிவுற்றது. உலகப் பொதுவுறவு நேயங் கமழும் கருத்தடங்கிய 'கடு அணிமைத்தே' என்னுந் தலைப்பிடப் பெற்ற முதல் ஆசிரியமே- இந் நூறாசிரியத்திற்கும் முந்தி வந்தது! பொழிப்பும் இழைந்தியைந்து காட்சி தந்தது. (திருவாளர். பேரா. இலெனின் தங்கப்பா அவர்களின் ஆங்கிலப் பெயர்ப்பையும் அணைத்திருந்தது. அவை- இதில் இல!)

இம் முதலாசிரியமே இந் நூற்றாக்கத்திற்கு (நூல்+தாக்கத்திற்கு- அஃதாவது நூலொன்றே இவ்வகையில் எழுத வேண்டும் என்னும் தாக்குரவிற்கு-) வழிகோலியிருக்கக் கூடும்!

"நூறாசிரியம்" - என்னும் தலைப்பிட்டுத் தென்மொழியில் - அடுத்துத் தொடங்கியபோது-அப் பா வெளியீட்டு முன்னுரையில்-''புரையும் கறையும் நிறைந்த போலி இலக்கியப் படைப்பு மிகுந்த இக்காலத்து நிறையும் விரையும் கலந்த இத்தகைய நூற்கள் வாழ்க்கைக்கு ஒளியும் வழியும் கூட்டுவன என்பதைப் படிப்பார் தெள்ளிதின் உணர்வர்!''என்றவாறு ஐயா அவர்கள் குறிப்பொன்றும் சுட்டியுள்ளார். ஆற்றல் சான்ற - காலத்தால் கரைந்து போகாத வல்லிய மெய்யிலக்கியமாக இதனை வெளிப்படுத்தி- அதன்வழி வாழ்க்கைத் தெளிவை உண்டாக்கும் பயனை விளைவிக்க வேண்டும் என்ற கருத்துரு அவர் நெஞ்சில் முகிழ்த்து நின்ற காட்சியே-இம் மேற்குறிப்புரையிடையே மேம்பட்டுத் தோன்றுகிறது. சிறந்த இலக்கியமாக இதனை நிலைநிறுத்தவேண்டும் என்பது நம் பாவலரேற்றின் பாரிய அவா! இந்நூல் அத்தகைமையைப் பற்றி இலங்குகின்றது! நீடி நிற்பதற்குரிய பன்னூறு சிறப்புக் கூறுகள் இதனுள் பதிவெய்தியுள்ளன!

தொடக்கத்தில் நம்பா மதத்தவராகவிருந்து-பின்னர், ஓரிறை நம்பிக்கையாளராக நிலை நின்றவர்-நம் பாவலரேறு அவர்கள்! தமிழென்னும் செம்மொழியில் ஆழ அடியூன்றி - ஆரமாந்தி -ஆர்ந்த தெளிவேந்தி -ஆய்ந்து தேர்ந்த புலந்தோய்ந்து பொலிந்து ஒளிர்ந்தவர் இவர்!

தமிழ்க்கும் இவர்க்கும் எவ்வகையில் தொடர்பு என்று- இவரே ஒரு பாட்டில் விளக்குகையில் - தமிழ்தான் என் உயிர்மலர்ச்சி - உடலம்- உள்ளுணர்வு-உலகம்-கருத்தெழுச்சி-பார்வை-செவியோசை-பிறவி-முழுமுதல்தாய்-தந்தை-குரு-கல்வி-காட்சி - உயிர்த்துணைவி-குடும்பம்-உயிரின்பம்-குழவி-உறவுரிமை-சுற்றம்-உயர்வாழ்க்கை-தொண்டு- எழுத்துறவு - பேச்சு-அறிவியக்கம்-மூச்சு-உயிர்நட்பு-விருந்து-விளையாடல்-நனவு-திருமறைநூல்-கனவு-மதமெய்மம்-இறைவன்-யாவும் என்று அடுக்கமாக முழக்கமிடுகையிலேயே அவ் வெளிப்பாட்டின் உச்சி முகட்டில் "தமிழே எனக்கு இறைவன்!" என்று தலைப்பிட்டுள்ள காட்சியில்-இவரின் முழு வாழ்க்கைநோக்கமும் போக்கும் கூட நன்கு பதிவுற்றுள்ளமையை உணரலாகும்.

தமிழையும் தம் வாழ்வையும் வேறு வேறாகக் கருதவேயியலாதவாறாக அவ்வளவு ஒன்றிப் பிணைந்த கொள்கை வாழ்க்கையர் என்பதனைத்-

*தோளுக் கென்றும் தோய்வில்லை! —என்*
*தொண்டுக் கென்றும் நைவில்லை!*
*வாளுக் கென்றும் பழுதில்லை — என்*
*வாழ்வும் தமிழும் ஒன்றன்றோ?!...*

(கனிச்சாறு: தொகுதி : 3 பா: 130)

என்று வியங்கொள்ளுமாறு கேள்விவழி இவரே விடைய கர்ந்துள்ள நிலையிலும் தெளிவாகக் காணலாம். தம் உள்ளத்தையே "தமிழ்கமழ்

உள்ளம்'' என்றவாறு குறிப்பிட்டுப் (பா:9வரி:9) பீடும் பெருமையும் கொள்ளும் பேருள்ளத்தவராகிய இவரிடம் ஈடிணையில்லாத "தன்னம்பிக்கை'' என்னும் செழுஞ்செம்மார்ப்புவீறு ஓர் இயற்கைப் படிவுபோல் இயல்பாய் இழைந்திருந்ததை அணுக்கமாகத் தோய்ந்திருந்த அனைவரும் அறிகுவர்!.

தம் பாட்டில் - அதன் சூட்டில் - அது தரும் பயனில் - விளைவில் - சுவையில் - நிரம்பிய நன்னம்பிக்கை இவர்க்கு மிக்கிருந்தமையை - இவரே ஓரிடத்தில் வீறொடு கூறிய,

*"தீக்குழம் புருக்கித் தெறிக்கும் எரிமலைப்*
*பாக்குழம் பிணையொரு பழம்பாய் தடுக்குமோ?"* (கனிச்சாறு: 1:59)

என்னும் நெருப்புத் தெறிப்பு வரிகளினூடே தெளியலாம்.

யாம் எடுத்துக் கொண்ட கொள்கை- எப்படிப் பரவவேண்டும் என்று விரும்புகின்றேன் தெரியுமா?!...கேளுங்கள் என்கிறார், ஒரு பாட்டினிடையே!..

*"....எங்கோள்*
*பொறியாய் எரியாய்க் கலையாய் அனலாய்*
*குறிப்பெறச் சிதறுகஸ புயலுருக் கொள்க!*
*பொய்மையும் கயமையும் பொடிப்பொடி யாகுக"*

(கனிச்சாறு : 1:125)

1959-இல் தென்மொழியிதழைத் தொடங்கியதிலிருந்து -1995சூன் திங்கள் 11-ஆம் நாள் காலை வரையிலான முப்பத்தாறாண்டுகள்(36) கால இடைவெளியில் நிலைகுலையாத கொள்கைச் செயற்பாட்டாளராகவும், -தமிழ்மொழி-தமிழினம்-தமிழ்நாட்டுப்போராட்டக்காரராகவும் மாறாட்டமில்லாத மாட்சிமையுடன் வாழ்ந்தியங்கிய இவ்வயப்புலியாகிய நம் ஐயாவின் வாழ்க்கை - ஒரு சான்று வாழ்க்கையாகும்!

இவரின் கொள்கை வல்லுறுதி சான்ற வாழ்க்கையிடையே வெளிப்படுத்திய பன்னூறு பாக்களில் -இவ்வயிரவுறுதி நோக்கின் போக்குகளைக் காணலாம்.

அதிலொன்று இது!

*'வாழ்ந்தாலும் தமிழுக்கும் தமிழர்க்கும் வாழ்வேன்!*
*வளைந்தாலும் நெளிந்தாலும் தமிழ்ப்பொருட்டே ஆவேன்!*
*தாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் தமிழ்மேல்தான் வீழ்வேன்!*
*தனியேனாய் நின்றாலும் என்கொள்கை மாறேன்!*
*சூழ்ந்தாலும் தமிழ்ச்சுற்றம் சூழ்ந்துரிமை கேட்பேன்!*
*சூழ்ச்சியினால் பிரித்தென்றன் உடலையிரு கூறாய்ப்*

*போழ்ந்தாலும் சிதைத்தாலும் முடிவந்த முடிவே!*
*புதைத்தாலும் எரித்தாலும் அணுக்களெல்லாம் அதுவே"*

(தென்மொழி :1975)

1956-இன் தொடக்கத்தில் ஐயாவின் முதல்நூலாகிய "கொய்யாக்கனி" வெளிவந்தது. அந்நூலுக்குரிய மதிப்புப் பாமாலையில் 23 அகவையே வாய்ந்திருந்த இளையராக முன்னின்ற நம் பாவலரேறு ஐயா அவர்களைக்- "குள்ளம் எப்படி; அப்படியிலாப் பெருங்கொள்கையுடையார்! குறைகடல் எப்படி; அப்படிக் குணநிறை துரை-மாணிக்கனார்!" என்றவாறு பாவேந்தரே வாழ்த்திப் போற்றியிருப்பதிலிருந்து -நம் ஐயாவின் நீடிய கொள்கைத் தொடர் நடக்கை வெள்ளிடை மலையாய் விளங்கித் தோன்றி யொளிர் கின்றமையை விளங்கிக் கொள்ளலாகும்!

ஆற்றொழுக்கு - அரிமா நோக்கம் - தவளைப் பாய்த்து - அன்ன முத்தகைத் திறஞ்சான்ற நூற்பாக்களையும் விஞ்சுகின்ற அளவில் - நுண்மாண் நுழைபுலங் கொண்டு உத்திகளோடு இவர் வித்தியுள்ள பன்னூறு பாவித்துக்கள், - நிகழ்கால - எதிர்காலத் தமிழினம் மலர்ச்சியும் புலர்ச்சியும் மீட்சியும் ஆட்சியும் கொள்ளுதற்கென உட்கொள்ளுவதற்குரிய நல்விளைவுகளை ஆக்கவல்லன!

பாடு பொருளுக்கேற்ப யாப்பு வகையைத் தெரிந்தெடுத்துக் கொள்ளுவதிலும் - கருத்தாழம் நிரம்பிய தேர்ந்த சொற்களை உரிய இடத்திலிட்டு ஒளிரச் செய்வதிலும் படித்தவுடன் அறிவுத்தெளிவும் புலப்பொலிவும் கொள்ளுகின்றபடியான உத்திகளைக் கையாளுவதிலும் பாவலரேறு அவர்கள் வல்லிய திறப்பெருமகனார் ஆவார். எண்பொருள வாகச் செலச் சொல்லும் இந்நுண்ணுட்பத் திறப்பயிற்சியில் கரை கண்டவர் என்பதைத் தமிழ்ச் சிட்டு இதழில் குழந்தைகளுக்கும்- சிறுவர் சிறுமியர்க்கும் -பிறவற்றில் இளந்தையர்க்கும்- கற்றவர்க்கும் -ஆய்வு முற்றியர்க்கும் - புலவர்க்குமாகப் பலபடிநிலைத் தகைமைகளில் யாத்துப் புறம் விடுத்துள்ள ஆக்கங்களால் அறியலாகும். அனைத்து ஆக்கங்களும் வெளிப்பாடுகளாக அமைந்திருக்குமேயல்லாமல் - வெளிப்படுத்தங்களாக அமைந்திரா! இயல் பான சீரொழுங்கோட்டம் - அது அதற்குமுரிய பாங்கில் அமைந்தோடும்!

அகவலிசை இசைந்த ஆசிரியப் பாவகையை இந்நூலுக்கான இவர் கருதித் தேர்ந்தெடுத்தமைக்குரிய முதற்காரணம் -நுண்மையும் நொசிவும் நுணங்கும்படத் திண்ணிதாகவும் தெள்ளிதாகவும் உரிய கருத்தகலத்திற்குத் தகத் தடங்கலற்ற முறையில் இதில் யாத்தளிக்க வியலும் என்னும் வசதிப்பாடே!

கருத்தாழம் நிரம்பிய இயற்கை வேர்ப்பொருள் செறிந்த நுண்ணிய பழந்திறஞ்சான்ற வளச் சொற்களை -இவ்வகை யாப்பில் எளிதே இயைத்து நிலைநிறுத்திப் பயன் கொழிக்கச் செய்யலாம்!

உயர்ந்த பழமைச் சொத்துகள்- பயன்படுத்தப்பெறாததாலேயே பாழாகிப்போன வரலாறு தெளிந்த இவரின் நெஞ்சம்- நம் மொழி வளங்காக்கவும் - முதுசொம்மை (பிதிரார்ஜிதத்தை) நம்மவர்க்கு உரிமையாக்கவும் எண்ணிய நல்லுணர்வின் செயற்பாடும் ஆகும், இது! இருப்பவற்றையேனும் இழவாதிருக்க-இவ்வுள்ளுணர்வு இவரிடம் எழுச்சி கொண்டிருந்தது! உரிமை மறப்பை உடம்பாடாகக் கொண்டு உளுத்திழிந்து கொண்டிருக்கும் நம் தமிழர்களுக்கு உள்வலிவேற்றும் திடம்பாட்டு முயற்சியிது! ஒருவகையில், இதுவும் ஓர் உரிமை மீட்பே! "மறைந்து வரும் தமிழ்ச் சொற்கள்" என்னும் தலைப்பில் - நீண்ட தொடர்களாகத் தொடருமாறு வழக்கமழிந்து வந்த வட்டார வழக்குச் சொற்களைத் தென்மொழியிதழில் வரிசைபடத் தொகுத்து வெளிப்படுத்தி வந்ததும்- இவ்வகை முயற்சியிலொன்றே!

கொய்யாக்கனி-மகள் புகு வஞ்சி- எண் சுவை எண்பது -ஐயை முதலியன போன்ற பல்வேறு வாழ்வியல் உலகியல் இலக்கிய அமைப்புக் கருக்களையே - இத்தொகைநூலும் பெரும்பான்மையாகக் கொண்டிருக் கின்றதாகலின்-இதனை ஐயா அவர்களின் அழுந்திய கொள்கைகளின் வெளிப்பாட்டுப் படையலீடாகக் கொள்ள வேண்டியதில்லை! சில்லிடங்களில் முழுத்தும் (முழுவதும்) வாழ்க்கைத் துய்ப்புகளையே பேசுவதையும் - சில்லிடங்களில் இறையியல் நம்பிக்கை யேற்படுத்த முயல்வதையும் - சில்லிடங்களில் மெய்மவியல் சிந்தனை கொளுத்த முனைவதையும் சில்லிடங்களில் உடன் உறையும் போலியர்க்கு இரங்கியும் சினந்தும் வெறுத்தும் நோதற் கூறுதலையும் காண்கின்ற நிலைகளால் இம்மேற்குறித்த உணர்வை அனைவரும் உணர்ந்து கொள்ள நேரலாகும்.

ஆயினும்-அவ்விடங்களில் மிகப் பெரும்பான்மையின, - இலக்கியங்கள் என்ற பெயரில் இக்கால் வெளிப்பட்டாரவாரிக்கும் 'பொக்காந்தன்மை யுடைமைகளைப் பெற்றிராமல் - துய்ப்புணர்வுகளுக்குத் தீனியருத்தும்- பல்வேறு நல்லிலக்கிய நயச்செறிவுகளால் மிளிருகின்ற மெய்ம்மைகள் நல்லறிவினார் நயந்து பாராட்டும்படியே நடையிடுகின்றன. இளம்பரு வத்திலேயே கணவனையிழந்த பெண்ணுக்கு மீண்டும் மணம் புணர்த்துமாறு அறிவுறுத்தலும் (பாட்டு: 13) கணவன் விருப்பத்திற்கேற்ப தன் விருப்பத்தினை விட்டுக் கொடுக்க மனைவி இசைந்தியங்க முற்படுகையில்- கணவனானவன் அம் மனைவி விருப்பத்திற்கிசைய இயங்கும் இல்லறக் காட்சிகளை வாழ்வியல் செழிப்புற வழங்குதலும் (பாட்டு : 11) பல்வேறு கடைப்பிடிகளுக்கான நேரிய தூண்டல்களையும் இத் தொகைநூல் தொடையலிட்டிருக்கின்றது!

பாவேந்தர் - பாவாணர் - தந்தை பெரியார் - அறிஞர் அண்ணா- காமராசர் - இந்தியெதிர்ப்புப் போரில் உயிர்நீத்த - உயிர்துறந்த ஈகச் செம்மல் களாகிய விருகாம்பாக்கத்து அரங்கநாதன்- அண்ணாமலைப் பல்கலைக்

கழகத்து அரசேந்திரன் இளங்கோவன்- செஞ்சிக் கோட்டத்துத் தேவனூர்ச் செம்மல் சிவலிங்கம் முதலிய புகழுக்குரியோர்களை ஏத்தி நிலை நிறுத்திப் போற்றி நினைவுகூரும் மறத்திற்கியலா அம் மறவர்களுக்கான மாட்சிப் பாடல்கள் தொடுவான் தொட்டொளிரும் காலத்தால் தேய்தலில்லா நடுகற்களாகவே நாட்டப் பெற்றுள்ளன. மிகப்பல பாடல்களில் அன்றைய வரலாற்று நிகழ்ச்சிகள் தெருள்செறியப் பதிவாக்கம் பெற்றுள்ளன.

பொருட்செறிவும் காலப் பழமையும் வாய்ந்த பன்னூற்றுக் கணக்கிலடங்கிய அழகிய தீந்தமிழ்ச் சொற்களையும் - அவற்றின் பொருள்களையும் அனைவரும் பொதுப்பட விளங்கிக்கொள்ளுதல் மிக அரிதாதலின் இதுகாறும் வெளிப்பட்ட அறுபத்தாறு பாடல்களுக்கும் ஐயா அவர்களே சிறக்க உரை வரைந்துள்ளார். அவை எதிர்காலத்தில் இன்னும் விளக்கங்கள் பெற்றுச் சிறப்பேறும்! உரையிலையேல் இம்முயற்சி பெரும்பயன் தராது போம் என்ற நிலையுண்மை யுணர்ந்தே - இவ்வுடன் முயற்சியையும் உரிய வகையில் உரம் பெறுமாறு பிணைந்துள்ளார். அவரே - குழந்தைகளுக்கெனப் பாடியவிடத்து இவ்வுண்மையைக்-

**"கரையில்லாத ஏரித் தண்ணீர்**
**கழனிக் கென்றும் உதவாது!**
**உரையில்லாத செய்யுள் நூலோ**
**உணரார்க் கென்றும் உதவாது!"** (பள்ளிப்பறவைகள்:பக்கம்;39)

- என்றவாறு கருத்துரைப்பதினின்றும் கண்டுணரலாம்

பாடல்களில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட அருஞ்சொற்கள் ஊடாடுகின்றன! அவை மீட்சிப் பேறு எய்துதலோடு வழிவழி வழங்க இந்நூல் வழி வழிகாலும் வாய்ந்துள்ளது. இவற்றொடு புத்தம் புதிய அழகிய சொல்லாக்கங்களையும் ஐயா அவர்கள் துணிந்தியைத்துள்ளார். பழையன பேணும் உரிமைக் காப்பு வயாவும், புதியன தேறிக்கூறி வீறும் புதுமைக் கோப்பு அவாவும் இவர்க்குள்ள சிறப்புப் பண்புகள். அவற்றின் அழகசைவுகளை நூலுள் பரக்கக் காணலாம்.

புதுச் சொல்லாக்கங்கள் சில:

1. விழியிலி = குருடன்
2. பொண்மை = பொய்மை
3. போன்மை = போலிமை

"பொண்மையும் போன்மையும் மிக்க உலகத்து" (பாட்டு : 7: உரை)

4. பின்னகம் = தலைமயிர்ப் பின்னல் (பாட்டு 10:வரி:10)
5. பிஞ்சுமை = பிஞ்சாந்தன்மை (பாட்டு 11:வரி: 9. உரை)
6. கவற்சி = (கவல்+சி) கவற்சி =கவலை (பாட்டு :12. உரை)
7. தண்ணுதல் = குளிர்ச்சியுறுதல்(பாட்டு :16:6)

8. திண்ணுதல் = திணிதல்; திண்மையுடையதாதல் (பாட்டு 16:6)

தண்ணினுந் தண்ணுக ; மண்ணினுந் திண்ணுக" (பாட்டு :16:6)

9. கோணூல் = (கோள் நூல்) ; கோள்பற்றிய இயல் (பாட்டு :16:உரை)

10. திண்பாடு = திணிவுறுகை; செறிவுறுதல்

"மண்போலும் திண்பாடும் " (பாட்டு :16:உரை)

11. விழைபாடு = விருப்பப்பேறு ; விருப்பம் (பாட்டு: 24:உரை)

12. சுள்ளிக்காய் = மிளகாய் (பாட்டு :29:2)

13. ஈனாக்கன்று: செய்கன்று. ஈன்றகன்று இறந்த விடத்து வைக்கோல் முதலிய செய்பொருள்களைக் கொண்டு செய்த பொய்க்கன்று. (பாட்டு:30:2)

14. வினைந்து = வினையைச் செய்து

"வாழில் வினைந்து " (பாட்டு:33:2)

காட்சியழகும் ஆட்சியழகும் : சில இடங்கள்

1. தண்டிலா விழியிலி தவிப்பென" (பிற்பகுதி)

(உரை: ஊன்றுகோல் இல்லாத குருடன் செல்வழியறியாமல் தடுமாறித் தவித்தல் போல.)

2. "முன்னிளங் காலுறப் பின்கால் எவ்வி முட்ட" (பா:17:வரி:9-10)

(ஆட்டுக்குட்டிகள் பாலருந்தும் காட்சி)

உரை: இளமையான முன்னங்கால்களை நிலத்தே படிதலுற ஊன்றி, பின் கால்களால் எவ்வுதல் செய்து , தம் புனிற்றிளந் தலைகளான் செய்கின்ற முட்டுதலுக்கு.)

3."...................................................முகில்திரி விசும்பிற்
கயிறாடு தொம்பர்க் கைக்கழி யன்ன
உயிராரு காதற் கூன்று கோலனை" (பா:18:வரி:3-5)

4."உட்பகை நொதியும் உளத்தோர் " பா:21:9

'உரை: உள்ளே கொண்ட பகை நாளுக்குநாள் ஊறிப் புளிப்பேறும் தன்மைகொண்ட நெஞ்சினோர்."

5."கவண் முகத் துருவிய சிறுகல் போல
விசைப்பே அளவிடைப் பொழுதே" (பா:31:வரி:2-3)

(உரை: கல்லெறி கருவியின் முனையினின்று உருவிப்போகும் சிறு கல்லைப்போலும் வாழ்க்கையில் விசைப்பு-ஓர் அளவுபட்ட சிறுபொழுதே.)

6. "தமிழ்கொல் தில்லி" (பா:32:7)

7. "மஞ்சமை குன்றத்து மலர்வாய் குடைந்து
தும்பி தும்பி ஈட்டிய மூரித் தேறல்
தமிழ்பெறக் கெழீஇய தகையோர் தொடர்போல்
முற்ற முற்றச் சுவை மூவாதே" (பா:40:வரி:6-9)

8. எஞ்சிய தின்னவர்க் கிவ்வள வெனுமுன்
துஞ்சிய ரெவருந் தோன்றிலா தாரே" (பா:3:வரி:9-10)

9. 'விழைவே வேண்டலின் நனிகுறை வினதே" (பா:9:வரி:1)

இலக்கிய இலக்கணப் பயிற்சியின் தோய்வையுணர்த்தும் மிகப் பல்லிடங்கள் இந்நூலில் ஒளிருகின்றன! (அலமரல் = துயரச் சுழற்சி. (ஓ.நோ: "அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி" (தொல்காப்பியம்:உரி:8:13) பாவலரேறு ஐயா அவர்களின் உரையுரைப்பின் மிகப் பல்லிடங்களில் கருத்துத் துலக்கத்திற்கான விரிப்புக்குரிய இடங்களில் - உரிய எல்லையிகவாத தெள்ளிமைசான்ற உரைப்புச் சுடருகின்றது! ("வானோக்கி எண்கூர் வாளி எய்பின் அன்ன" - பாட்டு : 2 : வரி : 12-13) (வானோக்கி = போக்கிற்குத் தடுப்பு அற்ற இப் பரந்து அகன்ற வானத்தில்.) மிக நுண்ணிய வெளிப்பாடு ஒன்றையும் இவ்விடத்திற் கருதலாம். பிற்பகுதிப் பாட்டொன்றில் கடற்கரை மணலைக் குறிக்க வருமிடத்தில்,"கரைசிறுமணல்" என்கின்றார். (ஆற்று மணலினும் கடல் மணல் சிறியதாகையால்.) மிகப் பல்லிடங்களில் உவமைத் திறத்தின் கொள்ளையழகுகளைக் கண்டுவக்கலாம்! ("நுங்கேய் கிளிஞ்சில்") (பிற்பகுதிப்பாட்டு) (உரை: நுங்கு போலும் கிளிஞ்சில்)

இன்னவாறு பன்னூறு சிறப்புக் கூறுகளைச் செறிவுற்றாரும் இத் தொகைநூல்- தமிழிலக்கியவுலகுக்குப் பெருந்தொகை வரவென்பதை வருங்காலம் வல்லிதாயுணரும்! அக்காலம்,-

"நெடுந்தொலை விலையே, கடுஅணி மைத்தே"
( தென்மொழி: இயல்!! இசை: 11-12 )

அறம் பெருகும், தமிழ் படித்தால்!
அகத்தில் ஒளி பெருகும்!
திறம் பெருகும் உரம் பெருகும்!
தீமைக் கெதிர் நிற்கும்
மறம் பெருகும் ஆண்மை வரும்!
மருள் விலகிப் போகும்!
புறம் பெயரும் பொய்மை யெலாம்
புதுமை பெறும் வாழ்வே!
( - பள்ளிப்பறவைகள்: பக்கம் :129 )

( 12-3-96 )

# முன்னுரை

மூன் புதையுண்ட முத்தமிழ்ச் சிறப்பினை மன்பதைக்கு உணர்த்து தலையே தம் வாழ்க்கை நோக்கமாகக் கொண்டு ஓவாது உஞற்றிய பாவலரேறு அவர்களின் செறிவுறு பாக்களையும் விரிவுறு விளக்கங்களையுந் தாங்கி வீறார்ந்து விளங்குவது நூறாசிரியம் என்னும் இந்நூல்!

தமிழின் விழுமிய இலக்கிய ஆக்கங்களான கழக நூல்களில் ஆய்வும் தோய்வும் உடைய அறிஞர் பெருமக்களும், தமிழ் உணர்வாளர்களும் இந்நூலைப் படித்த அளவில் விம்மிதமெய்திச் செம்மாப்புறுதல் உறுதி.

பாவலரேறு அவர்களின் அரிய படைப்புகளான இந்நூல் அகவல் களெல்லாம், இடைக்காலத்தே இறுக்கந் தளர்ந்து போன யாப்பமைதிக்கும், பொக்காய்ப் போன சொல்லாட்சிக்கும், பொய்க்கோலம் பூண்ட புனைந்துரைகளுக்கும் மாறாக உணர்வழுத்தத்திற்கேற்ற செவ்விய யாப்பமைதியும், செஞ்சொற் செறிவும், நயத்தக்க நல்லணியும் கொண்டு, கற்பாரை ஈர்க்குந் திறத்தில் இணையற்று விளங்குகின்றன.

கழக இலக்கியங்களின் சிறப்பு, மூலநூல் ஆசிரியர்களான பாவலர்களின் திறத்திற்கு எவ்வாற்றானும் குறையாத நிலையிலும், ஒரோவழி அவர்களையும் விஞ்சும் வகையிலும் அஃகியகன்ற நுண்ணிய உரைகளை எழுதிய உரையாசிரியர் பெருமக்களாலும் உயர்ந்துநிற்கின்றது.

அவ்வகையில் இந்நூறாசிரியம் பாவலரேறு அவர்களாலேயே பொழிப்பும் விரிப்புமான நிலையில் தெளிவான விளக்கம் எழுதப்பெற்ற இரட்டைச் சிறப்புடைய்து என்பது குறிப்பிடத்தக்கது.

இவ் வுரையைப் பயில்வோர் இப்பாடல்கள் ஒரேயொரு சொல்லையே அசையையோ கூட வறிதே தாங்கி நிற்பனவல்ல என்பதை உணரலாம். ஒவ்வொரு சொல்லும் எத்துணை ஆழமான, பொருளுணர்ச்சியோடு திறம்படக் கையாளப் பெற்றிருக்கின்றன என்பதை

> *" மடிப்பிள்ளை குழவியும் இடைப்பிள்ளை பிள்ளையும்,*
> *நடைப்பிள்ளை சேயுமாம்"*

என்பது போலும் விளக்கங்களால் அறியலாம். அவ்வாறே சில சொற்களின் தோற்றம் பற்றியும் வளர்ச்சியும் திரிபுநிலைகளும் பற்றியும் விரிவான விளக்கங்கள் இவ்வுரையில் ஆங்காங்கு இடம்பெற்றுள்ளன.

புதுச்சொற்புனைவுகளும் புத்தம்புது உவமைகளும் இந்நூலில் ஆங்காங்குப் பொன்னும் மணியும்போல் மின்னி மிளிர்கின்றன

பழந்தமிழ் இலக்கியங்களில் சிறந்து நிற்கும் உள்ளுறையும் இறைச்சியும் என்னும் புனைவுகள் இந்நூற் பாடல்களில் எத்துணை இயைபுற யாக்கப்

பெற்றிருக்கின்றன என்பதற்கு இதன்கன் உள்ள 'ஊரே பெடையடை' எனத் தொடங்கும் அகப்பாடலைச் சான்றாகக் கொள்ளலாம்.

உன்மத்தம் (ஊமத்தம்) பூவைக் குறிக்கக் கையாளும் 'ஊற்றி' பாவலரேற்றின் உவமைத் திறத்திற்கும் புதுச்சொற் புணைவிற்கும் ஏற்றதொரு சான்றாம். ஊற்றியாவது 'Funnal' என்னும் ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம்.

கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே, நூறாசிரியம் என்னும் இதன் பெயருக்கு ஏற்ப நூறு அகவற்பாக்களால் இந்நூல் எழுத்து வடிவில் நிறைவு பெற்றதேனும், அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து உரை எழுதி ஐயா அவர்கள் தொடர்ந்து தென்மொழியில் வெளியிட்டு வந்தார்கள்.

இடையிடையே பாவேந்தர், அண்ணா, பெரியார் முதலானோர் மறைவு குறித்துப் பாவலரேறு எழுதிய கையறு நிலைப் பாக்கள் இந்நூறாசிய வரிசையில் இடம்பெற்றமையானும், இந்தி வல்லாண்மையை எதிர்த்துத் தமிழ்நாடு கொந்தளித் தெழுந்தகாலை அவ்வெழுச்சிக்கு அடிப்படையான உணர்வைத் தென்மொழி வழியாகத் தெள்ளிதிற் பரப்பிவந்த பாவலரேறு 'தமிழ்நானூறு' என்னும் நூலைப் புனையத் திட்டமிட்டு எழுதி வெளியிட்டு வந்த பாடல்கள் தொடரவியலாது விடுபட்டமையால் அப்பாடல்கள் பன்னிரண்டும் இதன்கண் சேர்க்கப் பெற்றமையானும் நூறாசிரியம் அதன் அளவீட்டைக் கடந்து நீண்டுகொண்டிருந்தது. நூற்றைத் தாண்டி இருபத்து நான்கு பாடல்கள் வளர்ந்துநின்றன.

அறுபத்தாறாம் பாடலை உரையுடன் தென்மொழியில் வெளியிட்ட போது அதுவே தாம் உரையொழுதி வெளியிடும் இறுதிப் பாடல் என்பதைப் பாவலரேறு எண்ணியிருக்க முடியாது!

நூறாசிரியத்தில் இருபத்து நான்கு பாடல்கள் மிகுந்துநிற்ப, அறுபத்தாறாம் பாடலுக்கு உரையெழுதி வெளியிட்டதோடு பாவலரேறு அவர்கள் நெடுந்துயில் கொண்டுவிட்ட நிலையில், அவர்தம் பாவன்மைக்கும் உரைத்திறத்திற்கும் ஓருருவிலான எடுத்துக்காட்டாக விளங்கும் இந்நூறாசிரியத்தை வெளியிட முனைந்து முப்பத்து நான்கு பாடல்களுக்கு ஐயா அவர்களின் போக்கிலேயே உரைகண்டு நூறாசிரியத்தை அதன் பெயருக்கேற்ப நிறைவு செய்து வெளியிடுகின்றோம்.

எஞ்சிநிற்கும் இருபத்து நான்கு பாடல்களும் இந்நூலின் கண் பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ளன. அப்பாடல்களைப் படிப்போர் உரையின் இன்றியமையாமையையும் உரைகாண்பதிலுள்ள சிக்கல்களையும் உணரக்கூடும்.

நூறாசிரியம் தொடர்பாக ஐயாஅவர்கள் எழுதிவைத்திருந்த சில குறிப்புகளும் இந்நூலின் இறுதியில் இடம்பெற்றுள்ளன.

இலக்கியங்களை அகப்பொருள் புறப்பொருள் என்று இருவகை யாகவும், பல்வேறு திணைகளாகளாகவும் பலப்பல துறைகளாகவும் பாகுபடுத்தமைத்த பழந்தமிழ் மரபு, கழகக் காலத்தோடு ஒருவாறு விடுபட்டுப் போயிற்று. ஆயினும் முன்னை மரபை யொட்டி இந்நூறாசிரியப் பாடல்கள் திணை துறைப் பாகுபாட்டு விளக்கங்களைத் தாங்கி நிற்கின்றன. சில பாடல்கள் புதிய துறை வகுக்கப்பட வேண்டியனவாய் உள்ளன.

தமிழிலக்கிய வரலாற்றில் தனிச் சிறப்பொடு தடம்பதித்து நிற்கும் இவ்வரிய வாழ்வியல் இலக்கியத்தை அன்பர்கள் ஊன்றிப்பயின்று பயன்கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

- இறை



# உள்ளுறை

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

**பின்னிணைப்பு பாடல்கள்**

# நூறாசிரியம்

## 1 ஒன்றிறை

ஒன்றிறை; உலகம் உண்டதன் வழியே.
நன்றிதன் வாழ்க்கை; நாமதன் மக்கள்.
காட்சியுங் கேள்வியுங் கருதலும் புரிதலும்
ஆட்சியுட் பட்ட அளவி னானே!
மீட்சியின் றொழுகி யவைதிறங் கடவார்
மாட்சிமைப் பட்ட பொருளறி யாரே!
மன்னி யுலகெலா மலர்த்தவிப் பானை
முன்னி யுணர்ந்த வுணர்வினார்க் கல்லதை
வகுத்த அறிவொடும் வழக்கொடுங் கூடிப்
பகுத்தாய் வார்க்குத் தொகுத்தவை விளங்கா.
உள்ளதன் நாளே, உன்னி யுணர்மின்!
தெள்ள வுணர்ந்தவன் தேர்ந்து தெளிமின்!
கொள்ளுமின் ஆங்கவன் கொடையே; கொண்டு
கொடுமின் அவன்றன் குற்றுயிர்க் கெல்லாம்;
எள்ளுமின் உள்ளம் இகழ்வன; இகந்து
தள்ளுமின்; தள்ளித் தனித்தவன் திறலொடு
பொருந்துமின்; வாழ்க்கை பொன்றா தாரே!

**பொழிப்பு :**

ஒன்றே இறை; இவ்வுருள் நிலம் அதன் வழி உண்டாமாறு நின்று இயல்வது. வாழ்நிலை உயிர்கள் யாவினுக்கும் அஃது ஒட்டி நின்று இயங்குநிலை நன்று. அத்தகை வாணிலை உயிர்களுள், பொறியும் புலனும்

ஆகிய ஐயறிவால் நிறையப்பெற்று மெய்யறிவால் விளங்கப் பெற்ற நாமாகிய மேனிலை உயிர்கள் அதன் தலைப்பிறவிகள். அவற்றிற்குக் காணுதலாகிய காட்சியும், கேட்டலாகிய கேள்வியும் இவ்விரண்டின்வழி விரியப்பெற்று இவ்வியக்கத்திற்குக் கருவாகிய கருத்தும், அதன் வழித்தோன்றி அவை வழிப் படுக்கும் வினைகளும், ஓர் எல்லையுட்பட்ட ஆளுகைக்குரிய. அவ்வெல்லை யாவற்றினுக்கும் பொதுவினது.

அப்பொதுவினதாகிய எல்லைக்கண் நின்று இயங்கும் இயக்கத்து மீளாது நின்று ஒழுகி, அவ் வளவும், ஆட்சியும், வினையும், கருத்தும் கேள்வியும் காட்சியும் மக்களும் இயக்கமும் உண்மையும் உலகும் ஆகிய நிலைகளுள் ஒன்று நிலை கடந்து பிறிதுநிலை காணும் பெற்றியோர் அன்றிப் பிறர், பெருநிலைப்பட்ட ஒன்றாகிய மெய்ப்பொருளை அறிய மாட்டுவரல்லர். நிலைப்பெற்று நாம் இயங்கும் இவ்வுருள்நிலம் போன்ற எல்லாவற்றையும் மலர்த்தி அவிக்கும் தன்மையின் ஆகிய அம் மெய்ப்பொருளை நோக்கி உள்நின்ற வல்லுணர்வு அத்தகையினார்க்கன்றி, அவ்வெல்லைக்குள்ளும் வரையறைப்பட்ட ஐயறிவொடும், அவை அடித்தாய உலகின் புறத்து நிலையொடும், அத்தகையராகிய பிறரொடும் ஒன்று இருந்து, வேதியியல் விளங்கியல் முதலிய பொருள் பாகுபாட்டையும், உடலியல், உயிரியல் முதலிய மெய்ப்பாகுபாட்டையும், உளவியல், அளவியல் முதலிய உயிர்ப்பாகுபாட்டையும், மண்ணியல் விண்ணியல் முதலிய புடவிப் பாகுபாட்டையும், இணைப்பின் நீக்கித் தனித்தனி ஆய்ந்து பார்ப்பார்க்கு, அவை முற்றும் ஒன்றுபட்டு, அவ்வொன்றுபட்ட வழி, ஒரு புது நிலை தோன்றி வெளிப்படுமாறு தொகுப்பாக நிற்கும் அவையும் அதுவும் விளக்கமுறத் தோன்றாவாம்.

இவை இங்ஙனமாக, இவ்வுலகத் தலைநிலை உயிர்களாகிய நீவிர் நுங்கட்கு எல்லைத்தாய நாளைக்குள்ளேயே நும்நிலை ஊன்றி நல்லுணர்வில் நும்மைப் பொருத்துவீராக! அது வழித் தெளிவின் உணர்ந்து அம்மெய்ப்பொருள் நிலையினை இறுதி எனத் தேர்ந்து மயக்க மறுவீராக! நுமக்கு இவ்வுலகின்கண் வந்து வாயத்தவெல்லாம் அப்பொருள் நுமக்கு இரவாமலே கொடுத்த ஈகை எனக் கருதுவீராக; ஆங்குப் பெற்ற அவ்வீகப் பொருளை நும் ஆட்சிக்குட்பட்டவாகிய குறுகிய காட்சியும் உயிரும் மெய்யும் பொருந்திய உயிர்க்கெல்லாம் நீவிரும் இரவாமுன் ஈகுவீராக! ஒருவழிப்படா நிலையில் நும்வழித்தாகி, ஒருவழிப்பட்ட நிலையில் அம்மெய்ப்பொருள் வழிநிற்கும், நும் உயிர் மெய்யுட் பொருந்தியதாகிய உள்ளம் ஒதுக்குவனவற்றைப் பற்றுக்கோடாது இகழ்ந்து, தொடர்பற நுமக்குத் தொடர்பேற்படாதவழிப் புறத்தே தவிர்ப்பீராக; தவிர்த்த நிலையில் தொடர்பற்று நும்போலவே ஆற்றலொடு முன்னமே நிற்கும் அம் மெய்ப்பொருளோடு நீவிரும் நும்மைப் பொருத்திக் கொள்வீராக; இவ்வுலகம் போலும் ஒன்றின் சுழற்சி யியக்கத்துட்பட்டு உயிர் தேய்ந்து போகாத நல்லறிவினோரே!

**விரிப்பு :**

*ஒன்றே* - என்றதால் முதலும் முடிவும் அற்றது; தலையாயது; இரண்டு மூன்று என்ற எண்ணுப் பொருளற்றது; தனிநிலையானது; ஒன்றின் விரிவே பலவும் என்றாகி, பலவின் முடிவே ஒன்று என்றாகும் சுழற்சியின் இயல்வது என்க. இஃது இன்மைக் கொள்கையையும் பன்மைக் கொள்கையையும் மறுத்தது.

*இறை* - என்றது 'இறுத்த நிலையது' எனற்கு. இறுத்த நிலை இறுதிநிலை. இறு - ஐ - முடிவும் தலைமையும் வாய்ந்தது. தலைமை முதல்நிலை. *ஒன்று* காரண நிலை; *இறை* கருமநிலை.

*உலகம்* - உருள் நிலை கொண்ட ஓர் அகம்; உல + அகம். அகம்- அகப்படுத்தி நிற்பது. உலத்தல் - சுழற்சியுடைமை. உருளல் தன்மை.

*உண்டு* - இல்லையென்பார்க்கு மறுப்பு. தேற்றம் கருது பொருளாகிய ஒன்றுக்குக் காட்சிப் பொருளாய் நின்று 'உலகம் உண்டு' என்று காட்டியது.

*அதன் வழி* - என்றது அவ்வொன்று வழியாய் நிற்றலை, நிலையும் இயக்கமும் அதன் வழியாம் என்றவாறு.

*நன்று* - தொடக்கமும் முடிவும் நன்மைக்கென்றவாறு. என்னை? துன்புந் துயரும் நன்மைக்கோ என்பார்க்கு, துன்பந்துயரும்அதன் வழித்தாய அல்ல என்றும், உயிர் போங்கு நிலையின் ஏற்றத்தும் இறக்கத்தும் நின்றும் சுழன்றும் செல்லல் தோற்றமே என்க. துன்பும் துயரும் மனக் கோட்டமே! துன்பம் சூழலால் வந்துற்ற தாக்குநிலை; துயர் உயிர்ச் சூழற்கு உட்பட்ட தாங்கு நிலை. துன்பு புறப்பாடு. துயர் அகப்பாடு. இவ்விரண்டும் கோட்ட நிலையால் உயிர்க்கு அசைவு நிலைதரினும், அவ் வசைவு நிலையும் முடிவுகருதி இன்பமே ஆகும்! என்னை? துன்பம் உயிர் தன்னை உணரு நிலை; இன்பம் உயிர் தன்னை மறக்கு நிலை! இவையே உயிர் வயங்கு நிலையும் உயிர் மயங்கு நிலையுமாம்.

*இதன் வாழ்க்கை* - அதன் வழித்தாய வாழ்க்கை. ஒன்று வழி உலகும் உலகு வழி வாழ்வும் அமைவதாம் என்க.

*நாம்* - அறிந்து உணரத்தக்கவராகிய நம்மை உட்படுத்தியது.

*அதன் மக்கள்* - அவ்வொன்றின் வழித்தாய மேனிலை உயிர்கள்.

*காட்சியும் கேள்வியும் கருதலும் புரிதலும்* - உயிர்த்தோற்றத்து முதல் விளக்கம் காட்சியறிவே! என்னை; உயிர்த்த உயிர் காட்சியின் பாற்பட்டே அறிவை வழிப்படுத்தும். கண்ணிற்பட்ட காட்சி அவ்வுயிர்க்கு அறிவின் முதல் படிவு. அதன் பின் கேள்விவழிச் செயல்படுகின்றது. இவ்விருவழியறிவும் விரிந்த பின்னரே மகவு கருதுதல் செய்யும். கருதுதலின்

விளைவாய்ப் பிறந்த கருத்து வெளிப்படுதலே மொழி. ஈண்டு மொழியைக் குறிக்காதது அதன் அடிநிலையாகிய கருதுதல் குறித்தமையால் - என்க. 'புரிதல்' காட்சிக்கும் கேள்விக்கும் கருத்துக்கும் உடலுறுப்புகளைப் பயன் படுத்துதல். உயிரின் மெய்யியக்கம் முன் மூவகை அறிவின் பின்னரே தோன்றுகின்றது. அதுவரை மகவு இயங்கும் இயக்கம் மெய் உயிரை இயக்கும் இயக்கம். என்னை? மெய்ப்பசி தோற்றத்து மகவு அழுங்கலும், மெய்ப்பசி யடக்கத்து மகவு நகை விளங்கலும் உயிரையியக்கிய மெய்யியக்கம் என்க.

*ஆட்சியுட்பட்ட அளவினானே* - ஆட்சி - ஆளுகை; ஆட்சியுட்பட்டது - ஆளுகைக்கு உட்பட்டது. அளவினானே - அளவினால் தோன்றுவது. முற்கூறப்பட்ட செயல்கள் யாவும் உயிர்கட்கு இயற்கையாந் தன்மையினால் வரையறுக்கப்பட்ட அளவினது. என்னை? காட்சிக்கும் கேள்விக்கும் காலமும் இடமும் எல்லை என்க; கருதுதலுக்கு ஐயறிவியக்கத்தாற்பட்ட அறிவு எல்லை என்க; புரிதல் -அவ்வறிவால் இயக்கப்பெற்ற மெய்யின் வினை. அதற்கு மெய்யின் வலிவும் அளவும் எல்லை என்க. இவ்வளவின் உட்பட்ட அறிவு செயல்படற்கும் மனமே எல்லை என்க. என்னை? மனம், வட்டாடும் பலகை போல்வது. அறிவு வட்டுப் போன்றது. அறிவுக்கரணமாகிய ஒத்த ஐம்புலன்களும் ஆடுநர் போன்றன. வாழ்க்கை ஆட்டம் போன்றது என்க. இதில் வேறலும் தோல்வியும் ஆட்டத்தின் பயன் போன்றன. அதில் வரும் இன்பும் துன்பும் நிலையற்றன. என்னை? அவ்வின்பாலும் துன்பாலும் மெய்ப்பயன் ஒன்றும் விளையாமையால், மெய்யே பயனுறாக் காலத்து உயிர்க்கு ஒரு பயனும் இல்லை என்றவாறு.

*மீட்சியின்றொழுகல்* - அவ்வளவு நிலைகளைக் கடந்து ஒழுக இயலாத தன்மையின் நிற்றல்.

*அவைதிறம் கடவார்* - அவைப்பட்ட எல்லை நிலைகளைக் கடக்கப் புணையற்றவர். புணை- மெய்யறிவு, 'ஐயுணர் வெய்தியக்கண்ணும் பயமின்றே, மெய்யுணர்வில்லாதவர்க்கு' எனும் திருக்குறளை ஓர்க.

***மாட்சிமைப்பட்ட பொருள்*** - மாண் - பெருநிலை- பெருமை, மா -பெரியது, அண் - சாரியை, அண்ணித்து நிற்றலாகிய தன்மை, அண்ணித்தல்-ஒன்றல்- பொருந்தல்- வேறற்றநிலை. ஒன்றிய நிலையில் இயங்கும் பெரும் பொருள்.

***அறியார்*** - அறிவினான் அறியவியலார்.

***பன்னுதல்*** - நிலைத்தல். ஒன்றிநிற்றல்.

***உலகெலாம்*** - இவ்வுருள் நிலம்போன்ற உலகங்கள் எல்லாம். என்னை? கோளுங் கதிரும் உடுவும் புடவியும் என்றபடி.

***மலர்த்து*** - விளங்கச் செய்து; விளங்கல் - தோன்றல்.

***அவிப்பான்*** - அவித்தல் செய்வான், மலர்த்துத் தொழிற்கு இறுதி.

*முன்னுதல்* - மூண்டு நிற்றல். *முன்-* பகுதி. *முள்ளல்* - முண்ணுதல் முன்னுதல்.

***உணர்தல்*** - உள்ளறிதல். அறிதல் புறமும், உணர்தல் அகமும் என்று உணர்க.

*அறிதல்* - மூளையின்பாற்படுவது. ***உணர்தல்*** - உள்ளத்தின் பாற்படுவது.

***உணர்வினார்க்கல்லதை*** - உள்நின்று அறியும் தகவினார்க்கன்றி:

***வகுத்த அறிவும் வழக்கும்*** - வகுக்கப்பெற்ற அறிவுத் துறைகளால் பெற்ற ஈட்டமும், அவை ஒன்றுக்கு ஒன்று பொருந்துவதாகிய வழக்கும். என்னை? பூதநிலை பற்றி ஆயும் வேதியலும் பொருள்நிலைபற்றி ஆயும் விளங்கியலும் மாறுபடாவழி மண்ணியலொடும், விண்ணியலொடும் பொருத்திப் பார்க்கும் ஏரண வழக்கு.

*கூடி* - அவ்வத்துறைபோகிய அறிவினார் பலருங்கூடி ஒன்றுபட்டு.

*பகுத்தாய்தல்* - பூதநிலைகளையும் பொருள் நிலைகளையும் பாகுபாடு செய்து இயக்க இருப்பை அறிதல்.

*தொகுத்தவை* - அப்பகுப்பில் விளங்காது. தொகுப்பில் விளங்கா நிற்கும் கருப்பொருள் உண்மைகள்.

***விளங்கா*** - விளக்கமுறத்தோன்றா. அறியப்படமாட்டா.

***உள்ளதன்நாள்*** - உயிர் மெய்யொடு பொருந்தி உளவாகிய இயக்க எல்லை. வாணாள்.

***உன்னி*** - அழுந்தி.

***உணர்மின்*** - உள்ளறிமின்.

***தெள்ள*** - கசடு அடித்தங்கி அறிவு தேங்கி நிற்குமாறு.

***உணர்ந்து, அவன் தேர்ந்து*** - உள்நின்று நோக்கி அறிந்து அவனாகிய மெய்ப்பொருளே மூலகாரணன் என உட்கொண்டு.

***தெளிமின்*** - தெளிதற்கு முனைமின்.

***கொள்ளுமின் ஆங்கவன் கொடை*** - அன்றே நம்மையும் நமக்காக ஐம்புலக் கருவிகளையும், அவை மேயும் உடலையும், அஃது ஊர்ந்த உயிரையும் அஃது உலவ உலகங்களையும் நாம் விழையாக் காலத்தே நமக்கு ஈகமாகத் தரப்பெற்ற அருளை.

***கொண்டு கொடுமின்*** - கொள்ளுதற்போலும் கொடுமின்கள். அளவிடப்பெறாத செல்வங்களையும் அவற்றைத் துய்க்க அளவிடப்பெறாத அறிவுணர்வையும் கேளாமலே கொடுத்த கொடையைப் பெற்றதுபோல்

*பிறர்க்கும் கொடுமின்கள் என்றவாறு. என்னை? நம் போலும் எல்லவர்க்கும் ஈத்த கொடைக்கு மேலும் நாம் ஈதற்கு நமக்கு என்ன ஆற்றலுள்ளது என்று அடக்கவுரை செய்யும் சான்றோரும், என்ன பொருளுள்ளது என மடப்பவுரை செய்யும் மடவோரும் வினாவெழுப்ப இது கூறியதென்னை எனின்; கூறுதும். நிலையாலும் நினைவாலும், வினையாலும் வாய்ப்பக்கிடந்த எல்லாப் பொருளும் இவ்வுலகத்து எல்லார்க்கும் ஒப்பக் கிடைப்பதும், அவ்வாறு கிடைத்துழி அவ்வெல்லவரும் அவற்றை நுகர்தல் இயல்வதும் அரியவாகையால், ஒருபால் தொட்ட ஊற்றுநீர் பிறர்க்கும் மடுப்ப உரிமைபோல் அவன்பாற் கொடையாகப் பெற்ற இவ்வுலக உடைமை இங்குள்ளார் யாவர்க்கும் ஒப்பக் கொடுக்கும் உரிமை உடையது. என்னை? வலக்கை பெற்றது இடக்கையும் எடுத்து உண்ண உரிமை உடையது போல் ஒருடற் பல்லுறுப்பாய் இயங்கும் இவ்வுலக உயிர்கள் யாவையினுக்கும் ஈண்டொருவற் பெற்ற ஈட்டம் என்க.*

**அவன் குற்றுயிர்க்கு எல்லாம்** - *அம்மெய்ப்பொருள் வழி முகிழ்த்தலர்ந்த குற்றுடலும், குறையுறுப்பும், குற்றறிவும் குறுவிளைவும் குறுவாழ்வும் வாய்ந்த உயிர்கள் தொகை யாவினுக்கும்.*

**எள்ளுமின் உள்ளம் இகழ்வன** - *இவ்வுடற்கண் நின்று நிலவும் உறுப்புகளுக்கெல்லாம் உள்ளுறுப்பாய் நின்று, மெய்ப்பொருளின் தேக்கிடமாய் இயங்கும் உள்ளம் சிறுமை கருதியும், வெறுமை கருதியும் இகழ்ந்து ஒதுக்குவனவற்றை நீவிரும் இகழ்ந்து விடுமின்கள் என்றவாறு.*

**இகந்துதள்ளுமின்** - *பழித்து, நும் பற்றினின்றும் விடுவியுமின்கள். இகத்தல்- பழித்தல்-கடந்து மேற்செல்லல்- விட்டுப் புறம் போதல்- வெறுத்துத் துறத்தல்.*

**தனித்தவன்** - *தன்வயம் நின்றவன் - பிறர் அசைவு நிலைக்கு வயப்படாதவன் - ஒன்றன்- ஒருபெருந் தனிப்பொருள்.*

**திறல்** - *வலிமை - மெய்யறிவு - மேன்மை.*

**பொருந்துமின்** - *இரண்டன்மை நிலையில் இணையுமின்கள்- அவனாக நின்று நடத்த நம்மை ஒப்புவிப்பது - நம் செயல் கழலுதல்.*

**வாழ்க்கை பொன்றாதார்** - *வாழ்வாம் எனப்பட்ட இயங்குநிலை சிதையாத எண்ணமுடையவர்கள்.*

*இப்பாட்டு, இறையுண்மையினையும், அதையுணரும் வழியையும், அதனை அறிந்த நன்மையையும் அந்நன்மையால் விளையும் மலர்ச்சியையும் கூறாநிற்கும்,* ***நிலைமண்டில ஆசிரியப்பாவாம்.***

***இது பொதுவியல்*** *என் திணையும்,* ***இறைநிலை வாழ்த்தென்*** *துறையுமாம்.*



# 2 எண்கூர்வாளி

உலகத் தீரே! உலகத் தீரே!
அலகில் பிறக்கத்துப் பல்லுயி ருள்ளும்
உள்ளஞ் சான்ற உலகத் தீரே!
நாம்வேட்டுப் பிறந்தன் றிலமே; பின்றலை
நாம்வேட் டிறந்தன்று மிலமே! ஊங்கு
வாழ்தல் ஞான்றும் வைகறை யுவப்போர்
மாலை யழுங்கலும் மாறுகொல் அன்றே;
புள்ளும் மாவும் எள்ளுவ மாயினும்
அவையினும் ஓம்புதல் இலமே! அலமர
வைகலுந் தினையும் உய்யலு மிலமே!
என்கொல் இலக்குறும் வாழ்வே; இலக்கத்து
என்கொல் ஒளிர்ந்ததும் அறிவே! வானோக்கி
எண்கூர் வாளி எய்பின் அன்ன
வறிதா கின்றே வாழ்க்கை;
அரிதா மாறே அழிவறிந் துயினே!

**பொழிப்பு :**

உலகத்தவரே! உலகத்தவரே! அளவற்ற பிறப்பாகிய பல்லாயிரங் கோடி உயிரினங்களுக்குள்ளே, எண்ணுதல், தெளிதல், தேர்தல் ஆகிய முத்திறனும் நிறைவாக, மேம்பட்டு நிற்கும் உள்ளம் பொருந்திய உலகத்தவரே!

நாம் இப்பிறப்பு வேண்டி அழுந்தி விரும்பிப் பிறந்தோம் அல்லோம்; அதுபோன்றே இப்பிறப்பின் எல்லையிலும் நாம் அழுந்தி விரும்பி இவ்வுலக வாழ்வினைத் துறப்போம் அல்லோம்; இவ்விடைப்பட்ட காலத்து நமக்கு அமைந்த இவ் வாழ்க்கைப் பொழுதிலும், நாள் தொடக்கமாகிய இருள் நீங்கா முன்காலையில், வரும் பொழுதை எண்ணி அவாவி உள்ளங்களிப்பார், நாள் முடிவாகிய இருள்படி பின் பொழுதில், கடந்த அந்நாளைய நிகழ்வுகளை எண்ணி மிக வருந்துதலாகிய தொடர்ந்த போக்கிற்கு மாறுபாடு உறுவது இல்லை ஆக.

அப் படித்ததாய வாழ்வென் பொழுதிலும் பொந்தில் அடங்குவன வாகிய பறவையினங்களையும், புழையுள் ஒடுங்குவனவாகிய விலங்கினங்

களையும் , அவற்றின் உள்ளம் நிறைவுற வாயாத போக்கிற்கு இழித்து நினைப்போம் எனினும், தம் நிலையினின்று தாழ்ந்து போகாத அவை போன்ற முறையிலும், நாம் நமக்கமைந்த நம் உள்ளங்களைப் பேணிக்காத்தல் செய்யாது வாளா நிற்கின்றோம். மனம் மருள நேர்கின்ற துயரம் நிறைந்த சூழலில் பட்டும், ஒவ்வொரு நாளுக்கும் தினை அளவிலேனும் நம்மை நாம் உய்வித்துக் கொண்டோம் அல்லமே!

உங்கள் வாழ்க்கையெனும் உள்ளச் செலவிற்குக் குறியாவது எது? அக் குறியீட்டு அளவில் எவ்வளவில் தேர்ந்து விளங்கியது உங்கள் அறிவு? போக்கிற்குத் தடுப்பு அற்ற இப் பரந்து அகன்ற வானத்தில் நோக்க மிலாது, மிகவும் கூரியதாகிய அம்பு ஒன்றினை எய்தி வீணாக்குதல் போல், உங்கள் வாழ்க்கை எவ்வகை ஊதியமுமின்றிக் கழிகின்றது. இவ்விடைப்பட்ட தேர்வாகிய வாழ்வு சிறிது சிறிதாக அழிந்து கொண்டிருப்பதை நீங்கள் அறிவினால் தேர்ந்து, இதன் பயன்கொண்டு உய்வீர்களாயின், இவ்வாழ்க்கைச் செலவு மிக அருமையுடையது ஆகும்.

**விரிப்பு:**

*உலகத்தீரே* - என்றது இவ்வுலக உருண்டையில் வாழ்ந்து கொண்டிருக் கின்ற எல்லா மாந்த இனங்களையும் விளித்துக் கூறியது. முன் பாட்டில் *உலகம் உண்டு* என்ற தேற்றக் கருத்தை அடியொட்டி, உண்டாகிய அவ் உலகத்து நிற்கும் மாந்தரீரே என்று விளிக்கப் பெற்றது. இச்சொல் இருமுறை அடுக்கி வந்தது அண்மையும் சேய்மையும் நிற்போரை விளிப்பான் வேண்டியும், இக்கருத்திற்குச் செவிகொள்ளுமாறு அவரை வலியுறுத்த வேண்டியுமாம்.

*அலகு* - அளவு; ஒரு வரையறை; ஓர் எல்லை.

*பிறக்கம்* - பிறப்பு. அம் ஈறுபெற்ற பெயர்ச்சொல். பிறக்குதல்-வெளிப்படுதல்

*உள்ளம்* - படிதலாகிய உணர்வு. இப் புடவியின்கண் நுண்ணிதாய் ஊடறுத்துப் பரந்து நிற்கும் உணர்வுப் பெருக்கத்துள், நம் கொள்திறனுக்கேற்பப் புலப்படுகின்ற ஒருபுடை உணர்வு படிகின்ற இடம். இவ்விடம் நாம் உழுது பண்படுத்தும் அளவிற்கேற்பப் பயன் தருவதாகிய மூளைச் சேற்றிற்கும், உயிர்ப்பு நிகழும் நெஞ்சாங்குலைக்கும் இடைப்பட்டு ஏறியிறங்கா நிற்கும் உணர்வு என்பர் மெய்ந்நூலார்.

*சான்றல்* - நிறைதல், மேம்பட்டு நிற்றல்.

*வேட்டல்* - அழுந்தி விரும்பல்.

*பிறப்பு* - உருவிழந்து நின்ற புலம்பன் (ஆன்மா) உருவேற்று வெளிப்படல். என்னை? கட்புலனுக்குப் புலப்படாது நிற்கும் உயிர்வளி (பிராணவாயு)

*தீப்பொறியுட் பற்றி ஒளி வடிவாகிச், சுடர் என்று நின்றாற் போல. திண்மமும், தண்மமும், சூடும் இயக்கமும் ஒடுக்கமும் ஆகிய ஐம்பூத நிலைகளில் புலம்பன் படிப்படியாக இறங்குதல் செய்யும். இப் படிநிலைகளில் தனித்தனித் தங்குதலும், ஒன்றி வெளிப்பட்டுப் பிறப்புறுதலும், அறுதலும் நாம் விரும்பி நிகழுதல் அல்ல.*

*இறப்பு - பூதநிலைகளில் படிந்து நின்ற புலம்பன் அவற்றை விட்டுக் கடந்து ஆவி நிலையில் நிற்குந் தன்மை. இறத்தல் - கடத்தல் - வெளிப்போதல்.*

*ஊங்கு - இவ்விடைப்பட்ட நிலையில்.*

*உவத்தல் - உள்ளம் களித்தல். எண்ணி மகிழ்தல்,*

*அழுங்கல் - மிகுவருந்தல்.*

*எள்ளல் - சிறிதாமென் றிகழ்தல்.*

*ஓம்பல் - பேணிக்காத்தல்*

*அலமரல் - துயரச் சுழற்சி.*

*வைகல் - நாள்தொறும்.*

*இப்பாட்டு, வாழ்வு அமைவினையும், அதற்கியைந்த பெருமை யினையும், அப்பெருமையை நிலை நிறுத்தும் தன்மையினையும், அவ்வழி நில்லாத வாழ்வின் வெறிய போக்கினையும், அவ்வழி நின்ற வாழ்வின் அரிய நிலையினையும் கூறிநிற்கும், **நேரிசை ஆசிரியப்பாவாம்.***

*இது, **பொதுவியல்** என் திணையும், **பொருண்மொழிக் காஞ்சி** என் துறையுமாம்.*



# 3 தோன்றிலாதாரே

குன்றம் பொடித்துக் குரைகடல் பாய்ச்சி
எந்திரக் கொழுவி னிராப்பகல் உழுது
வான வூர்தி மேனிலை நின்றே
அளப்பற வித்தி வளப்புற விளையினும்
கொளப்பெறு மளவொரு கையே; கொள்வதும்
உணப்பெறு மளவொரு வாயே; உண்பதும்
ஒருபொழு தளவொரு வயிறே; ஒருநாள்
இருபொழு தளவே! இருப்பதன் வரையே!
எஞ்சிய தின்னவர்க் கிவ்வள வெனுமுன்
துஞ்சிய ரெவருந் தோன்றிலா தாரே!
இருக்குநா ளிருக்க ஈகுக
பெருக்க முற்றவர் சுருக்கமுற் றார்க்கே!

**பொழிப்பு:**

குன்று போலும் மண்மேடுகளைப் பொடித்து நிரவி நில மட்டமாக்கி, ஒலிக்கின்ற கடல் நீரைப்பாய்ச்சிக் குழைத்துச் சேறாக்கி, விசைப்பொறி யமைந்த கொழு பூட்டிய ஏரினால் இரவு பகல் ஓயாமல் உழுது கழனியாக்கிப் பரப்பும், இயலாமையும் கருதி வானவூர்தியின் மேல் நின்று அளவில்லாமல் விதைத்து, அதன் பயனாக வளம் பெருகுற்ற விளைவு கிடைப்பினும், நாம் அதனிற் கொள்வது ஒரு கை அளவினதே; அவ்வாறு கொண்டதில் உண்பது ஒரு வாய் அளவினதே; அவ்வாறு உண்பதும் ஒரு பொழுதில் ஒரு வயிற்று அளவினதே; அதுவும் ஒரு நாளில் இரு பொழுதளவினதே; அவ் வூண்பாடும் நாம் வாழ்ந்து இருக்கின்ற எல்லையளவினதே! இவ்வழித் தாம் மிசைந்து எஞ்சிய ஈட்டத்தினை இன்னவர்க்கு இவ்வளவு எனப் பங்கிட்டு ஈயுமுன் இறந்துபடும் எல்லாரும் இருந்தார் என்னும் சுவடு இல்லாதவரே. ஆகலின் நாம் வாழ்ந்திருக்கும் நாட்களை வாழப்போவார் நன்றியின் நினைவுகூர, உலகச்சுழற்சியில் வந்து கூடிய செல்வப் பெருக்கினார் அவ்வழி வந்து கூடாது வளஞ் சுருங்கினார்க்கு அதனை ஈந்து பெருமையுறுக என்றவாறு.

**விரிப்பு :**

***குன்றம் பொடித்தலும் குரைகடல் பாய்ச்சலும், எந்திரக் கொழுவின் இராப்பகல்***

*உழுதலும், வானவூர்தி மேனிலை நின்று அளப்பற வித்தலும்* – முயற்சி அருமை பற்றிக் கூறல் நேர்ந்தது - இல்பொருள் உவமை. பயனுறு உருவகமுமாம். அருமுயற்சியின் விளைவித்தாலும் தாமே நுகர்தல் அருமை என்பது பற்றிக்கொள்ளல், உண்ணல், பொழுது, வாழ்தல் இவற்றிற்கு எல்லையளவு கூற நேர்ந்தது.

*எஞ்சியது இன்னவர்க்கு இவ்வளவு எனும் முன் துஞ்சல்* - எஞ்சிய ஈட்டத்தைத் தம் பிறங்கடைகளுக்கு உரிமையாக்குமுன் தாம் இறந்து படல்.

இறப்பு நம் வினைப்பாடு முடியுமுன்னரே வந்து பற்றும் என்னும் உறுதி நோக்கிச் சொன்னது.

*இருக்குநாள் இருக்க* - நாம் வாழும் நாளின் வரலாறு பின்னோரால் மறந்து படாமல் நிலைத்து இருக்க. இப்பாட்டு வாழ்வு நிலையாமையையும் அறத்தின் நிலைப்பாட்டையும் சுட்டி, ஈதலறத்தை வலியுறுத்தி நிற்கும், *நேரிசை ஆசிரியப்பாவாம்.*

இதுவும் *பொதுவியல்* என் திணையும், *பொருண்மொழிக் காஞ்சி* என் துறையுமாம்.



# 4 உள்ளத்தாட்சி

பரல்பரந்து அரலைவாரி
துரைநுங்கிப் புரைபுகுந்தே
உள்ளோடிப் புறநடக்கும்
வெள்ளம் போலெம் உள்ளத் தாட்சி!
சொல்லிற் போகா நினைவு முட்ட
அல்லில் விழிக்கும் பகலிற் றுயிலும்
பல்லார் முன்னம் பாடுவாய்ப் படுத்தி
நல்லார் போய செந்நெறி நயக்கும்.
அஃதான்று
புனல்சாய்க்கும் புல்லென்கோ
அனலுருக்கும் மெழுகென்கோ
மேற்சிதர்ந்தே உட்கவிந்த
கார்போர்த்த கதிரென்கோ
தூவெண் பஞ்சின் திறத்த தாகி
நாவும் நெஞ்சும் ஒன்றி நடக்கும்
இனியர்க் குவந்தே இன்னார்க் கஞ்சி
முனிவி னடுங்கிக் கனிவிற் கலக்கும்
என்னிற்கா திறமுரைக்கோ
தற்படுத்தும் பெட்புரைக்கோ
பொருள்சேரின் புறமிறைத்தே
அறிவயிரும் நிரல் நிரப்பின்
உகுகண்ணீர் உளங்கொளுத்த
தகுமனைமேல் அழல்வீசிப்
புறவாழ்க்கைப் புற்பழித்தே
அகவாழ்க்கை அடிப்படுக்கும்
முட்டத் தடங்கிய முற்றா நெஞ்சின்
ஆட்டத் தழுந்திய இன்பம்
நாட்ட நாட்ட நாநா டாதே!

## பொழிப்பு:

*பருக்கைக் கற்கள் மேல் அளாவிப் பரந்தும், பெருமணலை அரித்து வாரியும், கதுமெனப் பாய்ந்து அலைதலின் நுரையினை மிகுவாகத் தோற்றியும், நிலத்தின் உட்டுளை புகுந்தும், அடிக்கண் விரைவு படவும் மேற்கண் மென்னடையிட்டும் பாய்ந்தோடும் புதுப்புனலின் தன்மையதாம் எம் உணர்வு துளும்பும் உள்ளத்தின் ஆளுகை!*

*சொற்களில் இதுகாறும் புகுந்து வெளிவரா நிலைத்த எண்ணங்கள் எஞ்ஞான்றும் புறப்பாட்டிற்கு உணர்வை மூட்டுதல் செய்தவதால், திடுமென அமைதியான இராக்காலத்தே விழித்து எழவும், பாடு நிரம்பிய பகற்காலத்தே இராவிழித்த களைப்பால் துயிலவும், பலபடக் கூடுவார் முன்னிலையில் வெளிப்பாடுற உரைதரவும், அவ்வுரைப் பாட்டின் வழி, முன்னை நலஞ் செய்தாரின் வழியே செவ்விய நெறிமுறைகளை விரும்பிப் பாராட்டி ஏற்கவும் செய்வதாம் அவ்வுள்ளத்தின் ஆளுகை!*

*அவ்வாளுகை நிறைந்து,*

*எம்மை, அவ்வுணர்வெனும் புதுப்புனலால் சாய்வுறும் புல் என்று கூறுவேனோ? அனல் பாய்ந்து உருக்குகின்ற மெழுகென்று கூறுவேனோ? அன்றிப், புறத்தே விரிவார்ந்து அகத்தே கவிழ்ந்த மழை நிரம்பிய முகிலால் போர்க்கப் பெற்ற கதிரென்று கூறுவேனோ?*

*தூய வெண்மையான மெல்லிழை சான்ற பஞ்சு போல், புறப்படுத்தும் நாவும் அகப்படுத்தும் நெஞ்சும் ஒன்றே ஆகி, நலஞ்சான்ற இனித்த நடையுடையார் தம் தன்மைக்கு மகிழ்ந்து, அவ்வாறல்லாத நடையினார்தம் புன்மைக்கு வெருண்டு, நடுங்குதல் செய்தும், முன்னையோர் கனிவான சொல்விலும் செயலிலும் கலந்து ஒன்றாகும் எமக்குச் சிற்சிலகால் வயப்பட்டு நிற்காத தன்மையை உரைக்க மாட்டுவனோ? எம்மைத் தம் வயப்படுத்தும் விருப்பினை உரைக்க மாட்டுவனோ?*

*எம் இயல்பான வினைவழிப் பொருள் வந்து சேரின், அதனைப் புறத்தார்க்கும் வாரி இறைத்துத் தீர்த்தும், எம் அறிவினை உண்கின்ற வரிசைப்பட்ட வறுமையினால், எம் உளத்தைக் கொளுத்தும்படி உகுக்கின்ற கண்ணீர் நிரம்பிய எம் போக்கிற்கு இயைந்த- மனையாட்டியின்மேல் தீப்போலும் உரையை வீசியும், இவ்வுலகியல் மாந்தர் தாம் புறத்தே ஆரவாரிக்கும் புல்லிய வாழ்க்கையைப் பழித்தும், அக வாழ்க்கைக்கு எம்மை அடிமைப்படுத்தும் எண்ண மூட்டங்களால் உள்ளடங்கிக் கிடக்கும் எம் முதுமை சாரா இள நெஞ்சினது ஆட்டத்தே அழுந்திக் கிடப்பதான இன்பத்தை எடுத்து விளக்க முற்பட முற்பட நாவும் நாடுதல் இயலாதாகின்றது.*

## விரிப்பு:

***பரல்*** *- பருக்கைக் கற்கள்;* ***பரந்து*** *- அளாவிப்பரந்து.*

*அரலை* - பெருமணல்; *நுங்குதல்* - மிகுவாகத் தோற்றுதல்;

*புரை* - நிலத்தின் உட்டுளை

*உள்ளோடிப் புறம் நடக்கும்* - அடிப்புறம் விரைந்தும், மேற்புறம் விரைவு குறைந்தும் நடையிடும் வெள்ளத்தின் இயல்பாந்தன்மை. உணர்வு நிறைந்த உள்ளத்தின் தன்மையும் அதுபோல் என்க. புறத்தே நோக்குவார் உள்ளோட்டம் அறியார் ஆகலின் அவ்வாறு கூறலாயிற்று. உணர்வு நிரம்பிய உள்ளம், புதுப்புனல் வெள்ளத்திற்கும், அது பரந்து செல்லும் தன்மை அவ்வுள்ள உணர்விற்கும், பரல் பெருத்த வினைகளுக்கும், அரலை சிறு வினைப்பாட்டிற்கும், அவற்றில் பரந்து தோன்றும் நுரை அவ்வினைப்பாடுகளால் மீதூரும் இன்ப துன்பத்திற்கும், உட்டுளை காலத்திற்கும், அதனுள் ஓரளவு வெள்ளம் புகுந்து கரவுதல், காலத்தால் அவ்வுணர்வின் ஒரு பகுதி மறைந்து போதற்கும், பொருந்தக்கூறி, உள்ளத்தின் ஆளுகையே உணர்வு சான்ற புலவன் ஒருவனின் வாழ்க்கை என்று உருவகித்துக் கூறியதென்க. என்னை? உள்ளத்தின் ஆளுகையே வாழ்க்கையாயின் அறிவின் ஆளுகை எதுபோலாம் எனின், அமைச்சு போலாம் என்க. அறிவு அமைச்சு போலும், உள்ளம் அரசு போலும் நின்று ஆள்வதே உணர்வு வாழ்க்கை எனக்கொள்க. இனி, உணர்வற்றார் வாழ்க்கை இருள் நிரம்பிய உள்ளம் போலும், மருள் நிரம்பிய அறிவு போலுமாகித் துன்பம் சேர்ப்பதாம் என்க.

***சொல்லிற் போகா நினைவு*** - நினைவோட்டத்திற்குச் சொற்களே வாய்க்கால் ஆகலின், அதன் வழிக் கழியாத நினைவுகள் என்றபடி; நினைவு- நிலைத்த எண்ணங்கள். நில்- முதனிலை.

***முட்டுதல்*** - புனல் நிரம்பிக் கழிவாயை முட்டுதல் செய்தல் போல், உணர்வுச் சுவரை நிரம்பிய எண்ணங்கள் முட்டி நிற்பது.

***விழிக்கும் துயிலும்*** - தாமே நிகழ்பவாகலின் விழிக்கும் துயிலும் எனலாயிற்று. விழிப்புநிலை பகலுக்கும், துயிலுநிலை இரவுக்கும் உரியவாயிருக்க, மாறாகச் செயல்படுவது உணர்வோட்டம் தொடர்ந்து நடக்குமாகலின் என்க.

***பாடுவாய்*** - வாயுரை, வாய்பாடு என்பது மாறி வந்தது. ***படுத்தல்*** - செய்தல்.

***செந்நெறி*** - செவ்வியநெறி. ***நயக்கும்*** - விரும்பி ஏற்கும்.

***ஆன்றல்*** - நிறைதல்.

***புனல்சாய்க்கும் — கதிரென்கோ*** - புனல் பாய்தலால் அதன் விரைவு தாளாது சாயும் புல்லைப்போலவும், அனல் காய்தலால் அதன் சூடு தாளாது உருகும் மெழுகைப் போலவும், விரிந்து சிறகார்ந்த முகிற்கூட்டத்துள் ஒடுங்கிய கதிர் போலவும் எம்முடல் ஆட்பட்டு நிற்கின்றது என்பதாம். புனலால் சாய்க்கப்பெறும் புல் தன் வலியிற்குன்றி நீரின் வலிக்குத் தன்

உடலை ஆட்படுதலும், அனல் போன்ற உணர்வால் தான் உருக்குலைதலும் காட்டப்பெற்றதென்க. இனிப், புறநிலையில் இவ்வாறான மாற்றங்களும் ஏலாமையும் இருப்பினும் அகநிலையில் எஞ்ஞான்றும் ஒளி நிரம்பியிருத்தலால் *கார் போர்த்த கதிர்* எனலாயிற்று.

*தூவெண் பஞ்சின் ......... ஒன்றி நடக்கும் இனியார்* - பஞ்சு அகத்தும் புறத்தும் தூய வெண்மையாக இருத்தல் போல் நாவும் நெஞ்சும் ஒன்றி நடப்பார் தம் அகமும் புறமும் தூய்மையாக விளங்கும் என்றபடி. அவ்வாறு விளங்குபவரே இனியார் என்றதுமாம். காட்சியும், சொல்லும், செயலும் தனித்தனியே இனிமை பயத்தலினும் இம்மூவினையும் ஒன்றி நடத்தலே இனிமையுடையது என்க. நெஞ்சு நடந்தவழி நா நடப்பதே இயல்பாக இருக்க, நா நடந்த வழி நெஞ்சு நடப்பதாக முன்பின் முரணிக் கூறியது ஏனெனில், மணம் நுகர்ந்த வழி மலர் காண்டலே புறநிகழ்ச்சியாதல் போல், சொல் வந்த பின்னரே நெஞ்சு உணரப்படும் ஆகலான் என்க.

*இன்னார்* - அவ்வாறு நாவும் நெஞ்சும் ஒன்றி நடவாதார்.

*அஞ்சுதல்* - அத்தகையாரால் பிற்றைக் காலத்து என்ன நேருமோ என்று அஞ்சுதல்.

*முனிவின் நடுங்கிக் கனிவிற் கலக்கும்* — இன்னாதார்க்கு இயல்பே அஞ்சுதலும், அவர் முனிந்து கூறுவனவற்றிற்கு நடுங்குதலும், இனியார்க்கு இயல்பே உவத்தலும், அவர் கனிந்து கூறுவனவற்றிற்கு உளங்கலத்தலும் இயல்பாயின வென்க. இவ்விரு நிகழ்வுகளும் அறிவு கலவாமல் உள்ளமே செய்கின்ற செயல்கள் ஆதலின், *என் நிற்கா திறம்* ஆயிற்று. ஈண்டு '*என்*' என்ற அகவுணர்வு நிலை அறிவு பற்றி விளங்கிற்றென்க.

*தற்படுத்தும் பெட்பு* - தனக்கு உட்படுத்தும் தன்மை. அறிவுணர்வால் ஆட்படாது உள உணர்வால் ஆட்படுதலின் '*என்*' *நிற்காது தற்படுத்தது* எனலாயிற்று.

*பொருள் சேரின்* - பொருள் சேரப் பெறின். சேர்த்தல் என்னாது சேரல் என்றது, பொருளை விரும்பிச் சேர்க்காததும், இயல்பாகச் சேர்தலையே குறித்ததும் ஆகும். அவ்வாறு இயல்பாக வந்து சேரினும் அதனைத் தனக்காகக் பயன் படுத்திக் கொள்ளாது, தன் புறத்தே உள்ள யாவர்க்கும் பயன்படுத்தல் உள்ள உணர்வு நிரம்பியார் செய்கையாதலின், *புறமிறைத்தல்* இயல்பாயிற்று. அதுவும் அளவிட்டுச் செய்யப்படாததாகலின் *இறைத்தல்* எனலாயிற்று. அவ்வாறு சேரும் பொருளைத் தனக்கென வைத்துப் பேணிக் கொள்ளாது, தன்புறத்தே இருப்பார்க்கும் தட்டின்றி முழுதும் இறைத்தலால், பொருள் முட்டுப்பாடுற்று வறுமை மிகுதலை *நிரப்பு* எனலாயிற்று.

*வறுமை* என்பது ஏலாமை, சோம்பல், உழையாமை, முயற்சியின்மை முதலியவற்றால் வரும் வெறுமை நிலை.

*நிரப்பு* - ஈகை நிலையால் ஏற்படும் பொருள் முட்டுப்பாடு. இது சான்றோர் போற்றுதலுக் குரியதாகையின் நிரப்பு எனலாயிற்று. இதனை வறுமை எனக்குறித்தல் சாலாது. நிரப்பு மங்கலச் சொல். தொடர்ந்த வரிசைப்பட்ட வறுமைநிலை யாதலின் *நிரல் நிரப்பு* எனலாயிற்று. இத்தகைய இலவாந் தன்மையால் அறிவுணர்வு ஊறுபடும் ஆகையான் அறிவயிரும் *நிரல் நிரப்பு* எனலாயிற்று. அயிர்தல் ஆர உண்ணல்.

தன்னைச் சார்ந்த பிறர்க்குச் சேரும் பொருளையெல்லாம் இறைத்தலால் வரும் தொடர்ந்த வறுமைநிலை அறிவைத் தடைப்படுத்தி, அதனான் வரும் வினைப் பாட்டைக் குறைவிக்குமேயன்றி உளவுணர்வை சிதைத்து விடாது என்னும் குறிப்புத் தோன்றவே *நிரப்பு அறிவு அயிரும்* என்றது. எத்துணை வறுமை வந்துள்ள போதும் தாம் கொண்ட ஒழுகலாற்றை நல்லுணர்வு சான்றவர் என்றும் கைவிடாது தம் உள்ளவுணர்வில் துளியும் குன்றார் என்ற உறுதிப்பாடு தோன்றலே அவ்வாறு கூறலாயிற்று. ஒப்புரவு உள்ளத்தின் செயலாம். அறத்தால் வந்த பொருளைத் தம் திறத்தால் ஒன்றிப் புறத்தே இருப்பார் யாவர்க்கும் தட்டின்றி வாரியிறைத்து அதனான் பொருள் முட்டுற்ற சான்றவர், அவ்வினைப்பாட்டை அறிவால் ஆயாது உளத்தாலேயே பருகுவர் என்பது உட்பொருள். அறிவான் துன்பெனக் காணப்படுவதுள் உளத்தான் இன்பெனக் காண்டலும் உளதாகலின் இதுபற்றி விரித்துக் கூறலாயிற்று. ஒப்புரவு அறிவுக்குத் துன்பெனினும் உளத்திற்கு இன்பந் தருதல் பற்றியே வள்ளுவரும். ஒப்புரவினால் வரும் கேடு, விற்றுக்கோள் தக்கதுடைத்து என்று வலித்துக் கூறினார் என்க.

***உகுகண்ணீர் உளங்கொளுத்த, தகுமனைமேல் அழல் வீசி*** - தொடர்ச்சியாக வரும் வறுமை நிலையால் மனைவி கண்ணீர் உகுத்தாள்; அஃது உளத்தைக் கொளுத்தியது என்றபடி . நிரல் நிரப்புக்குக் கண்ணீர் உகுத்ததால் அவள்மேற் கடிதல் வேண்டுதலாயிற்று. தம் ஒப்புரவு சான்ற உளத்தைத் தேராது, கண்ணீர் வடித்தல் கடிய வேண்டுவதாகலின் அழல்போலும் சுடுசொற்களை வீச வேண்டியதாயிற்று. என் நிற்கா திறஞ் சான்றதும், தன் படுத்தும் பெட்பு வாய்ந்ததும், கார் போர்த்த கதிர் போன்று இருப்பதுமான எம் உள்ள உணர்வையும் அதன் ஒப்புரவையும் உணர்ந்து கொள்ளாத் தகைமையினோகிக் கண்ணீர் உகுத்த தன்மைக்கு அழன்று கடியலாயிற்று. உளம் கொளுத்தப்பெற்ற பின் அதனின்றெழுப்பும் வல்லுணர்வு அழல் போன்ற சொற்களை வீசிற்றென்க. ஒப்புரவினால் வரும் கேட்டிற்குத் தாளாத்தன்மையினாள் எனினும் அவள் தகுதி சான்ற மனைவியே என்று கூட்ட *தகுமனை* எனலாயிற்று.

***புறவாழ்க்கைப் புற்பழித்து*** - புறவாழ்க்கையின் புல்லிய தன்மைகளைப் பழித்து

*அகவாழ்க்கை அடிப்படுக்கும்* - புல்லிய புற வாழ்க்கையை வெறுத்து, ஒளிசான்ற அகவாழ்க்கைக்கே அடிப்படுக்கும் உணர்வு. அகவாழ்க்கை - நல்லார் போய செந்நெறி நயக்கும் வாழ்க்கை; நாவும் நெஞ்சும் ஒன்றி நடக்கும் வாழ்க்கை.

*மூட்டம்* - அத்தகை வாழ்க்கையின் உள்ளார்ந்த உணர்வுகள் நிறைந்த நிலை. இந்நிலையின் அடங்கிக் கிடக்கும் நெஞ்சம்.

*முற்றா நெஞ்சம்* - இளமை நெஞ்சம். கள்ளமும், கவடும், பொய்யும், புனைவும் - சூழாது மென்மையும், இளகலும் சான்ற உள்ளம். உள்ளத்து இளமையும், அறிவின் முதுமையுமே சான்றோர்க்கு உவக்கும் தன்மையவாகலின், அப்பொருள் தோன்றக் கூறியது.

நெஞ்சு முற்றுதல் எதிர்ப்படும் மெல்லுணர்வுகளை அறியாது போதல் பற்றி, வேண்டுவது இளமை நெஞ்சமே என்றபடி. உள்ள உணர்வுகள் மென்மை சான்றும் அறிவுணர்வுகள் வன்மை சான்றும் இருத்தலே இவ்வுலக வாழ்க்கைக்கு இன்பமும், அவ்வாறல்லாது, உள்ள உணர்வுகளில் வன்மையும், அறிவு உணர்வுகளின் மென்மையும் பெறுதல் இவ்வுலக வாழ்க்கைக்குத் துன்பமும் தருதல்பற்றி, ***முற்றா நெஞ்சின் ஆட்டத்தழுந்திய இன்பம்*** எனலாயிற்று.

*முற்றா நெஞ்சின் ஆட்டம்* - மெல்லியது துளிக் காற்றுக்கும் ஆடுந் தன்மை போல், இளமை நெஞ்சம் துளி இன்பத்தையும் பேரின்பமாகக் கொள்ளும் தகையது என்க. *ஆட்டம்* - அசைவு. உள்ள அசைவுகள் ஒவ்வொன்றும் இன்பமே என்றபடி . அத்தகைய இன்பம் எடுத்துரைக்கத் தக்கதும், முழுதும் எட்டத்தக்கதும் அன்று என்பதால், *நாட்ட நாட்ட நா நாடாது* எனலாயிற்று. அத்தகு இன்பத்திற்கு எல்லையே இல்லை என்பது பொருள்.

இப்பாட்டு, உணர்வு சான்ற அகவாழ்க்கையின் தன்மைகளைக்கூறி, ஒப்புரவாட்சியின் அகப்புறக் காட்சிகளைக்காட்டி, துன்புறு மாந்தர்தம் துயர்க்கு அவர் தாம் அகவாழ்க்கைக்கு அடிப்படுக்கா நிலையே கரணிய மென்றெடுத்து விளக்கி ஆற்றுப்படுக்கும் ***வஞ்சித்தளை பொதுளிய நேரிசை ஆசிரியப்பாவாம்.***

இப்பாட்டு ***பொதுவியல்*** என் திணையும், ***முதுமொழிக் காஞ்சி*** என் துறையுமாம்.



# 5 பூரிப்பசுங்கதிர்

ஊரே, பெடையடை உயிர்க்கப் புறம்போய்ப்
பூரிப் பசுங்கதிர் கொய்துவந் தூட்டும்
புறவினங் குனுகிறை மாடக் கூடலே;
உறவே கரவில் உளமொழு கியரே;
ஆயே, மைம்புகை கூர்ங்கண் அளைப்ப
ஓயா தட்டுறை கொம்பறு கொடியே!
நீயே, மாலுமென் நெஞ்சுட் புகுந்து
மேயுறு நினைவிற் காயவோ ருயிரே!
யானே, இளநகை கேட்டி
கூன்பிறை நுதலிற் சாந்தணி வோனே!

**பொழிப்பு :**

என் ஊராவது, பெடைப்புறவு அடை கிடந்து உயிர்த்தல் செய்ய, சேவற் புறவு ஊர்க்குப் புறத்தே போய், புடைந்த பசுங்கதிர்களைக் கொய்து வந்து மகிழ்ந்து ஊட்டி, அதற்கு நலஞ் செய்யும் அன்பு நிறைந்த புறாக்கள் இனம் குனுகும் ஓசை நிரம்பிய இறைவன் கோயில் மாடம் மிகுந்த கூடல் நகரம். என் உறவாவது கரவு இல்லாத உளத்தான் ஒழுகியர் கூட்டம். என் ஆயோ, கருமை சூழ்ந்த புகை தம் கூர்த்த கண்களை அளைத்தல் செய்து வருத்தும்படி, ஓயாமல் அடுதல் அறையில் உறைந்து கிடக்கும் கொம்பு இழந்த கொடி போன்ற உடலினள். நீயோ, நின்பால் மயங்கிக் காதலுற்ற என் நெஞ்சின் உட்புகுந்து மேய்தலுறும் நினைவிற்குப் பற்றுக்கோடாகிய ஓர் உயிர். யானோ, இளநகை புரியும் நீ கேட்பாயாக, நின் பிறைபோலும் வளைந்த நெற்றியில் செஞ்சாந்து (குங்குமம்) அணிதற்கு உரியவனே!

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டு ஒருவரை ஒருவர் விரும்பித் தேறிய பின்னர், தலைவி, தலைவனின் ஊரும் உறவும் சுற்றமும் விரும்பிக் கேட்கத் தலைவன் விடையாக மொழிந்தது.

ஒருவரின் பண்பு, பழக்கம் முதலியவை சூழலால் அமைதல் உண்மையின், ஊர் கூறிய மட்டில் அவை அறியப்படுதல், இயலும் ஆகலின், முதற்கண் ஊரைக் கூறினான் என்க. *'சான்றோர் பலர் யாம் வாழும் ஊரே'* என்ற

*புறநானூற்றுப் பாடலடியும் ஊர்க்கும் வாழுநருக்கும் தொடர்பு காட்டி நின்றது.*

*இனி, ஊர் கூற வேண்டியவன் வாளா ஊரின் பெயரை மட்டும் உரையாது அவ்வூரின்கண் விளங்கும் சிறப்பான ஒரு நிகழ்ச்சியும் கூறித் தன் ஊரின் தன்மையை நன்கு விளக்குதல், கேட்பார் மனம் பொருந்திக் கேட்டல் வேண்டும் எனற்கு.*

*பெண் புறா அடைகிடந்து உயிர்த்தல் தொழில் செய்தலையும், ஆண் புறா அதன் துணைக்கு, ஊர்ப்புறத்தே போய் வளைந்து பருத்த பசுங்கதிரைக் கொய்து வந்து மகிழ்ச்சியுடன் அதன் வாய்க்கு ஊட்டுதலையும் கூறித் தம் ஊரின்கண் வாழும் மக்கள் அன்புடையராக இருப்பர் என்பதைத் தலைவிக்குக் குறிப்பால் உணர்த்திக் காட்டினான் என்க.*

*ஐயறிவு படைத்த பறவையினங்களும் அன்பு நிறைந்த இல்லறம் செய்து வாழும் தன் ஊரின்கண், ஆறறிவு படைத்த மக்கள் தம்மின் அன்பு நிறை வாழ்க்கைக்கு அளவும் வேண்டுவதோ என்று தலைவன் கூறித் தான் வாழும் ஊர் மக்களின் நல்லன்பையும், அதன் வழித் தான் கொண்ட மெய்யன்பையும் தலைவிக்கு உணர்த்தினான் என்க.*

*இனி, அன்புநிறைந்த மக்கள் வாழும் நகராக இருப்பதுடன் அதனைச் சுற்றி வளம் நிறைந்த வயல்களும் மலிந்து கிடப்பதையும், அதன் வழித் தன் ஊர் வாழ்க்கை வளத்திற்கு ஏற்ற ஊரே என்பதையும் உணர்த்த, அதன் புறத்தே புடைத்து வளர்ந்த பசுமையான கதிர் நிரம்பிக் கிடத்தலைத் தலைவிக்குக் கூறினான்.*

***கொய்து வருதல்** இயல்பும், **கொய்து உவந்து ஊட்டுதல்** சிறப்புமாம்.*

*இல்லற ஒழுக்கத்தைப் புறவினமும் கடைப்பிடித்து வாழும் மாடங்கள் நிறைந்த கூடல் நகரம் என்பது தலைவன் குறிப்பு.*

***புறவினம் குனுகு இறை மாடக் கூடல்** என்றது புறவினம் குனுகுதல் ஒலி நிறைக்கும் இறைவன் திருமன்று நிறைந்த கூடல் நகரம் எனல் வேண்டி.*

*புறவினம் குனுகுகின்ற ஒலி, ஊர் மக்கள் மகிழ்வால் ஆரவாரிக்கும் குறிப்பை உணர்த்திற்று.*

*இனி, ஊர் கேட்ட அளவிலேயே, தலைவியோடு தான் கூடிவாழ்வதற்கு ஏற்ற நிமித்தக் கூற்றாக, அவன் வாழும் நகரைக் **கூடல்** என்பான்; வெறுங் **கூடல்** என்னாது, **மாடக் கூடல்** என்றது, தான் தலைவியின்பால் கொண்டது பெருமை பொருந்திய காதல் ஆகும் எனல் வேண்டி. இனி, வெறும் **மாடக் கூடல்** என்னாது **இறை மாடக் கூடல்** என்றது, இறையவன் கோயில் நெடிது நிற்கும் ஊரின்கண் வாழ்தல் செய்யும் தன் காதலின் **உண்மையைக்** குறிப்பால் உணர்த்துவான் வேண்டி. 'இறைவன் வாழும் ஊரினின்று வரும் யான் பொய் வழங்கேன்; நின்னொடு கூடி, இல்லறம் நடத்தும் உறுதிப்பாடு உடையேன்' எனக் குறிப்பால் உணர்த்தினான் என்க.*

"நான் நின்னைக் கூடுதற்கு ஏற்றவன்; உயர்ந்த - பெருமை கொள்ளும் காதல் நெஞ்சன்; மெய்யான அன்புள்ளவன். மணவாழ்க்கையை அறவாழ்வில் நடத்த விரும்புபவன்; வளம் பொருந்திய ஊரினன்; ஆகலின் வறுமை போதர வழியில்லை; என்றன் ஊர் கூடல் மா நகர் என்பது அவன் சுற்றிச் சாற்றிய கருத்துகள்.

***உறவே கரவில் உளமொழுகியரே*** - எனக்கென்றும் உறவேதும் இல்லை. கரவில்லாத உளவழி ஒழுகி நிற்பார் எவரும் உறவினரே! நீயும் கரவில்லாத உளங்கொண்டு நிற்கும் அன்பொழுக்கத்தினள். ஆகலின் நீயும் என் உறவுக்குப் பொருந்தியவளே.

ஒத்த அன்பும் ஒழுகலாறும் உடையர் யாவரும் உறவினர்களே என்பதால், நீ இனம், குலம், பிறப்பு முதலிய பொய்ம்மை உறவுகளைப் பார்க்க வேண்டுவதில்லை என்று குறிப்பால் கூறினான் என்க.

***மைம்புகை கூர்ங்கண் அளைப்ப*** - கருமையான புகை தன் கூர்மையான கண்களை அளாவுதல் செய்து வருத்த; ***கூர்ங் கண்:*** கூர்மையாக உற்று நோக்குங்கண். முதுமையுற்றார் தம் கண் பார்வையைக் கூரியதாக்கி உற்று நோக்குவர் ஆகலின், தாய் முதுமையுற்றவள் என்பதை உணர்த்தக் கூர்ங் கண் என்றான் என்க.

***ஓயாது அட்டு உறை*** - சமையல் அறையில் ஓயாது உறைகின்ற.

***கொம்பறு கொடி*** - கொம்பிழந்த கொடி. தாய் கணவனை யிழந்தவள் என்பதாகக் குறிப்புக் காட்டினான் என்றபடி.

தாய் முதியவள்; கணவனை இழந்தவள்; சமையல் அறையிலேயே உறைபவள் -என்றது, அம் முதிய தாய்க்குத் துணை வேண்டுவதற்காக, தான் விரைந்து இல்லறம் மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாமையையும், அவளுக்குத் துணையாகத்தான் தன் மனைவினைகளை மேற் கொள்ளல் வேண்டும் என்பதையும் குறிப்பினால் உணர்த்தினான் என்றபடி.

தாய் கணவனையும், தான் தந்தையையும் இழந்தமையால், தன் மணம் பேச வேறு பெரியோர் இலர் என்பதையும், அது பற்றித் தானே மணம் பேசும் தகுதியுடையவன் என்பதையும் குறிப்பால் கூறினான் என்க.

***மாலும் என் நெஞ்சு*** - மயக்குறும் என் நெஞ்சம், அழகாலும், அன்பாலும் மகிழ்தலால் மயக்குற்ற நெஞ்சம்.

***நீயே மாலும் என் நெஞ்சுட் புகுந்து மேயுறு நினைவிற்கு ஆய ஓர் உயிர்*** - மயக்குற்ற என் நெஞ்சினுட் புகுந்து என் நினைவுகள் எல்லாவற்றினும் கலந்து நிற்பதாகிய ஓர் உயிர் நீ.

***மேயுறு நினைவு*** - கலந்து நிற்கும் நினைவு - ஆட்கொள்ளப்பட்ட நினைவு.

***ஓர் உயிர்-*** ஒரே உயிர். உடலோடு ஒன்றினை என்று கூறாது உயிரோடு ஒன்றினை என்று கூறினான் என்க. நினைவிற்கு ஆய ஓர் உயிர் என்றது என் எல்லாவகை நினைவுகளுக்கும் பொருந்தி நிற்கும் ஒரே உயிர் என்பான் வேண்டி.

தனக்கு அவள் உயிராக நின்றனள் என்பதால், இனி அவளில்லாமல் தான் வாழ்தற்கியலாத உடல் போன்றவன் என்னும் குறிப்புக் காட்டினான் என்றவாறு.

***யானே! இளநகை கேட்டி!*** - இது காறும் தன் ஊர் பற்றியும், தன் உறவு பற்றியும், தன் பெற்றாளாகிய தாய் பற்றியும், தனக்குற்றாளாகிய தன் காதலி பற்றியும், உரைத்து வந்த அவன், இனித் தன்னைப் பற்றிச் சொல்லத் தொடங்கினான் என்றபடி.

இவ்வாறு இறைச்சிப் பொருளால் தன் ஊர், உறவு தாய், காதலி முதலியோர் பற்றிக் கூறிய அவ்வளவையும் கூறக்கேட்ட அவள், அவன் தன்னைப்பற்றிக் கூற வருங்கால், அதனை மிகு விருப்போடும் வியப்போடும் கேட்கும் முகத்தினளாய் இளநகை புரிந்தாள் ஆகையால் அவளை **இளநகை** என்று விளிக்க வேண்டுவதாயிற்று.

இவ்வளவும் கூறியவன், தன்னைப்பற்றி இறுதியாகக் கூறும் முடிவுபற்றி அவள் அறிந்து கொள்ளும் விருப்பக் குறிப்பை, அவள் எதிர்நோக்கியிருந் தாமையாலேயே அவளுக்கு நகை பிறந்தது என்க. அவ்வாறு பிறந்த நகை முற்றும் வெளிப்படின் அஃதவள் பெண்மைக்கும் நாணத்திற்கும் இழுக்காய் அமையும் என்றதால், அவள் விருப்பக் குறிப்பை இளநகையாக வெளிப்படுத்தினாள் என்க.

***கேட்டி*** - கேட்பாயாக. இதுவரை நான் சொல்லியதை அரைகுறையாகக் கேட்டிருப்பினும், இனிமேல் சொல்லப்போவதையே அவள் முழுக் கவனத்தோடு கேட்க வேண்டும் என்பதால் ***கேட்டி*** என்று கூறினான் என்க.

***கூன் பிறை நுதல்*** - வளைந்த பிறைபோலும் நெற்றி.

***யானே—சாந்தணிவோனே!*** - நின் வளைந்த பிறை போலும் நெற்றியில் செஞ்சாந்து அணிதற்கு உரியவன் யானே.

யான் நின்னை மணத்தற்கு உரியவனே என்றான் என்க.

யானே- என்றது உறுதிப்பாட்டிற்கு.

இப்பாட்டு, குறிஞ்சி யென் திணையும், ***இயற்கைப் புணர்ச்சிக் காலத்து, தலைவன் தலைவியைத் தெருட்டிக்கூறி உயிரென்றுரைத்த*** துறையுமாம்.



## 6 செங்கட் சேய்

*விழவிற் றப்பிய செங்கட் சேஎய்*
*கொழுவிய கூறினு மொழுகா தலமர*
*வொருதாய்த் தேடி யுவந்து புன்றலை*
*பெருமடி புதைக்கும் பெற்றிதே தோழி!*
*அண்மைத் தாயினுஞ் சேய்மைத் தாயினும்*
*பெண்மைக் கொன்றிய நெஞ்சம் நாடித்*
*தேங்குவ தியல்பின் தேரார்*
*யாங்குகொல் முனிவது? யாதிவர் வினையே!*

**பொழிப்பு:**

*விழாக் கூட்டத்துள் தன் தாயின் பிடியினின்று தவறிய சிவந்த கண்களையுடைய நடைபயில் குழந்தை, உறவும் நொதுமலும் ஆகிய பிறர், மருட்சியுற்ற அதன் மனத்தைத் தேற்றும் கொழுமையான உரைகளைக் கூறினாலும், அவர்பால் இருந்து பயில்தலையறியாமல், மனம் சுழற்சியுறத் தன் ஒருதனித் தாயைத் தேடிக் கண்டு உவந்து, தன் இளந்தலையை அவளின் பெருமை பொருந்திய மடியில் புதைத்து ஆறுதலுறும் தன்மை வாய்ந்தது, தோழி! அது போல் அருகிலிருப்பினும் தொலைவிலிருப்பினும் மன, மொழி, மெய்களால் ஒருத்தியின் பெண்மைக்குப் பொருந்திய ஆண்மமையுடையவனின் அருள் நெஞ்சம் ஒன்றையே நாடி, அதன் இணைப்பில் தேங்கி அமைதியுறும் தன்மையைத் தத்தமக்குற்ற இயல்பினால் உணர்ந்து தேர்ந்து கொள்ளாத இவர் எம் உளத்தை உணராது செய்ய முற்படும் வினை எத்தகைய சிறுமை உடையது!*

**விரிப்பு :**

*இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.*

*தலைவியின் பெற்றாரும் மற்றாரும் தம் உறவோன் ஒருவனுக்கு தன்னைக் கொடுக்கும் மணவிழா முயற்சிகளைக் கண்ணுற்றுத் தன் உள்ளம் ஏற்கனவே தனக்குப் பொருந்திய ஒருவனை நாடியதென்றும், அவன் உள்ளத்தன்றி அஃது அமைதியுறும் இடம் வேறில்லை என்றும் கூறி, அவர் செயல்களைப் பேதைமை என்று கடிந்து, தலைவி தன் தோழிக்கு உணர்த்துவதாய் அமைந்தது இப்பாட்டு.*

தலைவி தன் தூய்மையான காதல் அன்பிற்கு, ஒரு குழந்தையின் தாய்மை அன்பினை உவமையாகக் கூறுகின்றாள்.

ஆரவாரமான விழாக்கூட்டத்துள், நடைபயில் குழந்தை ஒன்று தன் தாயின் பிடியிலிருந்து தப்பி, அவளை எண்ணி எண்ணி மனம் சுழற்சியுறத் துன்புறுவதைத் தான் தன் காதலனை அடைய முடியாமல் பெறும் மனத்துயருக்கு உவமையாகக் கூறுகின்றாள்.

*விழவில் தப்பிய* - விழாக் காலத்துத் தவறிய- ஊர் விழாவின் ஆரவாரத்திற் கிடையில் தவறிய குழவியும், மணவிழா ஆரவாரத்திற் கிடையில் நழுவிய தன் மனமும் ஒரே துயர் கொண்டன என்றாள். தாயின் கைநெகிழ்ச்சி குழவியை ஊர்விழா ஆரவாரத்திடை உய்த்துத் துயருற வைத்தது. அதுபோலவே தன் காதலனின் கால நெகிழ்ச்சியும் தன்னை இம் மணவிழாப் பேச்சின் ஆரவாரத்திடைப் புகுத்துத் துயருறச் செய்தது.

குழந்தை விழிப்பாயிருந்தால் தன் தாயின் பிடிப்பிலிருந்து தவற நேராது போலவே, தான் விழிப்பாயிருந்தால் தன் தலைவனின் பிடியினின்று தவற நேர்ந்திராமல் இருந்திருக்கலாம் என்று தலைவி தோழிக்கு உணர்த்தினாள்.

இளமையில் குழந்தை தன் தாயை நாடுவது இயல்பு போலவே, பருவத்தில் அது தனக்குற்ற ஆடவனையோ பெண்ணையோ தேடிப் போவதும் இயல்பாம் என்ற குறிப்பும் காட்டினாள் என்றபடி.

*செங்கட் சேஎய்* - சிவந்த கண்களை உடைய நடை பயில் குழவி. மடிப்பிள்ளை மகவும், இடைப்பிள்ளை குழவியும், நடைப்பிள்ளை சேயுமாம். சேய் - சிவந்த நிறத்தது- நடந்து தொலைவிற் செல்லும் பான்மையது. - சேயோன்.

தாயைத் தேடிக்காணாது அழுது நிற்கும் கண்களை உடையதாகலின் *செங்கட் சேய்* எனப்பட்டது.

தலைவியும் தன் தலைவனைக் காணாது வருத்தமுற்றுச் சிவந்த கண்ணினளாய் இருத்தலைத் தோழிக்குக் குறிப்பாய் உணர்த்தினள் என்றபடி.

*கொழுவிய கூறினும் ஒழுகாது* - செழுமையான சொற்கள் - அன்பு நிறைந்த சொற்களால் கூறித் தேற்றினும் தம்பால் பழகாது - தன் துயர் நீக்கி அமைதியுறாது.

தன் தாயை யன்றி வேறு எவரைக் காணினும், எவர் எத்தகைய செழுமையான அன்பு பொதிந்த சொற்களைக் கூறினும் அக்குழந்தை அவர்பால் ஆறுதல் கொள்ளாததைப் போலவே, தலைவி தன் தலைவன் பாலன்றி வேறு எவருடைய அன்பும் பரிவும் வாய்ந்த சொற்களாலும், செயல்களாலும் ஆறுதல் பெறாள் - அமைதியுறாள்என்று உணர்த்தியவாறு.

*ஒழுகல்* - ஒத்துப் பழகுதல்- ஒரு- படித்தாய் நிற்றல். உலகில் ஒரே சீராக அமைந்த ஒரு பொருளை யாண்டுங் காண்டல் அரிது. ஒன்று போலவே வேறொன்றை- ஒரே இனமும், தன்மையும், எடையும் வாய்ந்த இன்னொன்றைம் பார்த்தல் இயலாதாம். நெல், கம்பு முதலிய தவச மணிகளும், குன்றி, பவழம் முதலிய பரு மணிகளும் பெரும்பாலும் ஒன்றியிருப்பினும் ஒரோவொரு கால் வேறுபடுவனவே. எனவே ஒரே சீராகவும்- ஒரு படித்தாகவும் இருப்பன நீர்ப்பொருள் ஒழுகும் ஒழுக்குத் துளிகளே! ஒரே நீர்மப் பொருளின் பல துளிகளும் ஒரே சீருடையன. மேலும் ஒரு தொளையினின்று ஒரேயளவாக நீர் துளிர்த்துக் கசிந்து வெளிவருதலைத் *துளிகள்* என்றும், அது வரும் தன்மையை *ஒழுக்கு* என்றும் கூறினர் தமிழர். அதனின்று பிறந்ததே ஒழுக்கம் என்ற மாந்த நடைமுறைச் சீர்மை குறித்த சொல்லும். *ஒழுக்கம்* உடையவன் என்ற கூற்றுக்கு ஒரே படித்தான சீர்மை- நடைமுறை வாய்ந்தவன் என்பதே பொருள். பெரும்பாலும் உயர்ந்த தன்மைக்கே சீர்மை உரித்தாகலின் *ஒழுக்கம்* என்பதே உயர்ந்த நெறியைக் குறித்தது. நீர் ஒழுக்கல் உடைய தன்மையின், ஒழுக்கத்திற்கு நீர்மை என்றும் சொல் உண்டாயிற்று. அதன் பின்னரே நீரின் பிற (தூய்மை, தண்மை, பரந்தமை, கொண்மை முதலிய) நுண்தன்மை களையும் அச்சொல் அளாவி நின்றது. *அலமர*–சுழல-அஞ்ச-கலங்க-வருத்த-துன்பமுற. சிவந்த கண்களையுடைய அக்குழந்தை தன் விழிகளை நான்கு புறமும் சுழற்றி மருட்சியுற அழுது தன் தாயைத் தேடுதலை உணர்த்திற்று. ***செங்கண் அலமரத் தேடி*** என்றும் கொண்டு கூட்டிப் பொருள் கண்டு மகிழ்க.

*ஒரு தாய்த் தேடி* - ஒரு தனித் தாயைத் தேடி குழவிக்குத் தன் தாயைவிட வேறொரு புகலிடம் இல்லையாகலின் *ஒரு தாய்* எனலாயிற்று.

*'குழவி அலைப்பினும் அன்னே என்றோடும்'* (நான்மணிக்கடிகை 35) என்றும்,

*"அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும், மற்றவள்தன். அருள் நினைந்தே அழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே"* (பெருமாள் திருமொழி :1) என்றும் குழவியின் தாய்மைப் பிடிப்பு காட்டப்பட்டுள்ளது.

குழவிக்குத் தாய்போல், தலைவிக்குத் தலைவன் என்பதைத் தலைவி தோழிக்கு உணர்த்தினாள்.

*உவந்து* - உள்ளம் விரும்ப மகிழ்ந்து. ஒரு தாய் தேடி உவந்து - என ஒரு தனித்தாயைத் தேடலும், அவளைத் தொலைவிற் கண்ட அளவிலேயே உவத்தலும் கூறலாயிற்று.

***தேடிக் கண்டு உவந்து*** என வராது, ***தேடி உவந்து*** என வந்தது உவத்தல் கண்ட நொடியினானே நிகழ்ந்த விரைவு பற்றி.

அதுபோலவே ***உவந்து புன்றலை பெருமடி புதைக்கும்*** என்பதிலும் உவந்து

ஓடி என வராது *உவந்து புன்றலை* புதைக்கும் என்றது, கண்ட அளவிலேயே உவந்து, உவந்த அளவிலேயே ஓடிப் புன்றலை புதைத்தது எனும் விரைவுபற்றி. கண்டவுடன் மகிழ்ச்சியும் மகிழ்ந்தவுடன் ஓடி மடியில் தலை புதைத்ததும் நேர்ந்ததென்க.

*புன்றலை* - இளந்தலை - சிறியதலை.

*பெருமடி புதைக்கும் பெற்றிதே* - தாயின் பெருமை பொருந்திய மடியுள் தன் தலையைப் புதைத்துக் கொண்டு ஆறுதலுறும் தன்மையது.

ஒரு குழவிக்குத் தன் தாயின் மடியே பெருமை பொருந்திய மடி போல், பருவமுற்ற தலைவிக்குத் தன் தலைவனின் மடியே பெருமை பொருந்திய மடியாம் என்றவாறு.

*தோழி* - விளி- தோழி, நீ கேட்பாயாக.

தோழி இன்னும் தன்னைப்போல் ஒரு தலைவனைப் பெற்றிலள் ஆகையினால், அவளுக்குத் தான் தன் தலைவன்பாற் கொண்ட ஈடுபாட்டினை உணர்த்துவாள், முதலில் குழந்தை தன் தாயின்பால் கொண்ட ஈடுபாட்டினைக் கூறினாள் என்க. *அண்மைத் தாயினும் சேய்மைத் தாயினும்* - இடமும், காலமும் உணர்த்தக் கூறினாள். இடத்தான், அருகில் உள்ளான் எனினும் தொலைவில் உள்ளான் எனினும் என்றும், காலத்தான், இனி அடுத்து வரும் காலத்தே மணப்பான் எனினும், அன்றிப் பின்னொரு காலத்தே மணப்பான் எனினும்- என்றும் கொள்க. இடத்தான் சேய்மையோன் எனின், தான் அவனை நாடிப் போதலே முறையென்றும், காலத்தால் சேய்மையோன் எனின், தான் அவன் மணக்கும் வரை காத்திருத்தலே முறையென்றும் அறங் கூறினாள் என்றபடி. அறம்-ஒழுகலாறு.

*பெண்மைக் கொன்றிய நெஞ்சம் நாடி* - தன் பெண்மை உளத்திற்குப் பொருந்திய நெஞ்சத்தை நாடி. இக்கூற்றான் தான் முன்பே தன்தலைவனைக் கண்டு அவன் நெஞ்சுறக் கலந்த நிமித்தங் கூறினாள் என்க.

*தேங்குவது இயல்பின் தேரார்* - பெண்மை நெஞ்சம் தனக்கொன்றிய ஆண்மை உள்ளத்தைத் தேடித் தேங்கி அமைதியுறுவதே இயற்கை யாதலின், அதனை அறியாதவர் என்றும், தமக்குற்ற **இயல்பினால்** பட்டறிவினால் தன் மகளின் உள்ளத்தைத் **தேர்ந்து** கொள்ளாதவர் என்றும் பொருள் கொள்க. தமக்குற்ற அறிவாலும் , நிகழ்ச்சியாலும் மன அறிவாலும், தன் உள்ளத்தைத் தேராதவர் தனக்கு மணவினை தேர்ந்தனரே என்று இழிவு தோன்றக் கூறினள் என்றபடி.

*யாங்குகொல் முயல்வது* - தன் உள்ளத்தைத் தமக்குற்ற மனவியலால் தேர்ந்து உணராதவர், இம்மண வினைக்கு ஒருப்படாத என்னை முனிந்து கொள்வது எதற்கு என்றவாறு.

இக்கூற்றால் தன் தோழிக்குச் சொல்லுவது போல் அருகில் தான் உரைப்பது கேட்டு நிற்கும் தலைவனுக்கும் தன் உறுதிப்பாடு கூறினாள் என்றபடி.

*யாதிவர் வினை* - மணவினை குறித்த எம் பெற்றோரின் செய்கை இத்தகைய சிறுமை வாய்ந்ததே என்றும்.

மணவிழா குறித்துத் தம் பெற்றோர் வினைபடத் தொடங்கி விட்டனர்; இனி என் தலைவன் செய்யப் போவதொரு செயல்தான் என்ன? என்று தோழி முகமாகத் தலைவி தலைவனைக் கேட்டனள் என்றும் பொருள் கொள்க.

இப்பாட்டு குறிஞ்சி யென் திணையும், *நொதுமலர் வரைவழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது* என்ற துறையுமாம்.

இனி, '*நொதுமலர் வரைவழித் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றது*' என்றும் கொளற்பாலதாம்.



## 7 என்றும் வாழுநர்

நாடு பலவாக; மொழி பலவாக!
ஆட்மை கொடியின் அரசு பலவாக!
மாணும் ஒழுகினும் மக்கள் பலராக!
எத்திசை என்னோ ராயினு மத்திசைப்
புலனும் உளமும் பூண்டா ராகி,
நிலத்துயிர்க் கெல்லா மளியி னிரங்கிப்
புலத்துறுப் புய்க்குஞ் சான்றவ ருளரே!
வெம்மை மாக்களும் வினையழி வாரும்
மும்மையு முளரவர் உய்யல் வேண்டிப்
பன்னூல் துவன்று பாதை தெரித்தல்
மெய்ந்நூல் நின்ற மேலோர் பாடே!
ஊருணி மருங்கிற் பல்லதர் வகுத்து
நீருண வருஉம் வேட்கை யோர்க்கு
நின்றது தணிப்பதக் கடனே!
என்றும் வாழுந ரித்தகை யோரே!

**பொழிப்பு:**

இவ்வுலகத்து நாடுகள் பலவாகும்; ஆங்காங்கு வழங்கும் மொழிகளும் பலவாகும்.; அவற்றை ஆளும், ஆடுகின்றதும், அமைகின்றது மான அறுவை இலச்சினையாகிய கொடிகள் சான்ற அரச அமைப்புகளும் பலவாகும். அவ்வமைப்புகளுக்கடங்கிப், பெருமை மிக்க நாகரிகத்தும் பலராவர். இவ்வழி, எவ்விடத்தாராயினும், எம்மக்கட் பிரிவினராயினும், அவ்வவ்வழி அறிவுணர்வும் உள்ளவுணர்வும் பூண்டவராகி, இவ்வுலகின்கண் கால்கோளும் எல்லாவகை உயிர்கட்கும் அருளால் இரங்கல் செய்து, அவ்வுயிர்கள் தாங்கிய புலன்களின் உறுப்பு விளக்கத்திற்கு அவற்றை வழிநடத்துதற்குச் சால்பு மிக்க தன்மையர் என்றும் உளராக. அவர் உளர் போலவே, அறிவானும் உளத்தானும் கொடுமை மிக்க மாந்தப் போலியரும் விலங்கு போலியரும், தாம் தாம் மேற்கொண்ட வினைகளான் அழிந்து படுவாரும் எக்காலத்தும் உளராவர்; அவ்வகையினார் தம் தம் நிலைகளினின்று உய்ந்து போதல் விரும்பி, அவர்செலும் வழி நிலைகளை முட்டறத் தெரிவிக்கும் பல்வகை நூல்களை நுவலுதல், மெய்யறிவாற்

கண்டுணர்ந்து அடங்கி நின்ற மேலோராகிய அவர் வினை ஆகும். ஊர் மக்கள் உண்ணுதற்குதவும் நீர்நிலைப் புறத்து, வரவும் போகவுமாகப் பல வழிகளையும் அமைத்துக் கொள்ளும் நீர் வேட்கை மிகுந்த மக்கள் போல், அறிவு வேட்கை மிக்கு வருவார்க்கு அது தணிவித்துப் போக்குவிப்பது அவர் மேற்கொண்ட வினையின் கடப்பாடு ஆகும். அத்தகைமை சான்றவரே இவ்வுலகத்து என்றென்றும் உடலாலும் உணர்வாலும் வாழ்ந்து வருகின்ற தன்மையோர் ஆவர்.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

அறிவுப் புலன் உழுது, வித்தி, விளைவித்துத் தானும் உண்டு, ஏனையோரையும் உண்பிக்கும் சான்றவர், இவ்வுலகத்து எந்நிலத்தும், எம் மக்கள் தொகுதியிலும், எவ்வகை ஆட்சியின் கீழிருந்தும், கடமையாற்றுந் தகைமையையும், அவர்தம் மெய்யானும், மெய்ந்நூலானும் என்றென்றும் வாழும் வகைமையையும் விளக்கிக் காட்ட வெழுந்ததிப்பாட்டு.

பொண்மையும் போன்மையும் மிக்க உலகத்துச் சான்றவர் தோற்றமும் இருப்பும் கடப்பாட்டால் உணரப்பெறும் ஆகையான், அவர்தம் கடப்பாடு யாதென்று உணர்த்தக் கூறியது இப்பாட்டு.

பொண்மை- பொய்மை. போன்மை- போலிமை.

மக்களால் நாடுதல் பெறும் தன்மையாகலின் நாடு எனப்பட்டது. அது நலத்தானும் வளத்தானும் இயல்பாகித் தன்னை நாடுதல் செய்விக்கும் நிலம். தன்னைச் சார்ந்தார் வேறு நலனும் வளனும் நாடாமல் நிற்கத், தன்னை வளப்படுத்திக் கொள்வது நாடு என்பர் வள்ளுவர். '***நாடு என்ப நாடா வளத்தன***.' நாடு - தொழிலாகு பெயர்.

***பலவாக*** - பலவாகுக. நாடுகள் பலவாயினமையின் மொழிகளும் பலவாயின. பலமொழிகள் உள்ளடங்கிய நாடும், பல நாடுகள் உள்ளடங்கிய மொழியும் உளவாம் என்க. தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம், உருது, மராட்டியம், பிரஞ்சியம் முதலிய பல மொழிகள் உள்ளடங்கிய நாடு தமிழகம். இங்கிலாந்து, அமெரிக்கா, ஆத்திரேலியா, இந்தியா, இலங்கை முதலிய பல நாடுகள் உள்ளடங்கிய மொழி ஆங்கிலம்.

***ஆடமை கொடி*** - ஆடு கொடி, அமைகொடி என இரு தொகையாகக் கொண்டு, அரசு ஓச்சுதல் காலத்து ஆடு கொடியாகவும், அரசு ஒழிதல் காலத்து அமைந்த கொடியாகவும் பொருள் கொள்க. ஒரு கொடியின் இவ்விரு நிலைக்கு இடைப்பட்ட காலமே ஓர் அரசுக் காலம். அக்காலம் பலவாகுக என்பதாம்.

***மாண்***—பெருமை, சிறப்பு. ***மாணும்***- சிறப்பினும், மக்கட் சிறப்பு நாகரிகம் என்க.

*ஒழுகு* - ஒழுக்கம், மக்கள் ஒழுக்கம் பண்பாடு என்க. *ஒழுகினும்* ஒழுக்கத்தானும். - சொற்சிறப்பு முற்கூறப்பட்டது.

*மக்கள் பலர் ஆக* - அவ்வக்கால் பெற்ற நடைமுறைப் புறப்பாடு ஆகிய நாகரிகத்தானும், வழிவழிப்பெற்ற அகப்பாடு ஆகிய பண்பாட்டானும் மக்கள் பல பிரிவுகட்கு உட்பட்டவராவர். முந்நூற்றாண்டுக் கால புழக்கத்தில் ஆங்கிலரொடு புற நாகரிகத்தான் ஒன்று படினும், அகப் பண்பாட்டான் தமிழர் வேறுபடுதல் காண்க.

நிலத்தானும், மொழியானும், ஆட்சியானும், நாகரிகத்தானும், பண்பாட்டானும் மக்கள் பல்வேறு வகைப்பட்டவராவர். நிலத்தொடு மொழியும், மொழியொடு ஆட்சியும், ஆட்சியொடு நாகரிகமும் நாகரிகத்தொடு பண்பாடும் தொடர்புடையனவாகும். இவற்றுள், முன்னவை தழையத் தழையும் பின்னவை. முன்னவை குலையக் குலையும் பின்னவை.

இனி, ஒவ்வொரு நிலத்துக்கும் ஒவ்வொரு வளம் இருத்தல் உண்மையின், ஒவ்வொரு நிலத்துக்கும் ஒவ்வொரு மொழி உண்டாம். அவ்வவ்வெல்லை தடவும் மொழி தூய்மை மிக்கிருத்தலும், அவ்வவ்வெல்லைக் கடவும் மொழித் தூய்மை மிக்கழிதலும் இயல்பு. நெல்லைத் தமிழ் கேரளத்தும், ஆந்திரத் தெலுங்கு சென்னையினும் மிக்கழிதல் காண்க.

இவை போன்றே ஆட்சி, நாகரிகம், பண்பாடு முதலியவை ஒன்றொடு ஒன்று முட்டித் திரிந்து வேறாதல் இயல்பாம். இவை எல்லாமும் எத்திரிபுறினும், சான்றாண்மை எந்நிலத்தும், எக்காலத்தும், எம்மொழிக் கூட்டத்தும், எவ்வாட்சிக் காலத்தும், எவர் நாகரிகத்தும், எப் பண்பாட்டிடையினும் திரிபுறாது நிற்றல் தன்மையை விளக்கவே இத்திரிபுகள் வலியுறுத்தப்பட்டன.

*எத்திசை* - எம்மருங்கு.

திசை, திக்கு தூய தமிழ்ச் சொற்களே.

திசையச் செய்தலின் திசையாயிற்று.

திக்கச் செய்தலின் திக்கு ஆயிற்று

*திசைதல், திக்கல்* - தடுமாறல், மயங்கல். - வழி புலப்படாத்தன்மை. திக்கு என்ற தென் சொல்லை தாம் கொண்டு, வடசொல் என்று வழக்கழித்து இழிவழக்காடுவர் ஆரியர்.

திகைதல் - திகைத்தல் ஒரு பொருட் பல சொற்கள்.

*என்னோர் ஆயினும்* - எத்திறத்தோர் ஆயினும். இன்ன நாட்டினர், மொழியினர், கொடியினர், அரசினர், மாணினர், ஒழுகினர் -என வரையறை தவிர்ந்த திறத்தோர்.

*புலனும், உள்ளமும்* - அறிவுணர்வும், உள்ளவுணர்வும். அறிவுணர்வு

ஐம்பொறிகளால் தனித்தனி அறியும் ஐம்புலன் உணர்வு. உள்ள உணர்வு - இவ்வைம்புலன் உணர்வும் முதிர்ந்து ஒன்று கூடிய விடத்துத் தோன்றும் மெய்யுணர்வு. ஐந்தும் ஒரே காலத்து, ஒரே அளவின், ஒரே படித்தாய்ப் பொருந்தாவாகலின் அவை மாறி மாறியும், குறைந்தும் கூடியும் பொருந்தும் தன்மை நோக்கி உள்ள உணர்வும் வேறுபட்டு விளங்கும் என்க. இவ் வைம்புலனறிவும் நிலத்தானும், மொழியானும், ஆளுமையாலும் தொடக்கத்தே வேறுபட்டு நிற்பினும், முடிவே இவ்வுலகத்துள்ள எல்லா உயிர்கட்கும் ஒன்றுபட்டு உள்வாங்கும் தன்மையது. நம் வாயால் இட்ட ஒலி, நம் காதால் கதுவப் படுதல் போல், ஒரு பொறியால் எறியப்பட்ட உணர்வு இன்னொரு பொறியால் அறியப்படுதல் நிகழும். அதுபோலவே ஐம்புலனறிவும் ஒன்றுபட்டு உள்ளவுணர்வால் உள்வாங்கப்படும். அக்கால் உள்ளம் நுண்மை எய்தும். அந்நுண்மை சுரக்கச் சுரக்கப் புலன் உணர்வு வறக்கும். புலனுணர்வு வறளவே பொறி செத்துக் காயும். அதன்பின் எதிரேறிப் பாய்ந்த உணர்வெல்லாம் உளவூற்றினின்று பொறி புலன்கள் வழி எதிரிறங்கிச் சாயும் . அக்கால் பொறிகள் வழிக் கொள்ளப்படும் அறிவு ஒன்றுமில்லை: தள்ளப்படும் அறிவே மிகுதி என்க.

கையிறைவையுள் (Boring Pump) தொடக்கத்து *ஊற்றப்படும்* நீர், உள்நீர் மேலேறி வரத் துணை நிற்றலும், பின் ஊற்று நீர் தொடர்ந்து இறைவை வழி வெளியேறுதலும் போல்வன பொறிகள் உள்வாங்கிய புலனுணர்வும் (தொடக்கத்து ஊற்றும் நீர்) பின் அவை வழி, உள்ளம் வெளியேற்றும் மெய்யுணர்வும் (பின்வரும் ஊற்று நீர்) என்றறிக.

முதற்கண் புலனறிவு மிகுத்தே உள்ளவுணர்வு மிகுமாகலின் ***புலனும் உள்ளமும்*** எனலாயிற்று.

பூணுதல் - பூட்டப் பெறுதல்.

(பூணப்பெறுதல் பூணும், அணியப் பெறுதல் அணியும் ஆகும். ***அணிதல்,*** அடிக்கடி கழற்றப் பெறுமாறு ஒன்றை உறுப்பிற் கொளுவித்தல். ***பூணுதல்*** என்றும் கழற்றப் பெறாவாறு ஒன்றை உறுப்பிற் கொளுவித்தல்.

ஆடை, வளை, முடி, மாலை, குப்பாயம், காலுறை முதலியன அணிவிப்பன.

கடகம், தோடு, மங்கல நாண், மணம், புகழ் முதலியன பூணுவன.

'மங்கல நாண் அணிதல்' எனல் பிழையான வழக்கு.

'மங்கல நாண் பூணுதல்' என்பதே தமிழ்ப் பண்பு வழக்கு; அது கழற்றுதற்குரியதல்லதாகலின்.)

***புலனும் உளமும் பூண்டார்*** - புலனறிவும், உள்ள உணர்வும் நிலை நிற்கப் பெற்றார்.

***நிலத்து உயிர்க்கு*** - நிலத்தின்கண் வெளிப்போந்த உயிர் யாவினுக்கும். மாந்தர்க்குமட்டுமின்றி, விலங்குகளுக்கும் சான்றோரே வழிகாட்டியா கலின்.

*அளியின் இரங்கி*- அருளால் இரங்கி. அருளல்-அன்பால் முதிர்தல். அறிந்தவிடத்துச் செலுத்தல் அன்பு. அறியாவிடத்தும் செலுத்துதல் அருள். அறியாவிடத்துச் செலுத்தப்படும் அருள், பின் அறிந்தவிடத்து அன்பாகக் குறுகுமோ என்பார்க்கு, அஃதன்று; அன்பிற்குரியர் தொடக்கத்து அறியாரேயாயினும் அவர்பால் முற்செலுத்துதல் அருளன்று; கண்ணோட்டம் என்க. மேலும் அறியாவிடம் முகநோக்கில்லா இடம் மட்டும் அன்று; அறியாமை மிக்க விடமுமாம் எனக் கொள்க.

*புலத்துறுப்பு உய்க்கும் சான்றவர்* - ஐம்புலவுணர்வினை மெய்யுணர்விற் படுத்தும் சால்பு மிக்கவர். உளர்-உளராக. சாலுதல்-நிறைதல் தன்மை. அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்பன போலும் மீமிசை மாந்தத் தன்மைகள் நலியாது பொருந்தி நிறைதல்.

*வெம்மை மாக்கள்* - கொடுமை நிறைந்த விலங்கின் தன்மையர். வெம்மை-கொடுமை; கொடுமை-வளைதல் தன்மை. வெம்மை(சூடு) பட்டது கோடும் (வளையும்) ஆகலின் வெம்மைக் கருத்தினின்று கொடுமைக் கருத்து தோன்றியது. மாந்த நிலையினின்று கோணிய தன்மை நிறைந்த மாந்தப் போலிகள் - புலனறிவை உள்வாங்கி, அகத்தறிவை வெளிக்கொணராது, புலனறிவைப் புறஞ்சிதர்ந்து, அகத்தறிவை உட்புதைக்கும் அறியாமை மிக்கவர். ஏதங்கொண்டு ஊதியம் போக விடும் பேதையர் இவர்.

*வினையழிவார்*- இவர் பேதைமை நீங்கினும் வழிமாறியவர். ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப் பேதையர் தம் அகமுனைப்பாலும், புறமுனைப்பாலும் தத்தமக்குற்ற வினைப்பாடுகளில் அழிந்து படும் தன்மையர்.

*மும்மையும் உளர்* - மூன்று காலத்தும் உளராவர். தீமை அன்றன்று தோன்றி, விளங்கி, அழிதலுறும். நன்மை அன்றன்று தோன்றி, விளங்கி நிலைநிற்கும். தீமை மக்கட்கு இறங்குபடியும் நன்மை ஏறுபடியும் ஆகும். வாழ்நிலைப் படிகளுள் எதிரெதிராக வந்து கொண்டிருக்கும் தீயோரும் நல்லோரும் தத்தமக்குற்ற நல்லோராலும் தீயோராலும், ஆட்கொள்ளப் பட்டும் ஆட்கொளுவிக்கப்பட்டும் உய்கின்றனர். இனி, நன்மையும் தீமையும், உண்மையும் பொய்மையும், ஒளியும் இருளும் போல் ஒருமையின் அகப்புறமான இருமை நிலைகள். இவ்விரு படித்தான நிலைகளில் இருளினின்று ஒளிக்கு நடப்பதே வாழ்வாகும். நடப்பு பின்னோக்கியதாயின் உயிர் பிறப்பினின்று உய்ந்து போதல் இல்லை என்க. இவ்விரு நிலைகளின் பிறவேறாந் தன்மைகளை மெய்ந்நெறி நூற்களில் விரிவாகக் கண்டுணர்க.

*உய்யல் வேண்டி* - உய்தல் விரும்பி - வேண்டுதல் - விரும்புதல்.

*பன்னூல் நுவன்று* - அறிவும், உளமும் புலப்படும் படியான பலவகை நூல்களில் எடுத்துக்கூறி. நுவலல் - நூல்வழிச் சொல்லுதல்.

*பாதை தெரித்தல்* - அவர் செல்லும் அறவழிகளைத் தெளியக் கூறுதல்.

*மெய்ந்நூல் நின்ற மேலோர் பாடு* - மெய்ம்மையான நூற்களைக் கற்று, உணர்ந்து, அடங்கி நின்ற சான்றோர் வினைப்பாடு. படுதல்-பாடு. படுதல்-அழுந்துதல்-அழுந்தி அறிந்த அறிவைச் செயற்படுத்தல்.

*ஊருணி மருங்கில்...அது தணிப்பது அக் கடனே!* ஊரால் உண்ணப்படுகின்ற நீர் நிலைக்குப் பல வழிகளையும் வகுத்துக் கொண்டு வரும் நீர் வேட்கை உடையவர்போல், அறிவு வேட்கை கொண்டு வருவோர்க்கு அறப்புனல் அருந்தக் கொடுப்பது அச்சான்றோரின் கடன்.

நீர்வேட்கை உடலது; அறவேட்கை உயிரது. உடல் கனலால் காய்ச்சப் பெறின் நீர்வேட்கை மிகும். உயிர் மறவுணர்வால் காய்ச்சப்பெறின் அறவுணர்வு வேட்கை மிகும். அறவுணர்வு-மெய்யறிவுணர்வின் பருநிலை.

***இத்தகைவோரே என்றும் வாழுநர்*** என்று கூட்டுக.

இது, மெய்யறிவு வேட்கையினையும் அவ்வேட்கை தணிக்கும் சான்றோர் இத்தகைமையினார் என்பதையும், அவர் வாழும் நாடும், பேசும் மொழியும், ஏந்தும் கொடியும், பேணும் அரசும், கொளுவும் நாகரிகமும், தழுவும் பண்பாடும், தோன்றும் மன்பதையும் எத்தன்மையுடையவாயிருப்பினும், அவர் தாம் பிறருக்கு மெய்யறிவு கொளுத்தி உய்வித்தலையே தம் கடமையாகக் கொண்டிருத்தலையும், அதன் பொருட்டே அவர் முக்காலத்தும் வாழும் தகைமை பெற்றிருப்பதையும் எடுத்துக் கூறவந்த பாடலாகும்.

இது, **பொதுவியல்** என்திணையும், **பொருண்மொழிக் காஞ்சி** என் துறையுமாம்.



# 8 வலிதே காலம்

வலிதே காலம்; வியப்பல் யாமே!!
முலைமுகம் பதிய மாந்திப் பாஅல்
ஒழுக வாய்வாங்கி ''ஊ, ஆய்'' எனவுமிழ்ந்து
தந்தை கழிநகை பெறக்காட்டி, யிழிந்து
குறுநடந்தும் ஓடியும் முதுகிவர்ந் தோச்சியும்
நெருநல் ஓவத்து நினைவழி யாமே,
பார்த்த மேனி படர நடைநெற்றி
ஆடு சிறுகால் அதைந்துர மேற
மெலிந்த புன்மார்பு பொலிந்து வலியக்
குரல்புலர்ந்தே அணல்தாவ
உளைபொதிந்து கழுத்தடர
வளைமாதர் மனமிதிப்பத்
திமிர்ந்தெழுந்து நின்றாற்குப்
பணைந்தெழுந்த இணைநகிலம்
குறுநுசுப்புப் பேரல்குல்
வாலெயிற்றுக் கழைதோளி
முனையொருநாள் வரைக்கொண்டு
மனைதனி வைக்கவெஞ் சிறுமகன் தானும்
பெறல்தந்த பெருமகன் உவக்காண்,
திறல்நந்த யாங்கிவன் தேடிக் கொண்டதே!

**பொழிப்பு:**

வலிவுடையது காலம் ; வியப்புறுவேம் யாம்! தாயிடத்து முலையின் மிசை, குழவியின் முகம் முற்றும் பதியும்படி பாலை வயிறு முட்ட அருந்தி, அஃது ஒழுகிக் கொண்டிருக்கும்படி தன் வாயை மீட்டு வெளியெடுத்து, 'ஊ"ஆய்' என உமிழ்ந்து, தன் தந்தை பெருநகை செய்யுமாறு காட்டி, எம் மடியினின்று இறங்கிக் குறுகிய அடிகள் சார்ந்த நடையிட்டும், சிலபொழுது ஓடியும், சிலகால் தன் தந்தையின் முதுகின் மிசையேறி அவரைக் குதிரையாக எண்ணி ஓச்சியும் நின்ற, நேற்றைய பொழுதின் ஓவியமெனப் பதிந்த என் நினைவுகள் அழியாமல் நிற்கவும், யாம் பார்த்து மகிழ்வுற்ற மேனி படர்ந்து பொலியவும், நடைதடுமாறி ஆடி நின்ற சிறிய கால்கள் விம்மிப் புடைத்து

உரமேறி நிற்கவும், மெலிந்து நின்ற சிறிய மார்பு அழகுபெற, வலிவுபெற்று நிற்பவும், குரல் தடிப்பவும், முகவாயினும் தாடையினும் அடர்ந்த மீசையும் தாடியும் தாவி நிற்பவும், தலைமயிர் அடர்ந்து வளர்ந்து கழுத்தை அளாவி நிற்பவும், உடல்கட்டு மிகுநது வளர்ச்சியுற்று நிற்கவும் செய்தானுக்குப், பருத்து விம்மி இணைந்து நின்ற முலைகளும், குறுகி யொடுங்கிய இடையும், அகன்ற இடைக்கீழ்க் கடிதடமும், வெள்ளிய எயிறும், மூங்கில் போன்ற தோள்களும் கொண்டாள் ஒருத்தியை, முன்னைய ஒரு நாள் மணங்கொண்டு, தனி மனையில் வதியும்படி வைக்க, எஞ்சிறு மகனாகிய அவன் தானும் பெற்றுத் தந்த பெருமை பொருந்திய தன் மகனை உதோ, இவண் காண்! தனக்குற்ற திறமை நிறையும்படி இவன் அவ்வாற்றலைத் தேடிக் கொண்டது யாங்ஙன்?

**விரிப்பு :**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தன் மகனின் குழவிப் பருவத்தையும், அவன் விரைந்து வளர்ந்து இளைஞனாகி மணம் புரிந்து, ஈண்டொரு மகனுக்குத் தந்தையாகி நின்ற காலத்தையும் கண்ட தாய் ஒருத்தி, அவன் இத்திறம் பெற்றது எங்ஙனோ என வியந்து கூறியதாக அமைந்ததிப் பாட்டு.

இவனை விரைந்து இம்மாற்றத்திற்குரியனாக்கிய காலம் எத்துணை வலிமையுடையது எனக் கூறுவான் வேண்டி, ***வலிதே காலம்*** என்றாள். வலிது-வன்மையுடையது. குழவியை இளவோனாகவும், இளவோனை முதுவோனாகவும், முதுவோனை மூப்போனாகவும் செய்கின்ற ஆற்றல் பொருந்தியது காலம். இனிக், குழவியைக் குமரனாக்கி , ஒரு குழவிக்கும் தந்தையாக்கிய காலம், தன்னையும் கிழவியாக்கியதைத் தாய் தன் மகன் வழிக் காண்பாளாயினாள். எனினும் ***'தன்கண் என்றும் தனக்கின்மை'*** என்றபடி, தன் மாற்றத்தை வியவாது தன் மகனின் மாற்றத்தைக் கண்டு வியந்தாள் என்க.

***வியப்பல் யாமே*** என்றது, தன் கணவனையும் உள்ளடக்கிய கூற்று. கணவனினும் தானே அவனை ஊட்டியும் தூக்கியும், உடுத்தும், உறங்குவித்தும், பல்வகையிற் சீர் ஆட்டியும், அணுகியும் மகனைக் கண்டவளாகையால், தாய் தன் மகன் வளர்ச்சியைக் காலம் செய்த மாற்றம் என்றும், அது வியத்தற்குரியது என்றும் கூறுவதற்கு மிகவும் உரிமையோளானாள்.

இனி, தன் மகன் குழவிப் பருவத்திலிருந்து மணம் செய்விக்கும் வரை, தாய் அவனிடத்துப் பல்வகை மாற்றங்களையும் படிப்படியாகக் கண்டாளேனும், அம்மாற்றங்கள் யாவும் அவனை அவளுக்கு இளவோனாகவே காட்டியமையால், அவள் அக்காலத்தை அன்றன்று வியவாமல், ஈண்டு அவன் பிறிதோர் உயிரைப் படைத்தற்குரிய திறம்பெற்ற

அளவிலேயே, அவனை முழு ஆடவனாகச் செய்த காலத்தையே மிகவும் வியந்தாள் என்க.

இனி, தன் மகன் பெற்ற பிள்ளையைக் கண்ட அளவிலேயே தாய், அவனைத் தான் பிள்ளையாகப் பெற்றெடுத்த பொழுதையும், அப்பிள்ளை வளர்ந்து வந்த நிலையினையும் நினைவு கூர்ந்து இதனை உரைப்பாளாயினள் என்க.

தன் மகன் குழவிக் காலத்தை நினைவு கூர்வாள், முதற் கண் அவன் தன்னிடத்துப் பாலருந்திய காட்சியையே தன் அகக்கண் வழிக் கண்டாளாகையால், அதனையே தலையெடுத்துக் கூறுவாள் *'முலை முகம் பதிய மாந்தி'* என்றாள். தன் முலையின் மிசை குழவியின் முகம் முற்றும் பதியும்படி பால் மாந்திய அக்காட்சி அவள் மறவாத பசுமைக் காட்சியன்றோ.

*மாந்துதல்* - வேட்கை தீர அருந்துதல்-வயிறு முட்ட அருந்துதல். அவ்வாறு அருந்தியமையால், அக்குழவி பாலை 'ஆய்' என உமிழ்ந்தது எனக.

***பாஅல் ஒழுக வாய் வாங்கி*** - குடித்த கடைசி வாய்ப்பாலை விழுங்காது அது கடைவாயில் ஒழுகிக் கொண்டிருக்கும்படி தன் வாயை முலைக் காம்பினின்று எடுத்து.

இனி, முலை சுரக்கப் பால் குடித்த குழவி தாயின் முலைக்காம் பினின்று பால் தானே ஒழுகும்படி தன்வாயினை எடுத்துக் கொண்டது என்றும் கொள்க.

***ஊ, ஆய் என உமிழ்ந்தது*** - 'ஊ' இழிவுக் குறிப்பும் 'ஆய்' அருந்தற்காகாத இழிபொருள் இடக்கரடக்கலாகக் கூறப்படுவதும். குழவியின் மழலை மொழி, வயிறு நிரம்பும் வரை பாலாக விருந்து நிரம்பிய பின் 'ஆய்' என இறுதி வாய்ப் பாலை உமிழ்ந்து காட்டியது என்க.

***தந்தை கழிநகை பெறக் காட்டியது*** - அமிழ்தாகிய பாலை வயிறு புடைக்க மாந்தியதும் 'ஊ' 'ஆய்' எனக் குழந்தை உமிழ்ந்து காட்டத் தந்தை உவகையால் மிகச் சிரித்தார் என்றபடி. தந்தை பெரிதாக நகைக்கும்படி *'ஊ' 'ஆய்'* என உமிழ்ந்து காட்டி' என்று கூட்டுக.

***இழிந்து*** - இறங்கி -மடியின் மேலமர்ந்து பாலருந்திய பின் ஊ ஆய் என உமிழ்ந்து தாயின் மடிவிட்டு இறங்கி என்றபடி.

***குறுநடந்தும் ஓடியும் முதுகு இவர்ந்து ஓச்சியும்*** - இறங்கிய குழந்தை குறுகுறுவென நடந்ததும், பின் ஓடுதல் செய்ததும், தன் தந்தையின் முதுகின் மேல் ஏறி அவனைக் குதிரையாக எண்ணி ஓட்டுதல் செய்ததும், குழவி பாலருந்துங் காலத்துத் தந்தை அருகிருந்ததும், அவனிடம் பாலை உமிழ்ந்து காட்டி அவனைக் குதிரை இவர்ந்ததும் இவள் உள்ளத்து ஓவியமாகப்

பதிந்து நினைவில் நிற்கின்ற வாகையால், *நெருநல் ஒவத்து நினைவு* என்றாள். நெருநல்-முன்நாள். நேற்று. இக்காட்சி நெடுங்காலத்திற்கு முந்தியதாயினும் நேற்று நடந்ததுபோல் அவள் உள்ளத்து அழியாமல் நின்றது என்றபடி.

*அழியாமே-* அழியாமல் நிற்க.

*பார்த்த மேனி படர* - தான் பார்த்துக் கொண்டிருக்கவே மேனி படர்ந்து நிற்க. *படர்தல்*– பரந்து வளர்தல்

*நடை நெற்றி ஆடு சிறு கால் அதைந்து உரமேற* - நடையானது தள்ளாடும்படி ஆடி அசைந்த அக்குழவியின் சிறிய கால்கள் பருத்து வலிமை மிகுந்தது என்றபடி.

*நெற்றுதல்* - நடை தவறுதல். *அதைத்தல்* - பருத்தல்.

*மெலிந்த புன்மார்பு பொலிந்து வலிய* - மெலிவான இளமார்பகம் அழகு பெற்று வலிவெய்த.

*குரல் புலர்ந்து* - சிறு பருவத்திலிருந்த மென்குரல், தடிப்பேறி வலிவு பெற்றது என்றபடி. *புலர்தல்* -அவிழ்தல், மலர்தல், கட்டு நீங்குதல்.

*அணல் தாவல்* - முகத்துக் கண் குறுமயிர் அரும்பி, தாடியும் மீசையும் அடர்ந்து வளர்தல்.

*உளை* - ஆண் தலைமயிர் -பிடரி மயிர். *பொதிதல்* - நிறைந்து விளங்குதல்.

*கழுத்து அடர* - பின் கழுத்துப் பகுதியை அளாவி நிற்ப.

மேனி பரந்து வளர்தலும், தள்ளாடிக் கொண்டிருந்த கால்கள் பருத்து, வலிந்து உரம் பெறுதலும், மென்மையான மார்பகம் அழகு பெறும்படி வன்மையுறுதலும், மென் குரல் கட்டு நீங்கி உடைந்து பெருமித முறுதலும், முகத்துக்கண் குறுமயிர் திரளுதலும், தலைமயிர் அடர்ந்து பெருகிப் பின்கழுத்தை அளாவி நிற்றலும் ஆண் மகன் பருவ முறுதலுக்கான அறிகுறிகளாகையால், தாய் இம்மாறுதல்களைத் தன் மகனிடத்தில் படிப்படியாகக் கண்டு, தன் மகனை இவ்வளவு மாற்றத்திற்கும் உள்ளடக்கிய காலத்தை வலிது என்று வியந்தனள் என்றபடி.

முலை முகம் பதியப் பாலருந்திய குழவியை இளையோனாக்கிய காலம் அவன் பால் இன்னும் சில மாற்றங்களையும் செய்யக் கருவியாக விருந்ததை அவள் மேலும் கூறுவாள். தன் மகன் முழு அளவில் இளையோனாகிய பின், அவன் தோற்றம், காதல் மணம் கொண்ட கன்னியர் தம் நெஞ்சங்களை மிதித்துத் துன்புறுத்தும்படி இருந்தது என்றும் கண்டாள் எனவே *வளைமாதர்* மனம் மிதிப்பத் திமிர்ந்து எழுந்து நின்றான் என்றாள். வளையல்கள் அணிந்த காதன் மிக்கக் கழியிளமைக் கன்னியரின் மனநினைவுகளை யெல்லாம் மிதித்துத் துயர்தரும்படி, உடல் பருவத்திரட்சியுற்று எழுந்து நின்றான் என்றபடி.

*மாதர்*- காதல் உள்ளம் கொண்ட இளம் பெண்டிர்.

*மாதர் காதல்* (தொல்-உரி-30) (இது தூய தனித் தமிழ்ச் சொல். இதனை 'மாதா' எனும் வட சொல்லினின்று வந்ததென அறியார் கூறுவர். 'மாதா' எனும் வட சொற்குத் 'தாய்' என்பது பொருள். ஆனால் தமிழில் 'மாதர்' என்ற சொல் அழகு, இளமை, காதல் என்று பொருள் பெற்று, அவ்வழகும் இளமையும், காதலும் உடைய பருவப் பெண்டிரை மட்டுமே குறிக்கும் உயர் தனிச்சொல். தமிழ்மொழிச் செழுமையும், வளப்பமும் ஆற்றலும் அறியாப் பேதையோர் சிலர் ஆரியப் போலிப் பொய்யுரைக்கு அடிதாங்கி இழிவழக்காடுதற்குத் தமிழ் மக்கள் விழிப்புற்றிருக்க. முது பெண்டிர் பழந் தமிழ் நூல் வழக்கில் மாதர் என்ற பெயரால் குறிக்கப் படுவதிலர். ஒலி நூலும், சொன்னூலும், மொழி நூலும் அறியா வல்லடி வழக்கார் சிலர்தம் சொல்லாடல்களுக்குத் தமிழர் செவி மயங்காதிருக்க.)

*மணமிதித்தல்*- பிறநினைவழித்துத் தன் நினைவழுத்தித் துன்புறுத்தல். இளையோனாக வளர்ந்து காதன் மாதர் தம் மனங்களைத் துன்புறுத்தி நின்றானுக்கு மணம் செய்வித்த நிகழ்ச்சியை இனிக்கூறுவான் தொடங்கினள் என்க.

*பணைத்தெழுந்த இணை நகிலம்*- புடைத்த விம்மி நெருங்கி வளர்ந்த கொங்கைகள்.

*குறு நுசுப்பு* - ஒடுங்கிய இடை.

*வால் எயிறு* - வெண்மையும், கூர்மையும் கொண்ட பல் வரிசை.

*கழை தோளி* - மூங்கில் கழை போன்ற பசுமையும் இளமையும் ஒளியும் பொருந்திய தோளையுடைய பெண்.

*முனையொரு நாள்*- முன்னொரு நாள்.

*வரைக் கொண்டு* - மணங்கொண்டு. வரைதல் - மணத்தல். வரை எனுஞ் சொல் நெறி எனும் பொருள் பட்டு, உலக நெறியாகிய திருமணத்தைக் குறிக்கும்.

*மனை தனி வைக்க* - தனி மனையில் வாழும்படிச் செய்ய.

இளைஞனாகி நின்ற தன் மகனுக்கு அழகும், இளமையும், தகுதியும் சான்ற இளம் பெண் ஒருத்தியை மணங்கொண்டு, அவரிருவரையும் தனி மனையில் வைக்க என்றபடி.

*எம் சிறுமகன்* - எம்முடைய சிறியோனாகிய மகன். பெற்றத் தாய்க்கு தம்மகன் என்றும் இளையோனாகவே படுவானாகையால் 'சிறு' மகன் என்றாள்.

பிள்ளையைப் பெறுவிக்காப் பருவம் வாய்ந்தோன் என்று தான் கருதியிருப்ப, அவன் தானும் ஒரு பிள்ளையைப் பெறுவித்துக் கொண்டானே என்ற வியப்புத் தோன்ற அவனைச் *சிறுமகன்* என்றாள்.

இனி, மணஞ் செய்வித்த மறு ஆண்டே, அவன் பிள்ளை பெறுவித்த காதன் மேம்பாடும் இளமைக் குறும்பும் தோன்றும்படி அவனைச் சிறுமை பொருந்தியவன் என்று குறிக்க வேண்டி, சிறுமகன் என்றும் கூறினாள் என்க.

*சிறுமை* - சிறு பருவத்திற்கியல்பாய துடுக்குத் தன்மை.

*பெறல் தந்த பெருமகன்* - பெற்றுத் தந்த பெருமை பொருந்திய மகன். தன் மகன் தனக்குச் சிறு மகனாகவும் அவன் பெறுவித்த மகன் பெருமகனாகவும் படுவதில், தாய் கொண்ட தாய்மையன்பிற்கும் பெருமிதத்திற்கும் இயைபு கண்டு மகிழ்க.

*உவக் காண்* - உதோ காண். இடைமைச் சுட்டு. "இவன் முலை முகம் பதிய, என்னிடத்துப் பாலை மாந்தியதும் பாலை, 'ஊ, ஆய்' என உமிழ்ந்து இவன் தந்தைக்குப் பெருநகை விளைவித்ததும், குறுநடையிட்டு நடந்ததும், கால் நெற்ற ஓடியதும், தந்தை முதுகில் ஏறியிவர்ந்து குதிரை ஓச்சியதும் எம் நினைவில் ஓவியமாகி இன்றும் பசுமையாகி நிற்கின்றன காண்; அத்தகைய குழவிப் பருவம் முதிர்ந்து இவன் உடல் மேனி படர்ந்ததும், கால் அதைந்து உரமேறியதும், மெலிந்த மார்பு பொலிந்து வலிந்ததும், குரல் புலர்ந்ததும், முகத்தே குறுமயிர் கிளர்ந்து தாவியதும், தலைமயிர் கழுத்தடர வளர்ந்ததும் ஆகிய தோற்றத்தால் கன்னி மாதர் தம் மனம் வருந்தும்படி செய்ததும், அதனால் இவனுக்குப் பணை நகிலும், சிற்றிடையும், பேரல்குலும், முகை முறுவலும், கழை தோளும் சான்ற இளமை நலமிக்காள் ஒருத்தியை மணம் புரிவித்து, அவளொடு தனி மனை கிடத்த, இவனிது காண், பெற்றுத் தந்த பெருமகனை" என்று தாய் தன் அயலாள் ஒருத்தியிடம் உவந்து கூறி, இவன் 'தந்தை ஆகிய பெருமை தாளாது,' "இவன் இத்தகைய திறமையை யாண்டுத் தேடிப்பெற்றான்" என்றும், இவனை இத்திறத்துக் குள்ளாக்கிய காலம் மிக வலியது; எம்மை வியப்புறும்படி வைத்தது" என்றும் கூறினாள் என்றபடி.

*திறல் நந்துதல்* - திறமை மிகுதல், நிறைதல்.

*யாங்கு இவன் தேடிக் கொண்டது* - இவன் இத்திறமை வளர்ந்து மிகும்படி இவ்விடைக் காலத்து, இதனை யாண்டுத் தேடிக் கொண்டான் என்றபடி.

*முலைமுகம் பதிய .......... தேடிக் கொண்டதே* என்று கொண்டும், பின் *வலிதே காலம் வியப்பல் யாமே* என்று கூட்டியும் பொருள் காண்க.

இது தாயொருத்தித் தன் தாய்மையுளத்தால் தன் மகன் பெற்ற பிள்ளையைக் கண்டு மகிழ்ந்து கூறிக் காலத்தை வியந்தது.

இஃது, இல்லிருந்து மனையறம் பூண்ட தன் மகன் திறமுரைத்த தாகலின் *முல்லை* யென் திணையும், *கிளந்த தமர்வயின் நற்றாய் கிளத்தல்* என் துறையுமாம்.



# 9 தமிழ்கமழ் உள்ளம்

*விழைவே வேண்டலின் நனிகுறை வினதே!*
*பிழைப்பே வழுக்கிலா முறைபிறழ் விலதே!*
*உழைப்பே தமிழ்கமழ் உள்ளத் தூன்றியோ*
*ரிழைபுறஞ் செல்லா நிலைபொருந் துதலின்*
*இழிவழிப் பொருட்குப் பழிகாண் பதுவே!*
*காதற் பூணலாக் கடுகிழை பூணா*
*ஆதுணை புரக்குங் குடும்போ பெரிதே!*
*வரவே யொருமுழப் பீறல் வரைத்தே!*
*நிரப்பே நெடுந்தொளை வாடையி னேர்த்தே!*
*வாழ்வே நளிர்த்த வல்லிருள் முயக்கில்*
*கூனித் தாழ்ந்த கூரையு ளோதத்து*
*முழத்துணி மெய்ம்மேன் முன்னும் பின்னும்*
*இழுத்திழுத் தழுங்கு மியல்பி னொத்தே!*
*உறவே பொருட்குக் கையகன் றேந்திக்*
*குறையக் கரையும் புரைகாய் வதுவே!*
*அயலே குய்ப்புகை பிறமனை யணுகா*
*தியங்குதாழ் செறிக்கு மியல்பின தளியே!*
*ஊரே ஆளுநர்க் குளங்கவ லாது*
*சீர்மை நூறும் சிறுமைத் ததுவே!*
*ஈங்கிவ் விடையிலெம் உயிரே*
*போங்குறி யறியாக் கானீர்ப் புணையே!*

**பொழிப்பு :**

எம் விருப்பம் எமக்குற்ற தேவையினும் மிகக் குறைவினது. எம் பிழைப்பு வழுக்கலிலாத நெறி முறையிற் பிறழ்ச்சி ஏதும் இலாதது; எம் உழைப்பு தமிழ் கமழ்கின்ற உள்ளத்தே ஊன்றி, ஓர் இழைதானும் புறத்தே செல்லாத நிலையிற் பொருந்துதலின் இழிந்த வழி வரும் பொருளுக்குப் பழி கண்டு விலகும் தன்மையது; அன்பு எனும் அணிகலனன்றிப் பிறிதோர் அணியைக் கடுகளவு தானும் பூணுகிலாத, எமக்கு ஆய துணைவி புரந்து வரும் குடும்பமோ பெரிது. எமக்கு வரும் வரவோ கிழிசல் உடைய ஒரு முழப் பீறல் போன்றது. எமக்குற்ற வறுமையோ, நெடிது தொளைக்கின்ற

வாடைக்காற்றைப் போன்றது. இவற்றால் யாம் வாழும் வாழ்வோ, குளிர் பொருந்தி வலிந்த இருளால் முயங்கப் பெற்ற கூரை கூனிய தாழ்ந்த குடிலுள், ஈரங்கசிந்த ஓதத்துள், உடல் போர்த்தப் பற்றாத ஒரு முழத்துணியை முன்னும் பின்னும் இழுத்திழுத்துப் போர்த்தி வருந்திக் கிடக்கும் தன்மை போன்றது. எமக்குற்ற உறவினர்களோ பொருளுக்கெனக் கைகளை அகன்று ஏந்தி, அது நிறையா விடத்துப் பலவாறு குறை கூறிக் காய்கின்ற தன்மையினர். எம் அயலகத்தாரோ, தம் மனையில் தாளிதம் செய்யும் மணப் புகை தானும் பிறமனையுட் புகாவண்ணம், தம் திறந்த கதவம் தாழால் நெருங்க முடுக்கும் இயல்பை உடையவர். யாம் வாழும் ஊரோ, தம்மை ஆளுகின்றார்ப் பற்றிக் கவலாது பெருமையைப் பொடியாக்கும் சிறுமைத்து. இவை தமக்கிடையில் எம் உயிர், போகின்ற வழி அறியாத ஆற்று நீரின் தெப்பத்தைப் போன்றது.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

தம் மனமும் அது கொண்ட விழைவும், அவ்விழைவு புரக்கும் குடும்பமும் அக் குடும்பு பெற்ற வறுமையும், அவ் வறுமை தாக்கும் கொடுமையும், அக்கொடுமை மிகுக்கும் உறவும், அவ்வுறவு சார்ந்த அயலும், அவ்வயல் நிரம்பிய ஊரும், அவ்வூர் நிரம்பிய மக்களும், அம்மக்களிடை தம் உயிர் செல்லும் செலவும் கூறுவதாக அமைந்ததிப் பாட்டு.

உயிர் பற்றுக் கோடாகக் கொள்வது மனத்தையே ஆகலின் மனவுணர்வு முதற்கண் கூறப்பெற்றது. - மனம் வேட்கையுறாது பற்றற்றிருக்கும் அளவை, அது தானுற்ற புறவாழ்க்கைக்கு வேண்டிய உலகியற் பொருள்மேல் அவாவுதலின் தன்மைவழிக் காட்டப் பெற்றது.

*விழைவு* - மனத்தேவை. வேண்டல்- புறத்தேவை. புறப்பொருளை அவாவுதலையே 'வேண்டுதல்' என்று வள்ளுவரும் குறித்தார். புறத்தேவையினும் அகத்தேவை குறைந்து நிற்றலே, மெய்யுணர்வு மிகுக்க வழி செய்யுமாகலின், *விழைவே வேண்டலின் நனிகுறை வினதே* எனக் கூறலாயிற்று.

*பிழைப்பு* - உலகியல் வாழ்வு உயர்வையே குறித்த ஒழுக்கம், நாற்றம், காமம் முதலிய சொற்கள் தீயொழுக்கம், தீநாற்றம், இழிகாமம் எனக் கீழ்மைப் பொருள்களுக்கும் ஒட்டிவரத் தொடங்கிய இழிந்த நிலையில், கெடுதல், தவிர்தல், தவறல் முதலிய இழிநிலைப் பொருள்களே பெறும் *பிழைப்பு* என்ற சொல்லும் உலகியல் வாழ்வைக் குறிக்கும் ஓர் உயர்ந்த சொல்லாக உயர்வு பெற்றது.

பிழையின்றி உலக வாழ்வியலா நிலையில், பிழைப்பே வாழ்வு என்னும் பொருள் பெற்றது. எனவே, உலக வாழ்வியலைக் குறிக்க இச் சொல்லே கையாளப் பெற்றது. இச்சொற்பொருள் அண்மைக் காலத்தது.

*வழுக்கிலா முறை பிறழ்விலது* - மேலேறுதல் இல்லாவிடத்தும் கீழ்ச்சறுக்குதல் இல்லாவொரு நிலைக்கு ஊற்றுக்கோலாக நிற்கும் நெறிமுறையில் பிறழ்ச்சி இலது.

*உழைப்பு* - உடல் வருத்தம், வருந்துதல் என்னும் பொருளடியாகப் பிறந்து அவ்வருத்தம் செய்யும் உடல் முயற்சியைக் குறிக்கும் பிற்காலச் சொல்.

உள்ளம் தமிழின்பத்துத் தலைப்படின் ஓர் இழைதானும் புறம் செல்லாது. அவ்வுணர்விலேயே நிலைபெறும் என்பதால் *உள்ளத்து ஊன்றி ஓர் இழைபுறஞ் செல்லா நிலை பொருந்துதல்* எனப் பெற்றது. அவ்வாறு பொருந்திய விடத்து, இழிவான வழிகளில் ஈட்டப்பெறும் பொருளுக்குப் பழிகண்டு விலக்கும் பான்மை பெறுதலின், *இழிவழிப் பொருட்குப் பழி காண்பது* எனலாயிற்று.

*இழிதல்*- மேல்நின்று கீழிறங்குதல். உயர்வான நிலையினின்று உள்ளத்தைக் கீழ்நிலைக்குத் தாழ்த்துதலால் *இழி பொருள்* எனப்பெற்றது.

காதலன்பு உளத்தை இறுகப் பற்றுதலின் *காதற் பூண்* எனப்பெற்றது. கடுகிழை-கடுகத்துணை இழை, ஆதுணை-ஆகியதுணை, வினைத்தொகை-மனைவி, புரத்தல்- பராமரித்தல், காத்தல்.

*குடும்பு* - குடும்பம். குழும்பு என்ற சொல்வேர் அடியாகப் பிறந்த சொல். கலவு-குலவு-குழவு-குழம்பு-குழும்பு-குடும்பு. குடி என் பெயரடியாகப் பிறந்த சொல் எனினும் வழுவின்றாம்.

*பீறல்* - கிழிந்த துணி -கந்தை.

*நிரப்பு* - சான்றோர் வறுமை- விளக்கம் முற்கூறப் பெற்றது.

உடலையும், எலும்பையும் தொளைத்து ஊடுருவிச் செல்வது போலும் குளிர்ந்த வாடைக் காற்றாகையால் *தொளை வாடை* எனப்பெற்றது. இனி அது நீடுதல் பற்றி *நெடுந்தொளை வாடை* எனப்பெற்றது.

*நேர்த்து* - நேரது-சமமானது.

*நளிர்*-குளிர்-'நள்'ளென் அடியாகப் பிறந்த சொல்.

*நள்* - நெருக்கம், செறிவு; உடல் குளிரால் நெருக்கமுறுதல் பற்றி *நளி* என்பது குளிர்மையைக் குறிக்கும். அணுக்கள் சூட்டால் விரிவடைதலும், குளிரால் நெருக்கமுறுதலும் ஆகிய இன்றைய வேதியல் அறிவுக்கும் பொருத்தமாக இச்சொல் அற்றைக்காலத் தமிழ் மொழியில் பொருள் பொதி சொல்லாக அமைந்திருத்தல் காண்க. நள்+து=நடு-நடுக்கம்; அணுக்கள் நெருக்க முறுதலால் ஏற்படும் அலைவு. நள்+பு= நட்பு-உயிர் நெறுக்கமுறுதல்.

*முய்க்கம்* - சேரத் தழுவுதல்.

*கூனித்தாழ்ந்த* -வளைந்து தாழ்வுற்ற.

*ஓதம்* - வெள்ளம் -வெள்ளக் கசிவு.

'ஒள்'லென் வேரடியாகப் பிறந்த சொல்.

ஒள்- வெண்மை -ஒளி- ஒளிர்தல். (வெண்மை உள்ளது ஒளிர்தலும் ஒளியுடையது வெண்மையாயிருத்தலும் ஓர்க்க). ஒள் +து; ஒது-ஓது ஓதுதல்-ஓசையிடுதல்-ஆரவாரித்தல் ஓது-ஓதை- ஆரவாரம்-ஓசை, ஓதை-ஓதம். தண்ணீர் ஒளிப்பெற்று விளங்குதலும் பெருத்த ஓசையுடன் செலவு மேற்கொள்ளுதலும் ஆதலின் அதற்கு ஓதம் என்ற ஒரு காரணப் பெயர் தோன்றிற்றென்க.

நீர்க்கசிவு பெற்றுத் தாழ்ந்த கூரைக்குடிலுள் தொடர்ந்து குளிரும் மண்டிய இருட்போதில், உடலைப் போர்த்துதற்காகாத ஒரு முழத் துணியை முன்னுக்கும் பின்னுக்கும் இழுத்திழுத்து மூடுதலால் ஏற்படும் துயரத்திற் கொப்பான எம்வாழ்க்கை எனப்பெற்றது.

*கையகன்று ஏந்தி* - கைகளை அகல விரித்தபடி ஏந்தி.

*குறையக் கரையும்* - குறையுங்காலை ஒலிப்பட ஆரவாரித்தல் செய்யும்.

*புரை காய்வது* - குறைநிலைகளைத் தம்முட் கனன்று காய்வது.

*குய்ப்புகை* - தாளிதப் புகை.

*தாழ் செறித்தல்* - கதவைத் தாழிட்டு நெருங்க முடுக்குதல்.

*இயல்பினது* - என்றும் இயல்பான தன்மையுடையது.

*அளியே* - இரங்கத் தக்கது !

தம் மனையில் சமையல் செய்யுங்கால் எழும் இனிய தாளிதப் புகையும், அண்டை வீட்டினர் தம் வயின் செல்லுதல் கூடாதெனத் தடுக்க, தம் வீட்டுக் கதவினைத் தாழால் நெருங்க முடுக்கியடைக்கும் இரங்குதற்கரிய இயல்பான தன்மையை உடைய அயலார் என்றபடி

இரங்குதல் அவர் எளிய மனப்பண்பு குறித்து என்க.

*ஆளுநர்க்குளம் கவலாது* - தம்மை அரசியலால் ஆளுதல் பொறுப்புப் பெறுவார்தம் அறிவு, பண்பு, அறன், நடுவு நிலைமை, தறுகண், கொடை முதலியன பற்றிக் கவலுறாது எவரேனும் ஒருவர் ஆளுதலுக் கியைந்து நிற்பது.

உளங் கவலாத்தன்மை கல்வியறிவுக் குறைவானும்; அரசியல் அறிவுக் குறைவானும், பொதுமை யுணர்வின்மையானும் ஏற்படுவது.

*சீர்மை நூறும் - சிறுமை* - செப்பமான உயர்ந்த தன்மைகளை அழித்துக் கொள்ளுதலாம் இழிந்த தன்மை.

மலருக்கு மணம்போல் மங்கையர்க்குக் காதல் என்றாள் என்க. இது தானறியாது நிகழ்ந்தது பற்றி இயற்கையால் நேர்ந்ததென்றாள்.

*மதி மிசை ஒளி போல்* - மதி தோன்றுகின்ற பொழுது மழுங்கியிருந்து பின் ஒளி நிறைந்து விளங்குதல் போல், தன்னுளத்தும் முன்பு மழுக்க முற்றிருந்து. தலைவனைக் கண்டவிடத்துக் காதல் என்னும் ஒளி நிறைவுற்ற தென்றாள்.

கதிரவனால் நிலவு ஒளிபெறுதல்போல் தலைவனால் தானும் ஒளிபெற்றதை ஈண்டு விளக்கினாள் என்க.

*நலங்கிளர் கள்* - உடல் நலத்தைக் கிளர்விக்கும் கள். அளவின் உண்பார்க்குக் கள் உடல் நலத்தைத் தோற்றுவிப்பதுபோல், முறையின் கொள்வார்க்குக் காதல் உடல் நலத்தைக் கொடுக்கும் என்னும் உடலியலை ஓர்க.

*இளவெறி நசைபோல்* - கள்ளினால் தோற்றுவிக்கப் பெறும் முருகிய வெறிபோலன்றிக் காதலால் மெல்லிய வெறி தோன்றின தென்றாள். நசை யென்றது மேலும் மேலும் கொள்ளுகின்ற விருப்பத்தை. அது கள்ளுண்பார் மேன்மேலும் கொள்ளுகின்ற விருப்பத்தைப் போன்றது. இது தலைவனால் எழுப்பப்பெற்ற காதல் என்னும் மெல்லிய வேட்கையை மேலும் மேலும் தான் விரும்பினாள் என்றபடி. அவனை மறக்கவியலாத தன் நிலையைக் குறிப்பால் கூறினாள் என்க.

*தழலினுள் தெறல்போல்* - மூட்டப்பெறும் தீயினுள் வந்து பொருந்தும் சூடு போல், கொளுத்தப் பெற்ற காதலால் தன் உடலுள் ஒருவகைச் சூடு பாய்ச்சப்பெற்ற தென்றாள். அது தலைவனை மீண்டுங் கூடிய விடத்தன்றி அடங்காதென்றும் குறிப்பை யுணர்த்தினாள் என்க.

*தணிப்பரிதாம்* - தலைவனாலன்றிப் பிறரால் தணிப்பதற்கரியதாம். அவன் பிரிவின்கண் சூடுபோல் பரந்து நின்று, அவன் கூடற்கண் தண்ணெனக் குளிர்கின்ற தன்மை யுடையது காதல் என்னுந் திறமுரைத்தாள் என்க.

*விறல் வேட்கை* - வெற்றி கொண்ட வேட்கை. கன்னியர்க்கு எழும் பிற வேட்கை யெல்லாம் அவற்றிற்குக் கரணியமானவற்றைப் பெற்ற விடத்து அடங்கி நிற்பதும் காதல் மட்டும் அதற்குக் கரணியமான தலைவனைப் பெற்றவிடத்தும் அடங்காமல் மேன்மேலும் மிகுந்து நிற்பதும் உணர்த்தப் பெற்றது. பிற வேட்கையெல்லாம் ஒரோவொருகால் தோல்வியுறுவதும், காதல் ஒன்றே. தோல்வியுறாது தன்னையும் தான் கொண்ட பிற விருப்பங்களையும் வெற்றி கொள்வதும் ஆகையால் விறல் வேட்கை என்றாள். விறல்-வெற்றி. தான் பற்றியவிடத்துப் பிற பற்றுகளைப் பற்றவிடாத தன்மை பற்றிக் காதல் வெற்றி பெற்றதென்றாள். வெற்றிபெற்றது பற்றி அதன் ஆளுகைக்குத்தான் அடங்கினது இயற்கையே என்றாள்.

மலர்போல் மணம் பரப்பி, மதிபோல் ஒளி நிரப்பிக் கள்போல் இளவெறி மூட்டித் தழல்போல் காய்தலுற்றுப் பிறர் எவராலும் தணிக்கவியலாத ஓங்கிய தன்மையால் காதலது வெற்றியும் ஆட்சியும் விளக்கப்பெற்றன.

*எழுந்ததும்* - எழுச்சியுற்றதும், அடங்கிருந்த காதலுணர்வு தலைவனால் எழுப்பப் பெற்றதை உணர்த்தினாள் என்க.

மலர் விரிய விரிய மணம் எழுவதும், மதி எழ எழ ஒளி எழுவதும், கள் உண்ண உண்ண வெறி எழுவதும், தீ அடர அடர வெப்பம் எழுவதும் இயற்கையேபோல் தோன்றிய அவன் நெருங்க நெருங்கக் காதல் எழுவதும் இயற்கையே என்றாள். அவை தடுத்தற்கியலாமைபோல் இதுவும் தடுத்தற்கியலாமையாம் என்றாள்.

*அறிகிலன்* - அறிந்தேனல்லன். அறிகின்ற பொறிகளைப் புறத்தே தான் பெற்றிருந்தும், புறத்திருந்து காட்சிப் பொருளாய் வந்த தலைவனாடு வந்த காதலைத் தான் அறிய வியலாது போயிற்றென்றாள். பொறியுணர்வால் அறிகின்ற தன்மை பற்றி அறியேன் என்றாள். என்னை? தலைவனைக் கண்களாற் கண்டதும் அவன் மொழிகளைச் செவிகளாற் கேட்டதும் தான் அறிந்திருந்தும், அவன் எழுப்புவித்த காதல் உணர்வு அக் காட்சியாலும் கேள்வியாலும் அறியக் கூடாததாயிற்று ; உள்ளிருந்தே எழுந்து உள்ளத்தைப் பற்றியதாகலின் புறத்தே அறிகிலன் என்றாள் என்க.

*படர்ந்ததும்* - பரவிப் படர்ந்ததும்; அளாவி நின்றதும். எழுச்சிக்குப் பின் அவ்வுணர்வு உடல் முழுதும் பரவி நின்றதைக் கூறினாள். மலர் விரிதலுறும் பொழுதே மணமும், மதி எழலுறும் பொழுதே ஒளியும், கள் அருந்தலுறும் பொழுதே வெறியும். தழல் கொளுத்தலுறும் பொழுதே சூடும் எங்ஙன் அவ்வவற்றிற் படர்ந்து தோன்றுகின்றனவோ, அங்ஙனே அவனைக் காண்டலுறும்பொழுதே காதலுணர்வும் எழுந்து தன் உள்ளத்தும் உடலுள்ளும் உயிருள்ளும் படர்ந்து தோன்றிய தென்றாள்.

*உணர்கிலன்*- உணர்வெழுச்சிக்குக் கரணியனான தலைவனைத் தான் அறிந்தும் அவனால் எழுப்பப்பெற்ற உணர்வை அறியாது போனதால் *அறிகிலன்* என்றவள். அஃது அகத்தே ஊடுருவி அளாவிப் படர்ந்த தன்மையை *உணர்கிலன்* என்றாள். பொறியறிவுக்குப் படும் அளவில் புறத்தே பருப்பொருளாய் நின்ற பொழுதே அறியாதவள், உணர்வுக்குப் படும் அளவில் அகத்தே நுண்பொருளாய் நின்றதை உணரக்கூடுமோ என்று இயல்புணர்த்தினாள் என்க.

புறத்தே பருப்பொருளாய் நின்றதென்றது காட்சிக்கும் கேள்விக்கும் பிற பொறியறிவிற்கும் பொருளாகி நின்ற தலைவனை என்க. நுண்பொருளாய் நின்றதென்றது அத்தலைவனாகிய பருப்பொருளினின் றெழுந்து வந்து உயிரொடு அளாவிப் பிணைந்த அன்புணர்வினை என்க.

மலர்புறத்தே பருவாயும், அதனின்றெழும் மணம் நம்மை அளாவுமிடத்து அருவாயும், மதிபுறத்தே பருவாயும், அதனின்றெழும் ஒளி நம்மை அணுகுமிடத்து அருவாயும், கள் புறத்தே பருவாயும் அதனின்றெழும் வெறி நம்மிற் கலக்குமிடத்தே அருவாயும், தீ புறத்தே பருவாயும் நம்மைத் தெறுமிடத்து அருவாயும் நிற்றல்போல், தலைவன் புறத்தே பருவாயும் அவனின்றெழுந்த அன்புணர்வு அருவாயும் நிற்றல்பற்றி முன்னதை *அறிவதும்*, பின்னதை *உணர்வதும்* என வேறுபடுத்திக் கூறினாள் என்க.

மடுத்தலை - மடுவினிடத்தே.

கொணர்நீர்- கொணர்ந்த நீர்,

கொணர்தலென்பது கொண்டுவரல் என்பதினின்றுவேறுபட்டது. கொண்டுவருதல் என்பது ஈரிணைப்பொருசொல்லாயினும் வருங்கால் கையோடு எடுத்துவரல் என்னும் பொருளது. கொணர்தல் என்பது இங்கிருந்து போய் எடுத்து வருதல் என்னும் பொருளது. இஃது ஆங்கிலத்தில் உள்ள Bring, Fetch என்னும் இரு சொற்களைப் போன்றது.

***வேண்டி*** - விரும்பி. மடுவினின்று கொணரும் நீரை அருந்த விரும்பி.

தலைவியொடு உரையாட விரும்பிய தலைவன் அவள் கொணரும் நீர்வேட்டு நின்றான் என்க.

*எடுத்த தோள்* - திரண்டு எழுந்த தோள்.

***கள்வன்*** - நெஞ்சைத் திருடிய தலைவன்.

எதிர்ந்த ஞான்றே! எதிர் வந்து நின்றபொழுதே!

தலைவன் நீர் வேட்கையுற்று எதிர்வந்த நின்றபொழுதே தன்னுள்ளத்து மலருள் மணம்போலும் மதிக்கண் ஒளிபோலும் கள்ளுள் வெறிபோலும் தழலுள் தெறல் போலும், உளத்துள் காதல் எழுந்து படர்ந்தது. அதனை யான், அறியவும் அறிகிலேன்; உணரவும் உணர்கிலேன் என்று அவனைப் பிரிதலுற்ற தலைவி, தோழியிடம் தன் ஆற்றாமையைப் புலப்படுத்தினாள் என்க.

இது குறிஞ்சியென் திணையும், பிரிவிடையாற்றாத தலைவி தோழிக்கு உரைத்தது என் துறையுமாம்.



# 23 கோலச் செழுந்தமிழ்

அங்கா வெனுமங் காந்தமுக மேந்தி,
உங்கா வெனவமிழ் துறிஞ்ச வூட்டிப்,
பால்வாய் மோந்து பனிமுகம் நீந்தி,
மாலுறக் குழைவுடல் அணைந்தகங் குளிர்ந்து,
புன்றலை அளைந்து பொன்னுடற் கழுவி,
தென்றல் சிதர்புகு மிளமயி ரார்த்தி,
கதைபல குழைந்து காகஞ் சுட்டி,
இதழுடை மாட்டி, மணிக்கண் ணெழுதி
உள்ளார்ந் தெழூஉம் உவகை பொலியக்
கள்ளா ரிதழ்கள் கனிய முத்தி,
கொட்டிய பூங்கை வட்டித் தெடுத்து
மொட்டுடல் தாங்கித் தொட்டிற் கிடத்தி,
நீலக் கொழுங்கண் நனையிதழ் பொருந்தக்
கோலச் செழுந்தமிழ்த் தாலம் பயிற்றி
ஆர்தல் அயர அசைதல் சோர்வுற
ஈர்வாய்க் குதலை யிழிதரக் கிறங்கும்
இளமென் பூவுடல் இடையிடைப் பேணி
அருள்விழி மூடும் அன்னைக்கு
இருள்கழி உலகம் ஈடிறந் தன்றே!

**பொழிப்பு:**

அங்காவென அரற்றி, அங்காந்த வாயினதாகிய குழவியின் முகத்தை இருகையால் ஏந்தி எடுத்தும், உங்காவெனக் கூறி அமிழ்தத்தை உறிஞ்சிக் குடிக்குமாறு ஊட்டி, அப்பாலுண்ட வாயினைத் தாய்மையால் முகர்ந்தும், குளிர்ச்சி பொருந்திய அம் முகத்தோடு முகம் வைத்து நீந்துதல்போல் அளாவி, மயங்குதலுறுமாறு, சந்தனக் குழைவுபோலும் உடலை அணைந்து, நெஞ்சங் குளிர்தலுற்றும், இளந்தலையைக் கோதிப் பொன் போன்ற உடலை நறுநீரால் கழுவியும், தென்றல் சிதர்ந்து புகும் இளமயிரைக் காற்றிலும் இளவெயிலிலும் உலரச் செய்தும், கதைபல குழைந்து கூறிக் காகத்தை விளித்து வேடிக்கை காட்டி, மலரிதழ் போலும் மெல்லிய உடையை உடல் நலுங்காது மாட்டியும், மணிபோலும் ஒளிபொருந்திய கண்களுக்கு

மையெழுதியும், உள்ளத்தே எழுந்து பொங்கும் உவகை மிகுமாறு கள்ளூறும் வாயிதழ்களைக் கனியும்படி முத்தமிட்டும், கொட்டி விளையாடிய குழவியின் பூங்கைகளைச் சுழன்று எடுத்து, மலரின் மொட்டுப் போன்ற உடலைத் தாங்கித் தொட்டிலிற் கிடத்தியும், நீல நிறமான கொழுமைசேர் கண்களைப் போர்த்துள்ள இதழ்ப்போலும் நனைந்த இமைகள் பொருந்தும்படி சொல்லழகும் பொருளழகும் வாய்ந்து செழுமையுற்ற தமிழில் தாலாட்டுப் பாடியும், அவ்வாறு பாடிய ஓசை மெல்ல அடங்கவும், தொட்டிலை அசைத்த கைகள் சோர்வுறவும் அழுது அரற்றிய ஈரவாயினின்று குதலை நீர் இருபுறமும் வழியுமாறு உறக்க மயக்கங் கொள்ளுகின்ற குழந்தையின் இளமையும் மென்மையும் பொருந்திய பூப்போன்ற உடலை இடையிடையே காணித்துப் பேணியும் தன் அருள் பொருந்திய விழிகளை ஆழ்ந்து உறக்கங்கொள்ளாது மூடிக்கிடக்கும் அக்குழவியின் அன்னைக்குப், போர்த்துண்ட இருளை மெதுவாகக் கழிக்கின்ற இவ்வுலகமும் இணையற்றதே. !

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

புதல்வனைப் பயந்து பாராட்டும் தலைவியின் தாய்மைத்திறம் நோக்கித் தலைவன் அவளின் தாய்மை யுணர்வுக்கு இவ்வுலகமும் ஈடாகாது என வியந்து கூறுவதாக அமைந்ததிப்பாட்டு.

தலைவியிடத்து இதுகாறும் பெண்மை நலத்தையே கண்டும் உண்டும் வந்த தலைவன், இக்கால் தாய்மை நலத்தைக்கண்டு மதித்துப் போற்றுகின்றான். அருள்சான்ற அவளின் தாய்மைச் செவ்விக்கு இவ்வுலகம் ஈடிறந்தது எனப் போற்றும் அவன் கூற்றில், ஒரு தாய் தன் குழந்தையின்பாற் காட்டுகின்ற அன்பும் அருளும் அக்கறையும் புலப்படுவதோடு , தலைவன் தலைவியிடத்தும் தன் குழந்தையிடத்தும் செலுத்தும் ஈடுபாடும் பின்னியிருப்பதைப் பாடல் உணர்த்தும்.

*அங்கா:* பசி வந்து அழுமிடத்துப் புனிற்றிளங்குழவி மிழற்றும் ஓர் ஒலிக்குறிப்பு மழலைச் சொல்.

*அங்காத்தல்:* அண்ணாத்தல்-வாயை முற்றும் திறத்தல்.

குழவி தன் பசிக்குறிப்பைத் தாய்க்கு உணர்த்த *'அங்கா'* எனும் ஒலி மிழற்றித் தன் வாயை அங்காத்தல் செய்கின்றது. அங்ஙன் வாயை அங்காத்தவாறு அழும் குழவியை-இருகைகளாலும் ஏந்தி எடுத்து *'உங்கா'* என ஆறுதல் மொழி கூறித் தன்மார்பை ஊட்டக் கொடுக்கின்றாள் தாயாகிய தலைவி.

*'உங்கா':* பாலுக்குத் தாய்கூறும் ஓர் ஒலிக்குறிப்புச் சொல்.

*அமிழ்து உறிஞ்ச ஊட்டி:* தன் மார்பினின்றூறும் பாலைக் குழவி உறிஞ்சி அருந்துமாறு ஊட்டுதல் செய்து.

*பால்வாய்:* பாலுண்ட வாய்- இளமென் வாய்.

*பனிமுகம் நீந்தி:* பால் வாயை மோந்த தாய் குழந்தையின் குளிர்ந்த முகத்தில் தன் முகத்தை வைத்து ஒட்டி உரசுதல். நீரில் உடம்பு உரசி அளாவுதல்போல் குழவியின் மென்மையான முகத்தொடு தாய்முகம் அளாவுதலால் *முகம் நீந்துதல்* என ஒருபுடை உருவகமாகக் கூறப்பெற்றது.

*மாலுற:* மயக்கமுற.

*குழைவுடல்:* சந்தனச் சாந்துபோலும் வண்ணமும் மென்மையும் குளிர்ச்சியும் தோய்ந்த உடல்.

*அணைந்தகங் குளிர்ந்து* : குழந்தையோடு தாய்போய் அதன் உடல் நலுங்காது பொருந்துதலால் அணைத்து என்னாது அணைந்து எனலாயிற்று. அணைந்து அகங்குளிர்ந்தாள் என்றபடி.

*புன்றலை அளைந்து:* இளமையும் மென்மையும் சான்ற தலையின் முடி நலுங்கலுறாது நீரான் அளைந்து.

*பொன்னுடற் கழுவி:* பொன்னிறம் போன்ற உடலைக் கழுவி யெடுத்து.

*தென்றல் சிதர்போகும் இளமயிர் ஆர்த்தி :* தென்றல் சிதர்ந்து புகுமளவில் மென்மை சான்ற தலைமுடியைக் காற்றிலும் இளவெளிலிலும் ஆர்த்தல் செய்து. ஆர்த்தல்-ஒளிபெறச் செய்தல், ஈராமாயிருந்த முடி உலர்ந்தபின் ஒளிபெறுமாறு செய்தல்.

*கதைபல குழைந்து காகஞ் சுட்டி:* குழவி, கதைகேட்கும் அறிவு பெற்றிலதேனும் தாய்க்கிருக்கும் உணர்த்துதல் உணர்வால் தானறிந்த கதைகளை அதன்பால் குழைந்துகூறி ; குழைந்து கூறுதல் என்பது மழலையிற் சொல்லுதல். சொற்குழைதல் மழலை. காகஞ் சுட்டுதல்-குழந்தைக்கு "அதுகாண் குருவி; இதுகாண் கிளி; உது காண் காகம்"என வேடிக்கைக் காட்டி அமைவுறச் செய்யுமொரு விரகு. குழந்தை அமைவுறுங்காலன்றித் தாய் அதற்கு இதழுடை மாட்டலும் மணிக்கண் எழுதலும் போலப் புனைவு செய்தல் இயலாது. ஆகையால் கதை குழைந்து காகஞ் சுட்டினாள் என்க.

*இதழுடை மாட்டி:* மலரிதழ்ப் போலும் மென்மையான உடையைக் குழந்தையின் உடல் நலுங்காது அணிவித்து, உடுத்தி என்னாது மாட்டி என்றது உடல் நலுக்கமுறாது அணிவித்ததை என்க.

*மணிக்கண் எழுதி.* மணியைப் போலும் ஒளி பொருந்திய கண்களில் மையெழுதி. பொதுப்படத் தீட்டாது அழகுபட எழுதி என்றது கருதத்தக்கது.

*உள்ளாந் தெழூஉம் உவகை பொலிய:* உள்ளத்தினின்று புடையளாவி எழுதரும் மகிழ்வு முகத்திலே மலர்ந்து விளங்கும்படி.

*கள்ளாரிதழ்கள் கனிய முத்தி :* கள் ஊறுகின்ற இதழ்கள் கன்றிச் சிவக்கும்படி முத்தந் தந்து.

*கொட்டிய பூங்கை:* கொட்டி விளையாடிய குழந்தையினது கை.

*வட்டித் தெடுத்து:* நலுங்காமல் எடுத்து. வட்டித்தல்-வடித்தல்-வடிவம் செய்தல், வடிவம் செய்த ஒன்றை அது குலையாது எடுத்தல் -களி மண்ணால் ஆக்கிய கலம் ஒன்றினை வடிவம் குலையாமல் கைப்பழக்கமாக எடுத்து வைப்பது போல், பசுங்குழவியையும் நலுக்கமுறாது கைநயமாக எடுத்தாள் ' என்க.

*மொட்டுடல் தாங்கி:* தாமரை மொட்டுப் போலும் இளந்தலையும், தண்டுபோல் நிமிர்பற்ற உடலும் இரு கைகளாலும் தாங்கி.

*தொட்டிற்கிடத்தி:* தொட்டிலில் இடலும், போடலும் இல்லாது கிடத்துதல் என்றது, குழந்தையை மெதுவாகக் கிடக்கும்படி செய்தாள் என்றற்காம், கிடத்துதல்-கிடையாக வைத்தல்.

*நீலக் கொழுங்கண்:* நீலநிறம் பொருந்திய கொழுமையான கண்கள்.

*நனையிதழ்:* கண்ணீரால் நனைந்த, மலர் இதழ் போலும் இமை.

*பொருந்த* : பொருந்தும்படி -மூடி உறங்கும்படி.

*கோலச் செழுந்தமிழ்த் தாலம் பயிற்றி:* உரை அழகும், சொற் செழுமையும் கொண்ட தமிழ் மொழியில் தாலாட்டுக்கூறி. தாலம்-தாலப்பாட்டு-தாலாட்டு. பயிற்றுதல்-பயில்வித்தல், தாலாட்டு வழித் தாய்மொழிப் பயிற்சியையும் உறக்கவின்பத்தையும் ஊட்டுதலால் பயிற்றுதல் எனலாயிற்று.

*ஆர்தல் அயர:* பாடல் ஒலி அயரும்படி.

*அசைதல் சோர்வுற:* குழந்தையை ஆட்டுவிக்கும் அசைவு சோர்வுறும்படி. அசைவு சோர்வுறுதல்-அசைகின்ற கை சோர்வுறுதல்.

*ஈர்வாய்:* ஈரமுடைய வாய்.

*குதலை இழிதர:* குழந்தையின் வாயினின்று 'குதலை' என்னும் ஒருவகை நீர் இழிய இதற்குச் 'சொள்' என்றும் ஒரு சொல் உண்டு.

*கிறங்கும்:* உறக்க மயக்கத்திலாழும்.

*இளமென் பூவுடல் இடையிடைப் பேணி:* இளமையும் மென்மையும் வாய்ந்த பூப்போன்ற குழவியின் மெல்லுடலைத் தாய் தன் உறக்கத்திலும் இடையிடையே விழித்துப் பேணி.

குழவியின் மேற் போர்த்திய துணி உறக்கத்தின் இடையிடை விலகுவதைச் சரிசெய்வதும், உடலுறுப்புகள் அழுந்துமாறு உறங்கும் குழந்தையை அடிக்கடி புரட்டிச் சரிவரப் படுக்கவைப்பதும், வாயைத் திறந்துகொண்டோ, விரலைச்சப்பிக் கொண்டோ உறங்குமானால் அதன் முகத்தை உயரப்படுத்தியோ, வாயிலுள்ள விரலை அப்புறப்படுத்தியோ விடுவதும், கழிகளால் ஈரப்படும் படுக்கைத் துணி களை அடிக்கடி மாற்றுவதும் பிறவும் குழந்தையைத் தாய் இரவில் பேணும் வகைகளாகும்.

இவ்வாறு பேணுகின்ற உணர்வு ஒரு தாய்க்கு இயல்பாகவே அமையு மெனினும், இயல்பு திரிந்த இக்காலத்துக் குழந்தை தொட்டிலினின்று விழுந்து, அழுது கிடந்தாலும், தன்னுறக்கத்தினின்று விழியாத தாயரும் உளர். அன்னவர் போலன்றித் தன் தலைவி "இளமென்பூவுடல் இடையிடைப் பேணும்" பெற்றியளாயிருத்தல் தலைவற்கு வியப்பினை யூட்டிற்றென்க. இவ்வாறு இரவில்தான் தொடர்ந்து உறங்காது இடையிடையெழுந்து தன் குழந்தையைப் பேணும் பெற்றி வாய்ந்தாள் அருளுடையளாதல் வேண்டும் என்பது பற்றி *அருள்விழி மூடும் அன்னை* என்றான் என்க. விழிகள் மூடுவதல்லது உறங்குதல் செய்யா என்னும் குறிப்பினை அறிக.

இத்தகையளாகிய *அன்னைக்கு,* இருள் கழியும் தன்மை வாய்ந்த இவ்வுலகம் *ஈடிறந்தது* என்பது தலைவன் கூற்றாகும்.

*ஈடிறந்தன்று:* இணையற்றது.

குழவியின் பசியறிந்து பாலூட்டியும், உடல் நலுங்காது குளிப்பித்தும், புனைவித்தும், உறங்குவித்தும், பகலிற் பேணியவள் இரவிலும் தான் முழுமை உறக்கம் கொள்ளாது இடை இடை எழுந்து அதனைப் பேணும் அருள் வாய்ந்த தன்மைக்கு, இவ்வுலகமும் ஈடாகாது என, அண்மையில் தாய்மைப் பேறுற்ற தன் தலைவியைப் பார்த்துத் தலைவன் கூறியதாகும் இப்பாடல்.

இது, *முல்லை யென் திணையும், புதல்வற் பயந்த தலைவியின் தாய்மைத் திறம் வியந்ததென் துறையுமாகும்.*



# 24 நலங்கூர் நாவினர்

முரசுகடிப் புண்ட அரசரு மல்லர்;
உரைசெல் லாட்சியின் அவரி னோங்கியர்.
கோன்முறை திறம்பிக் குடிநிலை திரிமுன்
ஆன்றுரை கொளுவும் அமைச்சும் அல்லர்;
நவைதீர் அவையின் நலங்கூர் நாவினர்.
நுரைப்பஞ்சின் நரைதாங்கி
அரியேற்றின் அணலடர்ந்து
நெறியாற்றின் நெஞ்சுபடரப்,
பாடியுஞ் சேரியும் பட்டினப் பாக்கமும்
ஊருங் குடியும் ஓதை நகரமும்,
வெய்யினும் மழையினும் விதிர்க்கும் பனியினும்
பொய்யினும் புரையினும் பூட்கை தளராது,
காலையும் மாலையும் கடும்பகல் யாமமும்,
வைகலும் நாடி மெய்கலந்து புனைவின்றிக்
கொல்வரியின் சொல்பாய்ச்சித்
தொல்குடிமை கட்டழித்த
ஆரியத்தை அடிதுமித்துப்
பட்டமும் பதவியும் பரவலும் நாடாது,
பழமை கடிந்து பாழ்மை புலங்காட்டி,
மருளும் இருளும் மறுமையும் போக்கி,
நிகழ்நலம் ஒன்றே நிறைத்தெனக் காட்டிக்
குலக்கோ டரிந்து சமயக்கா லறத்துணித்துக்
கல்க்குறு கொள்கைக் கடவுண் மறுத்தே
யாரும் யாவும் யாண்டுந் துய்மெனப்
புதுமை பொழிவித்துப் பொதுமை தழைவிக்கும்
அரிய ராகலி னவரே
பெரியா ரென்னும் பெயரி யோரே!

**பொழிப்பு:**

குறுந்தடியால் அடிக்கப்பெற்ற முரசை உடைய அரசருள் ஒருவரும்

அல்லர்; உரையைக் கட்டளையாகக் கொண்டு செலுத்தப்பெறும் ஆட்சி வன்மையுடைய அவ்வரசரினும் ஓங்கிய ஆற்றல் உடையவர். அரசு முறை மாறுபடலால் குடிமக்களும் தம் நிலையினின்று கெடலுறுமுன், அவ்வரசர்க்கு அறிவான் அமைந்து அறவுரை கூறி, அதனை மேற்கொண்டொழுகச் செய்ய வல்ல அமைச்சரும் அல்லர்; குற்றமற்ற அவ்வமைச்சரவையைச் சார்ந்தாரினும் குடிகளின் நலத்தை மிகுதியும் எண்ணி உரைக்கின்ற நாவினை உடையவர். நீரின் நுரைபோலும் மென்மையும், பஞ்சின் இழை போலும் வெண்மையும் கொண்ட நரையைத் தாங்கி, ஆண் அரிமாவின் பிடரியைப் போலும் முகத்துத் தாடியும் மீசையும் அடர்ந்து, மக்களை நெறிப்படுத்தும் வழிமுறைகளையே நினைத்து நிற்கும் நெஞ்சின் மீது படர்ந்து தொங்குமாறு, பாடிகள், சேரிகள், பட்டிகள், பாக்கங்கள், ஊர்கள், குடிகள், ஆரவாரம் மிகுந்த நகரங்கள் தோறும், வெயிலிலும், மழையிலும், நடுக்கஞ் செய்கின்ற பனியிலும், பிறர் தூற்றும் பொய்யுரைகளுக்கும், குற்றஞ் சார்ந்த இழிவுரைகளுக்கு மிடையிலும் தாம் கொண்ட கொள்கைப்பாட்டின் உறுதிதளராமல், காலையென்றும், மாலை யென்றும், வெப்பம் மிகுந்த நண்பக லென்றும், குளிர்மிகுந்த நள்ளிர வென்றும் பாராது, ஒவ்வொரு நாளும் தாமே நாடிப்போய்த் தம் கொள்கையை வலியுறுத்த உண்மையான செய்திகளையே துணைக்கொண்டு, சொற்புனைவும், கருத்துப்புனைவும் இல்லாது, கொல்லப் பாயும் வரிப்புலியின் வீறுசான்று சொற்களைக் கேட்போரின் செவிவழி மனவயலில் பாய்ச்சியும், தமிழ்க்குடியின் வன்மையைக் குலைத்து அழித்த ஆரிய இனத்தின் கேடுகளை அடியோடு வெட்டிச் சாய்த்தும், பட்டப் பெயர்களையும், பதவி நலன்களையும் பாராட்டுரைகளையும் மனத்தால் விரும்பாமலும், மக்கள் தம் அறியாமையால் கைக்கொண்டொழுகும் பழக்க வழக்கங்களைக் கடிந்து விலக்கியும், அவர் தம்மை வளர்ச்சியின்றி வெறுமைப்படுத்தும் இழிநிலைகளைச் சுட்டிக்காட்டியும், மக்களின் மயக்கமுற்ற போக்கையும், அறியாமை இருளையும், பிறவி - நம்பிக்கை களையும் நீக்குமாறு அறிவுறுத்தியும். கண்கூடான வாழ்வு நலம் ஒன்றே யாவருக்கும் நிறைவானதெனச் சுட்டிச் கூறியும், மக்கள் நலமெய்த முட்டுக்கட்டைகளாக நிற்கும் குலப் பாகுபாடுகளை வெட்டி வீழ்த்தியும், சமயங்களின் அடிநிலை வேர்களை அறுத்தும், தெளிவற்றுக் குழப்பமான கொள்கை சார்ந்த போலிக்கடவுள் தன்மைகளை மறுத்துரைத்தும், எல்லா மக்களும் , எல்லா நலன்களையும், எவ்விடத்தும் துய்த்தல் செய்யுங்கள் எனும் புதுமை உரைகளைப் பொழிவித்து, அதன் வழிப் பொதுமை யறத்தை மக்கள் மனத்தில் தழையச் செய்தும் வருகின்ற அரிய செயல்களுக்கு உரியவர் ஆகலின், அவரே பெரியார் என்னும் பெயர்க்கு உரியவர் ஆவர்.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்திணையைச் சார்ந்தது.

கோவை, ஈரோட்டைச் சேர்ந்த *வேங்கட இராமசாமி* என்னும் இயற்பெயர் கொண்டவர், தம் செயற்கரிய செயல்களால் பெரியார் எனும் சிறப்புப் பெயர் கொண்டு அழைக்கப்பெறும் தன்மையை உறுதிப்படுத்தி, வாழ்த்திப் பாடியதாகும் இப்பாட்டு.

தொன்மையும் பெருமையும் வாய்ந்த தமிழ்ப்பேரினம், இடையில் வந்து கலந்த ஆரிய இனத்தால் தம் குடிமை இழந்து, தாழ்வுற்று, மருளும் இருளும் நிறைந்த பல மூடப்பழக்க வழக்கங்களை மேற்கொண்டு மேலும் மேலும் தன்மானமிழந்து தாழ்ந்து போதலைக் கண்டு வருந்தி, அவர்களைத் திருத்தும் பொருட்டுத் தம் வாணாள் முழுமையும் ஓவாது உழைக்கும் *ஈ.வே இராமசாமி* என்னும் இயற்பெயரியர், தம் செயற்கரிய செய்கையால், ***பெரியார்*** என மக்களால் அழைக்கப் பெறுதலைக்கண்டு வாழ்த்திப் பாடியது இது.

***முரசு கடிப்பு உண்ட அரசரும் அல்லர்*** - இவர் குறுந்தடியால் அடிக்கப்பெறும் முரசை உடைய அரசருள் ஒருவரும் அல்லர் ; கடிப்பு-குறுந்தடி.

***முரசு கடிப்புண்ணுதல்*** - முரசு குறுந்தடியால் அடிக்கப் பெறுதல்.

***உரை செல் ஆட்சியின்*** - தம் வாயுரை செல்லுபடியாகி ஆளுமை செய்யும் ஆட்சி. வெறும் வாயுரையே கட்டளையாகி ஆட்சி செய்தல் அரசர்க்கே இயல்வதொன்று ஆயினும், அரசரல்லாத இவருடைய சொல்லும் தமிழக மக்களிடைச் செல்லுபடியாதல் ஒரு நாட்டையாளும் அரசர்க்குரிய பெருமையை இவருக் களித்தது. ஆனால், கருவியும், காவலும், கடிமதிலும், நாடும் உடைய அரசரின் சொற்கள் செல்லுதல் வியப்பன்று ; அவை இல்லாத இவரின் சொற்கள் அரசரின் கட்டளைச் சொற்களாக மக்களால் ஏற்கப் பெறுகின்றன எனின் இவர் அரசரினும் ஓங்கிய அதிகாரம் உடையராதல் பற்றியே இவரை ***அவரின் ஓங்கியர்*** எனலாயிற்று.

***கோன்முறை திறம்புதல்*** - அரசன் தனக்குற்ற நெறிமுறைகளினின்று மாறுபடுதல்.

***குடிநிலை திரிமுன்*** - அரசன் நெறிபிழைத்தலை யொட்டிக் குடிகளும் நிலை திரிவார்களாகையின், அதற்குமுன் என்றபடி.

***ஆன்றுரை*** - அறிதலால் அமைந்த உரை.

***கொளுவும்*** - உணர உரைக்கும், செலச் சொல்லும்.

அரசன் நெறிதவறின் குடிகளும் தவறுவர் என முந்துணர்ந்து, அவன் அங்ஙன் தவறாவாறு உணர வுரைக்கும் ***அமைச்சரும் அல்லர்,*** இவர்.

***நவைதீர்.*** குற்றந் தீர்ந்த - அறியாமை நீங்கிய.

***அவையின்*** - அறியாமை நீங்கிய அமைச்சரவையினும்.

***நலங்கூர் நாவினர்*** - அரசினதும், குடியினதும் நலன்களையே மிகுத்து நாடும் நாவினை உடையவர்.

அமைச்சர்க்குற்ற கடமையாலும், ஊதியம் பெறும் கருத்தாலும், அரசன் நெறிபிழைத்தல் குடிபிழைத்தலுக்குக் கரணியமாகு மென்றுணர்ந்து, முன்கூட்டியே அவர்க்கு அறிவுரைத்தல் இயல்பாம் என்க. ஆனால் இவரோ, தாம் குடிகளுள் ஒருவராகி, ஊதியமும் அதன் மேற் கடமையும், பெறவும் பேணவும் அல்லவராயிருந்தும், அவ்வாறு பிழைத்தொழுகும் பேதைமையை இடித்துரைக்கும் தன்மையினராய் இருத்தலின் அவ் வமைச்சரினும் குடிகளின் நலனோம்பும் நாவினர் எனலாயிற்று.

*நுரைப்பஞ்சின் நரைதாங்கி* - நுரைபோலும் மென்மையும், பஞ்சு போலும் வெண்மையும் சார்ந்த நரைமுடியைத் தாங்கி.

*அரியேறு* - அரிமாவின் ஏறு.

*அணல்* - தாடி. முகவாயின் தோன்றிய மீசையும் தாடியும்.

*நெறியாற்றின் நெஞ்சு படர* - நெறிமுறைகளை வழிப்படுத்தும் நினைவு சான்ற நெஞ்சின்மீது படர்ந்து புரளும்படி.

*பாடியும்.... நகரமும்* - முல்லை நிலத் தூர்களாகிய பாடியும் சேரியும், நெய்தல் நிலத்தூர்களாகிய பட்டினமும் பாக்கமும், மருதநிலத்து ஊராகிய, ஊரும் குறிஞ்சி நிலத்தூராகிய குடியும் ஆரவாரமிக்க நகரமும்.

*வெய்யினும் .... பனியினும்* - வெயிலென்றும், மழையென்றும், நடுங்குகின்ற பனியென்றும் பாராது வினைமேற்கொண்டு.

*பொய்யினும் புரையினும்* - மனத்தை அலைவிக்கும் பொய்யுரைகளாலும், வினையைத் தளர்விக்கும் பழியுரைகளாலும்,

*பூட்கை தளராது* - தாம்கொண்ட உறுதிப்பாடான கொள்கையில் நிலை நெகிழ்வுறாது.

*காலையும் மாலையும் கடும்பகல் யாமமும்* - காலையிலும், மாலையிலும், இடைப்பட்ட நடுப்பகலிலும், நடு யாமத்திலும்,

*வைகலும் நாடி* - நாள்தொறும் மக்களை நாடிப்போய்.

*மெய்கலந்து* - தம் கருத்தை எண்பிக்கும் மெய்ம்மை சான்ற எடுத்துக்காட்டுகளை இடையிடைக் கலந்து.

*புனைவின்றி* - சொல்லாரவாரங்களாலும், கருத்து ஆரவாரங் களாலும் அழகுபடுத்தாது எளிய உரைகளால்.

*கொல்வரியின் சொல்பாய்ச்சி* - கொல்லப் பாயும் வரிப்புலியைப் போலும் வீறுசான்ற சொற்களைக், கேட்போர் உணரும்படி செலச்சொல்லி- சொல்லாகிய நீரை மனமாகிய விளைநிலத்து விரைந்து பாய்ச்சி.

*தொல் குடிமை கட்டழித்த* - தொன்மை மிக்க தமிழ்க் குடியினைக் கட்டுக்குலைத்த.

*ஆரியத்தை அடிதுமித்து* - தமிழினத்தொடு இடை வந்து கலந்த ஆரிய இனம் தாம் பிழைத்தல் வேண்டிப் புகுத்திய எத்து ஏமாற்றுகளின் அடிப்படையெல்லாம் கூறிக்கருத்தான் முறியுண்டுபோமாறு வலுவிழக்கச் செய்து.

*பட்டமும் பதவியும் பரவலும் நாடாது* - ஆரவாரம் மிகுந்த பட்டப் பெயர்களையும், அதிகாரத்தையும் செல்வத்தையும் மிகுக்கின்ற அரசப் பதவிகளையும், புகழுரைகளையும் நோக்கமாக நாடாது, தொண்டு ஒன்றே குறிக்கோளாய் நின்று.

*பழமை கடிந்து* - அறியாமையால் மக்கள் தாங்கொண்ட மூடப் பழக்கங்களைக் கடிந்து விளக்கி;

கைம்பெண்ணை மீண்டும் மறுமணஞ்செய்வித்தல் கூடாதென்பதும், பெண்ணைக் கல்வி புகட்டாது அடிமைப்படுத்தி வைத்தல் வேண்டுமென்பதும், அம்மி மிதித்தல், அருந்ததி காட்டல், குத்து விளக்கேற்றுதல், தீவலம் வருதல் போலும் சடங்குகளன்றித் திருமணஞ் செய்வித்தலாகா தென்பதும், காருவா (அமாவாசை), வெள்ளுவா (பௌர்ணமி) நாள்களிலும், கோள் மறைப்புக் காலங்களிலும் சடங்குகள் செய்தல் வேண்டுமென்பதும் போன்ற பழமை நிரம்பிய மூடப்பழக்க வழக்கங்களைக் கடிந்து விலக்கியவர் இவரே என்க.

*பாழ்மை புலங்காட்டி* - மக்களை முன்னேற்ற விளைவற்றவர்களாக ஆக்குகின்ற இழிநிலைகளை அவர் தம் அறிவுக்குப் புலப்படுமாறு விளக்கிக் காட்டி.

மக்களை நான்கு பிரிவுகளாக ஆக்கும் ஆரிய 'வருண' முறைகளையும், அவற்றுள் மேற் பிரிவினர்க்கு அடுத்துள்ள பிரிவினர் தாழ்ந்தவர் என்னும் ஏற்றத் தாழ்வுகளையும் அவர்களுள் ஒரு சாராரைத் தீண்டத்தகாதவர் என்றுரைத்த கொடுமையையும் அன்ன பிறவற்றையும் மக்களை இழிந்தோராக்கும் பாழ்மைகள் என்ற எடுத்துரைத்து, அவற்றிற்குரிய அறிவுநிலைகளைச் சுட்டிக்காட்டி விழிப்புறச் செய்தவர் இவரே என்க.

*மருளும் இருளும் மறுமையும் போக்கி* - மக்கள், அறியாமை நிலைகளுள் வழிவழியாய்க் கொண்ட ஈடுபாட்டு மயக்கத்தையும், அறிவொளி காணாது அறியாமை இருளுள் தம்மைப் புதைத்துக் கொள்ளும் மனமிருண்ட தன்மைகளையும், மறுபிறப்பு முதலிய பிறவிக் கருத்துகளால் ஏற்பட்ட போலித்தன்மைகளையும் போக்கி;

ஆ முதலிய விலங்குகளையும், கலுழன் முதலிய பறவைகளையும், மூஞ்சூறு முதலிய சிற்றுயிர்களையும் வழிபடுகின்ற மயக்கத்தையும், ஏவல், வைத்தல், எடுத்தல் ஆகிய பில்லி, இடுமருந்து, மோடி முதலியன செய்தலும், கழிப்பாலும் காற்றாலும் நோய் முதலியன நீங்கும் என்று நினைத்தலும் ஆகிய அறியாமை இருளையும், நோயும், நொடியும், வறுமையும், வாழ்வும்

முன்பிறவியிற் செய்த தீவினை நல்வினையைப் பொறுத்தன என்றலும், இப்பிறவியில் இல்லாதார் துன்புறினும் மறுபிறவியில் நலமெய்துவர் என்றலும் ஆகிய பிறவி நம்பிக்கைகளை நீக்குமாறு மக்கட்கு அறிவுறுத்தி நீங்கச் செய்யப் பாடுபட்டவரும் இவரே என்க.

*திகழ் நலம்ஒன்றே நிறைந்தெனக் கூறி* - கண்கூடான வாழ்வு நலம் ஒன்றே மக்கள் யாவர்க்கும் அறிவுக்கும் பொந்திகை தருவதெனக் கூறி; பொந்திகை-மனநிறைவு.

*குலக்கோடறிந்து* - குலப்பிரிவுகளின் கொடுமை மிக்க ஏற்றத் தாழ்வுகளைத் தம் கருத்தால் முறிவுறச் செய்து; குலமாகிய கிளைப் பிரிவுகளை அரிதல் செய்து;

*சமயக்கால் அறத்துணித்து* - போலியும் புன்மையும் நிறைந்த செயல்களின்மேற் கட்டப்பட்ட போலிச் சமயப் புனைவுகளை அறவே வெட்டி வீழ்த்தி.

ஒவ்வொரு சமயமும் பிறிதொவ்வொன்றுக்கும் மாறுபட்ட அமைப்புகளையே உடைமையின், அவை ஒவ்வொன்றும் மக்களை ஒரு மித்த வழியிலல்லாது வேறுபட்ட வழிகளிலேயே கொண்டு சேர்த்துப், புன்மையும் பூசலும் நிரப்பி வருகின்ற நிலைகளைத் தம் ஆற்றல் பொருந்திய அறிவுரைகளால் மக்கள் மனங்களினின்று வெட்டி வீழ்த்திய குமுகாயச் சீர்திருத்தக்காரர் இவர்-என்க.

*கலக்குறு கொள்கைக் கடவுள் மறுத்தே* - மனக் கலக்கத்தினின் றெழுந்த கொள்கையால் தோன்றிய கடவுள் தன்மைகளை மறுத்து மனத்தூய்மையால் எய்தப் பெறுவது இறைக் கொள்கை. அவ்வாறின்றி-மனத்தூய்மை பெறாது தீய நினைவுகளாலும் தந்நலப்பற்றுகளாலும் கலக்கமுற்றுக் கற்பனை நிறைந்த நிலையில் தோன்றியது கடவுட் கொள்கையாகலின் அதை மறுத்தார் என்றபடி. என்னை? 'உள்ளங்கடந்த பொருள்' என்பது கடவுளெனின், உள்ளங் கடந்த பொருள் உள்ளத்துக்குப் புலப்படுவதெங்ஙன்? இனி உள்ளம் கடந்ததெனின் உள்ளம் என்பது வேறா? உள்ளமும் கடவுளும் ஒரே பொருளெனின் உள்ளத்தைக் கடந்து நிற்பது கூடுமோ? பொருள் என்பது மாத்திரை(அளவு)களான் அறியப் பெறுவதொன்றாகலான் கடவுளை அறியப்பெறுவதில் வேறுபாடுகள் தோன்றுவது ஏன்? ஒருள்ளத்தே கடவாமல் நின்றும் பிறிதோருள்ளத்தே கடந்து நின்றும் இருத்தல் கூடுமோ? அவ்வாறன்று! உள்ளம் என்பது அறிவு; ஆகையான் அறிவான் அறிந்துரைக்கப் பெறாத ஒன்று என்றுரைக்கின்; அறிவுக்குப்புலப் படாததை அறிவறிந்த தெவ்வாறு? அறிவு காணாத ஒன்றை அறியக்கண்டது எது? அஃது ஒருவர்பாலிருந்து ஒருவர்பால் இராத கரணியமென்னை? உளர்பால் உணர்வித்தும் இலர் பால் மறைப்பித்தும் செய்தது எது? அவ்வல்லமை எவர்க்குண்டு? கடவுட்கே உண்டெனின் அவர் தோன்றாதிருக்கச் செய்த கரணியம் என்ன? அதனை

நீவீர் அறிந்தது யாங்ஙன்? யாம் அறியவேண்டாதென்று கடவுள் கருதிச் செய்த ஒன்றை நீவிர் எமக்குப் புலப்படுத்த முயற்சி செய்வது ஏன்? -என்பன போலும் வினாக்கள் எழுதலை உன்னுங்கால் கடவுள் என்னும் தன்மையை மக்கள் உணர்ந்த நிலை மனக்கலக்கமுற்ற நிலையே என முடிவு வரும்.

இனி, கடவுளின் மெய்க்கொள்கைதான் என்னையோ எனின், அது கலக்கமுறா மனத்தெழுந்த தெளிந்த இறைக்கூறுபாடே என்க. இறை எனும் கொள்கையோ மறைவெளிப்பாடு. (கடவுள்-உள்ளங் கடந்தது, இறை-யாவினும் இறுத்த தன்மை உடையது. இறுத்தல் - தங்குதல்) மறைந்தநிலை புலப்படுவது இறை-என்னை? அறியக் கண்டது அறியாமை; அறியாமை கண்டது அறிவு. அறிவின் பலநிலைப்படிகளின் மீமிசைக் கொள்கையே மெய்யறிவுக் கொள்கை. அதுவே இறைக்கொள்கை. இறைநிலையுள் அணுவும் அண்டமும் ஒன்றே. இறைநிலையுள் அறிவும் அறியாமையும் ஒன்றே, விருப்பும் வெறுப்பும் ஒன்றே! புனலும் அனலும் ஒன்றே; நிலனும் விசும்பும் ஒன்றே; புலம்பனும் உடலும் ஒன்றே; ஒன்றினுள் ஒன்று ஒடுங்கும்; வெளிப்படும்; ஒன்றைவிட் டொன்று இயங்கும்; அடங்கும்; ஆகிய அனைத்து வினைப்பாடுகளும் இறைக் கூறுபாடே! இவற்றுள் இஃது இறைமை; இஃது இறைமையன்று என வேறுபிரித்தல் மாந்த அறிவுக்கு எட்டாதது. இவற்றின் தனித்தனி விளக்கமே அறிவியலும், சமயமும், நம்பு மதமும் நம்பாமதமும், பத்திமையும், பற்றின்மையும். இவற்றை விரிக்கில் மிகப்பெருகும். எனவே இறைமை என்னும் தன்மை எவராலும் மறுக்கப்படுவதொன்றன்று. எவராலும் மறுக்கப்படாததெதுவோ, எவராலும் ஒப்புக்கொள்ளப்படுவதெதுவோ அதுவே இறைத்தன்மை. அன்பு, தாய்மை, இன்பம் முதலிய விழை பாடுகளும், சினம், பேய்மை, துன்பம், முதலிய வெறுக்கைப்பாடுகளும் இறைத்தன்மைகளே. தீயின் சூடும், நீரின் குளிர்ச்சியும், இடியின் கொடுமையும், மழையின் அருண்மையும் இறைத் தன்மைகளே! இவற்றுள் ஒளி வேண்டுவன சில; இருள் வேண்டுவன சில;தீ வேண்டுவது சில நிலை; நீர் வேண்டுவது சில நிலை. வேண்டப் பெறும் உயிர்களுக்குப் வேண்டப்பெறாதநிலைகள் உளவாகையால், அவை இறைமையல்லாது போய்விடுமோ? அழுதரற்றும் துன்பம் தேவையற்றதெனின், கண்ணீரால் கண்கள் கழுவித் தூய்மை செய்யப் பெறுதல் இல்லாது போகுமே; அழுகையால் புலர்ந்து மலரும் சில உடலணுக்கள் தோன்றாதொழியுமே ; இடி மின்னல் இன்றாயின் உலகுக்குக் காந்தவெளி குறைந்து வெறுமையுறுமே; ஆகையின் ஒளியும் இருளும் இறையே. துன்பமும் இன்பமும் இறைத்தன்மைகளே. அவை 'கன்மத்தாலோ', 'மாயையினாலோ' உண்டாக்கப்பெறும் என்பன வெல்லாம் இறைவியல் தெளிவற்ற கலக்கமுற்றார் கதைத்த உரைகளே. அக் கன்மமும் மாயையும் இறையினின்று வேறுபடுவன வென்னின், இறைமையின் தனித்தன்மைக்கே இழுக்கெனக் கொள்க. அக்கதைப்புரை களின்றெழுந்த கடவுட் கூறுபாடுகள் இறைமையைப் பழிக்கும்

இழிவுரைகளே! கிளியைக் கோட்டானென்றும், மானை மந்தி யென்றும் உரைத்த போலியுரைகளே!

எனவே பெரியார் மறுத்துரைக்கும் கடவுட் கொள்கை என்பது சமயக் குரவர்கள் என்னும் கற்பனைக் கலைஞர்கள் படைத்த கட்டுரைகளையே என்றும், உண்மையான இறைமையினை எவரும் மறுத்தற்கியலாதென்றும், அவ்வாறு மறுப்பாரின் உரை, தீயைக் காற்றென்றும், காற்றைக் கனப்பென்றும் கூறுதல் போலும் குறட்டுரைகளே என்றும், அவ்வாறு கூறுவார் உலகில் ஒருவரும் இலர் என்றும், குழந்தைக்கும், குமரனுக்கும் தந்தைக்கும், தாய்க்கும் புலப்படும் அன்பு பல்வேறு நிலைகளை உடையதெனினும், அவற்றை இல்லை யென்று மறுப்பார் எவருமிலாது போலவும், ஒருவருக்கு மிகச்சுடும் வெந்நீர், பிறிதொருவர்க்கு மிகக் குறைவாகச் சுட்டாலும் அதனைக் குளிர்நீர் என்று கூறுவார் எவருமிலாது போலவும், இறைமை பல்வேறு உயிர்களால் பலவகையில் அறிந்து கொள்ளப் பெற்றாலும் அத்தன்மையினை இல்லை என்று மறுப்பார் எவருமிலர் என்றும் தெளிந்து கொள்க.

இனி, "தீய நினைவுகளாலும், தந்நலப் பற்றுகளாலும். கலக்கமுற்றுக் கற்பனை நிறைந்த நிலையில் தோன்றியது கடவுட் கொள்கையாகலின் அதை மறுத்தார் என்றபடி" என்னும் முற்கூறிய அடியினுள் வரும், ***தீய நினைவுகள், தந்நலப்பற்று, கற்பனை*** - முதலிய சொற்கள் எவற்றைக் குறிப்பன என்பதற்கும், அவை இறைமை ஆகாவோ என்பதற்கும் விடையென்னெனின் கூறுதும்.

தீயநினைவும், தந்நலப்பற்றும், கற்பனையும் இறைமையே! ஒன்றுக்குத்தீது பிறிதொன்றுக்கு நன்றாயும், ஒன்றுக்குத் தன்னலம் பிறிதொன்றுக்குப் பிறநலமாயும், ஒன்றின் கற்பனை பிறிதொன்றின் நிகழ்பாடாயும் இருத்தல் கண்கூடு. (மாந்தன் பறப்பது போலும் செய்யும் கற்பனை, பறவைக்கு நிகழ்பாடாயிருத்தல் காண்க.) உலகியல் இயங்கும் பல்லாயிரங்கோடி உயிர்களுள் மாந்த உயிரினத்திற்கு என மாந்த இனம் வகுத்துக் கொண்டவையே அதற்கு நன்மையென்றும், தீமையென்றும் பெயர் பெறுவன. இவை ஓர் எல்லையுட்பட்டன. பெண்டிர் யாவரும் ஒருவர் போல்வரே என்னும் இயற்கூறுபாட்டில், மாந்தன் அவரைத் தாயென்றும், மனையென்றும், தங்கையென்றும் வகுத்துக் கொண்டது போல்வதே எல்லை என்க. அவ்வெல்லை கடந்தோமெனின் நம் நன்மை இன்னொன்றால் தீமை என்று பெயர் சூட்டப்பெறுவதையும், நம் தீமை இன்னொன்றால் நன்மை எனப் பெயர் சுட்டிச் சொல்லப் பெறுவதையும் நாம் உணரலாம். அக்கால் நாம் கொண்ட நமக்குகந்த தன்மைகள் மாறுபட்டுப் போவதைப் பார்க்கலாம். அந்நிலையில் அவை இறைமையில்லை என்று சொல்லப் பெறுமா?

மாந்தநிலையில் உணவு எரிக்கப்பட்டுச் செந்நீர் உறிஞ்சப் பெற்றால் எஞ்சிய கரி மலம் என்று சுட்டப்பெறும்; கழிவென்றும் இழிவென்றும்

தள்ளப் பெறும் அது, பன்றிக்கு உணவுதானே, நமக்கு உணவு இறைமை என்றால்- இறைவன் தந்ததென்றால் பன்றிக்கு மலம் இறைமையென்றும் இறைவன் தந்தது என்றும் கூறப்பெறுவதில் பிழையென்ன?

எனவே, சமயங்களைத் தோற்றுவித்த கற்பனைக் கலைஞர்கள் அனைவர் கருத்துகளும் அவர்கள் அவர்களுக்குள்ளாகவே மறுத்தொதுக்கும் கருத்துகளென்று உணர்க. மறுக்கப்படாத அறிவு எதுவோ, மறுக்கப்படாத உணர்வுநிலை எதுவோ இறை என்க. பிறநிலைகள் எல்லாம் இறைமையின் தன்மாத்திரைக் கூறுபாடுகளே.

இவ்வடிப்படையில் நோக்கின் சமயங்கள் கூறுகின்ற கடவுள் நிலைகள் கலக்குறு கொள்கையின் எழுச்சிகளே! அவை அனைத்தும் இறைமைக்குட்பட்ட கோட்பாடுகளே எனினும் அவைதாம் இறைமை எனச் சுட்டப்பெறுவதில் தவறில்லை. பிறவெல்லாம் வேறு என்பதில்தாம் பிழைபாடுகள் நேர்ந்திருப்பதை அறிவியல் கண்கொண்டு பார்ப்போர் உணர்வர். அறிவியல் மெய்யறிவியலுக்கு மாறுபட்டதன்று. மெய்யறிவியலுக்கு அறிவியலே வாயில். மனம் திரையாயின் அறிவியல் ஒளியும், மெய்யறிவியல் காட்சியுமாம். பெரியாரால் கடியப்பெறும் கொள்கைகள் சாணியை வணங்கென்பதும், சாம்பலைப் பூசென்பதும் போன்ற சிறுமைக் கொள்கைகளே என்க. இறைமையின் பிறநிலைகள் பிறவிடத்து விளக்கப்பெறும்.

***யாரும் யாவும் யாண்டும் துய்ம் என*** - உலக மக்கள் யாவரும் உலகில் நலந்தரும் யாவற்றையும், எக்காலும் துய்த்தல் செய்வீர் என.

பொதுமை அறம் பிலிற்றும் இக்கொள்கை உலக மக்கட்கெல்லாம் உடன்பாடான கொள்கை. ஒரு சாரார் மறுத்தொதுக்கும் எதுவும் பொதுமைக் கொள்கையாகாது என்க.

***புதுமை பொழிவித்துப் பொதுமை தழைவிக்கும்*** - இத்தகைய மக்கட்குப் புதுமையான எண்ண வுணர்வுகளை அவர்கள் மனத்தே சொற்களால் பொழியச் செய்து, பொதுமை யறத்தைத் தழையச் செய்யும் ***அரியார் ஆகலின்*** அவர் ஒருவரே ***பெரியார் எனத்தக்கவர்*** என்க.

***பெயரியோரே*** - எளிய மாந்தர்களினின்று வேறுபட்டெழுந்த ***பெரியார்*** என்னும் பெயருக்கு உரியவரே! என்னை? செயற்கரிய செய்வார் ஆகையால், ***பெரியார்*** என்னும் பெயர் அவர் முதுமையான் வந்ததன்று. முதுமை எய்தியோர் பலர் உளர் எனினும், பிறர்க்கு அருமையானவற்றை இவர் செய்கின்ற தன்மையாலேயே இவரைப் பெரியார் என்பது. இது ***பாடாண்*** திணையும் ***வாழ்த்தியலென்*** துறையுமாம்.



# 25 மௌவல் நாற்றம்

கைம்பாற் கள்ளி யிவரினு மொய்ம்பிலை
மைங்கால் நொச்சி மணப்பினும் அரத்துவாய்
வெவ்விலை வேம்பின் சினையணைந் தவிழினும்
மௌவல் நாற்றம் வெவ்வே றாகதே!
எவ்விடம் பெயர்வோ ராயினு மவ்விடஞ்
செவ்வி மாறுவ ரல்லர்
ஒவ்வி யுளம்புகுந் தெனைமணந் தோரே!

**பொழிப்பு:**

கைப்புடைய பால் ஊறுங் கள்ளிச் செடியின் மிசை ஏறிப்படர்ந் தாலும், அடர்ந்து நெருங்கிய இலைகளையும் கருமை பொருந்திய கால்களையும் உடைய நொச்சிச் செடியினைப் பற்றித் தழுவினாலும், அரத்தின் வாயைப் போன்றதும், வெப்பம் பொருந்தியதுமான இலைகளையுடைய வேப்பமரத்தின் மலர்முகைகளை அளாவி மலர்ந்தாலும், முல்லையின் நறுமணம் அவ்வவ் விடத்திற்குத் தக்கவாறு மாறுபட்டுக் கமழாது; வினையினிமித்தம் எத்தன்மை வாய்ந்த இடங்கட்குப் பெயர்ந்து செல்வோராயினும், அவ்விடங்களால், தமக்கியல்பான பண்பினின்று மாறுபடுவோரல்லர், புறத்தே விரும்பி உடன்பட்டு உள்ளத்துட்புகுந்து நின்று என்னை மணந்து கொண்ட அவரே!

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தலைவனின் அறிவும், பண்பும் அறிந்து, அவன் வினைப்பாடு கரணியமாகப் புறத்தே பலவிடங்களுக்கும் பெயருந் தன்மையோன் எனினும், அவ்விடங்களின் சூழ்புகளாற் கவரப்பட்டுத் தன் ஒழுக்கத்தில் மாறுபடுவோன் அல்லன் என்று அவன் பண்பாட்டைப் போற்றித் தோழியிடம் தலைவி உரைப்பதாக அமைந்ததிப் பாட்டு.

கற்புக் காலத்து மேற்கொண்ட இல்லற வொழுக்கத்திடையில் பொருள் வருவாய் கருதி, வினைமேற்கொண்டு பிரிந்த தலைவன், வரவு நீட்டித்துக் காலங்கடத்தியது கண்ட தோழி, ஒரு கால் சென்றவிடத்துப் பலதேயத்து மகளிரையும் காண வாய்ப்புழி ஒழுக்கங்குன்றுவனோ, குன்றி அவர்வயப்பட்டு நிற்க, வரவு நீடியதோ என ஐயுற்றாளாக, அவள் ஐயுறவு

*நீக்கி, அவன் அறிவாற்றலறிந்து. அவன் பண்பைப் போற்றியுரைத்தது இக்கூற்று.*

*"வெண்மைத் தன்மையும் மணமும் கொண்ட முல்லை மலர்களை உடைய கொடி, கைப்புச்சுவை நிரம்பிய பால் ஊறுகின்றதும், கொழுவிய தோற்றமுடையதுமான கள்ளிச் செடியின்மீது இவர்ந்து படர்ந்தாலும், கருமைத்தன்மையும் நறுமணமும் கொண்ட இலைகளையும் கரிய கால்களையும் உடைய நொச்சிச் செடியினைத் தழுவி நின்றாலும் , அரம் போலும் ஓரத்தரும்புடையதும் வெப்பு நிறைந்ததும் ஆகிய வேப்ப மரத்தின் மலர் முகைகளை அளாவி நின்றாலும், தன் வெண்மையினும் மணத்தினும் மாறுபடாது பூத்தல் தொழில் செய்வது போல், பழக்க வொழுக்கங்கள் மாறுபடும் பல தேயங்கட்குச் செல்லினும் என் தலைவன் தனக்குற்ற இயல்பான பண்பொழுக்கினின்று மாறுபடும் தன்மையோன் அல்லன்" - என்று அவன்பால் ஐயுற்ற தோழிக்கு அறிவுறுத்தினள் என்க.*

*ஈண்டு முல்லைக்கொடி அவன் செலவையும், மலர் அவன் உள்ளத்தையும் குறித்தன. கைம்பாற் கள்ளியும், மொய்ம்பிலை மைங்கால் நொச்சியும், அரத்துவாய் வெவ்விலை வேம்பும் பிற தேயங்களின் வேறுபாடுணர்த்த வந்தன. கள்ளியினது கசப்பு நிறைந்த பாலும், நொச்சியின் மணமும் கருமையும், வேம்பின் வெப்பும் ஆங்காங்கு வசதியும் நிறையழி மகளிரது கவர்ச்சியையும் தன்மையையும் உணர்த்த வந்தன என்க.*

***கைம்பால் கள்ளி*** *- கைப்பு நிறைந்த வெள்ளி பாலையுடைய கள்ளி. ஆவின் பால் போன்ற தோற்றங்காட்டினும் கள்ளிப்பால் சுவைப்பின் கசப்பும் உண்ணின் உயிர்ப்போக்குந் தன்மை உடையது போல், பார்த்தற்கு நிறையுடையவர் போல் தெரியினும் பொது மகளிர் புழக்கத்திற்கசப்பும், தன்மையில் உயிர்க்கு ஊறும் கொண்டவராவர் என்றாள் என்க. தன் தலைவன் பொருட்களின் தோற்றம் மட்டுமன்றி மெய்ப்பொருளும் தேர வல்லவன் என்று கூறினாள் என்க.*

***இவர்தல்*** *- ஏறிப்படர்தல்*

***ஈண்டு கள்ளி*** *- பிரிவாகிய பாலைக்கு உரிப்பொருளாகி நின்றது.*

*'நிலத்தூன்றிய முல்லை, அதனின்றெழுந்து ஏறி, நிலத்தைப் பிரிந்து பாலைத்திணைக்குரியதாகிய கள்ளியின் மேல்படரினும்' என்று பொருள் கொள்க.*

***மொய்ம்பிலை மைங்கால் நொச்சி*** *- மொய்த்தடர்ந்த இலைகளையுடையதும் கரியகால்களையுடையதுமான நொச்சிச் செடி.*

*நொச்சி மணமுடையதுபோல் தோன்றினும் நோயுடையார் நாடிப் போவதொன்றாகலின் அதன் தன்மையினையும் வரைவின் மகளிர்க்கு உவமை கூறினள். நிறையழி பெண்டிர் நிறைந்த நிலத்து, உறைவோனாயினும் உளத்தின் வெண்மையும் மணமும் விலக் கோனல்லன் என்பது தலைவியின் உறுதி.*

*மணப்பினும்* - தழுவிப் படர்ந்தாலும்.

*அரத்துவாய் வெவ்விலை வேம்பு* - அரத்தின் பற்களைப் போன்ற ஓரங்களை உடைய வேம்பின் இலை.

வெள்-பு-வெப்பு-வேம்பு. வெப்பம் நிறைந்த தன்மையுடைய மரம்.

வரைவின் மகளிர் தம் பற்கள் கூரியவாயினும் அரத்தின் பற்களைப் போல் கொடுமையன. அவை தழுவத்தழுவத் தழுவப் பெற்ற பொருள் நிலைகுலைவது போல், அவரால் தழுவப்பெற்றாரும் நிலைகுலைந்து போவர் என்பது பொருள்.

*சினையணைந் தவிழினும்* - வேம்பின் பூஞ்சினைகளை யணைந்து அவற்றோடு தானும் ஒன்றாக முல்லை மலர்ந்தாலும்.

பூஞ்சினைகளொடு பொருந்தி நின்றது, தலைவன் புறப்பெண்டி ரொடு நெருங்கிப் படரும் நொச்சியைக் குறித்தது. அவ்வாறு நெருங்கிப் படரினும் தன் தன்மையில் மாறுபடாத் தகையவன் அவன் என்றாள் என்க.

*மௌவல்* - முல்லை - காட்டு மல்லிகை.

*வெவ்வேறாதே* - வெவ்வேறு ஆகாது - ஆதே-இடைக்குறை.

*எவ் இடம் பெயர்வோன் ஆயினும்* - எத்தன்மை வாய்ந்த இடம் நோக்கிப் பெயருந் தன்மையோன் எனினும்.

*அவ்விடம்* - அவ்விடத்து.

*செவ்வி* - ஒழுங்கு -பண்பு - நேர்மை.

செம்- பகுதி. நேர்மையைக் குறிக்குமொரு சொற்பகுதி.

செப்பம்-செம்மை- செவ்வி.

*மாறுவர் அல்லர்* - மாறுபடுவோரல்லர். '*மாறார்*' என்று குறியாது, '*மாறுவர் அல்லர்*', எனக்குறித்தது, அவ்வாறு மாறுபடுவோர் பலராகலின், அத்திறத்தோர் இவரல்லர் என்று உறுதிப்படுத்த வேண்டி என்க.

*ஒவ்வி*–புறத்தே ஒப்பி.

*உளம் புகுந்து* - உளத்தே புகுந்து. உளத்தில் நிறைந்து,

*எனை மணந்தோர்* - என்னைத் தழுவினோர்- மணந்தவர்.

ஆடவர் பலர் போலன்றி என் தலைவன் தன் திறத்தில் என்றும் எவ்விடத்தும் மாறுபடாத் தன்மையோன் என்று கூறி அவன்மேல் தோழி கொண்ட ஐயத்தைப் போக்கித் தன் தலைவனின் ஒழுக்கத்தை உறுதிப்படுத்தினாள் என்க.

*இது முல்லைத் திணையும் அவனறிவாற்ற லறிந்தேற்றியது என்னுந் துறையுமாம்.*



# 26 முற்றச் சிலம்பி

முற்றச் சிலம்பியின் நுண்ணிழை ெபய்த
அற்றங் காவா ஆடை போர்த்து
மறுகிடை அசையும் மடக்ெகாடி யோயே!
நாண்மிக வுடைத்தே நிற்ெபண் டகையே!
என்ெகால் அறிகிலம் நின்னுளக் கிடக்கை!
இளம்ெபான் மேனி எழிற்காட்டு வையினே
மைம்புகை யாடி ஒளிமழுக் கல்போல்
ெமய்யுமிழ் வனப்பை நின்னுடை மறைக்கும்!
ஆகலின் அக்கலை அகறலும் நன்றே!
ஈங்கிது ெபண்மைக் கிழுக்ெகன் பையினே,
யாங்குநிற் குணர்த்துவ னம்மே? தூங்ெகழில்
ஏெதன நூலோர் இயம்பின ெரன்னின்
பூங்குழன் மாதர்க்குப் ெபாருந்துநல் நாணும்,
விரைெயாளி நுதலோர்க்குப் புரையிலா ெநஞ்சும்,
துவர்வாய்க் கனியோர்க்குத் தவறிலா நடையும்,
அச்சக் கதவமும் எச்சமில் உரையும்,
என்றிவை தாமே யன்றிப் பிறவே
ெவன்றி ஆடவர் உளம்வீழ்த் தாவே!

**பொழிப்பு:**

மனை முற்றத்துக் கட்டிய சிலம்பியினது நுண்ணிய வலை யின் இழையினைக் கொண்டு நெய்தது போலும், மறைவிடங்களைக் காவாமல் வெளிப்படுத்திய மெல்லாடையை உடுத்து, மாந்தர் புழங்கும் தெருக்களிடையே அசைகின்ற நடையினளாய்ச் செல்கின்ற இளங்கொடி போன்றவளே! மிக்க நாணுறுமாறு உடையது நின் பெண்மைத் தன்மை. நின் உள்ளத்து ஊறிக்கிடக்கும் எண்ணம் எதுவோ என அறிகிலம். இளமைக் கொழுமையும் பொன் போலும் அழகுச் செழுமையும் வாய்ந்த நின் மேனியினது முழு அழகையும் எல்லார்க்கும் கரவின்றிக் காட்டுதற்கு விரும்புவையாயின், கருமையான புகையேறிய ஆடி உள்ளிருக்கும் சுடரொளியை மழுக்கிக் காட்டுவது போல், நின் உடல் வெளிப்படுத்தும் கட்டழகை நீ போர்த்துள்ள இம் மெல்லிய உடையுங்கூட மறைத்துவிடும்.

ஆகலின் அதனையும் அகற்றி விடுதலே நின் கருத்துப்படி சிறந்ததாகும். இவ்வாறு செய்வது பெண்மைக்கே இழுக்காகும் என்பையாயின், அம்மே, நினக்குப் புரியுமாறு உணர்த்துவது எப்படி?

செறிந்திருக்கின்ற அழகு என்பது யாது எனச் சான்றாண்மை மிக்க நூலாசிரியர் எதனை இயம்பினர் எனில், பூப்பொதிந்த கூந்தலையுடைய கவர்ச்சிமிக்க பெண்டிர்க்கு என்றும் அப்பூப்போலும் பொருந்தியிருந்து அழகும் நன்மையும் தருவதாகிய நாணமும், மணமும் ஒளியும் நிறைந்த நெற்றியை உடைய மகளிர்க்குக் குற்றமிலாத உள்ளமும், செங்கனிபோலும் வாயை உடைய அவர்களுக்குத் தவறு சேராத ஒழுகலாறும், அப்பெண்மையைக் காவல் செய்வதாகிய அச்சம் என்ற கதவமும், குற்றமில்லாத உரையும்- என இவை தாமே அல்லாது அப்பெண்டிரை வெற்றி கொள்ளக் கருதும் ஆடவர் தம் உள்ளத்தை வீழ்த்தி அடிமைப் படுத்துவன வேறு அல்ல.

**விரிப்பு :**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

பெண்டிர்க்கு வேண்டிய தற்காப்புப் பண்பியலை நெகிழ விட்ட ஓர் இளமகள் தனக்கு, அவள் கைக்கொள்ள வேண்டிய அரும் பண்பியல்பு களைக் கூறி, சான்றோர் அறிவுறுத்தியதாகும், இப்பாட்டு.

ஆடவரைக் கவர்வதன் பொருட்டு, உடலின் அகவெழிலைப் புறங்காட்டும் ஆடையுடுத்து நடைபயிலும் ஓர் அழகிக்கு, அவ்வெழிற் புனைவுகளால் மனக்கிளர்ச்சி யுறுவார், ஆண்மை குறைந்த ஆடவர்தாம் என்பதையும், ஆண்மைமிக்க ஆடவர் அவற்றிற் கருத்து வையார் என்பதையும், அத்தகைய ஆடவருள் ஒருவன் மனத்தைக் கவர்ந்திழுத்து அவன் அன்பைப் பெறவேண்டின், பெண்மைக்குகந்த நாணும், புரையில் நெஞ்சும், தவறற்ற நடையும், அச்சமும், குற்றமுமிலாத உரையும் ஆகிய பண்புகளே என்றும் அறிவு கொளுத்தினார் என்க.

***முற்றச் சிலம்பியின் நுண்ணிழை:*** மனையின் முற்றத்தே கட்டியிருக்கும் சிலந்தி வலையின் நுண்ணிய இழை. காட்டுச் சிலந்தியின் வலையின் இழையினும் வீட்டுச் சிலந்தியின் வலையிழை மெல்லியதாகையால் ***முற்றச் சிலந்தி*** எனக் கூறப்பெற்றது.

பஞ்சினின்று இழுக்கப் படுவதால் நூல், ***இழை*** எனப்பெற்றது.

சிலந்தியினதும் அதுவே.

*பெய்த* - இடைச்செருகிப் பின்னிய - நெய்த.

*அற்றங் காவா ஆடை* - மறைப்புறுப்புகளைக் காவாமல் வெளிப்படுத்தியவாறு நெய்த மெல்லிய ஆடை.

*போர்த்து* - மேலே போர்த்துக் கொண்டு. உடுத்தல் என்னாது போர்த்தல் என்றமையான், அவை உடுத்தியிருந்த முறைமை அறியப் பெறும்.

*மறுகிடை* - தெருவிடை, விளைவும், வீடுமின்றி இடைக்குறையாக இருத்தலின் தெரு, *மறுகு* எனப்பெற்றது.

*அசையும் மடக்கொடி யோயே* - அசைந்து செல்லும் இளங்கொடி போன்றவளே! *மடப்பம்* -இளமை. மடமை மிக்க கொடியவளே என்றும் சிறப்புப் பொருள் கொள்க.

*நாண்மிக வுடைத்தே நிற் பெண் தகையே* - நினக்குற்ற பெண் தகைமை பார்ப்போர்க்கு நாணத்தை உண்டாக்குகின்றது. பெண்மைக்கு நாணம் அணிகலன். அஃது அவளிடத்தில் இல்லாமையால் அவளைப் பார்ப்போர் நாணமுற வேண்டியிருக்கின்றது என்க.

*என்கொல் அறிகிலம் நின் உளக் கிடக்கை* - நின் தோற்றத்தைப் பார்க்குங்கால் நினக்குற்ற கருத்து யாதெனப் புலப்படவில்லை. உளக்கிடக்கை என்பது அடிமனத்தே புதைந்து கிடந்து எவர்க்கும் எளிதே புலப்படாத ஆசை என்க. கிடத்தல்-தோய்ந்து கிடத்தல்.

*இளம் பொன் மேனி எழில் காட்டுவையினே* - பருவப் பூரிப்பும் பொன்மையும் சான்ற அழகிய உறுப்புகளைக் காட்ட விழைவது நின் கருத்தாயின்.

அவளின் புறத்தோற்றம் காண்பவர் ஒருவேளை அவளுக்குற்ற வண்ணம் அதுவோ என ஐயறவேண்டியிருந்த தென்க.

*மைம்புகை யாடி* - கரிய புகை தோய்ந்த கண்ணாடிக்குமிழ்.

*ஒளிமழுக்கல் போல்* - விளக்கின் சுடரொளியை மழுக்கிக் காட்டுவது போல்.

கரிய புகை தோய்ந்த கண்ணாடிக்குமிழ், உள்ளிருக்கும் ஒளியை ஒருவாறு காட்டினாலும் தெளிவுறக் காட்டாமை போல், அவள் உள்ளுறுப்புகளின் எழிலை அவள் போர்த்தியுள்ள மெல்லாடை முற்றும் வெளிப்படுத்தாமற் போயினும் ஒருவாறு மழுக்கமுறக் காட்டிய தென்க. இங்கு உள்ளுறுப்புகளை முழுவதும் காட்ட வேண்டும் என்பது அவள் கருத்தாயின், அஃது அவள் அணிந்துள்ள உடையால் நிறைவுறவில்லை என்பது குறிக்கப்பெற்றது.

*ஆகலின் .... நன்றே* - ஆகையால் அவள் அவ்வுடையையும் கூட அகற்றிவிடுதல் நன்று என்று அவட்கு மானம் புலப்படச் சுட்டிச் சொல்லப் பெற்ற தென்க.

*ஈங்கிது* - இப்படிச் செய்வது. அஃதாவது அவ்வுடையை முற்றும் அகற்றுவது.

*பெண்மைக்கு இழுக்கு என்மையினே* - (அவ்வாறு செய்வது) பெண் தன்மைக்கே இழுக்காகும் என்று சொல்வாயானால்.

*யாங்கு நிற்கு உணர்த்துவன் அம்மே!* நீ கொண்ட தோற்றத்தால் பெற்ற இழிவை எவ்வாறு நினக்குப் புரியுமாறு உணர்த்துவது, அம்மே!

*தூங்கெழில்* - செறிந்த அழகு.

*ஏதென ... என்னின்* - எதுவென்று அறநூல் எழுதிய சான்றோர் எடுத்துக் கூறுவர் என்று கேட்பாயானால்.

*பூங்குழன் மாதர்க்கு* - பூவை மிடைந்த கூந்தலையுடைய மாதர்க்கு.

*பொருந்து நல்நாணும்* - பொருந்துகின்ற நல்ல நாணையும் அழகுவேண்டி எங்ஙன் கூந்தலுக்குப் பூவைச் சூட்டுகின்றனரோ அவ்வாறே பெண்மைக்கு அழகு வேண்டின் நாணத்தைச் சூட்டிக் கொள்ளுதல் வேண்டும் என்று குறிப்புணர்த்தியவாறு.

*விரையொளி ...... நெஞ்சும்* - மணமும் ஒளியும் பொருந்திய நெற்றியை உடைய பெண்டிர் தம் பெண்மைக்கு மணமும் ஒளியும் சேர்ப்பதாகிய குற்றமற்ற உள்ளத்தையும்.

*துவர்வாய் ...... நடையும்* - சிவந்து கனிபோலும் விளங்குகின்ற வாயையுடைய பெண்டிர்களுக்குத் தவறு சேராத ஒழுகலாறும், வாய், செம்மையாய் இருத்தல் போலவே நடையும் செம்மையாய் இருத்தல் வேண்டும் என்பதாம் என்க.

*அச்சக் கதவமும்* - பூரியர்க்கு அச்சமூட்டுகின்ற அல்லது தான் அஞ்சியொடுங்குகின்ற தன்மையும். இது பெண்மைக்கு காப்பாக அமைதலின் கதவம் எனலாயிற்று.

*எச்சமில் உரை* - குறையற்ற உரை, குற்றமற்ற சொல், இது பிறர் தம்மேல் சொல்லுதலும், தாம் பிறர்பால் உரைத்தலும் என இருவகைப் பொருளையும் தரும்.

*என்றிவை தாமே அன்றி* - இங்குக் கூறப்பெற்ற பண்பியல்புகள் மட்டுமே அல்லாமல்.

*பிறவே* - நீ உடுத்துக் கொண்டிருக்கும் மெல்லிய உடைகளோ, உறுப்புகளைப் பிறர் பார்த்து மனமயக்க முறும்படி வெளியில் காட்டுவது போன்ற பிறவகையில் செய்யும் புனைவுகளோ.

*வென்றி ஆடவர்* - வெற்றி பொருந்திய ஆடவர், ஆண்மை மிகுந்து விளங்குந் தன்மையர்.

*உளம் வீழ்த்தாவே* - உள்ளங்களை ஈர்த்து உன் அடிகளில் வீழ்த்த மாட்டா.

பெண்மைக் கிழிவான நின் செயல்களால் கவர்ச்சியுறுவோர் ஆண்மை நிறைந்தவர் ஆகார். நின் இழிந்த தோற்றத்தால் அவர்தம் ஆண்மையில் தோல்வியுற்று நிற்றலால் நீயே வென்றவளாகின்றனை. ஆனால் உண்மையான பெண்மையைச் சிலர் வெற்றி கொள்வதால், அவரே உண்மையான ஆண்மை மிக்கவராகவும் வென்றவராகவும் ஆகின்றார். எனவே அத்தகையோரே **வென் ஆடவர்** எனக் கூறத்தக்கவராவார்.

பெண் தனக்கியல்பாகிய நாணத்தையும் அச்சத்தையும் துறந்தவிடத்தும் ஆடவரில் சிலர் அல்லது பலர் அவளை விரும்புவராயினும், அத்தகையோர் நல்லாண்மை அற்றவர் என்றே சான்றோரால் கருதப் பெறுவர் என்க. அவ்விழிந்த மன நெகிழ்ச்சியுடையவர் அவளைத் தொடர்ந்து விரும்புவதற்கும் பேணுதற்கும் இயலாது, மேலும் மேலும் அத்தன்மை வாய்ந்த புதுப்புதுப் பெண்டிரையே விரும்பி நுகரத் தலைப்படுவர். ஆகையால் அவர் நிறைந்த ஆண்மை உடையவராகக் கருதப்படுவதிலர். என்னை? நிறையுடைமை கட்டழிந்து போயின் வல்லாண்மை பெறுவதெங்ஙன்? பிறன் மனை நோக்காத தன்மையே பேராண்மை - என்று கூறப்பெறுவதையும் காண்க.

உடல் உறுப்புகள் வெளிப்படுமாறு ஆடை உடுத்தும் பெண்மையின் இழிவுத் தன்மையை நீக்குமாறும், ஆடவரை அத்தன்மையால் கவர்தல் அவர்க்குத் கருத்தாதலின் அவ்வுறுப்புகளை வெளிக்குக்காட்டாவாறு மறைத்தலே மனவியல்படியும் அறவியல்படியும் பொருந்துவதாம் என்றும், அவ்வாறின்றி அகப்புறப் படுத்தும் ஆடை உடுப்பதால் விளையும் கவர்ச்சிக்கு நல்லாண்மை சான்றவர் மயங்கார் ஆதலின் அத்தன்மை வாய்ந்த பெண்டிர்க்கு ஆண்மைக்குறைவுடைய ஆடவரே துணைவர்களாய் வாய்த்துவிடுவர் என்றும், நாணமும், புரையிலா நெஞ்சும், தவறு சாரா வொழுங்கும் அச்சம் நிறைந்த காவலும், இழிவு தோயாத உரையுமே நிறைந்த பெண்மைக்குக் காப்பும் அழகும் என்றும், இத்தகைய நிறை பெண்மைக் குணங்களாலேயே ஆண்மைமிக்கவோர் ஆடவனைத் துணையாகத் தேர முடியும் என்றும், அவ்வாறு தேரும் பெண்ணும் தேரப் பெற்ற ஆணும் போன்றவர்களாலேயே இவ்வுலகம் நிறைந்த பயனெய்த முடியும் என்றும் அறிவுறுத்துவது இப் பாட்டாம் என்க.

*இது புறத் திணையும், முதுமொழிக்காஞ்சி என்னும் துறையுமாகும்.*



# 27 பெறும் பெற்றி

*நிலமுது கொருபுறம் நீடிய நிழலும்*
*பலகதி ரோடிய பகலும் போல*
*உளவோர் உண்மையும் இலவோர் இன்மையும்*
*அளவுவரைத் தன்றே! ஆயிரு மருங்கும்*
*நின்று நீளுதல் நீணிலத் தின்றே!*
*குன்றன்ன கொடிநிறுத்தித்*
*தின்றுய்யத் திருவாழினும்*
*ஒன்றிலார்க் கொன்றுவந் துதவல்*
*பின்றைத் தாம்பெறும் பெற்றியா மாறே!*

**பொழிப்பு:**

*நிலக்கோளத்தின் வளைந்த புறமுதுகின் ஒரு புறத்தே முன்னோக்கி நீண்டு கொண்டே போகின்ற நிழலாகிய இருளும், மற்றொரு புறத்தே பல்கோடிக் கதிர்க் கற்றைகளால் விளைந்து முன்னோக்கி ஓடிக் கொண்டிருக்கின்ற பகலொளியும் போல், இவ்வுலகின்கண் பொருள் உள்ளவரின் உளவாந் தன்மையும், அஃதில்லவரின் இலவாந் தன்மையும் எல்லை நிலைப்புடையன அல்ல. அவ்விருபுறத்தும் ஒரு பொழுதில் நின்ற நிலையே தொடர்ந்து நீடிக்கப் பெறுதல் இவ்வகன்ற நிலத்தின்கண் யாண்டும் இல்லை. குன்றின் உயர்ச்சியளவாகத் தம் இலச்சினைக் கொடியை நிறுத்தி, அதன் பரும அளவாகத் தாமும் தம் பிறங்கடையரும் தின்று உய்யும்படி தமக்குச் செல்வவளம் வாய்ந்திருப்பினும், அந்நிலைகளில் ஒன்றுதானும் அடைந்திலார்க்கு வேண்டுவதாகிய ஒரு பொருளைத் தம் உள்ளம் உவக்குமாறு உதவுதலே, தமக்குப் பொருந்திய வளம் குன்றிய காலத்துத் தாம் துய்ப்பதற்குரிய வாய்ப்பு உருவாகும் வழியாம்!*

**விரிப்பு:**

*இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.*

*உலக வுருண்டையைச் சுற்றிச் சுழல்கின்ற இரவும் பகலும் போல் மக்கட்கு வந்து வாய்க்கும் செல்வ நிலையும் வறுமை நிலையும் வரையறுக்கப் பட்டன வல்ல. இரு நிலைகளும் ஒரு நிலையிலேயே நிற்றல் மாறாச் சுழற்சியுடைய நிலத்தின்கண் யாண்டும் நடை பெறுதல் இல்லை. குன்றுபோல் குவிந்த செல்வம் உடையவரும் பிற்காலத்து அதைத் தவறாது*

துய்த்தல் அரிது; அவ்வாறு துய்க்கும் வழி அந்நிலை ஏதும் இல்லாதவர்க் உளம் மகிழ்வடையும்படி கொடுத்து உதவுதலே ஆகும்,என்று உலக வியற்கையை உணர்த்திக் கூறியதாகும் இப் பாட்டு.

செல்வம் நிலைப்படாதது; சுழற்சியுடையது. அஃது ஓரிடத்தே வந்து சேருங்கால் மனவெழுச்சி யுண்டாதலும், பிரிந்து செல்லுங்கால் மனவழற்சி ஏற்படுதலும் மாந்தநிலையில் இயல்பாந் தன்மைகளே. ஆனால் இவ்விரு நிலைகளினும் வேறுபாடு காணாத மெய்யறிவினார், அவற்றை ஒன்று போலவே கருதுவர். கருதித் தமக்குச் செல்வம் வந்துற்றுழி அதன் பயனை எல்லார்க்குந் துய்ப்பக் கொடுப்பர். அவ்வறிவில்லாதார் அவ்வாறு கொடாது, அதன் முழுப்பயனையும் தாமே துய்க்கக் கருதுவர். ஆனால் அவர் துய்ப்பதற் குள் அச்செல்வம் அவரைத் துறந்து பிறிதோரிடம் சேரும். இந்நிலையில் அச்செல்வத்தின் பயனை இவரும் பெறாது, இவரைச் சேர்ந்தவரும் பெறவிடாது நிற்பர். எனவே உலகவியல்புக்கு மாறாகிய இந்நிலையை அனைவரும் கடைப்பிடியாது தவிர்க்க வேண்டும் என்பதை வலியுறுத்தியும், தாம் பெற்ற விடத்துச் செல்வத்தைப் பிறர்க்கும் பகிர்ந்துவுதலே அச்செல் வத்தைக் துய்க்கும் வழி யென்பதை அறிவுறுத்தியும் கூறப் பெற்றது என்க.

என்னை, பெற்றவிடத்துப் பிறர்க்குப் பகிர்ந்து உதவுதல் அச்செல்வத்தின் பயனை முழுவதும் துய்ப்பதாகுமோ என்பார்க்கு. அவ்வாறு முன்னர்ப் பகிர்ந்து கொடுத்த உதவியைப் பெற்றாரும், பின்னர்த் தாம் செல்வத்தைப் பெறுங்கால் தாம் பெற்ற அளவாகினும் திருப்பிக் கொடுக்கக் கடவர். ஆகலின், முன்னர்க் கொடுத்த செல்வம் ஓரிடத்துக் காக்கப் பெற்றுத் தக்கவிடத்து நமக்குத் திரும்புதல்போல் ஆவதால், அந்நிலை அச்செல்வத்தை முழுதும் துய்த்ததாகாதோ என்க. இனி, முன்னர்ப் பெற்றார், தாம் பெற்ற அளவினும், தம் நன்றி புலப்படக் கூடுதலாகக் கொடுப்பதும் நிகழ்வதாகையால், அந்நிலையில் நம் சிறிய செல்வம் பேரளவில் பயன் நல்குதலும் கருதத் தக்கதாம் என்க.

அவ்வாறின்றி, நாம் ஒரு நிலையில் பெற்ற செல்வத்தை ஒருவர்க்கும் கொடாது நாமே துய்க்க விரும்பிக் காத்து வைத்தல், இல்லாத பிறர் அதனைக் கவர இடந்தருவதும், இருக்குங் காலத்து நாம் கொடாததால், நாம் அதனை இழந்து துன்புறுங் காலத்துப் பிறரும் நமக்குக் கொடுக்க விரும்பாததும், செல்வத்தை எவ்வாற்றானும் நுகராத நிலைகளாம் என்க. எனவே பெற்ற செல்வத்தைத் துய்க்கும் சிறந்த வழி அதனைப் பலர்க்கும் பகிர்ந்து உதவுதலே என்று உறுதியாகக் கடைபிடிக்க என்பதாம்.

*நிலமுதுகு* - நிலக் கோளத்தின் வளைந்த புறமேடு. நீரோ ஒளியோ ஓடுதற்குத் தட்டையினும் உருண்டு வளைந்த நிலையே சமவோட்டந் தருமாகலின். ஓடுகிற நிழலைக் குறிக்கு மிடத்து, வளைந்த நிலத்தையும் கருதவேண்டி யிருந்ததென்க.

*ஒருபுறம்* - ஒரு பாதி.

*நீடிய நிழல்* - நீண்டு கொண்டே போகும் நிழலாகிய இருள். ஒரு பொருளோடு இணைந்து நிற்பதாகிய இருள் நிழல். நில் + அல்-நிலல்-நிழல். நிற்றலாகிய இருள். அல்-இருள்.

*பலகதிர் ஓடிய பகல்* - பல கதிர்க்கற்றைகள் செறிந்து ஓடிக் கொண்டிருக்கும் பகல்-வெயில். திசை மாறாது நேராக ஓடுவதால் கதிர் எனப்பெற்றது. கதி-நேர்திசை-செல்திசை; கதிர் நேர் நோக்கிச் செல்வது. நெல், கம்பு. தினை முதலியவற்றின் மணிப்பூட்டைகளும் தாளினின்று குத்திட்ட நேராக எழுவதால் கதிர் எனப் பெயர் பெறுவதாயிற்று. பகல்(பகு + அல்) - இருளைப் பகிர்வது. - பிரிப்பது. - வேறுபடுத்துவது.;

*உளவோர் உண்மை* - (செல்வம்) உள்ளவர்கள் உளதாம் தன்மை.

*இலவோர் இன்மை* - அஃதில்லாதவர்களின் இலதாம் தன்மை.

*அளவு வரைத்து அன்று* - அளவான் வரையறுக்கப்பட்டன அல்ல. உண்மையும் இன்மையும் — வரைத்தன்று. என்றது. பன்மை ஒருமை மயக்கம்.

நிழலும் பகலும் போல் உண்மையும் இன்மையும் என்னுமிடத்து நிரல் நிறை மாறி யுரைத்தது அவற்றின் மாறுபடும் தன்மையைப் புலப்படுத்துதல் வேண்டி என்க.

*நின்று நீளுதல்* - நிலைபெற்று நீட்சியுறுதல்.

*நீணிலம்* - நீண்ட நிலம். பரந்த உலகம்.

*குன்றன்ன ........ வாழினும்* - குன்றின் உயர்ச்சி போன்ற கொடியும், அதன் திரட்சி போன்ற செல்வமும் பெற்று வாழினும்.

கொடி நிறுத்தி என்றது குன்றுபோலும் செல்வத்தைத் துய்ப்பதற் குரிய உரிமை பெறுவதைக் காட்டியது. கொடி உரிமை இலச்சினை.

*ஒன்றிலார்க்கு* - ஒன்றும் வாய்க்கப் பெறாதவர்க்கு.

*ஒன்று உவந்து உதவல்* - அவர்க்குத் தேவைப்படும் ஒன்றினை உள்ள நிறைவோடு கொடுத்து உதவுதல்.

*பின்றைத் தாம்பெறும் பெற்றி* - தம் செல்வம் குறைவுபடும் பிற்காலத்துத் தாம் துய்ப்பதற்குரிய வாய்ப்பைப் பெறும் தன்மை.

தாம் ஒன்றை ஈந்தாலன்றித் தமக்குப் பிறர் கொடுப்பதிலர் ஆகலின், தாம் பின்னர்ப் பெறும் பெற்றி முன்னர்த் தாம் ஒன்றை ஒருவர்க்குக் கொடுப்பதே என்க.

இது, *பொதுவியலென்* திணையும், *பொருண் மொழிக் காஞ்சி* என் துறையுமாகும்.

# 28 செம்பொன் மாணிழை

*செம்பொன் மாணிழை விம்மத் தாங்கி*
*மும்முறை வணங்கி யெழுந்தனை யன்றே!*
*அற்றை நன்னாள் நினைவுகொளக் கூர்மதி!*
*ஒற்றைத் தனியை அல்லை;நின் அழுங்கல்*
*கொளல்சிறிது மின்றிநின் இளமகன், கொழுஞ்சுவை*
*வழுக்கை யுறிஞ்சிய முக்கட் கூந்தை*
*கழைநுதி பொருத்தி யுருள்கொடு வலந்தர*
*நீநின் செவித்துளை தாழக் குழைவாங்கி*
*நெய்சுவறிக் குழல்பறம்ப*
*மெய்பசந்து களையிழப்ப*
*உகுநீர் விழியோ டுள்ளங் கவலுதல்*
*தகுவதில் அம்ம! நின்கடை வாயில்*
*புகுவது முண்டே, அவட்புளித்த ஞான்றே!*

பொழிப்பு:

*செவ்விய பொன்னால் செய்யப் பெற்றதும் பெருமை மிக்கதும் ஆகிய அணியை, நின் உள்ளம் பெருமிதத்தால் விம்மும்படி உன் தலைதாழத் தாங்கி, அவனையும் அவன் பெற்றோரையும் நின் பெற்றோரையும் முறையாக அடிதொட்டு வணங்கி எழுந்தனை அல்லையோ? அந்த மன்றல் நன்னாளை நினைவிற் கொள்வாயாக. இன்று நீ ஒன்றியாய் விடப்பட்ட தனியை அல்லை; நின்னுடை வருத்தத்தைச் சிறிதும் உணர்ந்து கொள்ளலின்றி, நின் இளமகன், கொழுவிய நுங்கின் வழுக்கையை யுறிஞ்சி அம் மூன்று கண்களையுடைய பனங்காயை மூங்கிலின் நுனியில் பொருத்திக் கொண்டு, நின் வாயிலை வலம் வருகின்றான். நீயோ, செவியின் துளை தாழும்படி அதன் குழைகளைக் களைந்து நீக்கி , நெய் சுவறிக் காய்ந்த நின் கூந்தல் காற்றில் பறந்து அலையுமாறு, மேனி பசப்புறக் களையிழந்து உகுக்கின்ற நீரையுடைய விழியோடு உள்ளங் கவலுறுதல் தக்கதில்லை அம்ம. அப்பரத்தை வாயிற்பட்ட நின் தலைவன் இனித்துக் கிடக்கும் அவள் தொடர்பு புளித்துப் போகும் பொழுதில் நின் இற்புற வாயில் வழிப்புகுந்து நின்னைப் போற்றுங் காலம் வரும்; அதுவரை அமைந்திருப்பாயாகுக.*

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தன்னை மணந்த கணவன் பரத்தை ஒருத்தியை நாடி நின்றதால் களையிழந்த ஒருத்தியை, அவன் வரவு விரைவில் வருமென்று தேற்றி யும், அதுவரை அமைந்திருக்க வேண்டி ஆற்றியதாகும் இப்பாட்டு.

இல்லற வொழுக்கம் திசைந்து மாறிய ஒருவன், தான் விரும்பிய பரத்தையின் தொடர்பு இனியதன்று; இன்னாதது என்று தானே அறியும் வரை அவனைத் திசை திருப்புதல் யாவர்க்கும் இயலாத தொன்றாகலினாலும், அவ்வாறு அவன் அறிந்து கொள்ளுதலும் விரைந்து நடைபெறும் ஆகலினாலும், 'நீ வருந்தற்க; நின் அமைவே சிறந்தது' எனத் தலைவியைத் தோழி ஒருத்தி தேற்றி அவள் துயரை ஆற்றினாள் என்க.

'மணந்து கொண்டவள் நீயே! நின் பெற்றோரும் அவன் பெற்றோரும் அவனும் மகிழுமாறு ஒப்பி ஏற்றுக் கொள்ளப் பெற்றவள் நீயே! நீ இல்லற வாழ்க்கைக்குத் தக்கவள் என்பதை நினக்குற்ற மகப் பேற்றால் மெய்ப்பித்தனை. இந்நிலையில் அவன் நின்னைத் துறந்து பிறளொருத்தியை நாடுதல் அறமுமன்று; பண்புமன்று. ஆயினும் புறமயக்கம் ஒன்றே கருதி அவனை நாடிய அவன் உள்ளம் விரைவில் அவளின் கைப்புச் சுவையை உணர்வது கட்டாயம் நிகழும்; அதுவரை நீ ஆற்றியிரு' - என்று தோழி அறிவுறுத்தினாள் என்க.

*செம்பொன் மாணிழை* – செவ்விய பொன்னால் ஆகிய பெருமை மிக்க அணி. மாண் இழை - இழைத்துச் செய்தலால் அணி இழை எனப் பெற்றது.

பெண் ஒருத்தி அணிகின்ற அணிகள் யாவற்றிலும் அவள் மணவினைப் போதணியும் மங்கல அணியே அவளுக்குப் பெருமை தரும் அணியாகலின் அது *மாணிழை* எனப் பெற்றது.

இதனை முற்சுட்டிக் கூறியது 'நினக்கே அவன் உரியன்' என்பதை நினைவு கூர்தற்கென்க.

*விம்மத் தாங்கி* – நின் உள்ளம் பெருமிதத்தால் விம்மும் படி, நீ அதைக் குனிந்து ஏற்று.

அன்று நின் மங்கல வணியை இன்பத்தால் நெஞ்சு விம்மும்படி தாங்கிக் கொண்டனை. இன்றோ நீ துன்பத்தால் நெஞ்சு விம்மிப் பொருமும் படி துயரத்தை தாங்கிக் கொள் என்றபடி.

*மும்முறை வணங்கி எழுந்தனை அன்றே!* - அவனையும் அவனைப் பெற்றாரையும், நின்னைப் பெற்றாரையும் அந்த மணநாளில் நீ வணங்கி எழுந்தனை அல்லையோ!

'நீயும், அவன் தனியொருவன் இக்கால் விரும்பியவள் போல் வெறும் புறமயக்கிற் குற்றவள் அல்லள். அவனாலும் அவன் பெற்றோராலும், நின் பெற்றோராலும் எற்றுக் கொள்ளப் பெற்றவள்; அத்தகைய பெருமையுற்றது நின் மனம். எனவே அவன் புறவொழுக்கத்தை அவன் பெற்றோரா நின் பெற்றோரா ஏற்றுக் கொள்ளார். ஆகவே நீயே அவனுக்கு நிலையானவள். அதனால் ஆற்றியிரு' - என்று தோழி தேற்றுவாள்.

***அற்றை நன்னாள் நினைவு கொளக் கூர்மதி*** - மணவினை நிகழ்ந்த அந்த இனிய நல்ல நாளை நினைவு கொண்டு ஆற்றியிருப்பாயாக.

'அவன் நின்னைப்பிரிந்து புறத்தே ஒழுகிய துன்பந்தரும் இக்கொடிய நாட்களை நினைவு கூராதே! நின்னொடு அவன் வந்து பொருந்திய அந்த நல்ல நாளை நினைத்திடு. அதுதான் நீ என்றும் நினைவில் வைத்திருக்க வேண்டிய இனிய நாளாம். அது தான் அவன்பால் நினக்குள்ள உரிமையினையும் வலிந்த பிணைப்பினையும் உறுதிபடுத்திக் கொள்ளும் நாளாகும். எனவே அதனை 'நினை'. என்றாள் என்க.

***ஒற்றைத் தனியை அல்லை*** - நீ தனியொருத்தி அல்லை. நீ தனித்திருக்கின்றாய் என்று கருதிக் கொள்ளாதே. அவன் நின் பால் தொடர்பு கொண்டிருந்த பயனால் ஓர் இளமகன் நினக்குத் துணையாக உள்ளதை மறவாதே!

***நின் அழுங்கல் கொளல் சிறிது மின்றி*** - நின் துயரத்தை ஒரு சிறிதும் கொள்ளுதல் இல்லாமல்.

'நீ நின் கணவன் பிரிவால் துன்பப்படுதல் போல், அவன் தன் தந்தையின் பிரிவால் துன்புறுதல் சிறிதும் இன்றி, நின் துணையால் அவன் மகிழ்ந்திருத்தல் போல், அவனது துணையால் நீ மகிழ்ந்திரு' என்று அவன் மகனைக் காட்டி ஆற்றினாள் என்க.

***கொழுஞ்சுவை வழுக்கை யுறிஞ்சிய முக்கட் கூந்தை*** - கொழுவிய சுவையை உடையதும், வழுக்கை போல்வது மாகிய நுங்கையுறிஞ்சி யெடுத்த மூன்று கண்களையுடைய பனங்காயை.

***கழைநுதி பொருத்தி*** - மூங்கிற் கழையின் நுனியிலே பொருத்தியவாறு.

***உருள் கொடு வலம் தர*** - உருட்டிக் கொண்டு சுற்றி வர.

'***நீ நின் கணவனைப் பிரிகிலை*** - அவனே நின்னை விட்டுப் பிரிந்தான்; அதுவும் பரத்தை ஒருத்தியின் தொடர்பு கொண்டு பிரிந்தான். எனவே நீ வருந்துவதற்கு என்ன பொருட்டு இருக்கின்றது ? வருந்தாதே! இதோ பார் நின் இளமகனை! அவனை விட்டுப் பிரிந்த அவன் தந்தையைப் பற்றிக் கவலுறாது, அவனை விட்டு நீங்காத நின்னால் மகிழ்ந்து, கொழுவிய சுவையையுடைய நுங்கை உறிஞ்சிவிட்டுப் பிறர் எறிந்த பனங்காயை ஒரு

கழியின் நுனியிலே பொருத்தியவாறு, அதனை உருட்டிக் கொண்டு சுற்றி வந்து விளையாடுகின்றான். அவன் உன் வருத்தத்தைக் கூடப் பொருட்படுத்தினான் இல்லை! அவன்போல் நீயும் மகிழ்ச்சியாக நின் இல்லறப் பணிகளில் ஈடுபடு; கவலையை மறந்திரு. அவன் வருவான்' என்று தோழி தலைவியைத் தேற்றினாள் என்க.

இனி, தலைவியின் துயரத்தை மாற்றுதற்கு, அவள் கணவன் ஒழுகும் பரத்தை யொழுக்கத்தின் தன்மையை உள்ளுறையாக வைத்துக் கூறுவாள், அவள் மகன் விளையாடும் பனங்காய் வண்டியையே ஓர் உவமமாகக் கூறினாள் என்க.

"இதோ! பார்; நின்மகன் ஒட்டித்திரியும் இப் பனங்காய் வண்டியை! கொழுவிய சுவையையுடைய நுங்கின் வழுக்கையைப் பிறர் உறிஞ்சிவிட்டுத் தெருவில் விட்டெறிந்த இவ்வெற்றுக் கூந்தையை அவன் கழியின் நுனியில் பொருத்திக் கொண்டு, நின் துயரத்தைப் பொருட்படுத்தாது விளையாடுவது போல், கொழுவிய உள்ளீடு நிறைந்த பெண்மையைப் பிறர் முன்னரே உறிஞ்சிவிட்டுப் புறம் வீசிய அப்பரத்தை உடலின் புறத்தோற்றத்தில் மயங்கி, அவள் பிரிவால் நீ வருந்துகின்றதையும் பொருட்படுத்தாது, அவளொடு சிறுபிள்ளை போல் ஆடிக்களிக்கின்றான், நின் கணவன்; அவனுக்கும் அப்பரத்தைக்கும் உள்ள தொடர்பு, இச் சிறுவனுக்கும் அவன் ஒட்டித் திரியும் இவ்வெற்றுப் பனங்காய்க்கும் உள்ள தொடர்பு போன்றது. அவளொடு அவன் கொண்டிருக்கும் ஈடுபாடு, இச் சிறுவன் கையிலுள்ள மூங்கிற் கழியொடு பொருத்தப் பெற்ற அப் பனங்காயின் இணைப்புப் போல்வது. அம் மூங்கிற்கழி முறிந்து போகுங்கால் இச் சிறுவன் அப் பனங்காயை மீண்டுந் தெருவிலேயே விட்டெறிந்து விட்டு நின்பால் வருவது போல், அப் பரத்தையை இணைத்துத் திரிய உதவுவதாகிய நின் கணவனின் கைப்பொருள் முறிவுறுங்கால், அவளை மீண்டும் அங்கே வீசி விட்டு நின்னை நோக்கி வருவது உறுதி. அதுவரை அமைந்திரு" என்றாள் என்க.

"வெற்றுப் பனங்காய் பொருத்தப் பெற்றிருப்பது மூங்கிற் கழியின் நுனியிற்றானே யன்றிக் கழியின் இடையில் அன்று. நுனியில் பொருத்தப் பெற்ற பனங்காயை விடுவிப்பது அவ்வளவு கடினமன்று. எனவே அவளொடு அவன் கொண்ட தொடர்பும் அவ்வளவு ஆழமானதன்று. ஒரு நுனியின் அளவே' - என்றாள்.

மேலும், கழி முறிவுறுங்கால், பனங்காய் தானே கழன்று கொள்வது போல், நின் கணவரின் கைப்பொருள் முறிவுறுங்கால் பரத்தையும் தானே கழன்று கொள்வாள்' என்று குறிப்பும் காட்டினாள் என்க.

'பனங்காய் கழலும் பொழுது தானே தூக்கி வீசிவிட்டு நின்னைத் தேடி வரும் நின் இளமகன் போல, பரத்தை இவன் தொடர்பினின்று கைநெகிழ்க்கும் பொழுதில் நின்னைத்தேடி நின் கணவனும் வருதல் உறுதி

- என்றும் கூறினாள் என்க.

பெண்மை நலனுக்குக் கொழுவிய நுங்கும், பரத்தைக்கு அஃது உறிஞ்சியெடுக்கப் பெற்ற வெற்றுப் பனங்காயும், அவளொடு தொடர்பு கொள்ளுதல் முத்தொளைகளை உடையதும், பனங்காயைப் போன்றதும்ஆகிய ஒரு மண்டையோட்டோடு தொடர்பு கொள்ளுதல் போல்வதே என்பதும், அந்நிலையில் அவள் பார்வைக்கும் பேச்சுக்கும் பொருளில்லை என்பதும் குறிப்பால் உணரத்தக்கன.

*நீ, நின் செவித்துளை தாழக் குழை வாங்கி* - நீ, நின் செவித் துளைகள் தாழும்படி அதில் இட்ட குழைகளைக் கழற்றி நீக்கி.

செவியில் அனியப் பெற்றிருக்கும் ஒருவகை அணியாகிய குழைகளை நீக்குதலால் அதன் துளைகள் தாழ்ந்திருக்கின்றன.

இனி, தன்னைப் பிரிந்த பரத்திமையொழுக்கம் மேற்கொண்ட கணவனைப் பற்றிப் பிறர் தூற்றும் உரைகளை வணங்கிக் கேட்டுக் கொண்டாள் எனற்குச் *'செவித்துளை தாழ'* என்றும் அதற்குத் தடையாக உள்ள குழைகளை நீக்கினாள் எனவே *'குழை வாங்கி'* எனவும் பொருள் கொள்ளலாம்.

*நெய்சுவறிக் குழல்பறம்ப* - இட்ட நெய் காய்ந்து போய், இடா நெய்யால் கூந்தல் பறந்து சிதர்ந்தது.

*மெய் பசந்து களை யிழப்ப* - கணவற் பிரிவாலும் துயராலும் மேனி பசந்து களை யிழந்தது.

*உகுநீர் விழியோடு உள்ளங் கவலுதல்* - எப்பொழுதும் உகுக்கின்ற நீர் சுரக்கும் விழியினளாகி உள்ளத்தே அழுங்குதல்.

புறத்தே அழுங்குதல் போலிமை ஆகலின் உள்ளத்தே அழுங்கினாள் என்றதும், அவ்வழுங்கலை உகுநீர் விழி உறுதிப்படுத்தியது என்றதும் கவனிக்க.

*தகுவதில் அம்ம!* - தக்கத்தில்லை அம்ம!

'கணவன் வேறு வகையில் பிரிவுற்றான் எனின் நீ வருந்துதல் தக்கதாகும். அவன் தீயொழுக்கத்தால் பிரிந்திருப்பதற்கு நீ வருந்துவது தக்கதில்லை. அவன் வருந்துவதே தக்கது' என்றாள்.

*நின் கடைவாயில் புகுவதும் உண்டே, அவள் புளித்த ஞான்றே!* - புறத்தோற்றத்தால் இனித்துள்ள அவள் தொடர்பு விரைவில் அகத்தோற்றம் புலப்பாலல் அவனுக்குப் புளித்துப் போதல் உறுதி. அக்கால் அவன் நின் புறக்கடை வாயிலில் வந்து புகுவான் என்றபடி.

'மிக்க இனிப்பான பொருள் விரைவில் புளித்துப் போவது உறுதி. நினக்கு ஒரு மகன் பிறந்தவுடன் நின் உடல் அவனுக்கு இனிப்பற்றதாகியது. எனவே உடல் இனிப்பு நாடி அவன் தீயொழுக்கம் மேற் கொண்டான். இனி, அவளுடைய உடல் இனிப்பதாயினும் அவள் உள்ளம் புளிப்பதாகலின் அந்நிலை உணர்ந்து அவன் விரைவில் திரும்புவான். அக்கால் நீ வரவேற்காமலேயே அவன் நின் கடைவாயிலில் ஒரு திருடனைப் போல் புகுவான். நீ கவலற்க' என்றாள் என்க.

தீ யொழுக்க முற்றவனாகலின் முன்வாயில் வழி வாராது கடை வாயில் வழிப் புகுவான் என்றாள்.

இனி, 'புகுவான்' என்றதால் 'நீ வரவேற்க வேண்டியதில்லை' என்றாள் என்க.

இனி, 'மும்முறை வணங்கி யெழுந்தனை யன்றே' என்று முற் கூறியதால், அவனும் தன் தீயொழுக்கத்திற்கு வருந்தி, நாணுற்று, தன்னைப் பொறுத்தல் வேண்டி நின்பாலும், நின் பெற்றோர் பாலும் அவன் பெற்றோர் பாலும் வணங்கி எழுவான் என்றும் குறிப்புப் பொருள் புணர்த்திக் கொள்க.

ஒரு தோழமையின் கடமை, தன் அன்புக்குரியார் துன்புற்ற விடத்து அவரை அன்பால் அணுகி, அறிவால் தேற்றி, நேர்ந்த நிகழ்ச்சியை உலகியலறிவால் தேர்ந்து விளக்கி, அவர் துயரை மாற்றுவதே யாகலின் ஈண்டு தலைவிக்குற்ற மெய்த்தோழியும் அவளின் அகப்புறத் துயரை அணுகி ஆய்ந்து அத்துயர் விரைவில் மாறுவதே என்று ஓர் இறைச்சிப் பொருள் நிறை உவமத்தால் எடுத்து விளக்கியும், அவட்குத் துயர் விளைவித்தவர் நாணும்படி அவள் பெருமையுறுவது உறுதி என்று கூறியும் தேற்றினாள் என்பதையுணர்த்துவதாகும் இப்பாடல்.

இது, **பாலை** பெண் திணையும், **தலைமகன் பரத்தை வயப்பட்ட** ஆயிடைப் பிரிவின் கண், தலைமகள் கவன்று கையறத் தோழி தேற்றியது என் துறையுமாம்.



## 29 பனங்கனிப் பறட்டைப் பையல்

*கூழினும் புளித்தோ உப்பினும் உவர்த்தோ*
*காழ்த்த சுள்ளிக் காயினுங் கார்த்தோ*
*கரும்புகை முருட்டின் மழைநீ ரொழுக*
*இருட்படை புகுந்தநம் இல்லினும் மைத்தோ*
*பனங்கனிப் பறட்டைப் பையல் சிணுங்க*
*நனைவிழி கலுழும் மனைநின் மேனி*
*வறளினுந் தேய்வினும் பாழ்த்தோ*
*மறலியின் குறிக்கை மாட்டுநற் சாவே!*

**பொழிப்பு:**

நாம் அருந்தும் கூழை விடப் புளித்ததோ? அதற்கிடும் உப்பை விட உவர்த்ததோ? அக்கூழை யருந்துகையில் நாம் இடையிடையே கடித்துக் கொள்ளும் விதைமுற்றிய மிளகாயினும் கார்ப்பு உடையதோ? பச்சைச் சுள்ளிகளையும் காட்டுச் சருகுகளையும் போட்டுக் கொளுத்துதலால் எழுகின்ற கரும் புகைசூழ்ந்து கருமையேறியதும், முருடு நிறைந்ததும், மழை நீர் ஒழுக்கு உடையதும், இருள் தன் படையுடன் வந்து புகுந்து கொண்டதுமாகிய நம் வீட்டை விடக் கருமை நிறைந்ததோ? பனம்பழத்தினைச் சூப்பியெறிந்தது போலும், பறட்டைத் தலையுடன் விளங்கும் நம் பையன் பசிக்காக நின்பால் சிணுங்கியழ, நனைந்த விழிகள் வடிக்கின்ற நீரையுடைய மனைவியே! நின் மேனியின் வறட்சியையும் தேய்வையும் விடக் கொடுமையானதோ, உயிரைப் பிரிக்கும் கொடியவனின் குறி தப்பாத கை நம்மைப் பற்றியிழுக்கின்ற சாவு?

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

வறுமையால் துன்புற்ற ஒருவன் தன் மனைவியிடம் தம்மை வருத்துகின்ற துயரங்களைவிட உயிரை உடலினின்று பிரிக்கின்ற சாவு கொடுமையானதன்று என வெம்பிக் கூறியதாகும் இப்பாட்டு.

'நாம் அருந்துகின்ற கூழோ மிகப் பழையது; கடுமையான புளிப்பு வாய்ந்தது. அதனை விடவோ சாவு புளிப்புடையதாகவிருக்கும்? இருக்கவே இருக்காது' என்றும்;

'கூழ் சிறிதாயினும் உப்புச்சுவை தவிர வேறு சுவை அதற்கு ஊட்டப் பெறாமல் அருந்துவதால், அதன் உவர்ப்பு மிகுந்திருப்பது போல் உள்ளதே, அதனினும் சாவு உவர்ப்புடையதாக இருக்குமோ? இருக்கவே இருக்காது' என்றும்;

'கூழுக்காக நாம் கடித்துக் கொள்ளுகின்ற முற்றிய விதைகளையுடைய மிளகாயின் காரச்சுவையை விடவா அது கடுமை நிறைந்ததாக இருந்து விடும்? இருக்கவே இருக்காது' என்றும்;

நெடுங்காலமாய் நாம் அவ்வப்பொழுது கூழைக் காய்ச்சுவதற்கென்று போட்டு எரிக்கின்ற பச்சைச் சுள்ளிகளாலும், காட்டுச் சருகுகளாலும் அடர்த்து எழுகின்ற கரிய புகை முருடு முருடான சுவரிலும் தரையிலும் தோய்தலாலும், அவற்றின் மேல் மழை நீர் ஒழுகி யிறுகியதாலும், இருளே தன் படையுடன் புகுந்து கிடப்பதைப் போல் உள்ள நம் குடிலை விட நமக்கு வந்து வாய்க்கும் சாவு கருமை நிறைந்ததாக விருக்குமோ ? இருக்கவே இருக்காது ' என்றும்;

'பனம்பழத்தைச் சுட்டுச் சூப்பியெறிந்த கொட்டையைப் போல் பிசுக்குற்றும் பறந்தும் வெளிறியும் உள்ள தலையையுடைய நம் பையன் பசிக்காக நின்பால் மெல்லிய அரற்றலுடன் ஒட்டிக் கிடக்க, நனைந்த விழிகளினின்று சுழல்கின்ற நீரையுடைய மனைவியே, நின் மேனியின் வறட்சியையும் தேய்வையும் விடக் கொடுமையானதாக இருக்குமோ, நம்மை வந்தணையவிருக்கும் சாவு? இருக்கவே இருக்காது' என்றும்;

தலைவன் ஒருவன் வறுமையின் கொடுமையைத் தாளாது கசிந்து கூறினான் என்க.

***கூழினும் புளித்தோ*** - நாம்அருந்தும் கூழைவிடப் புளிக்குமோ? குழைதலால் கூழ் எனப்பெற்றது. தொடக்கத்தில் குழைய வைத்து கூழ் வகைகளையே உணவாகக் கொண்டமையால் கூழ் எனும் சொல் உணவு என்னும் பொருள் பெற்ற தென்க. கூழ் பழையதாக ஆக மிகவும் புளிக்குமாகையால் பழைய கூழையே சிறிது சிறிதாகத் தொடர்ந்து அருந்தி வருவது அறியப் பெறுகிறது என்க.

***உப்பினும் உவர்த்தோ*** - உப்பைவிட உவர்ப்புச் சுவையுடையதோ ?

'உப்பை விட உவர்ப்பது ஒன்றில்லை யாதலால் அதையே சுவைத்துக் கொண்டிருக்கும் நமக்கு அச்சுவை மிகவும் பழகிப் போய்விட்டது. சாவு அதை விடவா உவர்க்கும்?' என்று வினவினான் என்க.

கூழ் சிறிதாக விருப்பதால் உப்பின் உவர்ப்பை அவர்கள் மிகுதியாகச் சுவைக்க வேண்டியிருந்ததென்க.

***காழ்த்த சுள்ளிக்காய்*** - நன்கு முற்றிய மிளகாய்.

*கார்த்தோ* - கார்ப்பு உடையதோ.

*கரும்புகை ...... ஒழுக* - கரிய புகை சூழ்ந்து கருத்துள்ள சுவர் முருடுகளில் மழை நீர் ஒழுகியிருக்க

சுவர்களும் தரையும் ஒழுங்கற்று முருடு முருடாக இருக்கின்றன. அம்முருடுகள் கரிய புகைகள் சூழ்தலால் கருமையேறியிருக்கின்றன. அவற்றின்மேல் மழை நீர் ஒழுகி அக்கருமையை நனைத்து மேலும் கருமையுடையதாகத் தோன்றுகின்றது. இந்நிலையில் இருள்வேறு தன் படையுடன் வந்து அக்குடிலுட் புகுந்துள்ளதென்க.

*இருட்படை புகுந்த நம் இல்லினும் மைத்தோ* - 'இருள் தன் படையுடன் குடி புகுந்த நம் இல்லத்தைவிட, நமக்கு வந்து வாய்க்கும் சாவு இருண்மை உடையதோ? என்றான் என்க.

புகையால் கருமை நிறமேறிய சுவர்களில் ஒளி பாய்ந்தாலும் ஒளிர வழியில்லை. சுவர் முருடுகளின்றி யிருந்தாலோ ஒருவாறு ஒளி பாய வழியுண்டு. அதுவோ மேடும் பள்ளமுமாய் முருடுகள் நிறைந்துள்ளது. எனவே இருள் தவிர ஒளி சூழ்வதற்கு வழியே இல்லை என்க.

*பனங்கனிப் பறட்டைப் பையல்* - பனம்பழத்தினைச் சூப்பியெறிந்தது போல் பிசுக்கும், வெளுப்பும், பறக்கையுமுடைய தலையைக் கொண்ட பையன்.

*சிணுங்குதல்* - மெலிதாக ஆனால் தொடர்ந்து அரற்றி யழுதல்.

*நனைவிழி கலுழும் மனை* - நனைந்துள்ள விழிகளினின்று ஒழுகுகின்ற கண்ணீரையுடைய மனைவியே!

*நின்மேனி ..... பாழ்த்தோ* - நின்னுடைய மேனியின் வறட்சியையும் சீர்கேட்டையும் விடக் கொடியதோ.

*மறலி* - உடலினின்று உயிரைப் பிரிப்பதாக கருதப்பெறும் காலன்.

*மறல்* - கொடுமை, *மறலி* - கொடியவன்.

*காலம்* - உடலினின்று உயிர் பிரியும் நேரம் . *காலன்* - அந்நேரத்திற்குரியதாக கருதப்பெறும் ஓர் உருவகத் தோற்றம்.

காலம் செய்யும் கொடுமை: அவன் பேச்சு என்னைக் கொன்றது அவள் நினைவு என்னைத் தடுத்தது என்னும் தொடர்களில் *காலம், பேச்சு, நினைவு* ஆகிய அஃறிணைப் பெயர்கள் உயர்திணை பெயர்கள் போல் உருவகிக்கப்படுவதைப் போன்றது இறப்பு. எனவே அவ்வினைக்குரியவனாக ஒருவன் கற்பிக்கப் பெற்றான்.

*குறிக்கை* - குறி கொண்ட கை.

*மாட்டுநற் சாவு* - நம்மைத் தப்பாது மாட்டி இறப்பிக்கும் இனிய சாவு.

வறுமைத் துன்பத்தினும் சாத்துன்பம் பெரிதாகத் தோன்றவில்லை என்பது மட்டுமின்றி, இனியதும் கூட என்று கூறுவான் வேண்டி நற்சாவு எனப் பாராட்டிப் பேசினான் என்க. இதனால் வறுமையின் கொடுமை நன்கு உணர்த்தப் பெற்றது.

ஏழ்மையுற்றவரின் வாழ்வுப் போராட்டத்தையும் அவர்தம் துயரச் சூழலையும் எடுத்துக் கூறுவதாகும் இப்பாடல்.

இது ***பொதுவியலென்*** திணையும் *முதுகாஞ்சி* யென் துறையுமாம்.



# 30 நாண்மிக வுடைத்தே

*ஆயுங் காலை நாண்மிக வுடைத்தே*
*ஈனாக் கன்றைக் காட்டுநர் கொள்ளும்*
*ஆமடிச் சிறுபயன் போல*
*நாமவற் கிளமை நலமழிப் பதுவே!*

**பொழிப்பு :**

ஆய்ந்து பார்க்குமிடத்து மிகுந்த நாணமாக விருக்கின்றது; தான் ஈனாத ஒரு செய்கன்றைக் காட்டி ஆவின் மடியினின்று கொள்ளுகின்ற சிறிய அளவினதாகிய பாலைப் போல, நம்மை மணந்து கொள்ளாத அவனுக்கு நம் இளமை நலத்தைத் தந்து நம்மை அழித்துக் கொள்வது.

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

மணந்து கொள்வதாகக் கூறி தன் தலைவியிடத்துக் களவுப் புணர்ச்சி மேற்கொண்டொழுகும் தலைவன் காதுகளிற் படுமாறு தோழி தலைவிக்குக் கூறியதாகும் இப்பாட்டு.

'தலைவன் தான் மணந்து கொள்கின்றேன்' என்று கூறிய கூற்று உண்மையானதன்று. புனைவு சான்றது. அன்றாயின் அதனை அவன் மெய்ப்பிக்க முயலுவான். அவ்வாறின்றி இரவுக் குறியிடத்து அவன் நாளும் வந்து களவின் புணர்ந்து செல்வதும், நாம் அவன் சொல்லை நம்பி அவன் பொருட்டு நம் இளமையை அழித்துக் கொள்வதும் நமக்கு மிகுந்த நாணத்தை விளைவிப்பதாகும். எனவே நீ எச்சரிக்கையாகவிரு என்று தலைவிக்குத் தோழி அறிவுறுத்தினாள் என்க. இதனைத் தலைவனின் காது படும்படி அவள் கூறியது, அவன் அது பற்றி எண்ணி மணந்து கொள்ளும் காலத்தை நீட்டிக்க விடான் என்று கருதி என்க.

ஆயுங்காலை என்றதால் நாம் இதுவரை ஆராயாமல் நடந்து கொண்டோம். இனி அவ்வாறு இருத்தலாகாது என்றாள் என்க. நாம் மட்டுமன்றி அவனும் இது பற்றி ஆராய்ந்து பாராது நடந்து வருகின்றான். இனி அவனும் ஆய்ந்து பார்த்து மணத்திற்கு ஏற்பாடு செய்தல் வேண்டும் என்றும் குறிப்புணர்த்துவாள்.

நாண்மிக வுடைத்து என்றுழி, நாம் இவ்வாறு செய்யும் செயல் மிகுந்த நாணத்தைத் தரத்தக்கது. பிறர்க்கு இது தெரியவரின் மிகவும் இழிவாகும்

என்றாள். யாங்கள் மட்டுமேயன்றி நீயும் எம்மை ஏமாற்றி எம் இளமையை அழிப்பது நாணற்குரியதே என்றும் அஃது ஓர் ஆண்மகன் செய்தக்கது அல்லதென்றும் குறிப்புணர்த்தினாள் என்க.

*ஈனாக்கன்று* – ஈனப்பெறாத கன்று. செய்கன்று. ஈன்றகன்று இறந்த விடத்து, வைக்கோல் முதலிய செய்பொருள்களைக் கொண்டு கன்று போல் செய்வித்து அதனைக் காட்டி ஆமடி கறப்பர். மெய்க் கன்றையன்றிப் பொய்க்கன்றைக் காட்டிக் கறத்தல் ஆவை ஏமாற்றிக் கறத்தல் ஆகும்.

*காட்டுநர் கொள்ளும் ஆமடிச் சிறுபயன்* – ஈனாக்கன்றைக் காட்டிக் கறப்பவர் கொள்ளுகின்ற ஆமடியின் சிறிய அளவினதாகிய பால்.

மெய்க்கன்றை யூட்டிக் கறக்கும் பாலினது அளவினும் பொய்க் கன்றைக் காட்டிக்கறக்கும் பாலினது அளவு குறைவுபடும் ஆகையால் அதனைச் சிறுபயன் என்றாள். இனிச் சிறுமை பொருந்திய பயனுமாம் என்க.

தலைவன் 'வரைந்து கொள்வேன்' என்றுகூறும் கூற்றினைத் தோழி ஈனாக்கன்றுக்கு உவமித்தாள் என்க. நம் 'நம்பிக்கை'யாகிய மெய்க்கன்று இறந்தவிடத்துப் பொய்க்கன்று ஆகிய 'வரைந்து கொள்வேன்' எனும் பொருளில்லாச் சொற்களைக் கூறி நம்மை மேலும் மேலும் ஏமாற்றி வருகின்றான் தலைவன்; எனவே விழிப்பாயிரு' எனத் தலைவிக்குத்தோழி எச்சரிக்கை செய்தாள். அவ்வாறே 'இனி நீயும் எங்களைப் பொய் கூறி ஏமாற்றி வருவதை நாங்களும் உணர்ந்து கொண்டோம். இனி மணமுடித்துக் கொண்டாலல்லது களவுப் புணர்ச்சியை நினையாதே ' என்று தலைவனுக்கு விடுத்த எச்சரிக்கையாகவும் கொள்க.

இனி, *காட்டுநர் கொள்ளும்* என்றதால், யாமே தராது நீயே வலிந்து கொண்டனை என்றும் தலைவற்குக் குறிப்புணர்த்தினாள் என்க.

*ஆமடி* என்று உறுப்பைப் புலப்படுத்திக் கூறியதால் உள்ளத்துணர்வின் வழிப்பெறாத உறுப்புப் புணர்ச்சிக்கு நீவிர் இருவீரும் அடிமையாகல் வேண்டா என இருவர்க்கும் அறிவு கொளுத்தினாள் என்க.

களவுக் காலத்துப் பிறர் வருகைக்கு அஞ்சியஞ்சி விரைந்து கொள்ளும் புணர்ச்சியின்பம், உள வேட்கையைத் தீர அவிக்காது உடல் வேட்கையை மட்டும் சிறிதே அவிக்கும் தன்மைத்து ஆதலின் சிறுபயன் என்றாள்.

இனி, மணந்து கொள்ளப் பெறாது மெய்யின்பம் பெறும் அவர் செய்கை சிறுமைத்தாகலின் சிறுபயன் என்றாள்.

புறத்தை மறந்து துய்க்க வாய்ப்பின்றி, உரிமையற்ற கொல்லையுட் புகுந்து பறித்தல் போல், அகத்தைப் புறத்து வைத்து வெருவச் சுவைத்தலின் இன்பம் என்னாது பயன் என்றாள் என்க.

தலைவன் முல்லை நிலத்தவனாகலின் அவற்குப் பொருந்திய ஓர் உவமையால் உணர்வித்தான் என்க.

*நாம் அவற்கு* – நாம், நம்மை ஏமாற்றும் அத்தலைவனுக்கு.

தலைவியே தலைவனோடு புணர்ந்தாள் என்னினும், தோழி தன்மைப் பன்மையிற் பேசுவது, அவளுக்கு வந்த இழிவு தனக்கும் ஆகும் என்பதால் என்க.

*இளமை நலம்* – இளமையாகிய பெண்மை நலத்தை.

*அழிப்பது* – அழித்துக் கொள்வது.

உரிமையில் புணர்ச்சி உளத்தைத் தாக்கி உடல் நலத்தையும் கெடுக்குமாகலின் *நலம் அழிப்பது* என்று கூறினாள் என்க.

உறவும் ஒக்கலும் ஊரும் அறியாது தம்மைக் களவின் ஈடுபடுத்திப் புணர்தல் மேற்கொண்டொழுகும் தலைவனும் தலைவியும் தம் நிலையைத் தாமே நன்கு உணர்தல் பொருட்டுத் தோழி அவர்க்கு அறிவுறுத்தியதாகும் இப்பாடல்.

இது *குறிஞ்சி* யென் திணையும், *இரவுக்குறி வந்து தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குச் சொல்லிய* தென் துறையுமாம்.



# 31 எவன்கொல் அறிகும்

எவன்கொல் அறிகும் இறையவன் கிடக்கை!
கவண்முகத் துருவிய சிறுகல் போல
விசைப்பே அளவிடைப் பொழுதே! வினையே
நசையள வயினே; நலிதலும் மெலிதலும்
அதனுட் பட்ட அவைபொறி வழிய!
செவ்விதி னமையா ஐம்பொறி முனைப்பும்
எல்லையுள் வாங்கும் அறிவி னான!
இவைகொடு தெளிவே இறையவன் உண்மை!
அவன்றிறல் மேற்றே அண்டம்;
அவிழ்தலுங் குவிதலும் அரிதுமற் றறிவே!

**பொழிப்பு:**

இறைவனின் இருக்கையை எவரே அறிகுவர்? கல்லெறி கருவியின் முனையினின்று உருவிப்போகும் சிறுகல்லைப் போலும் வாழ்க்கையின் விசைப்பு ஓர் அளவுபட்ட சிறுபொழுதே. அவ்விடைப் பொழுதில் செய்யப் பெறும் வினையோ, உள்ளத்தெழுந்த விருப்பத்தைப் பொறுத்தது. உடல், உள்ள நலிவுகளும் மெலிவுகளும் அவ்விருப்பத்தின் உள்ளடங்குவன. அந்நலிவும் மெலிவும் உள்ளடங்கிய விருப்பமும் வினையும் உடலின் ஐம்பொறிகளை வாயாகக் கொண்டன. ஒன்றுக்கொன்று மேலவும் தாழவுமாகச் செப்பமுற அமையாத அவ்வைம்பொறிகளும் தம்முள் முனைத்து நிற்பினும், அவற்றின் அறிதிறனோ ஓர் எல்லையுள் வாங்கும் அளவுடையது. இயல்வனவும் இயலாதனவுமாகிய இவற்றைக் கொண்டுதான் இறைவனின் உண்மை தெளியப்பெறுதல் வேண்டும். அத்தகு இறைவனின் ஒளியின் மேலும் வலியின் மேலும் அளாவி நிற்பவைதாம் இவ்வுலக உருண்டையும் இது போல் பிறவும். அவற்றின் மலர்ச்சியாகிய தோற்றத்தையும், கூம்புதலாகிய ஒடுக்கத்தையும் அறிவது அரியது; இயலாதது.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

அகச்செருக்கும் அறிவுச் செருக்கும் வினைச்செருக்கும் மிகுந்து.

அருளும், மெய்யறிவும், அடக்கமும் குறைந்துவரும் தற்காலத்து இறைமை பொதுளிய இயற்கைத் தன்மையினை மறந்து வாழும் மாந்த உயிர்களுக்கு, உள்ளொளி கொளுத்தி உயிரியக்கம் சிறக்கக் கூறியதாகும் இப்பாட்டு.

இனி, 'செருக்கு' என்பது கருப்பையை படைத்த கொழுப்பு போலவும், வித்தை அளவு மீறி மூடிய வலிந்த தோல் போலவும் விளைவைக் கட்டுக் குலைக்கும் ஒருவகைத் திரிபுணர்ச்சியாகும். அகச்செருக்கு இயல்பான அகவளர்ச்சியையும், அறிவுச்செருக்கு உயிர்களின் மெய்யுணர்வையும், வினைச்செருக்கு வாழ்வடக்கத்தையும் கட்டுக்குலைத்துத் திரிபடையச் செய்யும். என்னை? நேராக வளரக்கூடிய ஒரு மூங்கில் அல்லது ஓர் உடல் திருகல் முறுகலாக வளர்வதைப் போன்றதே திரிபு என்க.

இனி, உலகின் அகப்புறச் சமயங்கள் அனைத்தும் இறைவனின் இருக்கை பற்றிப் பலப்பலவும் கூறும். அவ்வச் சமயமும் அவ்வக் காலத்தே வாழும் மாந்தர்க்காக, அவ்வவ் விடத்தே வாழும் முதிர்வுற்ற மெய்யுணர்வினார் ஒருவர் அல்லது சிலரால் தோற்றுவிக்கப் பெற்றுக் காலக்கழிவில் பலராலும் பயிலப்பெற்றும், பயிற்றுவிக்கப்பெற்றும், வித்துருவினின்றும் அதைச் சுற்றியுள்ள கொட்டையும் சதைப்பும், நாறும், தோலும் எனப்படும் பொருள் உருவாய் வளர்ந்தும் பரந்தும் வருவதே ஆகும். எனவே எல்லாச் சமயத்துள்ளும் அகக்காழாய் இறையுண்மை இருப்பது போலவே புறக்காழாய் காலவெச்சங்களும், இடக் குற்றங்களும் மாந்தப் பிழைகளும் அமைந்தே இருக்கும். எல்லாச் சமயத்துள்ளும் அவை ஒரே படித்தாயும் இரா. ஒரே வகைப் பழம் பலாமரத்தின்கண் பல வேறு சுவையாயும், இனி அதுவே பல்வேறு நாட்டின்கண் வெவ்வேறு வடிவாயும் இருப்பது போலவே, இறையுண்மையும் சமயத்திற்குச் சமயமும், காலத்திற்குக் காலமும், இடத்திற்கு இடமும் மாறுபட்டு விளங்கும். இன்னுஞ் சொல்வதானால் பருப்பொருளாகிய பழத்தினும் நுண்பொருளாகிய இறைமை கால இடம் நோக்கி மிகவும் மாறுபடும். மாந்த இனத்திலேயே கற்கால மாந்தத் தோற்றமும் தற்கால மாந்தத் தோற்றமும் மிகுதியும் வேறுபட்டு விளங்குவதை யாவரும் நன்கு அறியலாம். சுருக்கமாகச் சொன்னால் உலக அமைப்பை ஒரு சில மூலக்கூறுபாடுகளின் வேறுபாட்டுத் தோற்றமே என்பதை அறிவியல் மெய்ப்பிக்கும். இனி, மெய்யறிவியலோ அம்மூலக்கூறுபாடுகளும் ஒரே ஒன்றின் உள்ளீட்டுத் திரிபுகளே என்று வரை நிறுத்தும். அந்த ஒன்றாய் இருப்பதையே சமயம் இறைமை என்கிறது.

உலகியலில், ஒருவர்மேல் பிறிதொருவர் கொள்ளும் ஈடுபாடே பொதுமை என்றும், பற்றென்றும், நட்பென்றும், அன்பென்றும், அருளென்றும், காதலென்றும், பத்தி என்றும் வேறுபட்டு விளங்கி நிற்பது போல், அவ்விறைமைப் பொருளே இயற்கையென்றும், மூலப்பொருள்கள் என்றும், ஐம்பூதங்கள் என்றும், உலகென்றும், உயிர்கள் என்றும், மக்கள்

பற்றென்றும், இனமென்றும், தொண்டென்றும் வேறுபட்டு விளக்கமாகப் பேசப்பெறுகின்றது.

ஓர் உழவன் நிலத்தை உழுது, வித்தி, விளைவிப்பது அவனுக்கும் பிறர்க்குமே. ஓர் அரசன் அரசியல் நடத்துவதும் அவனுக்கும் பிறர்க்குமே. தாயொருத்திக்குப் பிறக்கும் குழந்தைகூட அவளுக்கும் பிறர்க்கும் பயனுடையதாகும். ஆக இவ்வுலகத்திலுள்ள எந்த ஓர் உயிரும் தனக்காகவும் பிறர்க்குமாகவே தோற்றம் எடுக்கின்றது. இக்கூட்டுச் சார்பு நிலையே இறைமையின் அகவியக்கமாகும். ஒரு தாயின் உடலினின்று ஒரு சேயின் உடலை அறிவியல் வேறுபிரித்துக் காட்டலாம். ஆனால் ஒரு தாயினது மனத்தில் சுரக்கும் பிள்ளைப் பாசத்தையும் அப்பிள்ளைக்குள்ள தாய்ப் பாசத்தையும், எந்த அறிவியலும் வேறு பிரித்துவிட முடியாது. இனி, அத்தகு இரு பாசமும் வெவ்வேறு தாய்க்கும் பிள்ளைக்கும் வெவ்வேறு வகையாக- -அவரவர் உயிர் விளைவுக்குத் தக்கபடி- சுரந்து வருவதையும் எந்த அறிவியலறிஞரும் கருவி வைத்து அளவிட முடியாது. இதன் இயக்கம் மட்டில் இயற்கையொடு பொருந்திய இயக்கமாக இறைமை இயக்கமாக மெய்யறிவியல் பேசும். இவை விரிக்கில் பெருகும். ஆனால் இப்பாட்டின் உட்பொருளாய் விளங்கித் தோன்றும் இறைமையின் இருப்பை - அதன் தனித்த உருவை - நிலையினை - எவரும் அறிதற்கியலாது என்னும் உண்மையை ஒருவாறு விளக்கவே இவ்வளவில் கூறப்பெற்றது என்க.? என்னை, எவரும் அறியப்பெறாத ஒன்றினை ஈண்டு நீவிர் மட்டும் அறியப் பெற்றது போல் பேசுவது யாங்ஙனம் எனில், அறியப் பெற்றது *'அறியப்பெறாது* என்பது தானே யன்றி *'அறியப் பெறாத அறிவை'* அன்று. இதனை இன்னும் சில படி மேலே விளக்குவோம்.

ஒன்றின் அல்லது ஒருவனின் *'அறியாமை'* என்னும் நிலையில் அவனுக்குள்ள தன்மை வேறு. அவனைப் பற்றி நமக்குள்ள தன்மை வேறு. அவன் ஒன்றை 'அறியேன்' என்று நம்பால் எடுத்துச் சொன்னாலொழிய , அவன் அறியாமையை நாம் அறிந்து கொள்ளல் இயலாது. 'காந்தள் மலரைக் கண்டதில்லை' என்று ஒருவன் சொல்லும் வரை, அவன் காந்தள் மலரைக் கண்டுள்ளானா அல்லனா என்பதை நாமறிவது எங்ஙனம்? இனிக்'கண்டேன்' என்று கூறினாலும் அவன் அதனை விளக்கினாலொழிய நமக்கு அது பற்றி விளக்கமுறுவது யாங்ஙன்? இனி அவன் முழுவதும் முற்றும் விளக்கினாலும், நாமே அதனைக் கண்டு அறிவது போல் அத்துணை முழுவிளக்கமும் பெறுவது இயலுமோ? இனி, நாமே அதனை முழு அளவில் கண்டு கொண்டாலும் ஓர் இயற்கையியல் வல்லுநர் கண்டு அறிவதைப் போல் விளங்கிக் கொள்ள வியலுமோ? இனி, அவ்வியற்கையியல் அறிஞரும் ஒரு மூலிகை மருத்துவர் போல் அதிலுள்ள மருத்துவப் பயன்களைத் தேர்ந்து கொள்ளல் சாலுமோ? இனி அம் மருத்துவரும், அக்காந்தள் மலர்ச்செடி விளைவதற்கு வேண்டிய தட்ப

வெப்பக் கூறுபாடுகளையும், கால இடவேறுபாடுகளையும் பயிரியல் அறிஞர் ஒருவரைப் போல் உணர்ந்துரைத்தல் முடியுமோ -இவ்வாறு ஒரு பொருளைப் பற்றிய அறிவுக்கு எத்தனைப் படி நிலைகள் உண்டோ, அத்தனைப் படிநிலைகளும் அறியாமைக்கும் உரியனவாம் என்க. என்னை? பிந்தினவரின் முந்தினவர் படிப்படியாக அறியாமை மிக்கவராகத்தாமே கருதப்பெறுவர். முந்தினவரின் பிந்தினவர் படிப்படியாக அறிவுமிக்க வராகத் தாமே கருதப் பெறுவர்.

எனவே, அறியாமையை அறியாதது ஓர் அறியாமை; *அதனை ஓரளவு அறிந்த பின்னும் ஓர் அறியாமை.* அறியாமையை அறியாமல் இருப்பவனை விட, அதனை அறிந்தவன் ஓரளவுமேல் என்றாலும் முழுநிலையைப் பொறுத்த அளவில் அவனும் அறியாதவனே. ஆகவே, இறைப்பொருள் அறியப்படாதது என்றால், 'அறியப்படாத ஒன்று உமக்கு மட்டும் அறியப்பட்டது யாங்ஙன்?" என்னும் கேள்விக்குப் பொருளே இல்லாமல் போகிறது. அறியப்படாதது *இறைமையின் தன்மையே* யன்றி *இறைமையின் உண்மை* யன்று.

தாயின் கருப்பையுள் கிடந்தோம் என்ற உண்மையை நாம் அனைவரும் அறிவோம். அதன் தன்மையை நாம் அறிவோமா? இனி, *தன்மை* யறியப்படாததால் அதன் *உண்மையும்* பொய்யாகுமோ? இனி *உண்மை* உணரப்பெற்றதால், அதன் தன்மையும் உணரப்பெறுவதாகத் தான் இருக்க வேண்டும் என்பதில்லை. இப்பொழுதுள்ள அறிவியல் இன்னும் நூறு பங்கு வளர்ந்தாலும், நாம் கருப்பையுள் கிடந்த பொழுதிருந்த நிலையை இக்கால் நமக்குப் புலப்படுத்திக்காட்டுதல் இயலாது. ஏனெனில் கருப்பையுள் நம் உடலுறுப்புகள் இருந்த நிலையிலேயே நம் அறிவுணர்வும் இருந்திருக்கும். அந்த நிலையை அறிவுணர்வு மிகுந்த நமக்கு உணர்த்துவது யாங்ஙன்? அப்படி உணர்வதுங்கூட இல்லாத நிலைதானே அது. கல்லுக்குக் கல்போல் கிடக்குந் தன்மையை உணர்த்துவது யார்?

எனவே, நம் அறிவின் எல்லை இறைவனைப் பற்றிய அறியாமையின் தொடக்கமாக அமைவதைக் கண்டு தெளிக. அவ்வறியாமை நிலை நம்மால் அறியப்பெறும் பொழுது, நமக்குள்ள புலன் உறுப்புகள், மூளைத்திறன்கள் யாவும் செயலற்றுப் போகும். இனி, இவ்வுலகின்கண் இருந்துகொண்டே இறைமைத் தோற்றத்தை அறிந்தவராகச் சமயக்குரவர் சிலர் எல்லாச் சமயத்தும் கூறியிருக்கின்ற தென்னை யெனின், அதைப் பற்றியும் சிறிது விளக்குவோம்.

அறிவு நிலையும் அறியாமை நிலையும் பலபடி நிலைகளையுடையன என்பது பற்றி முன்னரே அறிவோம். அறிவு நிலையில் உள்ள ஒருவர் அறியாமை நிலையில் உள்ள ஒருவர்க்குத் தாமே தம் அறிவு நிலையைப் புலப்படுத்திக் காட்டினாலொழிய அவ்வறியாமை நிலையில் உள்ளவர்க்கு

அவ்வறிவு நிலை புலப்படாதாம் என்பதையும் நாம் அறிந்து கொள்ளுதல் வேண்டும். ஆகவே இறைப்பேரறிவு தானே மாந்த உயிரொன்றிற்குத் தன்னை விளக்கிக் காட்ட வேண்டும் என்று கருத்துக் கொண்டு காட்டினால் ஒழிய, அது தன்னை அறிந்து கொள்ளல் எவர்க்கும் இயலாது. இனி அப்பேரறிவும், அறியாமையே மிக்குள்ள ஒரு மாந்த உயிர்க்கு, அது தன்னை எந்த அளவில் விளங்கிக் கொள்ள வியலுமோ அந்த அளவறிந்துதான் தன்னைப் புலப்படுத்திக் காட்டுமேயன்றித் தன்னை முற்றும் அவ்வுயிர்க்கு விளக்கிக் காட்டவும் செய்யாது. இனி, ஓர் எறும்போ ஒரு புழுவோ எவ்வளவுதான் தன் நிலையில் முன்னேறினாலும் நம்போலும் ஒரு மாந்த உயிரை அறிய விரும்பும் ஒரு நிலைக்குத் தன்னை உயர்த்திக் கொள்ள முடியாது. அவ்வாறே உயர்த்திக் கொண்டாலும் அவ்வெறும்பின் மீமிசை அறிவுக்குப் புரியாத நிலையில் நாம் நம்மை விளக்கிவிட மாட்டோம். ஓர் அரையாண்டுக் குழந்தை 'தான் இவ்வுலகத்திற்கு வந்தது எப்படி' என்று நம்மைக் கேளாது. ஏனெனில் அவ்வாறு கேட்கவும் ஓர் அறிவு நிலை வேண்டும். ஒரு கால், அத்தகைய அறிவு வளர்ந்த மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் நிரம்பப்பெற்ற குழந்தை அந்தக் கேள்வியைக் கேட்பினும் அக்குழந்தை அக்கேள்விக்கான விடையை எந்த அளவில் விளக்கிக் கொள்ள வியலுமோ, அந்த நிலையில்தான் நாம் அதற்கு விளக்குவோமேயன்றி, நமக்கு அத்துறையில் விளங்கிய அனைத்தையும் விளக்கிவிட மாட்டோம். அவ்வாறு விளக்கினாலும் அக்குழந்தைக்கு ஒவ்வொரு படிநிலையிலும் ஒவ்வொரு வகை அறியாமை வந்து இடை மறிக்கும்.

இறைமை நிலைக்கு நாம் சிற்றெறும்பினும் பல்லாயிரங் கோடி அளவில் எல்லா நிலையிலும் தாழ்ச்சியுற்றவர்கள். அளப்பதற்கரியதாய் விரிந்து கொண்டே போகின்ற இப்பேரரும் புடவியுள் கணக்கற்றுத் தாறுமாறாக ஓடிக்கொண்டிருக்கும் பேரண்டங்களையும் சிற்றண்டங்களையும் நம் உலகம் போல் உயிர்கள் சான்ற பல்லாயிரங்கோடி உலகங்களையும் தம்முள் ஒடுக்கிக் கொண்டு கிடக்கும் இறைப்பேராற்றல் எங்கே? குற்றுயிரும் குறுவினையும் கொண்டு மிக மிகக் குறுங்காலத்தில் வாழ்ந்து மடியும் நாம் எங்கே? நமக்கு அப் பேரிறைப்பொருள் தன்னைப் புலப்படுத்திக் காட்டுதல் எங்கே? அது தன்னைக் காட்டினாலும் நாம் அதனை அறிந்து கொள்ளுதல் எங்ஙன்? (இது பற்றி இன்னும் தெளிவாக உணர்ந்து கொள்ள இறைக்காட்சி என்னும் என் கற்பனை ஊற்றுக் கட்டுரையைக் காண்க.)

இனி, அச்சமயக் குரவர்கள் தாம் இறைவனைக் கண்டதாக உரைத்த நிலைகள் பொய்யாகுமே எனில், ஆகாது. அந்நிலைகள் அப் பெரியார்களின் மனக்கற்பிதங்களே! அஃதாவது அவர்கள் இறைப் பேராற்றலை எவ்வகையில் கற்பித்துக் கொண்டு பார்க்க விழைந்தனரோ, அவ்வகையில் கண்ட ஒரு கற்பிதத் தோற்றமே அக் காட்சி என்க! என்னை, ஒவ்வொரு

சமயக்குரவரும் இறைப் பேராற்றலை அவரவர் விரும்பிய வடிவிலேயே கண்டுள்ளதாகக் கூறியுள்ளனரேயன்றி, எல்லார்க்கும் ஒரு வடிவே காட்சியுட் பட்டது என்பது எங்கும் புலப்படுத்தப் பெறவில்லை. எனவே அவர்கள் தம் அறிவுக்கொப்ப அவர்கள் கண்டவை ஒரு வகைக் கனவு நிலைப்பட்ட கற்பிதக் காட்சிகளேயாம் என்று தெற்றெனத் தெளிந்து கொள்க. அக்காட்சிகள் முன்னிய மெய்யுணர்வுடைய உங்கட்கும் எமக்கும் கூட வரும். இனி, அக்காட்சிகள் போன்றனவே இவ்வுலகத் தோற்றங்களும், வானின்று கொட்டும் அருவியின் பேருருவமும், நிலவுலகையே பிளப்பது போல் இடிக்கும் பேரிடியின் பேரோசையும் அத்தகைய உணர்வு நிலைகளையே உருவாக்குகின்றன. அவற்றைக் கொண்டுதாம் நாம் இறைமையுணர்வு எய்திப் பல்வகை உருவ வழிபாடுகளைப் படைத்துக் கொண்டோம். ஆனால் அந்த நிலைகள் யாவும் இறைப் பேராற்றலின் இருக்கை நிலை யாகா.

இவற்றை உணர்த்தி நிற்பது தான் இப்பாடலின் *'எவன் கொல் அறிகும் இறையவன் கிடக்கை;* என்னும் முதல் வரியாகும்.

*கிடக்கை* என்பது புறக்கிடக்கையை உணர்த்துதல் போலவே அகக்கிடக்கையையும் உணர்த்தும்.

புறக்கிடக்கை இருப்புநிலையையும், அகக்கிடக்கை விருப்பு நிலையையும் உணர்த்தும். உணர்த்தவே, ***இறைவனின் இருப்பு நிலையை யாவர் அறிவர்*** என்பதாகவும், ***அவன் விருப்பத்தை அறிவர் யாவர்*** என்பதாகவும் பொருள் கொள்க.

இனி, அடுத்துவரும் அடிகள் முதலடி முதற் சொல்லாகிய 'அவன்' என்பதற்குப் பரியாய பொருள் விளக்கமாக வருவனவாம். என்னை? எவன் அறிகும் இறையவன் கிடக்கை எனும் கூற்றின்கண் உள்ள 'எவன்' என்னும் வினாவுள் மாந்தவினத்துள்ள யாவரும் அடங்குவரோ எனின், அடங்குவர் என்க.

இனி, அவருள்ளும் இயக்கம், அதன் மேலெழுந்த வினை, அதன் கருவாய நசை, அதன் பருவாய எடுப்பும் படுப்பும் சான்ற வலிமையும் மெலிமையும், அவை பற்றி நின்ற பொறிகளின் முனைப்பும் என இவ்வனைத்து நிலைகளானும் சிறந்து விளங்கும் நுண்ணுணர்வினோரே மேல் வரையினராக ஈண்டுக் குறிக்கப் பெற்றார் என்க. பெறவே, அவர்க்குரித்தாகிய வினையும் நசையும் பொறியும் முனைப்பும் அறிவும் தெளிவும் முறையே விளக்கப்பெறும்.

***விசைப்பே, கவண்முகத்து உருவிய சிறுகல் போல அளவிடைப் பொழுதே*** – கவண் முகத்து வைக்கப்பெற்ற சிறுகல்லின் இயக்கம் ***உருவியதும் ஓடியதும்***

*உறுத்ததும்* என ஓரிரு நொடிப் பொழுதிலேயே நடைபெறுதல் போல், அவனின் இயக்கமும் *உயிர்ப்பும், வாழ்வும், முடிவும்* என்ன ஒரு சிறு இடைப் பொழுதிலேயே நடைபெறுகின்ற தன்மையுடைத்து.

இனி, ஒரு குறி நோக்கி வீசப்பெற்ற அக் கவண்கல், ஓரிரு நொடியிலோய தன் இலக்கைத் தொட்டு இயக்கத்தை முடிப்பதாய் இருக்க, அஃது அவ்விடைப் பொழுதிற்குள். தன்னறிவு பெறுதலும், தன்னை எற்றியவனை எண்ணுதலும், அவன்றன் அறிவையுணர்தலும் யாங்ஙன்? அதுபோல் இவ்வுலகின் கண் ஒரு குறிநோக்கி வீசப்பெற்ற மாந்தன், தனக்கு இயக்கமாகிய ஓரிடைப் பொழுதிற்குள் *தன்னறிவுற்று,* அதன் வழித் *தன்னுணர்வு* பெற்று, அதன்வழித் தன்னை இறுத்தானை *மெய்யறிதலும்* யாங்ஙன் இயலும் என்க. *அறிவு என்பது ஒன்றின் புறமும் உணர்வு என்பது அகமும்* ஆம். இவ்வுவமையால், மாந்த உயிரின் தோற்றமும், வாழ்வும், முடிபும் நன்கு தெளிய வைக்கப் பெற்றன.

என்னை? *கவண்* என்றதால் இவ்வுயிர் இறைப் பொருளின் ஓராட்சி நிலையில் அடக்கப்பெற்றுக் கிடந்ததும், *முகம்* என்றதால் அவ்வகப்பாடும் இறைப் பேராற்றலின் அகத்தே உள்ளொடுங்காது, உருண்டையின் மேற்புறமும் ஒளியின் புறச்சுடரும் போல் புறப்புறமாய் ஒடுங்கி நின்ற நிலையும், *உருவிய* என்றதால், அஃதோர் இலக்கு நோக்கித் தனியாட்சி நிலைக்கு எறியப்பெற்றநிலையும், அஃது அப்பேராற்றலினன்று உருவி வெளிப்பட்ட நிலையும், *சிறு* என்றதால் அவ்வுயிரின் சிற்றறிவும், சிறு வினையும், சிறுவியக்கமும் உள்ளடங்கிய சிறுமையும், *கல்* என்றதால் தன்னளவில் அவ்வுயிரேற்ற பூதவுடம்பின் இருப்பும் பருப்பும், உலகளவில் அதன் அளவும் தன்மையும், *போல்* என்றதால் உலகப் பொருள்கள் யாவும் ஒன்றுபோல் ஒன்று என்ற ஒப்புமைக் குறிப்பும், *விசைப்பு* என்றதால், கொண்டு செலுத்தும் விசையேற்றமும் செலுத்தக் கொள்ளும் விசையிறக்கமும், *அளவு* என்றதால் எல்லாவற்றுக்கும் *அளவுண்டாம்* என்னும் பேருண்மையும், *இடை* என்றதால் முதலும் முடிவும் அறியப்பெறாமல் வாழ்க்கை ஒன்றே அறியப் பெற வாய்த்ததொரு நிலையும், *பொழுது* என்றதால் இருநிலைக்கும் இடையூடாய் அமைந்த காலம் என்பதும் நுண்ணிதின் உணர்த்தப் பெற்றன என்க.

இனி, *சிறுகல்* என்றதால் சிறுவிசை, (சிறுஅளவு) சிற்றளவு, சிறுபொழுது என்றும் வருமாறு உணர்க.

இனி, கவ்வுவதால் *கவண்* என்றும், முக (முன்) நிற்பதால் *முகம்* என்றும், உள்ளிருந்து புறப்படலால் (உள்-உர்-உரு) - *உருவு* என்றும் கனப்பதால் *கல்* என்றும், விசும்பு(இயங்கு)வதால் *விசை* என்றும், ஒன்றின் முழுமையை அளாவுவதால் *அளவு* என்றும், புலர்தலால் *பொழுது* என்றும் சொற்பொருள் கண்டுகொள்க.

*விளையே நசையுள வயினே* – (இனி, அவ்வியக்கத்துட்பட்டவனின்) வினையோ, அவன் உள்ளத்து எழுந்த நச்சுதல் தன்மை வயத்தது. நச்சுதல்-நசை-ஆசை-அவாவுதல். ஒன்றின் உள்ளுணர்வே அவாவுதலுக் கடிப்படையும், அவ் வவாவுதலே வினைக்கு அடிப்படையும் ஆம் என்க. *உளவயின்* நசையும், நசைவயின் *வினையும்* எனக் கொள்க. *நலிதலும் மெலிதலும் அதனுட்பட்ட*; (இனி அவ்வினையின்) நலிவும் மெலிவும். (அவற்றின் அடியாய ஆசையின் நலிவையும் மெலிவையும் பொறுத்தன வென்க)

நலிதல் வளத்தில் குறைதல். மெலிதல் பருமையிற் குறைதல்.

நலிதலும் மெலிதலும் கூறியதால் ஆசைக்கும் அதையொட்டியெழுந்த வினைக்கும் வளமும் பருமமும் உண்டென்க. ஆசை நிறைவேறுதலும் வினை முற்ற முழுமையுறுதலும் அவ்வவற்றின் வளத்தையும் பருமத்தையும் பொறுத்தனவே.

ஆசை அறத்தைத் தழுவி நிற்கையில் வளமையையும், பொருளைத் தழுவி நிற்கையில் பருமையையும் எய்தும். அது, முன்னதைத் தழுவாமல் பின்னதை மட்டும் தழுவுகையில் தன்னளவுற்றுப் *பேராசை* என்றும், பின்னதைத் தழுவாமல் முன்னதை மட்டும் தழுவுகையில் தன்னளவுற்று வெற்றாசை என்றும். இரண்டையும் தழுவுகையில் பொதுவளவுற்று *முற்றாசை* என்றும் பெயர் பெறும். இம்மூன்று நிலைகளும் முறையே *கடையும்* இடையும் முதலும் ஆகும் என்க.

இனி, *பேராசை* நின்றெழுந்த வினை, *ஆரவாரமும் கொடுமையும் தன்னலமும்* நிறைந்ததென்றும், *வெற்றாசை* நின்றெழுந்தவினை *அமைவும், மிடிமையும் தன்னலமறுப்பும்* நிறைந்ததென்றும், *முற்றாசை* நின்றெழுந்த வினை *பண்பும் பயனும் பொது நலமும்* நிறைந்ததென்றும் கண்டு கொள்க.

இனி, இவ்வாசையின் அடியிரு நிலைகளும் ஒன்றின் ஒன்று தாழ்ந்தும் உயர்ந்தும் நிற்கும் நிலைகளும் உண்டு என்க. அவ்வந் நிலைகளில் அவ்வவ் வினைகளும் அங்ஙங்ஙனே பயன் கொளுவும் என்க. இனி, இவ்வினைகளே நல்வினையென்றும் தீவினை என்றும் புறப்பயன் நோக்கி வகுத்துக் கூறப் பெறும். எவ்வாறாயினும் வினைக்கு அடிநிலை மன அவாவுதலே என்க.

*அவை பொறி வழிய.* அவ்வினைகளும் உடலின் ஐம்பொறிகளின் வழியே நடைபெறுவனவாகும்.

வினைகள் அவாவினின் றெழுந்து பொறிகளின் வழியாய் நிகழ்த்தப் பெறுகின்றன. வினை எழுச்சிக்கு அவாவுதலே கரணியமாய் அமைந்தாலும், அவ்வினைமலர்ச்சிக்கு ஐம்பொறிகளே கருவிகளாக அமைந்துள்ளன. அமையவே ஒரு வினை நிகழ்வு மன அவாவுதலையும் ஐம்பொறி நலத்தையும் பொறுத்த தென்க. எனவே அளவிடைப் பொழுதாயமைந்த சிறுகல்

விசைப்புப் போன்ற மாந்த வாழ்க்கை படிப்படியாய் ஒவ்வொரு நிலைகளையும் கரணியங்களாக உள்ளடக்கிக் கொண்டு கிடக்கின்ற தென்க.

*செவ்விதின் ..... அறிவினான* – இனி, அவ் வைம்பொறிகளும் தம்முள் ஒத்தபடி முனைப்புற்று நிற்பினும் அவை உள்வாங்கும் அறிவோ ஓர் எல்லையுட்பட்டது.

செவ்விதின் அமையா ஐம்பொறி என்றதால் உலக உயிர்கள் யாவினுக்கும் ஐம்பொறிகளுக்கும் ஒத்தபடி முழுமை பெற்று நிற்பதில்லை என்க. ஒவ்வோர் உயிர்க்கும் ஒன்றோ பலவோ குறைவுற்றே இருக்கும். ஆனால் அவ்வாறின்றி எல்லாப் பொறிகளும் தம்முள் ஒத்தும் மேம்பட்டும் விளங்கினும், அவற்றின் முனைப்பிற்கும் ஓர் அளவுண்டு என்க. காட்டாகக் கட்பொறி அமைப்பை நோக்குவோம்.

ஒருவருக்குக் கட்பொறி அமைதல் ஒரு நிலை. அஃது அழகான வடிவாய் இருப்பது ஒரு நிலை. பின் அது துல்லியமாயிருத்தல் ஒரு நிலை. அடுத்து அது பித்தநீரானும், பீளைமலங்களாலும், சூடானும் குளிர்ச்சியானும் தாக்கப் பெறாமல் தூய்மையுற்றிருத்தல் ஒரு நிலை. அதன் பின், அது கூச்சம், அரிப்பு, மழுக்கமின்றியிருத்தல் ஒரு நிலை; அத்துடன் அஃது ஒளிக்குருடு, நிறக்குருடு போலும் குறையின்றியிருத்தல் ஒருநிலை. இப்படித்தாய் பல நிலைகளிலும் அது குறையற்று நிறைவுற்றிருப்பினும், அதனால் மிகத் தொலைவில் உள்ள விண்மீனையோ, நேராக வன்றி வளைந்து செல்லும் நிலப்பரப்பினையோ, காணுதல் கூடுமோ ? கூடாதென்க. இனி, அது காணக்கூடிய எல்லைப் பரப்பு என்பது ஒன்றுண்டே, அதுதான் அதன் எல்லை என்க. அந்நிலை பலர்க்கும் பலவாறாக வேறுபட்டு நிற்கும்.

இவ்வாறு நம் புறப் பொறிகளான ஐம்பொறிகளும் ஒரு சிறு குறைபாடும் அற்றனவாகி யிருந்தாலும் நம்மால் இவ்வுலகில் மிகமிகச் சிறு பயனையே பெறுதல் இயலும்.

பொறிகளின் ஈர்ப்புத் திறனையே அறிவு என்கிறோம். ஈர்ப்புத் திறனே வாங்கும் அறிவு என்று ஈண்டு சொல்லப்பெற்றுள்ளது.

***இவைகொடு தெளிவே இறையவன் உண்மை*** – முற் கூறப்பெற்ற வாழ்வாகிய சிறு இடைப்பொழுதில், உள்ளத் தெழுந்த முற்றாசையான் பற்றப் பெற்ற வினையையுடைய மாந்தர், தமக்கியல்பாகிய நலிவும் மெலிவும் தவிர்க்கப் பெற்றவராயும், செவ்விதின் அமைந்த ஐம்பொறி முனைப்புடையவராயும் இருந்து அறியப்பெறும் தெளிவின் அளவாகத்தான் இறைவனின் உண்மை புலப்படும்.

என்னை? நமக்குற்ற கண் வழியாகப் பார்க்கப் பெறுவதே இவ்வுலகமும் புடவியும். நமக்குற்ற செவிகளின் வழியாகக் கேட்கப் பெறுவதே இங்குற்ற ஓசையும், ஒலியும். இவ்வாறே பிற பொறிகளின் வழியாக அறியப்

பெறுவனவே பிற உணர்வுகளும். இனி, இறையுண்மையோ இவை யாவற்றையும் கொண்டு தெளியப்பெறுவதாகும். இவற்றுள் ஒன்று முரணுற்றாலும் அவ்வுண்மை சரிவரத் தெளியப் பெறாது போம். இனி, இவை துலங்கத் துலங்க இவற்றின் அடிப்பற்றியதாய மனமும் அறிவும் அகன்மையும் நீட்சியும் அடையப் பெற்று அவ்விறையுண்மையை மேன்மேலுந் துலங்கச் செய்வதும், அவை மழுங்க மழுங்க அவ்வுண்மையும் மழுக்கலுறுவதும் தன்னறிவான் கண்டு கொள்க.

இனி, இவ்வுலக அறிவுணர்வெல்லாம் ஒருயிர்க்கு இருவழிப் புலப்பாடுடையது. தன்வழித் தானறிதலும் பிறர்வழித் தானறிதலுமாகும். தன் வழித் தானறிதல் என்பது தனக்குற்ற கருவி கரணங்களால் தானே யறிதல்; பிறர் வழித் தானறிதல் என்பது பிறர்க்குற்ற கருவி காரணங்களால் அறியப் பெற்றவற்றை அவர்வழிக் கேட்டுத் தானறிந்து கொள்வது. உலகியலறிவு யாவும் ஒருவன் தன்வழித் தானே யறிதல் இயலாது. இனி, பிறர் வழித் தானறிதலும் ஓரளவே என்க. இனி, இவ்விருவகையானும் அறியப் பெறும் அறிவு பலவாயிருக்க இறையறிவு தன்வழித் தானறிதலில் தலையாயதென்க. அறிதலினும் தெளிதல் நுண்மை யுடைத்தாதல் பற்றித் தெளிவு எனலாயிற்று.

*உண்மை* - உள்ளமை. உள்ளதாந்தன்மை.

*அவன்றிறல் மேற்றே அண்டம்* – அவ்விறைப் பொருளின் திறத்தே அணுவும் அண்டமும். *மேற்று* - மேலது- வழியது- அடிப்படையானது.

*அண்டம்* - அணுக்கள், அண்டியது அண்டம்.

*அண்ணியது* - சுருங்கியது-குறுகியது- விரிவின் சுருக்கம்- அணு.

*அணுக்கள்* - நெருங்கினது அண்டம்.

*அவிழ்தலும் குவிதலும் அரிது மற்றறிவே!* மற்று, மலர்தலையும் ஒடுங்குதலையும் அறிவது அரிது; இயலாதது. அண்ட இடை நிகழ்வின் ஒரு சிறு கூறுபாட்டைக் கூடச் சரிவர உணரமுடியாத நாம் அதன் மலர்ச்சியையும் அழிவையும் அறியமுடியாது.

*அவிழ்தல்* - கட்டுக்குள் இருந்து நெகிழ்தல் - விரிதல்- மலர்ச்சியுறுதல்

*குவிதல்* - கட்டுக்குள் ஒடுங்குதல் - ஒன்று கூடுதல்.

இப்பாடல், இறைப்பொருளின் இருப்புநிலைபற்றித் தெளியவிலாதார்க்கும் தெளிந்தார்ப் போலப் பிதற்றுநர்க்கும் உலகியல் கூறி, அறிவின் தன்மையும் அறியப்பெறும் பொருளின் நுண்மையும் புலப்படுத்துவதாகும்.

*இது பொதுவியலென் திணையும் முதுமொழிக் காஞ்சியென் துறையுமாம்.*

# 32 அமிழா நெடும்புகழ்

*இவனியா ரென்குவி ராயி னிவனே*
*பேராய மென்னும் பெரும்பெயர்க் களிற்றை*
*ஆரமர்க் களத்தே அலறக் கிடத்தி*
*ஊராயத் திருத்தி உருக்குலைத் திட்டுத்*
*தமிழக வரசைத் தலைமுதல் நிறுத்திய*
*அமிழா நெடும்புகழ் அண்ணாத் துரையே!*
*அடித்தலை தாழ்த்தித் தமிழ்கொல் தில்லியின்*
*முடித்தலை நெரித்த மொய்ம்பிவன் மொய்ம்பே!*
*இமிழ்கடல் வையத்தி யாண்டும் புகழ்கொளத்*
*தமிழ்விழ வெடுத்த திறலிவன் திறலே!*
*மடம்படு கொள்கை மறித்துயிர்ப் படக்கி*
*உடம்பட நிறுத்திய விறலிவன் விறலே!*
*புறம்பொய்த் தொழுகிய புல்லியர் விதிர*
*அறம்பெறத் தூக்கிய அரசிவன் அரசே!*
*தற்சார் புற்ற இளையோர்ப் பிணிக்குறுஞ்*
*சொற்சோர் வறிகிலா வினைவலி சூழ்தலின்*
*தோலா திடுகவன் றோளே;*
*கானிலை கொள்ளுக செந்தமிழ்க் கழலே!*

**பொழிப்பு:**

(படிவமாய் நிற்கும்) இவன் யார் என்று கேட்பீர் ஆயின், இவன், பேராயம் என்னும் பெரும் புகழ் சான்ற, களிறு போல்வதாம் ஒரு கட்சியைத் தேர்தல் என்னும் நிறைவுற்ற போர்க் களத்தே தோற்றுப் புலம் பும்படி வீழ்த்தி, ஊர்மக்கள் நடுவே கொணர்ந்து நிறுத்தி, அதன் பொய்யுருவத்தைக் குலைத்து உண்மை உருவம் புலம்படும்படி செய்து, வரலாற்றான் முன் இழந்த தமிழகம் என்னும் பெயரை மீட்டு, அதன் பெயரால் ஓர் அரசை முதன் முதல் அரும்பாடுபட்டு எடுத்து நிலைநாட்டியோனும், காலவெள்ளத்துள் அமிழ்ந்து போகாத நெடிய புகழ் கொண்டோனும் ஆகிய அண்ணாத்துரை என்னும் பெயரினனாம். தன் அடியின் கீழ்த் தலைமைசான்ற தமிழ் மொழியை வலக்காரத்தால் தாழ்த்தி, அதனை நாள்தொறும் சிறிது சிறிதாக அழித்து நின்ற தில்லி

யாட்சியின் அதிகாரம் நிரம்பிய தலைமைச் செருக்கைத் தன் வெற்றியால் நொறுக்கிய வலிமை இவனுடையது. ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இவ்வுலகின்கண் எக்காலத்தும், எவ்விடத்தும் தன் புகழ் நினைவு கொள்ளும்படி தமிழ் மொழிக்கென்று பதினொரு நாள்கள் விழா வெடுத்த துணிவு இவனுடையது. மடமை நிரம்பிய மூடக் கொள்கைகளைத் தடுத்து, அவை மீண்டும் கிளையா வண்ணம் ஒடுக்கி அறிவுக்கு உடன்பட்டுப் போமாறு மக்களை நிறுத்திய பெருமை இவனுடையது. வெளிப்படையாகவே பொய்மைகூறி யொழுகிய சிறுமையர் நடுங்கும்படி, அறம் தழுவியவாறு நிறுவப் பெற்ற அரசு இவனுடையது. தன் சார்பினராகிய இளைஞர்கள் கட்டுப்படும்படி சொல்தளர்வு அறியாத உரையாற்றலோடு வினை வலிமையும் சூழ்ந்திருத்தலின் இவன் முயற்சிகள் தோல்வி யின்றி விளங்குமாக! இவனின்று தொடங்கிய செந்தமிழ் வெற்றியின் அடி அசைவின்றி நிலைபெறுமாக!

**விரிப்பு :**

இப்பாடல் புறத்திணையைச் சார்ந்தது.

"இப் படிமத்து நிற்கும் இவன் யார்?" என்று சதுக்கம் ஒன்றில் நின்றிருந்த அண்ணாத்துரையின் படிமத்தைப் பார்த்துக் கேட்ட வழிப்போக்கற்கு விடையாகக் கூறியதாகும் இப்பாட்டு.

"தமிழ் மரபு தாழ, இருபதியாண்டுகள் வடநாட்டினரின் தில்லியாட்சிக்குக் கையாளாக நின்று, தமிழ் நிலத்தை ஆட்சி செய்த பேராயக் கட்சியின் வலிமையைத் தாழ்த்தி, அரசைத் தேர்தல் வழிகைப்பற்றி, மதராசு என்று வழங்கி வந்த இந்நாட்டிற்குத் <u>தமிழ்நாடு</u> என்னும் பெயரைச் சூட்டிய பெருமையும், ஆட்சி வெறியில் மேலேறி நின்ற தில்லியின் அதிகாரச் செருக்கை நொறுக்கிய வலிமையும், தலைநகரில் பதினொரு நாள்கள் உலகத்தமிழ் விழாவெடுத்துத் தமிழ்மொழிக்குப் பெருமை சாற்றிய துணிவும், தன் கருத்து வலிமையால் மூடக் கொள்கைகளை முறியடித்த திறமையும், எவர்க்கும் கட்டுப்படா இளைஞர்களைக் கட்டுப்படுத்திய சொல் வன்மையும் வினைவலிமையும் கொண்ட அண்ணாத்துரையென்னும் விறலோனுடையதாகும் இப்படிமம்" என்று விடையாக மொழிந்தது இது.

***பேராயம் எனும் பெரும் பெயர்க் களிறு*** - பேராயம் (Congress) என்னும் புகழ்வாய்ந்த கட்சி. கட்சிகளுள் அஃது ஒரு களிறு போல்வதாகலின் ***பெரும் பெயர்க் களிறு*** என உருவகிக்கப்பெற்றது.

***ஆரமர்க்களம்*** - நிறைந்த போர்க்களம். குடியரசமைப்பில் தேர்தலே போர்க்களம் போன்றதாகலின், அதன் வெற்றி தோல்வியே ஓர் அரசு அமைவதற்கும், சரிவதற்குமான அடிப்படைகளாம். ஆர்தல்- நிறைதல். பொருந்துதல். நிறைந்த அமர்க்களம் என்றது பொதுத் தேர்தலை.

*அலறக் கிடத்தல்* - புலம்ப வீழ்த்துதல், பேராயக்கட்சி ஒரு களிறு போல்வதாகலின் அதை புலம்பி யழும்படி அடித்து வீழ்த்தி - எனலாயிற்று.

*ஊராயத் திருத்தி* - ஊர்மக்கள் நடுவில் நிறுத்தி.

*உருக்குலைத்திட்டு* - அதன் பொய்யுருவைக் குலைத்து மெய்யுருவைக் காட்டி.

பேராயக்கட்சி தமிழ்மொழி வளர்ச்சிக் கெதிராக இந்தி நுழைப்பையும், தமிழினவளர்ச்சிக்கெதிராக ஆரியவின மேம்பாட்டுக்கான வற்றையும், தமிழ்நாட்டு வளர்ச்சிக்கு எதிராக வட நாட்டினர் தம் மேலாண்மைக்கு வழி வகுக்கவும் செய்ததெனினும், அது மக்களிடையில் தன்னை ஒரு நடுநிலைக் கட்சியென்றும், மக்கள் முன்னேற்றத்திற்கே உழைக்கும் தன்மை வாய்ந்ததென்றும் போலிக் கொள்கை கூறி அவர்கள் நம்பும்படி செய்தது. இப் பொய்ப் புனைவைத் தோலுரித்துக் காட்டி, அதன் புரட்டுகளை அம்பலப்படுத்திய அண்ணாத்துரையவர்கள் தலைமையாக நின்று இயக்கிய திராவிட முன்னேற்றக் கழகமே யாகலின், ஊராயத் திருத்தி உருக்குலைத்திட்ட பெருமை அவரையே சாருமென்க.

*தமிழக அரசை தலைமுதல் நிறுத்திய ...... அண்ணாத்துரையே* - பேராயக் கட்சி தமிழ்நாட்டரசை தி.பி. 1978 (கி.பி.1947) -இல் மேற்கொண்டது. அதை அண்ணாத்துரை அவர்கள் தி.பி. 1998 (கி.பி.1967) -இல் பொதுத் தேர்தல் வழி கைப்பற்றினார். அவரின் முதல் நடவடிக்கையாகத் தமிழ் நிலத்திற்கு அதுவரை இருந்த மதராசு மாநிலம் என்ற பெயரை மாற்றித் தமிழ்நாடு என்னும் பெயரை அமைத்தார். இப் பெயரே மூவேந்தர் காலத் தமிழாட்சியில் இடப்பெற்றிருந்தது. ஏறத்தாழ எண்ணூறாண்டுக் காலத்திற்குப் பின் மீண்டும் முதன் முதல் அப்பெயரைத் தமிழகத்திற்கு ஆக்கித் தந்த வரலாற்றுப் பெருமை அண்ணாத்துரையவர்களையே சார்ந்ததாகலின் ***தமிழக அரசைத் தலை முதல் நிறுத்திய அமிழா நெடும் புகழ் அண்ணாத்துரை*** எனக் கூறலாயிற்று.

***அடித்தலை தாழ்த்தி ...... மொய்ம்பே*** - உலக மொழிகளுக் கெல்லாம் பழமையானதும், இயற்கையானதும், தாயானதும், தலைமை சான்றதுமான தமிழ் மொழியை, ஆட்சியதிகார மேலாண்மையாலும் வலக்காரத்தாலும் தன் அடியின் கீழ்ப்படுத்தி, வடமொழி யாகிய சமற்கிருதத்தை ஊக்குவிப்பதாலும், மிகப்பிந்தியகாலத்தே தோன்றியதும், பன்மொழிக் கலவை மிக்கதும், செயற்கையானதும், ஆட்சிக்கென உருவாக்கிக் கொண்டதும் வட இந்தியாவில் வழங்கிவருவதுமாகிய இந்தியெனும் பயனற்ற ஒரு மொழியைத் தென்னகத்து மக்களிடை வலிந்து புகுத்துவதாலும், நாளுக்கு நாள் சீரழிந்து வருகின்ற தில்லியரசின் போக்கை, தன் வலிந்த இந்தி யெதிர்ப்புணர்ச்சியாலும் இருமொழிக் கொள்கையாலும் முறியடித்த மொய்ம்பு அண்ணாத்துரையின் ஆட்சியினது என்க. ***மொய்ம்பு***

- வலிமை. *தமிழ் கொல் தில்லி* என்றமையின் அக்கொல்வதாந் தன்மை தொடர்வதாம் நிலை உணர்த்தப்பெற்றது.

*இமிழ்கடல் ....... வையத்து . . . திறலே* - அண்ணாத்துரையின் திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்த மறு ஆண்டான தி.பி.1999(கி.பி. 1968)-இன் தொடக்கத்திலேயே உலகத் தமிழ் விழாவை உலகமெலாந் தழுவிய அளவில் தமிழ்நாட்டின் தலை நகராகிய *சென்னையம்பதியில்* சிறப்புறக் கொண்டாடியது. இவ்விழா சனவரி 3- ஆம் பக்கலிலிருந்து 11-ஆம் பக்கல் வரை கொண்டாடப்பெற்றது. இவ்விழாவில் தமிழகத்தினின்றும், பல வெளிநாடுகளிலிருந்தும் ஏறத்தாழப் பத்திலக்கம் மக்கள் வந்து கலந்து கொண்டனர். இவ்விழாவிற்கு ஏறத்தாழ ஓரிலக்கம் உருபா செலவிடப் பெற்றது. இவ்விழாவின் ஒரு பகுதியாக நடந்த அறிஞர் கருத்தரங்கில் நூற்று ஐம்பத்து மூன்று கட்டுரைகள் படிக்கப்பெற்றன. அவை, ஏறத்தாழ இருபத்தேழு நாடுகளிலிருந்து வந்த பேரறிஞர்களால் படிக்கப் பெற்றவை யாகும். இவ் விழாவின் பொழுதுதான் சென்னைக் கடற்கரையில் திருவள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர், ஔவையார் முதலிய முற்கால பிற்காலச் செந்தமிழ்ப் புலவர்களின் பதினொரு படிமங்கள் நிறுவப்பெற்றன. இவ்வளவு சிறப்புறும்படி மொழிக்கென எடுத்த வேறு ஒரு விழா உலகிலேயே இல்லை. இதன் வழி அண்ணாத்துரை அவர்களின் அரசு தமிழின் பெருமையை உலகெல்லாம் பறைசாற்றியது. வடவரின் தில்லி யாட்சியதிகாரத்தின் கீழும், வடமொழியாளரின் சூழ்ச்சிகளுக்கிடையிலும் இத்தகைய ஒரு விழா வெடுத்தது மிகத் துணிவான செயலாகும். அத்துணிவு அண்ணாத்துரையினுடையதே என்று இவ் வரிகளில் பாராட்டப் பெற்றது என்க, *திறல்* - வலிமை, துணிவு.

*மடம்படு கொள்கை* - மடமை நிறைந்த மூடக் கொள்கைகள். மக்களை நால்வேறு பிரிவினராக்கி அவர்களுக்குள் ஏற்றத் தாழ்வைக் கற்பித்ததும், மெய்ப்பொருள் கொள்கைக்கு மாறாக, அவற்றிற்குக் காவலாகச் சிறுதெய்வங்களைக் கற்பித்ததும், அவை தழுவிய ஆரவாரத் திருவிழாக்களை எடுப்பித்ததும், மக்களை மேலும் மேலும் மடமையில் ஆழ்த்தும் பகுத்தறிவுக் கொவ்வாத கருத்துகளைப் பரப்புவதும் மடம்படு கொள்கையாம். இவற்றைப் பெரும்பாலும் ஆரியர்கள் தமிழர்களின் மேம்பாட்டைச் சீரழிப்பதற்காகப் பயன்படுத்தினர். அவற்றை அண்ணாத்துரையவர்கள் மிகுவாகக் கடிந்து தடுத்து நிறுத்தினார்.

*மறித்து உயிர்ப்பு அடக்கி* - அவற்றைத் தடுத்து நிறுத்தி அவை மேலும் மேலும் கிளராவண்ணம் அவற்றின் மூலக்கரணியங்களை எடுத்து விளக்கி, அவற்றின் பொய்மையை நிலைநாட்டி அவற்றின் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை யிட்டார். *உயிர்ப்பு அடக்குதல்* - உயிரற்றுப் போகும்படி செய்தல்.

*உடம்பட நிறுத்திய விறல்* - மூடநம்பிக்கை நிரம்பிய கொள்கையைத் தடுத்துத் தன் கொள்கைக்கு உடன்பட்டுப் போமாறு மக்களைக் கொண்டு நிறுத்திய பெருமை.

*விறல்* - வெற்றி, பெருமை.

*புறம் பொய்த்து* - வெளிப்படையாகவே பொய் சொல்லி மக்களை ஏமாற்றி.

*புல்லியர் விதிர* - புன்மையாளர் நடுக்கமுற.

*அறம் பெறத் தூக்கிய அரசு* - அறத்திற்கு வழிவகுக்குமாறு நிறுத்திய அரசமைப்பு. மடம்படு கொள்கைகள் மறவுணர்வு சான்ற வாகையால், அவற்றைத் தடுத்து அறம் பெறுமாறு அரசமைத்தார் என்றவாறு.

*தற்சார் புற்ற* - தன்னைச் சார்ந்த ஒழுகும். தன் கொள்கையை ஏற்று நடக்கும்.

***இளையோர்*** - இளைஞர், தம்பியர். இவர் கட்சியைச் சார்ந்தவர் அனைவரும் அண்ணாத்துரையவர்களை அண்ணா, அண்ணா, என்று உடன் பிறப்புணர்வுடன் அழைக்கின்ற தன்மையை நோக்கின் அவரைப் பின்பற்றுபவர் அவரின் இளையோராகத் தம்மைக் கருதிக் கொள்பவரே என்க.

***சொற்சோர்வு*** - சொல் தளர்வு

***வினைவலி*** - செயல் வலிமை

***தோலாதிடுக*** - தோல்வியின்றி இலங்குக!

***தோள்*** - முயற்சிக்காக வந்த ஆகுபெயர்.

***கானிலை கொள்ளுக*** - அடிப்படை அசைவிலாது நிலையாக நிற்க.

***செந்தமிழ்க் கழல்*** - செந்தமிழின் வெற்றி. தமிழ்மொழிக்கும் தமிழ்பேசும் இனத்திற்கும் ஒரு தடை நீக்கம் செய்து பழம் பெருமையை மீண்டும் கால்கொளச் செய்தது இவர் கழகமாகலின் இவர் தம் வெற்றி செந்தமிழின் வெற்றி எனலாயிற்று.

இது, ***பாடாண்*** திணையும், ***இயன்மொழி*** என்துறையுமாம்.



## 33 யாங்கோய் வாளோ

*யாங்கோய் வாளோ தூங்குபிற் றூங்கி*
*ஆங்குமுற் புலர்ந்து வாழில் வினைந்து*
*பனிநீர்க் கொண்டு மணியுடல் மண்ணி*
*குனிநுதற் பளிங்கிற் குங்கும மிலங்க*
*எமைவிழிப் பித்தெஞ் சிறாரை எழுப்பி*
*அமைய வுதவி இமையும் ஓயாது*
*அடுக்களை வெம்பணி அலர்முகத் தலைந்தே*
*உடுக்கை வெளிற்றிப் பீறல் ஓட்டிச்*
*சாயல் ஞான்றொளி யேற்றியுண் டுவந்து*
*பாயல் வீழ்ந்தெமைப் பற்றி யோளே!*

**பொழிப்பு:**

எவ்விடத்து ஓய்ந்திருப்பாளோ, முன் இரவில் யாம் தூங்கிய பின் தூங்கி, அவ்வாறே மறுநாள் வைகறையில் எமக்கு முன்னதாகக் கண் விழித்து எழுந்து, வாழ்கின்ற அகத்தையும் புறத்தையும் வினையால் தூய்மைசெய்து, குளிர்ந்த நீரைக் கொணர்ந்து தன் அழகிய வுடல் குளித்துப் பளிங்கு போல் ஒளிசான்ற வளைந்த நெற்றியில் குங்குமம் விளங்கும் முகத்துடன், எமை விழிப்புறச் செய்து, எம் மக்களைத் துயில் களையச் செய்து, யாவர்க்கும் அவரவர் வினைகளுக்குப் பரிவு கலந்த அன்புடன் துணையாக நின்று, இமைப்பொழுதும் ஓய்வு கொள்ளாது, அடுக்களையின் வெம்மை நிறைந்த பணிகளில் மலர்ந்த முகத்துடன் அலைவுற்றுப் பிற்பகலில் அழுக்கடைந்த உடைகளை வெளுத்துத் தூய்மை செய்து, கிழிந்தவற்றைத் தைத்துச் சாயுங்காலப் பொழுதில் விளக்கம் ஏற்றி, இராவுணவு உண்பித்துத் தானும் உண்டு, எல்லாருடனும் பேசி மகிழ்ந்து மீண்டும் படுக்கையில் வந்து வீழ்ந்து எம்மைக் காதலால் பற்றிக் கொண்ட தலைவியாகிய இவளே!

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

கற்புக் காலத்துத் தலைவியின் ஓயாத இல்லறப் பணிகளைக் கூர்ந்து நோக்கிய தலைவன், அவள் அவற்றை அமைதியுடனும் மகிழ்வுடனும் மிகுந்த பொறுமையுடன் செய்வதையும், அவற்றுக் கிடையில் அவள் சிறிதும்

ஓய்வின்றி இயங்குவதையும் கண்டு வியப்பும் இரக்கமும் மேலிட, தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லி, அத்தகைய அவளைப் பெற்றமைக்காகப் பெருமிதம் கொண்டதாக அமைந்ததிப்பாட்டு.

*யாங்கு ஓய்வாளோ* - எவ்விடத்து எவ்வகையில் ஓய்வு கொள்வாளோ? இரக்கவுணர்வால் பாட்டின் முதலாக நின்றன இச்சொற்கள்.

*தூங்கு பின்* - தூங்கிய பின் இறந்த காலத்தை உணர்த்தியது.

*ஆங்கு* - அவ்வாறே பொறுப்புடன் எல்லாரையும் தூங்கச் செய்த பின் தூங்கியவள். அதே பொறுப்புடன் எல்லார்க்கும் முன்னே எழுந்ததைக் குறிப்பிட்டது.

*வாழில்* - வாழ்தல் செய்கின்ற இல்லத்தை.

*வினைந்து* - வினையைச் செய்து.

*கொண்டு* - போய்க் கொணர்ந்து.

*மணியுடல்* - அழகிய வுடல். இல்லறப் பணிகளால் அவளுடல் துயர் கொள்வதைப் பொறாத வுளத்துடன் வெளிப் போந்ததாகும் இச்சொல். ‘இவ்வழகிய வுடலை அவள் ஓய்வின்றி அலைவு செய்கின்றாளே’- என்று காதலாற் கசிந்தது.

*மண்ணி* - கழுவி. மணியுடல் என்றதால் மண்ணி எனலாயிற்று. அவள் உடல் வருத்தமுறாது இருத்தல் வேண்டும் என்னும் குறிப்புத் தோன்றக் கூறியது.

*குனிநுதல்* - வளைந்த நெற்றி.

*பளிங்கில்* - பளிங்கு போல் ஒளி பொருந்திய நெற்றி.

*குங்குமம் இலங்க எமை விழிப்பித்து* - தான் கண்விழிக்கையில் தன் முன் அவள் குளித்து முழுகிய தோற்றத்துடனும், குங்குமம் விளங்கும் நெற்றியுடன் கூடிய மலர்ந்த முகத்துடனும் நிற்பது, தலைவன் உள்ளத்தில் அவளுக்கொரு பெருமையைத் தோற்றியது. தட்டியோ, அழைத்தோ எழுப்பாமல், நெருக்கமாய் அருகில் நின்றோ கையால் மெதுவாகத் தீண்டியோ, நீவியோ அவன் தானே விழிப்புறும்படி செய்தாள் என்க.

அவள் தன் மேல் கொண்ட அன்பையும் மதிப்பையும் அவன் உணர்ந்து வியந்தது குறிப்பால் நின்றது.

*சிறாரை எழுப்பி* - தம் குழந்தைககளை உலுப்பியோ, கூவியோ விழிப்புறச் செய்தாள் என்றபடி.

இங்குத் தலைவனை விழிப்புறச் செய்தபின் அவள் அவ்வாறு செய்ததும், அதற்கு முன் செய்யாமையும், பிள்ளைகளை எழுப்பும் அரவத்தான் தலைவன் திடுக்கிட எழக்கூடாதே என்னும் அவள் மனக் குறிப்பை உணர்த்திற்று.

பெரும்பாலும் மிகு காலையில் எழும்போது நிற்கும் உள்ள உணர்வே அன்றைப் பொழுது முழுவதற்கும் அடிப்படையாக அமைவதாகலின், ஒருவரைத் துயிலினின் றெழுப்புகையில் மற்றவர் எவ்வாறு நடந்து கொள்ளுதல் வேண்டும் என்னும் குறிப்பை உணர்க.

*அமைய வுதவி* - அவரவர் பணிகளில் அமைதியுடன் உதவியாக நின்று.

*இமையும் ஓயாது* - இமைப் பொழுதும் ஓய்விலாது.

*அடுக்களை வெம்பணி.* - சமையலறையில் வெப்பம் நிறைந்த பணி.

*அலர்முகத்து அலைந்து* - மலர்ந்த முகத்துடன் அலைவுற்று. வெப்பம் மிகுந்த சூழலிலும் தன் மலர் முகம் வாடாது கடமையாற்றும் அவள் மனப்பாங்கை வியந்தது.

*வெளிற்றி* - அன்றாடம் அழுக்கடைந்த உடைகளைத் துவைத்து வெளுத்து.

*பீறல் ஓட்டி* - சிறு சிறு கிழிசல் அடைந்த உடைகளைத் தைத்து இணைத்து தையலை நூலால் ஒட்டுதலால் ஒட்டி எனப்பெற்றது.

*சாயல் ஞான்று* - சாயுங்காலப் பொழுதில்.

*ஒளியேற்றி* - விளக்கம் ஏற்றி.

*உண்டு உவந்து* - உண்டு முடித்து அன்றாடப் பணிகளால் மனந்திரிபுறாது, எல்லாருடனும் இணைந்து மகிழ்ந்து.

*பாயல் வீழ்ந்து எமைப் பற்றியோளே!* - அவள் படுக்கையில் சேர்வதற்கு முன்பே தலைவன் அதில் படுத்திருந்தது, *'வீழ்ந்து எமைப் பற்றினாள்'* என்னும் குறிப்பால் உணர்த்தப் பெற்றது. தலைவனைத் தலைவி பற்றுதல் காதற்குறிப்பாய் அமைந்தது.

*'பற்றியோள், யாங்கு ஓய்வாளோ'* என்று இணைக்க.

இப்பாடலைத் தலைவன், தலைவி தன்னை இராப்படுக்கையில் பற்ற வந்த நேரத்து, அவளை அன்பூற ஆறுதலுடன் அணைத்தவாறு நினைத்துக் கொண்டதாகக் கொள்க.

"நேற்று இராப்பொழுது என்னோடிருந்து, யான் தூங்கியபின் தூங்கி, வைகறையில் எனக்கு முன்னரே எழுந்து தலைவியாக நின்று, இல்லறப் பணிகளில் மலர்ந்த முகத்துடன் அலைவுற்றுத் தாயாகி என்னையும் மக்களையும் புரந்து பேணி, மீண்டும் இவ்விராப்பொழுதில், இளமைக் காலத்தின் காதல் குறையாத உள்ளத்துடன் வந்து என் தோளைப் பற்றுகின்ற இவள்தன் பணிகளுக்கிடையில் எவ்வாறு எவ்விடத்து ஓய்வாக அமர்கின்றாள்? இல்லையே" என்று வியப்போடு இரக்கமுற்றுப் பெருமிதத்துடன் அணைத்துக் கொண்டான் தலைவன் என்க.

*இது முல்லைத் திணையும், கற்புக் காலத்துத் தலைவியை வியந்து தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிய தென்னுந் துறையுமாம்.*

# 34 இனிதவன் நினைவே!

*சொல்லொடு புனையின் புல்லெனப் போமே;*
*சொல்லின் றமையின் இல்லென் றிழிமே!*
*ஒன்றுபா ராட்டி னொன்றுசீர் குன்றும்*
*நின்றுயிர் இயங்க லொன்றே சாலும்*
*இன்றுபோல் வதுவே எதிர்ந்தவந் நாளே*
*அன்றன்று புதிதவ னணைப்பே*
*என்றும் அகத்தது இனிதவன் நினைவே!*

**பொழிப்பு :**

*சொற்களைக் கொண்டு புனைந்துரைப்பின் (அவன் அன்பு) புல்லியதாகப் போகும். சொல்லப் பெறாமல் அமைந்துவிடின் அஃது இல்லையென்றாகும்; அந்நிலை மிக இழிந்தது! (அவன் அன்பு நிலைகளில் யாதானும் ஒன்றைப் பாராட்டியுரைப்பின், பிறிதொன்றினது பெருமை குறைவுபடும். என் உயிர் இன்றுகாறும் உடலில் நின்று இயங்குவதொன்றே(அவன் என்பால் காட்டும் அன்புக்குப்) பெருமை தருவதாகும். இன்றுபோலவே உள்ளது, அவன் முதன் முதல் வந்து என்முன் எதிர்ப்பட்ட நாள்! அன்றன்றைக்கும் புதியதாகும் அவன் அன்பு நிறைந்த தழுவல்! (அவ்வன்பு நிலை யாவும்) என்றைக்கும் என் உள்ளத்தது; இனிது ஆகும், அவனைப் பற்றிய நினைவு!*

**விரிப்பு:**

*இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.*

*இல்லிருந்து அறம் பேணிவரும் தலைவியைத் தோழி, 'அவன் அன்பு எத்தகையது' என்று வினவ, 'அது சொற்களைக் கொண்டு புனைந்து சொல்லுந் தகையதன்று; அவ்வாறு சொல்லின் அது புல்லியதாகப் போய்விடும்; இனி, சொல்லாதும் நினக்கு விளங்காதாகையால் அஃது இல்லையோ என ஐயறவுக்கிடமாகி இழிவு பெற்றுவிடும். அவனது அன்பின் பெருமை நிகழ்ச்சிகளில் ஒன்றை எடுத்துக்கூறின், மற்றொன்று பெருமையில் தாழும்; என் உயிர் இன்றுவரை உடலில் பொருந்தியிருப்பதே அவ்வன்பின் பெருமையை உரைக்கப் போதுமான சான்றாகும்; அவன் என்முன் வந்து மகிழ்வூட்டிய அந்த முதல்நாளைப் போன்றே, இன்றும் எனக்குக் காட்சி தருகின்றான், ஒவ்வொரு நாளும் புதியதாகும் அவன் தழுவல்; என்றைக்கும்*

அவன் அன்பு என் அகத்தில் நிறைந்து இன்பம் தருகின்றது; அவனைப்பற்றிய நினைவே எனக்கு இன்பம் தருவதாகும்' என்று உரைத்து, தலைவனது அன்பின் பெருமையை உணர்த்துவதாகும் இப் பாட்டு.

*சொல்லொடு புனையின்* – சொற்களைக் கொண்டு புனைந்துரைப்பின். என்னை? 'புனையினும் புல்லென்னும் நட்பு' என்றாராகலின், அவன் அன்பு சொற்களால் புனைந்துரைப்பது அன்று. சொற்களால் அமைந்து விடுவதன்று, என்பதாகும்.

*புல்லென* – புல்போல் எளிமை சான்றது. புல்லியதாக.

*சொல்லின் றமையின்* – சொல்லாமல் அமைந்து விடுவதெனின்.

*இல்லென்று இழிம்* – இல்லை என்றாகி இழிந்ததுபோல் ஆகிவிடும். அவன் அன்பைப்பற்றி ஒன்றும் கூறாது அமைந்து விடுவேனாயின், ஒருவேளை அவன் அன்பாக நடந்து கொள்வதில்லையோ என்று பொருள்பட்டு அவன் பெருமைக்கே இழிவாகிவிடும்.

*ஒன்று பாராட்டின் ஒன்றுசீர் குன்றும்* – அவன் அன்புச் செயல்களில் ஏதானுமொன்றை எடுத்துப் பாராட்டிப் பேசின், மற்றைய வகைகளில் அவன் அன்பின் பெருமை குறைவுபடும்; ஆகையால் அதுவும் பிழையாகி விடும்.

*நின்றுயிர் இயங்கல்* – என் உயிர் இன்று வரை என் உடலினின்று இயங்கிக் கொண்டிருப்பதே.

*ஒன்றே சாலும்* – அவன் அன்பு சிறந்ததாக உள்ளதென்று அவ்வொரு நிலையினாலேயே எண்ணிக்கொள். அவ்வாறில்லையாகின் என் உயிர் என்றோ என் உடலை விட்டுக் கழிந்திருக்கும், என்பது பொருள்.

*இன்று போல்வது* – இன்றைக்குப் போல் உள்ளது.

*எதிர்ந்த அந்நாள்* – அவன் என்முன் எதிர்பட்டுத் தலைக்கூடிய அந்த நாள்.

அவன் என்னைக் கூடிய முதல் நாளைப் போன்றே, இன்றும் அன்பு நிறைவால் அவன் நடந்து கொள்கின்றான் என்க.

*அன்றன்று புதிது, அவன் அணைப்பு* – அவனது தழுவல், ஈடுபாடு – அன்றன்றும் புதியதாகவே எனக்குப் படும்படி அவன் அன்பைப் பொழிகின்றான் என்றபடி

*என்றும் அகத்தது* – அவன் நிறைந்த அன்பு என்றும் என் அகத்தை ஆட்கொண்டுள்ளது. அது புறத்தே கூறுதற்கியலாதது. எனவே சொற்களால் புனைந்து கூற முடியாது என்க.

*இனிதவன் நினைவு* – அவன் நினைவு ஒன்றே எனக்கு இன்பம் பயப்பது. நேர்ச்சி இன்னும் இனியதாம் என்க.

'அவன் அன்பு எத்தகையது, சொல்' -எனக் கேட்கின்றாய்; அது சொல்லுந்தகையதன்று; சொல்லாமல் வாளா அமைந்திருக்கும் தகையது மன்று. அவனைப் பற்றி யாதானும் ஒன்றைக் கூறுவதாயின் மற்றொன்று பெருமை இழக்கும். என் உயிர் உடலில் உறைந்திருப்ப தொன்றினாலேயே நீ உய்த்துணர்ந்து கொள், அவ்வன்பு உண்மையது என்பதை. அவ்வாறில்லாவிடின் நான் என்றோ உயிர் துறந்திருப்பேன். அவன்முதல் நாள் என்னைக் கண்டது போலவே இன்றும் நடந்து கொள்கின்றான். அவன் அன்பு ஒவ்வொரு நாளும் புதிய உணர்வை எனக்கு ஊட்டுகின்றது. அவ்வன்பு உணர்வு புறத்தே எடுத்துக் கூறற் கியலாதது ; உள்ளத்தே உறைந்து நிற்பது. அவன் நினைவே எனக்கு இனியதாகப் படுகின்றது ; எனின், அவன் செயல்களைப் பற்றிப் பேசவும் வேண்டுமோ ? வேண்டா' -என்றபடி, என்க.

இது, *முல்லைத் திணையும் பெருமையின்றரியா அன்பைப் புகழ்ந்தது* என்னுந் துறையுமாகும்.



# 35 பேதை மடமகள்

*பெறல்தந் தாளே பெறல்தந் தாளே!*
*அறம்படு நெஞ்சின் அல்லோர்க் கிணங்கி*
*அழனிற மேனி ஆம்பியற் சாம்ப,*
*குழலுகச் செங்கண் குழிந்துவெள் ளோடக்*
*கழைதோள் கூனிக் கவின்கெட, வைகல்*
*மதியம் போலும் முகவொளி மழுங்க*
*நுதிவெடிப் புண்டு மடிநனி வறல,*
*அறலென அடிவயிறு மடியத் திறலறப்*
*பெறலே வினையாப் பேதை மடமகள்*
*பொறையோர் பொறைகெடப் பெறல்தந் தாளே!*

**பொழிப்பு:**

*(குழந்தைகள் பலவாகப்) பெற்றுத்தந்தவளே! பெற்றுத்தந்தவளே! அறம் அழிந்து போன நெஞ்சையுடைய பொல்லாதவர் பலரின் தழுவலுக்கு இணங்கி, தீயைப் போலும் சிவந்த ஒளிபொருந்திய மேனி, காளானைப் போல் நிறம் வெளிர்ந்து சாம்பிப் போகும் படியும், அடர்ந்த கூந்தல் உதிர்ந்து அழகிழக்கும் படியும், சிவந்த கண்கள் குழிவு எய்தி வெளிர்நிறம் பாயுமாறும், மூங்கில் போலும் ஒளியும் அழகும் வாய்ந்த இளந்தோள்கள் கூனலுற்று, அழகு கெடும்படியும், காலை நேரத்தில் புலப்படும் முழுநிலவு போல் முகத்தின் ஒளி மழுங்கித் தோன்றுமாறும், காம்புகள் வெடிப்புற்று முலைகள் நன்கு வறண்டு தொங்கும் படியும், மணல் அலைகளென அடிவயிறு மடிந்து விழும்படியும், தன் உடல் திறம் முழுவதும் அற்றுப் போகுமாறும், பெற்றுத் தருவதையே வேலையாகக் கொண்டு பேதைமை சான்ற அவ்வேழைப்பெண், பொறுமையே குணமாகக் கொண்டவர்கள் கூட இவள் செயலைக் கண்டு பொறுமை இழக்கும் படியும், பல குழந்தைகளைப் பெற்றுத் தந்தவளே!*

**விரிப்பு:**

*இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது. அவள் தலைவன் நயந்த பரத்தை எத்திறத்தாள் என வினவிய தோழிக்குத் தலைவி, "அவள், அறம் போகிய இருண்ட நெஞ்சையுடையப் பொல்லாதவர் பலர்க்கும் இணங்கி, ஒளி பொருந்திய உடல் வெளிறிப் போகும் படியும், அடர்ந்த குழல் உதிர்ந்து*

அழகிழந்து போகும் படியும், கண்கள் குழி விழுந்து, தோள்கள் கூனுதலுற்று, முகம் ஒளி மழுங்கி நிற்குமாறும், நுனிகள் வெடிப்புற்றுப் பூரிப்பின்றி மார்புகள் வறண்டு கிடக்கவும், அடிவயிறு மணல் அலைகள் எனுப்படி திறங்கி மடிப்புகள் எய்தவும், சூலுற்றுப் பெறுவதையே வேலையாகக் கொண்டவள் போல், அறிவில்லாத அவள், பொறுமை மிக்கவர்களும் பொறுமையிழக்கும்படி, பல "குழந்தைகளை பெற்றெடுத்தவள்" என்று பழித்தாளாக.

*பெறல் தந்தாள்* - என்னும் எடுப்புக் குறிப்பினால், தான் இன்னும் 'பெறாத தன்மையுடையள்' என்றும் உணர்த்தினாள் என்க. இருமுறை அடுக்கால், அடிக்கடி பல குழந்தைகளைப் பெற்றவள் என்று தன் வெறுப்புத் தோன்றும்படியும், அவள் முதுமை புலப்படும்படியும் பழித்தாள் என்க.

*அறம்படு நெஞ்சின் அல்லோர்க் கிணங்கி* - என்றமையால், அவளை அணுகுவார் தன்மை உணர்த்தப் பெற்றது. அறமல்லாத கொடிய நெஞ்சையுடையவர்கள் தம் ஆசைக்கும் பொருளுக்கும் இணங்கியவள் என்றதால், தன் தலைவனையும் அறம்பட்ட நெஞ்சினன் என்றும், பொருள் மிகுப்பால் நெறியற்றவன் என்றும் கடிந்தாள் என்றபடி.

*அழல் நிற மேனி* - நெருப்பைப் போலும் சிவந்த மேனி, இது, புகழ்வது போலப் பழித்ததாம். தாமரை மலர் போலும் சிவந்த மேனி என்பது போல் சொல்லாமல், நெருப்பைப் போலும் சிவந்த மேனி என்றது, அவள் உடல் குளிர்ச்சியற்று நெருப்பைப் போலும் கனலும் தன்மையுடையது கொடியது, தீயது எனற்கு. ஆனால் அத்தன்மையுடைய உடலும் இக்கால் எரிந்து சாம்பலாகவே போனது போல் காளானைப் போல், சாம்பி விட்டது என்ன ஆம்பியிற் சாம்ப என்றாள்.

*குழல்உக* - தலைமயிர் உதிர்ந்து போகும்படி எனவே அவளுக்குத் தலைமுடி நீண்டிருந்ததைப் புலப்படுத்தினாள் என்க.

*செங்கண்* - செவ்வரி படர்ந்த கண், புணர்ச்சி மிகுதியில் சிவந்த கண்.

*குழிந்து வெள்ளோட* - குழியாகி, வெளிறு அடையும்படி,

*கழைதோள் கூனிக் கவின்கெட* - மூங்கிலைப் போலும் அழகிய தோள், மிகுதிப் புணர்ச்சியினாலும், பிள்ளைப் பேற்றினாலும் அழகு கெடும்படி கூனுதலுற்று நிற்க.

*வைகல் மதியம் போலும்* - வைகறையின் முழுநிலாப் போல. விடியற்காலையின் முழுநிலவின் ஒளி படிப்படியாக மழுங்குதல் போல், முகத்தின் ஒளி மழுங்கிப் போகு மாறும்.

*நுதி* - நுனி; முலைக்கண். *வெடிப்புண்டு* - பலரும் வருடுதலாலும் அடிக்கடி பிள்ளை பெறுதலாலும் காய்ந்து வெடிப்புற்றுப் போகும்படியும்.

*மடி நனி வறல* - முலைகள் எழுச்சியின்றி நன்றாக வற்றிப் போகும்படியும். இளமைக்கே அழகுதரும் மார்பகம் நிமிர்தலின்றி தாழ்ந்து தொய்ந்து போகும்படியும்.

*அறலென அடிவயிறு மடிய* - மணல் அலைகள் போலும் அடி வயிறு மடிதலுறும் படியும்.

*திறல் அற* - உடல் திறன் குன்றுமாறும்.

*பெறலே வினையா* - பிள்ளை பெறுவதையே வேலையாகக் கொண்ட

*பேதை மட மகள்* - உடலை விற்று உடலை வளர்த்தல் தீமை பயக்கும் என்று அறியாத பேதைமை சான்ற மடப்பம் பொருந்திய பெண்; மூட மகள்.

*பொறையோர்* - பொறுமை மிகுந்த சான்றோர்.

*பொறைகெட* - இவள் செயல்களால் பொறுமையிழந்து வெகுளும்படியும்.

*பெறல் தந்தாள்* - பல குழந்தைகளைப் பெற்றுத் தந்தவள். கணவன் அல்லாதவர்களிடத்துத் தொடர்பு கொண்டு பல பிள்ளைகளைப் பெற்றவள்.

இனி, சாம்ப, உக, ஓட, கெட, மழுங்க, வறல, மடிய என்னும் எச்சங்களை, முற்றாகக் கொண்டு, சாம்பிப் போக, அழிந்து போக, மறைந்து போக, ஒழிந்து போக, மழுங்கி போக, வறண்டு போக, மடிந்து போக என்று ஏசிச் சாவித்தாள் எனவும் கொள்க.

அறமல்லாத நெஞ்சைக் கொண்ட தலைவனுக்கும், அவனைப் போலும் பலருக்கும், அவர்கள் தரும் பொருளுக்காக அணைய இசைந்து, அதனால் தன் நலன்கள் கெடுமாறு பல பிள்ளைகளைப் பெற்றுத் தந்தவளாகும் அப் பரத்தை எனத் தலைவி அவளைப் பழித்து ஏசினாள் என்க.

இனி, தான் அத்தனை நலன்களையும் பெற்றிருந்தும், அந்நலன்கள் முற்றும் அழிந்த விலைமகளை அவன் நாடினான் ஆகலின் அவன் அறம் கொன்றவனும் ஆகும்; இனி, அவனைச் சான்றோரும் பொறுக்கார், நான் எவ்வாறு பொறுத்தல் இயலும் என்னுங் குறிப்புத் தோன்ற உரைத்தாள் என்றபடி.

இது, *பெருந்திணையும், பரத்தையை ஏசல்* என்னுந் துறையுமாகும்



# 36 ஒருத்தியீங் குண்டே

தோட்குரி யோயே! தோட்குரி யோயே!
கேட்கருந் தொலைவிற் கிடந்துநீர் வடிய
நாட்குநா ளிளைக்குந் தோட்குரி யோயே!
முன்மழை சிதர்ந்து பின்னிலாக் காயும்
மென்னடை யிரவின் எதிர்நா ளெண்ணி
நோன்றரு பிரிவிற் றான்றனிப் புலம்புநள்
ஆன்ற தெருவின் அதிர்சிலை மடுத்தே
ஓய்வறக் குரைக்கும் ஒருதனிக் குக்கல்
பாய்ந்தின் வருகை தடுக்குமென் றஞ்சி
எழலும் விழலு மாகி
உழலும் மெய்யோ டொருத்தியீங் குண்டே!

**பொழிப்பு:**

தோளுக்குரியவனே! தோளுக்குரியவனே! அழைப்பொலி கேட்பதற்கு இயலாத நெடுந்தொலைவில் (இல்லத்தே படுக்கையில் தூக்கமற்றுக்) கிடந்து, (நின் பிரிவுத் துயரால்) கண்களில் நீர் வடியும்படி (வாடி) நாளுக்கு நாள் இளைத்துப் போகின்ற (நின் தலைவியின்) தோளுக்கு உரியவனே! முன்யாமத்துப் பெய்த மழை தூறியடங்கிப் பின் யாமத்தில் நிலாக் காய்ந்து வீசும், மெதுவாக நடையிடுகின்ற இரவுக்கு அடுத்துவரும் நாளைக் கணக்கு வைத்து எண்ணியவாறு, கற்பு நோன்புடன் தாங்குதற்கரிய பிரிவில், தனக்குத் தானே பேசிப் புலம்புகின்றவள், நெடிதகன்ற தெருவில் அலைந்து வரும் எதிரொலியைக் காதுகளில் வாங்கியவளாய், ஓய்வில்லாமல் குரைக்கின்ற தனித்த ஓர் ஒற்றைக் குள்ள நாய், ஒரு வேளை, முன்னறிவியாமல் வருகின்ற) உன் இனிய வருகையைத் தடுத்து விடுமோ என்று அஞ்சி, எழுந்து வந்து வாயிலைப் பார்ப்பதும், வராமை கண்டு உளச் சோர்வுடன் மீண்டும் படுக்கையில் வீழ்வதுமாகிய, உழல்கின்ற உடம்புடன் ஒருத்தி, இங்கு உள்ளாள்.

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தலைவனின் ஓதற் பிரிவால் உழன்ற தலைவியின் துயரைத் தோழி தலைவற் குணர்த்தியது.

*திருமணத்தின்பின், கற்புக் காலத்து, கல்வியின் பொருட்டுப் பிரிந்து சென்ற தலைவனை நாளும் எதிர்நோக்கிய தலைவியின் துயரத்தை அவன் உணருமாறு, தோழி, ஒரு மடல்வழிப் புலப்படுத்தியதாகும், இப்பாடல் என்க.*

*"தோளுக்குரியவனே! தோளுக்குரியவனே! கேட்பதற்கு அரிய நெடிய தொலைவில் இருந்து, நாளுக்கு நாள் இளைத்துப் போகின்ற தலைவியின் தோளுக்குரியவனே! முன் யாமத்துப் பொழிந்த மழை நின்று, பின் யாமத்துக் காய்கின்ற நிலாவொளி நிரம்பிய இரவில், அவள் வழக்கம்போல் உன் வரவை எண்ணி எதிர்பார்த்துக் கிடக்கின்றாள்; அக்கால் எங்கோ ஓர் ஒற்றை நாய் குரைக்கும் எதிரொலி அவள் செவிகளில் எட்டுகின்றது. அக்கால் ஒருவேளை, நீ வருவதாயிருப்பின் அவ் வரவை அந்த நாய் தடுத்து விடுமோ என்று அஞ்சி, எழுந்து ஓடுவதும், பின் வராதது கண்டு மீண்டும் வந்து படுப்பதுமாகிய வெற்றுடம்புடன் இங்கொருத்தி உள்ளாள் என்பதை நினைவிற்கொள்"-என்று தோழி, தன் தலைவியின் நிலையை ஒரு மடல் வழித் தலைவனுக்கு அறிவிக்கின்றாள் என்க.*

***தோட்குரியோயே!*** *- தோளுக்குரியவனே!- தோளுக்குரியவன் என்றதால் திருமணம் செய்த உரிமை புலப்பட்டது. இருமுறை அடுக்கியதால் நினைவூட்டுதலாகவும் அமைந்து, இரக்கக் குறிப்பும் புலப்பட்டது. ஏற்கனவே ஒருத்திக் குரியவன் என்னும் உரிமை சாற்றியதால், பிறர்க்குரிமை மறுக்கப் பெற்றது என்க.*

*தலைவியின் அனைத்து உறுப்புகளுக்கும் உரியவனான தலைவனை, தோளுக்கு மட்டும் உரியவனாகச் சிறப்பித்துக் கூறியது என்னெனின், அது தழுவலுக்குரிய தாகலின் என்க. மேலும் தலைவனின் பிரிவால் மெலிவுறும் தலைவியின் பிற உறுப்புகள் யாவினும் தோளே மிகவும் மெலிந்து தோன்றி அழகு குன்றிப் போவதாலும் என்க.*

***கேட்கருந் தொலைவு*** *- பேசுகின்ற ஒலி கேட்பதற்கு அருமையான தொலைவு.*

*தலைவியின் தனித்துப் புலம்புகின்ற ஒலியை நாங்கள் நாள்தொறும் கேட்கும்படி அருகிலிருக்கின்றோம். நீயோ அதைக் கேட்க வியலாதவாறு சேய்மையிலிருக்கின்றாய் என்று குறிப்புணர்த்தினாள் என்க. இதனால் அவள் துயர் நன்கு உணர்த்தப் பெற்றது.*

***கிடந்து*** *- படுக்கையில் துயிலின்றி வெறுமனே படுத்திருந்து.*

***நீர் வடிய*** *- கண்ணீர் வழியும்படி நனைந்திருக்கும் தோள்.*

***நாட்கு நாள் இளைக்கும் தோள்*** *- நாளுக்கு நாள் இளைத்து வருகின்ற தலைவியினது தோள். பிரிவுத் துயரால் ஒவ்வொரு நாளும் வருந்திக் கிடக்கின்றமையின், தோளின் அழகும் வலிவும் கெட்டு இளைத்தது என்றாள். நாளுக்கு நாள் என்றதால் முன்னைய நாளினும் அடுத்த நாள் மேலும் இளைத்தது கூறப்பெற்றது.*

இனி, தோட்குரியோயே என்று மூன்றாம் முறை அடுக்கியது, அவ்வாறு இளைத்துப் போகின்ற தன்மைக்கு நீ இரங்குதல் வேண்டும் என்று குறித்தது.

*முன் மழை ..... காயும்* - முன் யாமத்து மழை பொழிந்து பின் யாமத்து நிலவொளி காய்கின்ற இரவு.

முன் யாமத்துப் பெய்த மழையால் நிலமும் காற்றும் குளிர்ச்சி யடைந்திருப்பினும், பின் யாமத்தின் நிலவொளி அவளுக்கு வெப்பத்தைத் தருகின்றது. அந்த நிலைக்குப் பிரிவுத் துயரால் அவள் வாடுகின்றாள் என்றபடி.

*மென்னடை இரவு* - மெதுவாகக் கழிகின்ற இரவு.

முன்யாமத்து மழை பெய்வதும், பின் யாமத்து நிலவு காய்வதும் போலும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் தலைவி தூங்காமலிருந்து காணுவதால் அவளுக்கு அவ்விரவு மெதுவாகக் கழிகின்றதுபோல் தோன்றகின்றது. விரைந்து போகாத தன்மையால் நடக்கின்ற இரவு என்றாள்.

*எதிர்நாள் எண்ணி* - இரவுக்குப் பின் வருகின்ற பகலுடன் தலைவன் தன்னைப் பிரிந்து சென்ற நாளைக் கணக்கிட்டு எண்ணிப் பார்த்தவளாய்.

*நோன்றரு பிரிவு* - தாங்குதற்குரிய பிரிவு. இல்லிருத்தல் முல்லை என்றதால் நோன்பு என்பதைக் கற்பு நோன்பாகக் கொண்டு, அந்நோன்புடன் கூடிய அரிய பிரிவு என்றும் பொருள் கொள்க.

*தான்தனிப் புலம்புநள்* - தான் ஒருத்தியாகவே தனித்துப் புலம்புதல். புலம்புதல்- தனியாகப் பேசிக்கொள்ளுதல், நாள் எண்ணுதல் வராமை குறித்து வருந்துதல் போலும் புலம்பல்.

*ஆன்ற தெரு* -அகன்ற தெரு. அகன்றிருப்பதால் நீண்டும் இருத்தல் வேண்டும் என்க.

*அதிர் சிலை மடுத்து* - அதிர்ந்து வரும் எதிரொலியைக் கேட்டு.

இரவில் எங்கோ தெருக்கோடியில் குரைக்கின்ற நாயின் ஒலி, நெடிதகன்ற தெருவாகலின், எதிரொலித்துக் கேட்கின்றது. இனி, மடுத்து என்றதால் தலைவியே அவ்வொலியைக் கூர்ந்து கேட்டு அறிந்தாள் என்க.

*ஓய்வறக் ..... குக்கல்* - ஓய்வில்லாமல் குரைக்கின்ற தனித்த ஒரு குள்ளநாய். ஒலி வேற்றுமையால் அதைக் குள்ள நாய் என்றும் தனித்த நாய் என்றும் உணர்ந்தாள் என்க.

இனி, தன்போலவே அந்த நாயும் இரவில் ஓய்ந்திராமல் தொடர்ந்து குரைத்துக் கொண்டே யிருப்பதால், அதுவும் துணையின்றித் தனியாகத்தான் இருத்தல் வேண்டும் என்றும் வரைந்தாள் என்க.

*பாய்ந்து இன்வருகை தடுக்கும் என்று அஞ்சி* - மேற் பாய்ந்து தலைவனின் இனிய வருகையைத் தடுத்துவிடுமோ என்று அஞ்சியவளாய்.

ஒவ்வொரு நாளிரவிலும் தலைவி தலைவனின் வரவு நேராதோ என்று எதிர்பார்த்துக் கிடக்கின்றாள். ஒவ்வோர் இரவும் அவன் வந்து விடுவான் என்றே எண்ணுகின்றாள். ஆனால் அந்தக் குறிப்பிட்ட இரவில் தனித்த ஒரு நாய் வேறு தொடர்ந்து குரைத்துக் கொண்டுள்ளது. ஒருவேளை, முன்னறிவிப்பின்றித் தன் தலைவன் அன்று வர நேர்ந்தால், அருமையாக நேரும் அவனின் இனிய வருகையையும், அந்த நாய் அவன் மேற்பாய்ந்து தடுத்துவிட்டால் என்செய்வது என்னும் கவலையால் அலமருகின்றாள் தலைவி.

துணையுடன் உள்ள நாயாகவன்றித் தனித்த நாயாகவுள்ளதால் மேலே பாயலாம் என்று அஞ்சுகின்றாள். அவ்வாறு அஞ்சி *எழலும் விழலுமாக* விருக்கின்றாள்.

*எழலும் விழலும் ஆகி* - (எதிர்பாராமல் நேருகின்ற தன் தலைவனின் இனிய வரவைத் தொடர்ந்து குரைக்கின்ற அந்த நாய் அவன் மேல் பாய்ந்து தடுத்துவிடுமோ என்று அஞ்சியவள்) படுக்கையிலிருந்து எழுந்து வெளியே ஓடிப் பார்ப்பதும், பின் சோர்வுற்று உள்ளே வந்து மீண்டும் படுக்கையில் விழுவதுமாக இருக்கின்றாள் என்க.

*எழலும் விழலும்* - விரைவுக் குறிப்புடன் கூடிய சொற்கள். எழுதல் விழுதல் இயல்புக் குறிப்பான சொற்கள்.

*உழலும் மெய்யோடு* - இயங்குகின்ற உடம்புடன்.

தலைவியை உயிரற்ற உடம்பு என்றாள். அவள் உயிர் தலைவனோடு உறைவதால் இங்குள்ளது வெற்றுடம்பே என்றாள். ஆனால் உயிரின்றி இவ்வுடம்பு இயங்குவதால், *இயங்குகின்ற உடம்பு* என்றாள் என்க! உணர்வின்றி இயக்கிவிட்ட பாவைபோல் தலைவி நடமாடினாள் என்க. மேலும் உடம்பு என்றதால், தலைவனை உயிரென்றும் உணர்த்தி, அவ்வுடம்பொடு வந்து பொருந்துக என்றும் கூறினாள் என்க.

*ஒருத்தி ஈங்கு உண்டு* - உனக்கென ஒருத்தி இங்கு உள்ளாள் என அறிக. உனக்குரியவளான ஒருத்தி யென்றமையால், உரிமையற்ற பிறரை ஒரு வேளை எண்ணிக்கொண்டு நீ வராமற் காலம் கடத்தியிராதே. நின் தலைவி உயிரற்ற உடலாக இங்கு இயங்குகின்றாள். அவளுக்கு நீதான் உயிர். எனவே நீ அவனை நினைத்து உடனே வரவு கொள் என்னும் குறிப்புணர்த்தினாள் என்க.

ஓதற் பொருட்டு வேற்றூர் சென்று வதியும் தலைவற்குத் தோழி நேரில் சென்று உணர்த்தல் இயலாதாகையின் மடல்வழிப் போக்கினாள் என்க. இனி, தோழி கூற்றாக வன்றித் தலைவி கூற்றாகப் பொருள் கொளினும் இஃது இயலும் என்க.

இது, *முல்லைத் திணையும் பிரிவிடை யழுங்கல்* என்னும் துறையும் ஆகும்.

# 37 யாங்கிதன் வலிவே

*எந்தையு மன்னையு மெதிர்வறி கிலரே!*
*நந்திறம் பேணிய நண்பரு மறியார்;*
*ஏமுற மணந்த ஞான்றை யல்லது*
*வன்பால் வகுத்த அன்புறு வாழ்வை*
*யாமும் அறிகிலம் யாங்கிதன் வலியே!*

**பொழிப்பு:**

எம் தந்தையும் தாயும் எதிர்ப்படும் இந் நிகழ்ச்சியை முன் கூட்டியே அறிகிலர். எங்கள் அன்பு நலன்களை விரும்பிப் பாராட்டிய நட்பினோரும் இதனை அறியமாட்டார். பெருமிதத்தோடு நாங்கள் மணந்துகொண்ட அந்தப் பொழுதிலன்றி, வலிய இயற்கை வகுத்துக் கொடுத்த அன்பு நிறைந்த இந்த வாழ்வமைப்பை, நாங்களும் அறியாதிருந்தோம்; என்னே இதன் வலிவு!

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தலைவியைத் தலைவன் மணந்து கொண்ட அணிமைக் காலத்துத் தன் தலைவிக்கும் தனக்கும் உள்ள காதலன்பின் பெருமையை நினைந்து மகிழுமாறு, அவள் தோழியிடத்துக் கூறியதாகும் இக்கூற்று.

*எந்தையும் அன்னையும்* - என்று தந்தையை முன்வைத்துக் கூறியது, தனக்கு மணஞ் செய்விக்கத் தன் தந்தைக்குள்ள கடமையினை உணர்த்து வான் வேண்டி என்க. தன்னை அன்புடன் பெற்று வளர்த்த பெற்றோரும் அறியா வண்ணம் தான் தலைவியை மணஞ்செய்து கொள்ளுமாறு தூண்டிய இயற்கை யன்பின் வலிமையை உணர்த்தினான் என்க.

*எதிர்வு அறிகிலர்* - எதிர்பட்ட மண நிகழ்ச்சியை அறிவதற்கில்லர்.

*நநதிறம் பேணிய நண்பரும் அறியார்* - நம் அன்பு நலன்களைப் பாராட்டிப் பேணிய நண்பர்களும் இந்நிகழ்ச்சியை முன்கூட்டியே அறிதற்கில்லர்.

*ஏமுற* - பெருமை உறும்படி

*மணந்த ஞான்றை யல்லது* - மணந்த அப்பொழுதைக் கல்லாமல்.

*வன்பால் வகுத்த அன்புறு வாழ்வை:* வலிய ஊழாகிய இயற்கை இன்னார்க்கு இன்னவர் என்று வகுத்துக் கொடுத்த, அன்பு மேவிய வாழ்க்கையை.

***யாமும் அறிகிலம்*** - மணந்து கொள்ளப் புகுந்த யாங்களும் கூட அறிந்திலம்.

***யாங்கிதன் வலியே*** - இதன் வலிமைதான் என்னே!

தங்களின் பெற்றோரும் நண்பரும் தாமும் கூட உறுதியாய், இங்கண் நிகழும் என்று அறியாவிடத்து, தானே வந்து எம்மை மணவினைக்கு உடன்படுத்திய இவ்வியற்கைப் பிணைப்பின் வலிமைதான் என்னே என்று தலைவன், தலைவியை முன்வைத்துத் தோழியிடத்துக் கூறினான் என்க.

இது, ***முல்லைத் திணையும், கற்புக்காலத்துத் தலைவன் தலைவிமுன் மகிழ்ந்து சொல்லியது*** என்னும் துறையும் ஆகும்.



# 38 உட்புலன் முனைப்பே!

*பிரிவுறு மகனே! பிரிவுறு மகனே!*
*அறிவமை கழகத் தன்றன் றாயும்*
*நெறிமுறை பயிலப் பிரிவுறு மகனே!*
*எறிதிரை முந்நீர் இழைந்ததர் தப்பிய*
*கலங்கரைந் துய்க்கும் கதிர்சுழல் விளக்கம்*
*சேண்தடவு மாடச் சென்னையம் பதியின்*
*ஓவத் தெருவும், கோவினைக் கோட்டமும்*
*நெறிதரு மன்றும் திரிதரு மக்களும்*
*கான்படு விலங்கின் காட்சியும் அவ்வினத்*
*தூன்படு பொய்யுடல் உயிர்பெறு வியப்பும்*
*அருந்தற் பொருள்களும் மருந்தின் மனைகளும்*
*திருந்தா உள்ளம் திசைதிசை வீழ்த்தும்*
*ஒளிநடக் காட்சியும் ஒலியின் ஒக்கமும்*
*களிகொள் ஒதுக்கமும் கலிஆ வணமும்*
*விலைகூய்ப் புணர்ந்து நோய்பல வித்தும்*
*பொலிவுடல் தோற்றத்துப் போலி மகளிரும்*
*புறம்புனை மயக்கின் புரைநா கரிகத்*
*தறம்பிறழ் வினைகளும் அலவே சிறந்தன!*
*இசைபெறு கல்வியின் ஏர்ந்தன் றொழுங்கே!*
*வசைபெறு வாழ்வின் மாய்கை நன்றே!*
*தசைபெற லன்றே வாழ்க்கை! தசையுடன்*
*அறிவும் உணர்வும் அவையினு முண்மையும்*
*செறியுநல் லுயிர்க்குச் சிறப்பென் றாரே!*
*உண்கையு முடுக்கையு முறுபொருள் பெறுகையுங்*
*கற்ற லன்றே கல்வி*
*முட்டறப் பொருந்திய உட்புலன் முனைப்பே!*

**பொழிப்பு:**

பிரிந்து செல்லும் மகனே! பிரிந்து செல்லும் மகனே ! அறிவு நிறைந்த கல்விக் கழகத்தே அன்றன்று புதுவதாக ஆராய்ந்து அறிகின்ற

வாழ்வுமுறைகளைப் பயில்வதன் பொருட்டுப் பிரிந்து செல்லும் மகனே! வீசுகின்ற அலைகளையுடைய கடலில் உராய்ந்து சென்று வழி தவறி விடும் கப்பல்களைக் கூவியழைத்துக் கரைசேர்க்கும் சுழல்கின்ற கலங்கரை விளக்கு ஒளிக்கதிர்கள் தடவிச் செல்லுகின்ற உயர்ந்த மாடங்களைக் கொண்ட சென்னையென்னும் அழகிய நகரின், ஓவியம் போன்ற தெருக்களும், அரசுப் பணி நிகழும் அரண் சேர்ந்த கட்டடமும், அறநெறிகளை ஆய்ந்து தீர்ப்புத் தரும் அறமன்றமும், வினையின் பொருட்டாதல், வினையின்மை பொருட்டாதல் பல திசைகளிலும் விரைந்து திரிகின்ற மக்கள் கூட்டமும், காடுகளில் பிடிக்கப்பெற்ற விலங்குகளை அடைத்து வைத்துக் காட்டும் காட்சியும், அவை போலும் இறந்துபோன விலங்குகளின் தசைகளை நீக்கி அவற்றின் தோல்களால் பொய்யாய்ச் சமைக்கப் பெற்று உயிருள்ள உடல்கள் போல் தோற்றுவிக்கும் வியப்புப் பொருந்திய பழம் பொருள் காட்சியும், துய்ப்பதற்குரிய பல நுகர்ச்சிப் பொருள்களும், அவற்றால் விளையும் நோய்களைப் போக்குகின்ற மருத்துவ மனைகளும், செப்பமில்லாத உள்ளமுடையவர்களை நாற்புறத்தும் கவர்ந்து அடிமைப்படுத்தும் ஒளியுருப் படக்காட்சிகளும் ஆரவார ஒலிகளின் பெருக்கமும், களியாட்டங்கள் நிறைந்த ஒதுக்குப் புறங்களும், ஆரவாரம் மிகுந்த கடைத்தெருக்களும், விலை வைத்துக் கூவி உடன்பட்டவர்களைத் தழுவிப் பல வகை நோய்களைத் தோற்றுவிக்கின்ற, பொலிவுமிக்க உடல்களையுடைய பெண்மைச் சிறப்பு நீங்கிய மகளிரும், புறத்தே புனைவு மிகுந்து மயக்கத்தைத் தருகின்ற தீமை மிக்க நாகரிகத்தின் அறம் பிறழ்ந்த செயல்களும் ஆகிய இவை சிறப்பானவை அல்ல. புகழ்பெறுகின்ற கல்வியைவிட உயர்ந்தது ஒழுக்கம். இகழ்ச்சி பெறுகின்ற வாழ்வைவிட மாய்ந்து போவது நல்லது. உடல் தசைகளை வளர்க்கப் பெறுவதன்று வாழ்க்கை. நல்ல உடல் அமைப்புடன் கூடிய நல்லறிவும் நல்லுணர்வும், இனி அவற்றை விட உள்ளத்து உண்மையும் செறிந்து விளங்குவதே, உயிர் வாழ்க்கைக்குச் சிறப்புத் தருவதாகும் என்றார் முன்னோர். அதனால் உண்ணுவதும், உடுப்பதும், அவற்றுக்குத் தேவையான பொருள்களை எவ்வகையானும் ஈட்டுவதும் கற்றுக் கொள்வதன்று கல்வி ; உயிர் வளர்ச்சிக்குள்ள தடைகள் அகலும்படி, அதற்குப் பொருந்திய உள்ளுணர்வின் எழுச்சியாகும் அது!

**விரிப்பு:**

இப்பாடல் புறத் துறையைச் சார்ந்தது.

கல்வி கற்பதற்காகப் பெற்றோரைப் பிரிந்து செல்லும் மகனிடம், உலகியல் உணர்ந்த தந்தையார் அறிவுரை கூறித் தெளிவுறுத்துவதாக அமைந்ததிந்தப் பாடல்.

'பிரிதலுறும் மகனே! நீ கல்வி கற்கப் புகும் நகரின் சிறப்பியல்களாக நீ கருதிக் கொண்டிருக்கும் அவையல்ல உயர்ந்தன; கல்வியே உயர்ந்தது;

அக் கல்வியினும் உயர்ந்தது ஒழுக்கம். ஒழுக்கம் திரிந்த இழிவான வாழ்வைவிட இறந்து போதலே நல்லது. உடல் நலமும் உள்ள நலனும் நடை நலனும் சேர்வதே உயிர் வாழ்க்கைக்குச் சிறப்புத் தருவது. எனவே உண்பதும், உடுப்பதும், அவற்றுக்கான பொருளைத் திரட்டுகின்ற வழிமுறைகளைக் கற்றுக் கொள்வதுமே கல்வி என்று பிறழ உணராமல், உயிரின் முன்னேற்றத்திற்குத் தடையாயுள்ள முட்டுப்பாடுகளைத் தவிர்த்துக் கொள்ளும் மெய்ப்புலன் எழுச்சியே கல்வியாகும் என்று உணர்ந்து கொள்!" -என்று அறிவுறுத்துவதாக அமைந்ததிப்பாட்டு.

இப்பாட்டில் கல்வியின் முழுச் சிறப்பும், நோக்கமும், பெருமையும் கூறப்பட்டன.

மகன் ஒருவனது கல்வி நலனில் அவனைப் பெற்றோர்க்கே, அதினும், அவன் தந்தைக்கே மிகுந்த அக்கறை இருத்தல் உலகியில்பு ஆதல் பற்றித் தந்தையின் கூற்றாக இது கொள்ளப் பெற்றது. உண்மைக் கல்வி எவ்வாறிருத்தல் வேண்டும் என்பதைச் செவியறிவுறுத்தலாகவும் கூறப்பெற்றது என்க.

*பிரிவுறும் மகனே!* - பிரிதலுறும் மகனே! பிரிதலுறும் மகனே என மும்முறை அடுக்கியது, அன்பும், உரிமையும், அக்கறையும், கடமையும், ஆற்றாமையும், எச்சரிக்கையும் போன்ற பல உணர்வுகளை வெளிப்படுத்தவேண்டி என்க! பிரிவு கல்வியென்னும் இயற்கைக் கரணியம் பற்றி நிகழ்வதாகலின், உறுதல் என்னும் தன்வினை நேர்ச்சிச் சொல்லால் உணர்த்தப்பெற்றது.

மகன் என்னும் அகடூஉ முன்னிலையால் விளிக்கப்பெற்றது, பெற்றோர் உடன்போகாத் தனிமை குறித்தலான் என்க. மகடூஉ வாயின் உடன் துணை போகும் நேர்ச்சியான், பிரிவுறு வினை நிகழாதென்க.

*அறிவமை ...... பயில* - ஆன்றவிந்தடங்கிய சான்றோர் இருந்து பயிற்றும் கழகமாகலின் அறிவமை கழகம் எனப் பெற்றது. இனி, நாள்தொறும் பெறும் அறிவு வளர்ச்சிக்கேற்பப் பயிற்றுவித்தல் கல்விக் கொள்கையாகலின், அன்றன்றாயும் எனப் பெற்றது.

*நெறிமுறை* - என்றது, உலகின் இயற்கை நெறிகளையும், வாழ்வியல் நெறிகளையும் முறையாகப் பயிற்றுவிக்கும் கல்வியை என்க. கல்வி தன் முயற்சியால் விளையும் உணர்வாகலின் பயில எனப் பெற்றது.

*எறிதிரை முந்நீர் இழைந்து* - எழுந்து வீசுகின்ற அலைகளையுடைய கடல் நீரில் உராய்ந்து.

*அதர் தப்பிய கலம்* - வழி தவற விட்ட கப்பல், கடல் நீரைக் கிழித்துக் கொண்டு தன் வழியில் போகப் புறப்பட்ட கலம், கடல் நீரின் போக்கில் சென்றதால் வழி தப்பியதை "முந்நீர் இழைந்து அதர் தப்பிய" என்பதால் உணர்த்தப் பெற்றது.

இனி, கல்வி கற்கப் புகும் நீ, நகரின் சூழலை எதிர்த்துக் கொண்டு, உன் வழியில் செல்லாமல் நீ, கற்கப் புகும் நகரின் சூழலில் அகப்பட்டு வழி தப்பி விடக்கூடாது என்பதைத் தந்தை எச்சரித்தார் என்க. அங்குள்ள நகரச் சூழல்கள் எழுந்து வீசுகின்ற அலைகளைப் போலும், ஆழ்ந்த கடலைப் போலும் வலிவுடையனவாக இருப்பினும், நீ, தன் ஆற்றல் தவிர்ந்த கப்பல், கடல்நீரின் போக்காகப் போய் வழி தவறி விடுதல்போல் தவறிவிடக்கூடாது என்பதாகக் கூறினார் என்க.

ஆற்றுநீர், ஊற்றுநீர், மழை நீர் ஆகிய மூன்று நீர்களும் சேர்வதால் கடல் "முந்நீர்" எனப்பெறும். அச்சொல்லால் கடலை இவ்விடத்துக் குறித்தது, நகரத்தை உருவகப்படுத்துவான் வேண்டி என்க. நகரம் பல போக்குடைய மாந்தர்களைக் கொண்டதாகலின் அதனை முந்நீர் போன்றது என்றார்.

மழை நீர் சான்றோர்க்கும், ஊற்று நீர் உலகியல் உணர்வுடைய நடுநிலை மாந்தர்க்கும், ஆற்றுநீர் உலகியல் தீமைகளையெல்லாம் கைக்கொண் டொழுகும் கீழ்நிலை மாந்தர்க்கும், இம்மூவகை மாந்தரும் கலந்து வாழும் நகரம், முந்நீர் என வழங்கும் கடலுக்கும் உருவகிக்கப்பெற்றன என்க.

தீமையும் நன்மையும் சார்ந்த உலகில் வாழ்ந்தாலும், கதிரவன் போலும் அறிவு வெப்பத்தால் பிரித்தெடுக்கப் பெற்று , அவ்வப் பொழுது தம்மைத் தூய்மை படுத்திக் கொண்டு, மேனிலை எழுச்சி பெற்று, மழை போலும் தூய அறநெறிகளைப் பரந்துபட்டு வழங்கும் தன்மையராய்ச் சான்றோர் உளராகலின், அவர் மழை நீர் போல்வார் என்றார்.

உலகியல் உணர்வால் அழுந்தி நின்று, தாம் இருக்கும் இருப்பிலேயே தம்மளவில் ஊறிச் சுரந்து, தம்மைச் சார்ந்தார்க்கு மட்டுமே நின்றுதவும் தன்மையோராகியோர் நடுநிலை மாந்தராகலின், அவர் ஊற்றுநீர் போல்வார் என்றார்.

இனி , தோற்றத்து எளியராகவும், வாழ்வியல் ஓட்டத்து, வழியின் கண்பெற்ற அனைத்துத் தன்மைகளையும் தம்முள் கரைத்துக் கொண்டு திரிபுற்றவராகவும், கரைகட்டித் தேக்கின் நன்மையும், தேக்காவிடத்துக் கரைபுரளும் வெள்ளம்போல் தீமையும் செய்யும் திறத்தினோராகியோர் கீழ்நிலை மாந்தராகலின், அவர் ஆற்று நீர் போல்வார் என்றார்.

இத்திறத்து, இம்மூவகை மாந்தரும் கலந்தியக்கும் நகரம், அம் மூவகை நீரும் கலந்தியங்கும் கடல் போல்வதாகும் என்றார்.

இம்மூவகை மாந்தத் தன்மைகளையும் **இராசச, தமச, இராக்கத** குணங்கள் என்பர் ஆரிய நூலார். அந்தண்மை, மாந்தன்மை, கயமை என்பது தமிழ்ச் சான்றோர் வழக்கு என்க.

**கலம் கரைந்துய்க்கும் கதிர் சுழல் விளக்கம்** - கப்பல்களைக் கூவி அழைத்துக் கரைசேர்த்து உய்விக்கும் ஒளிக்கதிர்கள் சுழல்கின்ற பெரிய விளக்கம். **கரைதல்**-கூவி அழைத்தல்.

"அவ்வாறு நகர்ப்புறச் சூழலில் மயங்கி, நின் கல்வி நோக்கைக் கைநெகிழவிட்டு வழி தடுமாறி நீ நிற்கின்ற பொழுதில், என்னின் இந்த உரை நினக்கு, வழி தப்பிய கப்பல்களைக் கூவியழைத்துக் கரைசேர்க்கும் கலங்கரை விளக்கம் போல் நின்று கை கொடுக்கட்டும்" என்னும் குறிப்புணர்வு தோன்ற, தந்தை இதைக் கூறுவாராயினர் என்க. அத்தகைய கலங்கரை விளக்கின் கதிரொளி தடவிச் செல்கின்ற உயர்ந்த மாடங்களையுடைய சென்னை நகரம் என்பார், கலங்கரைந் துய்க்கும் கதிர் சுழல் விளக்கம், ***சேண்தடவும் மாடச் சென்னையம் பதி*** என்றார் என்க.

"உயர்ந்த மாடங்களைத் தடவும் சுழல் கதிர்போல் இவ்வுரைகள் உன் உயர்ந்த நோக்கங்களைத் தடவி ஒளிவீசட்டும்" என்றார் என்க.

*பதி* - குடிகள் அயலிடம் பெயராமல் பதிந்து வாழும் நகரம்.

பதிதல் - பதிந்து வாழ்தல்- பதி. இதுவே முன்னிலை திரிந்து வதிதல் என்னும் சொல்லைத் தோற்றுவிக்கும்.

***ஓவத்தெரு*** - ஓவியம் போலுள்ள அழகிய தெரு.

***கோவினைக் கோட்டம்*** - அரசுப் பணி செய்யும் காவல் உள்ள மனை.

*நெறிதரு மன்று* - அறமுறை வகுக்கும் அறநெறி மன்றம்.

*திரிதருதல்* - நாற்றிசைகளிலும் ஒரு நோக்கம் பற்றியோ நோக்கமின்றியோ போய்வந்து கொண்டிருத்தல்.

***கான்படு விலங்கின் காட்சி*** - காட்டில் பிடிக்கப்பட்ட விலங்குக் காட்சிச் சாலை.

*அவ்வினத்து ...... வியப்பும்* - அவ்விலங்கினங்கள் இறந்துபட்டபின், அவற்றின் உடல் ஊன்களை அகற்றி, அவற்றின் தோல்களைக் கொண்டு பொய்யாகச் சமைக்கப் பெற்ற உடல்கள், உயிருள்ளவை போலவே தோற்றந்தரும் பழம்பொருட் காட்சிச்சாலை.

***அருந்தற் பொருள்கள்*** - பலவகையான நுகர்ச்சிப் பொருள்கள்.

***மருந்தின் மனைகள்*** - மருத்துவ மனைகள்.

இரண்டு சொற்களும் அடுத்தடுத்துப் பயில்வதால், அருந்துகின்ற பொருள்களால் வரும் நோய்களை அகற்றுவதற்குரிய மருத்துவமனைகள் என்றும் இணைந்து பொருள் பெற்றன.

***திருந்தா உள்ளம்*** - செப்பம் பெறாத உள்ளங்கள், சென்றவிடத்தால் செலவிடா தீதொரீஇ, நன்றின் பால் உய்க்கும் அறிவு குறைந்த உள்ளங்கள்.

***திசை திசை வீழ்த்தும்*** - திரும்புகின்ற திசைகள் தொறும், திருந்தாத உள்ளங்களைக் கவர்ந்திழுத்துத் தன் அடிப்படுத்தும்.

*ஒளிநடக் காட்சி* - ஒளியுருவம் அசைகின்ற காட்சி- திரைப்படக் காட்சிகள்.

*ஒலியின் ஒக்கம்* - ஒலியின் பெருக்கம்- ஆரவார ஒலி.

*களிகொள் ஒதுக்கம்* - களிப்பு நிகழ்ச்சிகளைக் கொண்ட ஒதுக்குப் புறங்கள். நகர்ப்புறங்கள் கட்டிடங்களாலும் போக்குவரத்துகளாலும் நெரிசல்கள் மிகுந்து நிற்குமாகலின், பொழுது போக்குக்காக நடத்தப்பெறும் களிப்பு நிகழ்ச்சிகளைக் கொண்ட கொட்டகைகளும், கூடாரங்களும் ஒதுக்கமாயுள்ள வெற்று வெளிகளில் அமைக்கப் பெறுவதால், அவை 'களிகொள் ஒதுக்கம்' ஆயிற்று.

*கலி ஆவணம்* - ஆரவாரமிக்க கடைத்தெரு.

*கலித்தல்* - நிறைதல், மிகுதல், தழைத்தல். கல்-ஓசையைக் குறிக்கும் ஓர் ஒப்பொலிச் சொல். அதனின்று கலிங் கலிங், கலகல முதலிய பல ஓசைச்சொற்கள் பிறக்கும். ஓர் ஒழுங்கின்றிக் கலப்பு மிகுந்த ஓர் ஒலித்தொகுதியைக் குறிக்கின்ற பொழுது, கலி என்று மட்டில் நின்று பொருள் தரும்.

*ஆவணம்* - நுகர்ச்சிப்பொருள்கள் நிறைந்த இடவரிசை என்று பொருள்தரும் சொல். ஆ-நுகர்பொருள். அணம் வரிசைப்பொருள் தரும் ஒரு பெயர்ச் சொல்லீறு. பொட்டணம், கட்டணம் என்பவற்றில் நோக்குக. வரிசை- முறை-ஒழுங்கு- ஒரு பொருள் பல சொற்கள்.

*விலைகூய்ப் ........ போலி மகளிர்* - கூய், புணர்ந்து, வித்தும், என்னும் எச்ச வினைச்சொற்கள் போலி மகளிரைச் சார்வதால், அவரின் வினையாளுமை உணர்தல் பாலது. பொலிவுடல்- அழகுமிக்க உடல். இனி, புணர்ச்சிக்கே உரிய உடல் என்றும் பொருள்படும். பொலிவு- புணர்ச்சி. மகளிர் என்னுஞ் சொல் பொதுவில் சிறந்த பெண்டிரைக் குறித்தாலும், சிறப்பில் மணமாகிய பெண்டிரையே மனைவியரையே- குறிக்கும் உயர்ந்த சொல். போலி மகளிர் என்னுமிடத்து, மனைவியர்போல் உரிமையாட்டுக் குரிய பெண்டிர் என்றும் சிறப்புப் பொருள் தரும்.

*புறம் புனை ...... புரை நாகரிகம்* - வெளிப்புறப் பார்வைக்குச் சிறப்பாகவும் மயக்கந்தருமாறும் விளங்கி உள்ளே பயன் ஒன்று மில்லாத நாகரிகம். புரை- உள்ளீடற்ற தொளை.

நாகரிகம்- நகர வொழுக்கம் புற நடை மாறுபாடு.

*அறம் பிறழ் வினைகள்* - நெறிமுறைகள் மாறுபட்ட செயல்கள்.

அறம்- ஆறு (வகுமுறை, நெறிமுறை, ஒழுக்க முறை) என்னும் அடியாகப் பிறந்த சொல். அகத்தானும் புறத்தானும் சான்றோர்களால் வகுக்கப்பெற்ற ஒழுகலாறு. கடைப்பிடி

அலவே சிறந்தன: இவை அல்லவே சிறந்தன.

ஓவத்தெரு முதல் அறம் பிறழ் வினைகள் ஈறாக நகரக்காட்சிகளையும், மாட்சிகளையும் கூறி வந்த தந்தையார், தம் மகன் அவற்றின் அழகிலும், புனைவிலும், நடையிலும், உள்ளமும் உடலும் பறிகொடுத்துத் தன் கல்வியைக் கெடுத்துக் கொள்ளக்கூடாது என்கின்ற குறிப்புத்தோன்ற, 'மகனே'! இவையல்ல சிறந்தன' என்பார்.

சிறந்தன அல்லவே என்னும் உரை மரபை மாற்றி, *'அல்லவே சிறந்தன'* என்று உறுதிப்பொருள் தோன்றவும், 'நீ கவனிக்க வேண்டிய, சிறந்த பொருள் வேறொன்று உண்டு' அஃது இசைபெறு கல்வி- என்னும் குறிப்புப் பொருள் தோன்றவும் கூறினார் என்க.

*இசைபெறு கல்வி* - புகழைப் பெறுவிக்கின்ற கல்வி. 'இது காறும் கூறியவை கடலில் உள்ள சுழல்கள் போலும் நகரில் உள்ள சூழல்கள். இனிமேற்றான், நீ அங்குப்போய் எந்த நோக்கத்துடன் இருக்க வேண்டும் என்பதைச் சொல்லப் புகுகின்றேன்' என்று கூறியவர் கல்வி கற்க வேண்டும் என்றுகூட நேரிடையாகச் சொல்லாமல், 'புகழைத் தருகின்ற கல்வியைத்தான் நீ கற்கவேண்டும்; ஆனால் அதைவிட உயர்ந்த ஒழுக்கத்தை நீ எப்பொழுதும் கைவிடல் கூடாது' என்று இரண்டையும் இணைத்துப் பேசுவதுடன், கல்வியை விட ஒழுக்கத்தை உயர்வு படுத்தியும் பேசுகின்றார்.

"புகழ்பெற வைப்பது கல்வி என்று ஆனாலும் அந்தப் புகழைத் தாங்குவதற்கு உடல் வேண்டும்; அந்த உடலில் உயிர் வேண்டும். அந்த உடலும் உயிரும் இணைந்து இயங்கித்தான் புகழாகிய கல்வியைத் தாங்குதல் வேண்டும். நலமில்லாத உடல், அல்லது உயிரில்லாத உடல் கல்வியைப் பெற்றுப் பயன் என்னையோ, ஆகலின் உடலும் உயிரும் ஒருமிக்க நலத்துடன் இயங்கவேண்டும்; அதற்கு ஒழுக்கம் வேண்டும். "ஒழுக்கமில்லாத உடல் உயிரில்லாத உடம்பு. ஒழுக்கத்தை உயிர் என்று சான்றோர் கூறியது இதன் பொருட்டே ஆகும். எனவே, புகழ் தருகின்ற கல்வி கற்பதற்காகச் செல்கின்ற நீ. அதனை மட்டும் நினைந்து கொண்டிராமல், ஒழுக்கம் அதனினும் உயர்ந்தது, ஏர்ந்தது, சிறந்தது என்றும் நினைந்து" கொண்டிருக்க வேண்டும்"- என்று விளக்கச் சுருக்கமாகத் தன் மகனிடம் கூற விரும்பியவர், *'இசைபெறு கல்வியின் ஏர்ந்தன்று ஒழுங்கே'* என்று கூறுகின்றார். ஏர்ந்தன்று-ஏர்ந்தது. ஏர்தல்-உயர்தல்.

*வசை பெறு வாழ்வின் மாய்கை நன்றே* - வசைபெற வாழ்வதைவிட மாய்ந்து போவது நல்லது.

"இசை தருவது கல்வி; வசை வராமல் காப்பது ஒழுக்கம். இசை பெறுவதைவிட வசை வராமற் காக்கும் ஒழுக்க வாழ்க்கையே ஒருவர்க்கு வேண்டும். அவ்வாறு இன்றி, வசை பெறும்படி ஒருவன் ஒழுக்கத்தைக் கைவிட்டு விட்டு, வாழ்வதைவிட அவன் மாய்ந்து போவது நல்லது. நீயும்

இசைபெறும் கல்வியுடன் திரும்பி வருவதைவிட வசை தராத ஒழுக்கத்துடன் வருவதைத்தான் நான் மிகுதியும் விரும்புகின்றேன். அவ்வாறு ஒரு வேலை ஒழுக்கமுடன் திரும்பி வராத சூழ்நிலை உனக்கு வருமானால் இங்கு வராமல் அங்கேயே மாய்ந்து போதல் நல்லது"- என்று உறுதிப்படப் பேசினார் என்க.

*தசைபெறல் அன்றே வாழ்க்கை* - உடலுக்கு ஊன் அமையப்பெறு தலன்று வாழ்க்கை.

*தசையுடன் ........ சிறப்பென்றோரே!* - உடல், தசை வரப்பெறுதலன்று வாழ்க்கை என்றவர், மீண்டுத் தசையுடன்..... என்று தொடங்குவதால் நல்ல உடலும் வேண்டும் என்றார். ஆனால் அந்த நல்ல உடலுடன் அறிவும் உள்ள உணர்வும் வேண்டும் என்றார். இனி, அவற்றுடன், அவையெல்லாவற்றையும் ஒளிபெறச் செய்யும் உண்மையும் வேண்டும் என்றார். இவையனைத்தும் நிறைந்து நிற்கும் உடல்தான் நல்லுடல் என்றும், அவ்வுடலைத் தாங்கும் உயிர்தான் நல்லுயிர் என்றும், அதுதான் அவ்வுடலைப் பெற்ற அவ்வுயிர்க்குச் சிறப்பு என்றும் கூறுகின்றார் என்க.

இனி, உயிருண்மையும், உயிர்த் தன்மையும் உயிரியக்க முறையும், அவ்வுயிர் உலகொடு பொருந்தி உடலெடுக்கும் பான்மையும், எம் ***உலகியல் நூறின், மெய்யதிகாரத்தில்*** கண்டு தெளிக.

***உண்கையும்...கல்வி.*** - உண்பனவற்றையும், உடுப்பனவற்றையும் வாழ்க்கைக்குற்ற பிற பொருள்களையும் பெறுகின்ற வழி முறைகளைக் கற்றுக் கொள்வதற்கன்று, கல்வி.

இப்பாட்டின் கருப்பொருளே இவ் விறுதி மூன்றடிகளில்தான் அடங்கியுள்ளது.

"கல்வி என்பது உண்பதற்கும் உடுப்பதற்கும் வாழ்வதற்கும் உரிய பொருள்களைப் பெறுவதற்குரிய அறிவு- என்று கூறும் பொருளியல் கருத்தினாரை மறுத்துக் கூறியதாகும் இக்கூற்று. அவற்றைக் கற்பது கல்வியாகாது. அது தெரிந்து கொள்ளுதல் learning என்பதே ஆகும். கல்வி என்பது வேறு. தெரிந்து கொள்ளுதல் வேறு.

ஆங்கிலத்தில் கல்வி என்பதற்குரிய நேரிய சொல் Education என்பது. Education என்பதற்கு development of character or mental Power என்பதே பொருள்.

எனவே, Education (கல்வி என்பது) வேறு; Learning (தெரிந்து கொள்ளுதல் என்பது) வேறு.

கல்வி என்னும் தூய தமிழ்ச்சொல் ***தோண்டுதல்*** என்று பொருள்படும் உயர்ந்த சொல்.

இதற்குரிய 'வித்துவம்' என்னும் வித் (Vid) என்னும் சொல்லடியாகப் பிறந்த வடசொல்கூடத் தெரிந்து கொள்ளுதல் என்னும் பொருளினதே. Vid-to Know. இதிலிருந்துதான் தெரிந்து கொள்ளுதல் என்று பொருள் படும். வித்தை, வேதம்- முதலிய வட சொற்கள் தோன்றும். Vid- என்னும் வடசொற்குரிய தமிழ் மூலமும் *விழி* என்பதே. Know என்னும் கிரேக்கச் சொல்லுக்குரிய தமிழ் மூலமும் *'காண்'* என்பது. கண்டு அறிவதே Knowing என்பது. புறநிலையறிவு அது, (பாவாணரின் வடமொழி வரலாறு காண்க.)

ஆனால், கல்வி அஃதன்று.

மனத்தின் அடியில் புதைந்து கிடக்கின்ற கருத்துகள், நிலத்துள் புதைந்து கிடக்கும் செல்வங்களைப்போல் விலைமதிப்பற்றவை ஆகும். அவற்றை அகழ்ந்து அறிந்து கொள்வதே கல்வியாகும்.

'எனவே வெறும் உலகியல் தெரிவுகளை மட்டும் தெரிந்து கொள்வதைக் கல்வி என்று நினையாதே.' என்று கூறுகின்றவர், கல்வியென்பதற்குரிய உண்மைப் பொருளை அடுத்துவரும் அடியால் விளங்குகின்றார், அது,

*முட்டறப் பொருந்திய உட்புலன் முனைப்பு* - என்கின்றார். *முட்டற* - தடைகள் அற. *பொருந்திய*-ஏற்கனவே உயிரின் துய்ப்பினால் வந்து பொருந்தியுள்ள. "உட்புலன்- அகவறிவுப் புலன்". *முனைப்பு*- அதன் முனைந்து நிற்கும் தன்மைகளாகும்.

உயிரின் துய்த்தல் நுகர்வால் பெறும் உண்மையறிவை உணர்ந்து கொள்வதே கல்வியாகும் என்னும் விளக்கத்தையும் பிற அறிவு நிலைகளையும், எம் *உலகியல் நூறின் வாழ்வதிகாரத்தில்* கண்டு தெளிக.

இனி, அறிவமை கழகத்து அன்றன்றாயும் நெறிமுறைகளைப் பயின்று கொள்ளும் பொருட்டு எம்மைப் பிரிதலுறும் மகனே! உண்கையும் உடுக்கையும் உறுபொருள் பெறுகையும் கற்றுக் கொள்வதன்று கல்வி; அது, நம் உயிரியக்கத் தடைகள் நீங்கும்படி, முன்னரே வந்து பொருந்திய உட்புலனறிவுகளைக் கண்டு கொள்வதற்கும், அவற்றினின்று மேலும் மேலும் அகழ்ந்து உண்மைகளை அறிவதற்கும் உரிய ஓர் உணர்வு முனைப்பைப் பெறுதற்கான ஓர் உத்தி என்று கண்டு கொள்க' என்று தந்தை தன் மகனுக்கு அறிவுறுத்துவதாகும் இப்ப பாட்டு.

இது, *பொதுவியல்* என் திணையும், *பொருண் மொழிக் காஞ்சி* என் துறையுமாகும்.



## 39 உயிர்கொல் நெஞ்சம்

*வடுவின் றெடுத்த மார்பி னோனே*
*நெடுவின் றிமிலிய தோளி னோனே*
*குழலென் சுரிந்த குஞ்சியும் பரந்த*
*ஒளிவார் நெற்றியும் வளிவார்ந் தெழுந்த*
*கொழுவின் கூரிய மூக்குமன் னோனே*
*அருளுமிழ் கண்ணோ டணைந்தடி வடிந்த*
*சுரிமயிர் தடவிய விரிசெவி யோனே*
*அரியிதழ் வாயின் அடுக்கிய நகையும்*
*மலையிழித் திறங்கிய கலைபுண ரருவி*
*அலையெனப் புடைத்த அருட்கையு மாகி*
*மயர்வறப் பொலிந்த மல்லல் மேனியோற்*
*குயிர்கொல் நெஞ்சம் எவன்குடி கொண்டதே!*

**பொழிப்பு:**

குற்றமில்லாமல் உயர்ந்து விளங்கும் மார்பினன்; நீண்டு புடைத்தெழுந்த தோளினன்; குழல்போலும் சுருண்ட தலைமயிரும், அகன்று, ஒளி ஒழுகும் நெற்றியும், ஒழுங்குபட்ட உயிர்ப்பை உடையதால், எடுத்து நின்ற, கொழுமுனையைப் போலும் கூர்மையுடைய மூக்கும் வாய்க்கப்பெற்றவன்; வேற்றுமையற்று அன்பைப் பொழிகின்ற கண்களை அணைந்து, அடிநோக்கி அழகுற அமைந்ததும், குறுஞ் சுருள் மயிர் தடவிக் கொண்டுள்ளதுமாகிய விரிந்த செவியினன்; பருக்கைக் கல்போலும் இதழ்களையுடைய வாயில் வரிசையுற அமைந்த பற்களும்; மலையினின்று தவழ்ந்து விழும் கலையுணர்வைத் தோற்றுவிக்கும் அருவியின் அலைகள் போலும் புடைத்து நின்ற அருள் தோய்ந்த கைகளும் உடையவனாகி, மாறுபாடு அற்ற வகையில் அழகுற விளங்கும் வளப்பம் மிகுந்த மேனியோன் இவனுக்கு என் உயிரைக் கொல்லுகின்ற நெஞ்சம் மட்டும் எங்ஙனம் கூடி கொண்டதோ!

**விரிப்பு:**

*இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.*

தன்னை விரும்பாத தலைவனுடைய காதலுக்கு ஏங்கிய தலைவியொருத்தி, அவன் உடலழகை வியந்து உள்ளத்தைக் கடிந்து கூறியதாகும் இப்பாட்டு.

ஓவிய அமைப்புக்கு மாறுபாடுறாதவகையில் அமைந்த உயர்ந்து பரந்த மார்பும், நீண்டு பருத்த தோளும், சுருண்ட அழகிய தலைமயிரும், அகன்று ஒளி பொருந்திய நெற்றியும், எடுத்து நின்ற கூரிய மூக்கும், அருள் பொழியும் கண்களும், அழகுற வடிந்து வீழ்ந்த செவிகளும், பருத்து ஒளிசார்ந்த இதழ்களும், வரிசையுற அமைந்த பற்களும், வீழ்ந்த நெடிய கைகளும் கொண்டு விளங்கும் அவனுக்குத் தன்னை விரும்பாததும் தன்னுயிரைக் கொல்லுகின்றதுமாகிய நெஞ்சு எப்படி அமைந்ததோ என்று ஏக்கமும் வெறுப்பும் கடுமையும் தோன்றக் கூறினாள் என்க.

*வடுவின்று-* மாசு மறுவில்லாமல்.

ஆடவன் ஒருவனின் மார்பே காதல் உணர்வு கொண்ட பெண்களை முதலிற் கவர வல்லதாகையின் முதற்கண் மார்பைக் கூறினாள் என்க.

*எடுத்த மார்பு* - உயர்ந்த மார்பு பரந்து நிற்பதால் பரப்பும் உணர்தலாயிற்று.

*மார்பினோன்* - மார்பை உடையவன்.

*நெடுவின் திமிலிய தோளினன்* - நீண்டு திமில்போலும் புடைத்து நின்ற தோள்களையுடையவன்.

தழுவலுக்குரிய தோள்களாதலின் அவற்றின் எடுப்பை அடுத்துக்கூறினாள் என்க.

திமில் என்னும் பெயரடியாகப் பிறந்த வினைச் சொல் திமிலிய.

*குழல் என் சுரிந்த* - குழல் போலும் சுருண்ட

குஞ்சி: ஆண்களின் தலை மயிர்

*பரந்த ஒளிவார் நெற்றி* - அகன்று ஒளி சிந்தும் நெற்றி.

அகன்று ஒளி பொருந்திய நெற்றி அறிவுணர்வுக்கு அடையாளமாகலின் அதனை வியந்தாள் என்றபடி

*வளி வார்தல்* - காற்று ஒழுங்குபட இயங்குதல்.

மூச்சுக்காற்று ஒழுங்குபட இயங்குதல் உடல் நலமுள்ளவர்க்கே அமையுமாகலின், அவனின் நலம் பொருந்திய உடலை நயந்தாள் என்க. மூச்சுக்காற்று ஒழுங்குபட இயங்கியதை அறிய ஏதுவாய் நின்றது அவனது எடுத்து நின்று கூரியதாய் விளங்கும் மூக்கு. ஆகலின் அதன் வழி அவன் மூச்சியக்கமும், அதன் வழி அவன் உடல் நலமும் கண்டு கொள்ளப் பட்டன.

*கொழு* - ஏர்க்கொழு. மூக்குக்கு ஏர்க்கொழுவை உவமித்தது அதன் முப்பட்டை உருவமும் கூர்மையும் பற்றி.

மூக்கும் மன்னோன்: மூக்கும் பொருந்தியவன். மன்னுதல் பொருந்தியிருத்தல்.

*அருளுமிழ் கண்* - உயிர்களிடத்து வேற்றுமையின்றி அன்புப் பார்வை வீசும் கண்கள்.

அத்தகையவன் என்மேல் அப்பார்வையை வீசினால் என்ன என்று ஏக்கம் புலப்படப் புலந்த உணர்வுடன் கூறினாள் என்க.

*கண்ணோடு அணைந்து அடிவடிந்து சுரிமயிர் தடவிய விரிசெவி* - கண்களின் புற ஓரத்தொடு இணைந்து நின்று, அடிப்பகுதி நீள இறங்கியவாறு, காதுப்புறம் சுருண்ட மயிர் தடவிக் கொண்டிருக்க விரிந்துள்ள செவிகள்.

செவிகளை இவ்வாறு நீள வண்ணித்தது, தன் காதல் மொழிகளைக் கேளாத அவற்றிற்கு இத்துணை அழகோ, எனப் புலந்து ஏங்கியது. தன் மொழி கேளாக்காதுகள் விரிந்து நின்று என் பயன் என்று வெறுத்ததுமாம்.

*அரியிதழ்:* பருக்கைக் கல் போலும் பருத்து செவ்விய மெல்லொளி படர்ந்த இதழ்.

நீரான் உருட்டப்பெற்று, அதன் மேற்புறத்துச் சொர சொரப்பாய பகுதிகள் அரிக்கப்பெற்று, உருண்டு திரண்டதால் பருக்கைக் கல் அரியென்னும் பெயரினதாயிற்று. இனி, அரி என்பது, அழகு என்றும் செவ்வரி என்றும் பொருள் பெற்று, அழகிய, சிவந்த கோடுகள் சார்ந்த இதழ் என்றும் பொருள் தருமாம். ஆயினும் உருவும் ஒளியும் நோக்க முன்பொருளே பொருத்தமும், பின் பொருளை அளவியதும் ஆகும் என்க.

*அடுக்கிய நகை* - வரிசையுற அடுக்கப் பெற்றாற் போலும் எயிறு.

நகை-ஆகு பெயராய் இடத்தைக் குறித்து, எயிறு என்னும் பொருள் பெற்றது.

இனி, எயிறு என்பது தோன்றா நின்று, நகை என்பதைப் புன்னகை யவிழ்க்கும் வாய் என்றலும் ஆம்.

*மலை யிழிந்து இறங்கிய* - மலையினின்று நழுவி இறங்கிய.

*கலைபுணர் அருவி* - கலையுணர்ச்சியைப் புணர்த்துவிக்கும் அருவி.

*அருவி அலை எனப்புடைத்த* - அருவி நீரின் அலைகள் எனப் பருத்து நின்ற. கடல் அலை மிகவும் புடைப்பு உடையதாகலின் அலை உவமமாயிற்று.

*அருட் கை* - அருள்கின்ற கை.

'அருள்கின்ற கை என்பொருட்டு அருளாத தென்னையோ?' என்று ஏக்கமும் எரியும் தோன்றக் குறித்தாள் என்க.

பெண் ஒருத்திக்குக் கை அருளுதல் அணைத்தல் ஆம்.

*மயர்வு அற* - வேற்றுமை அற்றவாறு.

உருவ அமைப்புக்கு மாறுபடாதபடி.

*பொலிந்த* - அழகுற விளங்கிய.

*மல்லல் மேனி* - வளப்பம் வலிமையும் உடைய உடல்.

'உடல்' என்னாது மேனி என்றது உயிருள்ள உடலாகையான், உயிர்மேன் நின்றது மேனி. இனி, மேனி என்பது சிறப்பாக உடலின் மேற் பொலிவையும் குறிக்கும்.

*உயிர்கொல் நெஞ்சம்* - உயிரைக் கொல்லுகின்ற நெஞ்சம்.

தன் காதலை ஏற்காத நெஞ்சு, தன் உயிரைக் கொன்று உடலைப் பிணமாக்கும் நெஞ்சாதலின் உயிர் கொல் நெஞ்சு என்றாள்.

*எவன் குடி கொண்டதே!* - எவ்வாறு குடிகொண்டதோ அறிகிலேனே என்றபடி.

இத்துணை அழகிய உடல் நலம் வாய்த்தவனுக்கு என்னை விரும்பும் நெஞ்சு வாய்க்கவில்லையே என்று ஏங்கினாள் என்க.

"உடலழகுக் கேற்றவாறு உள்ளழகு வாயாத நெஞ்சம் ஆகலின், அதனை அவன் விரும்பிக் குடிவைத்துக் கொண்டதாக இருத்தல் இயலாது. அதுதானே வந்து குடியேறி இருத்தல் வேண்டும் " என்னும் கருத்துத் தோன்றக் *குடி கொண்டது* என்றாள் என்க.

*எவன்:-* என்னுஞ் சொல் எங்கிருந்து என்று இடப்பொருள் தோன்றவும் பொருள்படும்.

பெண்மை நயக்கும் ஆண்மைச் சிறப்பைக் குறித்ததாகும் இப்பாடல்.

இது, *பாடாண்* திணையும், *பெருந்திணை* என் துறையுமாம்.



# 40 குடுமித் தேங்காய்

குடிமித் தேங்காய் துருவிப் பிழிந்த
கடும்பால் சுவையின் நலந்தரு தீம்பால்
முதிர முதிர முகங்கெடப் புளிக்குந்
துதைசொற் பூரியர் தோன்றா நட்பிற்
கஞ்சுவல் யாமே நெஞ்சுதளை யவிழ்ந்து
மஞ்சமை குன்றத்து மலர்வாய் குடைந்து
துமி துமி ஈண்டிய மூரித் தேறல்
தமிழ்பெறக் கெழீஇய தகையோர் தொடர்போல்
முற்ற முற்றச் சுவைமூ வாதே!
ஆகலின்,
உணர்வின் தூவிய வுரவோர்க்கு
இணைவுற நடநீ நெஞ்சுபல் யாண்டே!

**பொழிப்பு:**

மட்டையுரித்துக் குடுமியிட்டுலர்ந்த தேங்காயைப் பூத்துருவிப் பிழியக் கிடைத்ததும், கன்றீன்ற ஆவின் சீம்பாலினும் சுவையும் நலமும் தருவதும் ஆகிய இனிய தேங்காய்ப் பால், பொழுது கழியக் கழிய, முகம் நெருங்கி மோத்தற்கும் இயையாவாறு புளிப்பு மிகும் தன்மையின், நெருங்கி நின்று சுவை துளும்பிய சொல்லாடி மகிழ்வூட்டியிருந்து, காலஞ்செல்லச் செல்ல, முகமும் எதிர்ப்பட விரும்பாத நிலையில் மனம் புளித்துப் போகின்ற கீழ்மை யுணர்வு நிரம்பியவர்களின் தோன்றக் கூடாத நட்பிற்கு, யாம் அஞ்சுகின்றோம். குளிர்ந்த நீர்த்துளி நிரம்பிய மெல்லிய வெண்மேகம் வந்து அமைகின்ற குன்றத்தில் பூத்துக் கிடக்கும் மலர்களின் வாய்களைக் குடைந்து, துளி துளியாகத் திரட்டிய செந்நிறம் பாய்ந்த தேன், இனிமை சேரும்படி நெஞ்சின் கட்டுகளை யவிழ்த்துக் கொண்டு, உரிமை பாராட்டிப் பழகும் மேற்பாடுற்றவர் தொடர்புபோல், நாட்செல்லச் செல்ல மேலும் மேலும் சுவை மிகுமேயல்லது திரிந்து வேறுபடாது ; ஆகலின், உள்ளத்தின் அளவாக வெளிப்படும் உணர்வினது தூய்மை இயல்புடைய அறிவு நலஞ்சான்றவர்க்குப் பொருந்திய தொடர்பாளனாகும்படி ஏ! நெஞ்சே! நீ பல ஆண்டுகளாயினும், நெடுந்தொலைவாயினும் நடந்து அங்காந்து தேடிச் செல்வாயாக!

விரிப்பு:

*இப்பாடல் புறத்துறையைச் சார்ந்ததாகும்.*

*புறத்தே நெருங்கி நின்று சுவையான சொற்களைப் பேசி, அகத்தே பொருந்தாத நட்பு செய்து, காலத்தே முகமும் பொருந்தாமல் விலகியிருக்கும் கீழ்மை நெஞ்சினார் தம் தொடர்பால் நோவுற்ற ஒருவன் நெஞ்சின் கட்டுகளை அவிழ்த்துக் கொண்டு உள்ளத்தினளவாக வெளிப் போந்த இயல்பான உணர்வுடன் நட்புச் செய்யும் கசடு நீங்கிய உயர்ந்த அறிவினார் தம் இணைவுக்குப் பொருந்தத் துடிக்கும் தன் நன்னெஞ்சிற்கு "அவ்வாறு அருமை வாய்ந்தோரைத் தேடிப் போகும் முயற்சியில் எத்துணைக் காலமும் இடமும் கடப்பதற்கு நீ அஞ்சாதே; ஊக்கமுடன் மேன்மேற் செல்" என்று கட்டளை யிடுவதாக அமைந்ததிப் பாட்டு.*

*தொடக்கக் காலத்தே மிகவும் சுவைபடப் பேசிப் பழகியிருக்கும் கீழ்மை நெஞ்சினார், காலத்தே தம் தன்மையில் மாறிப்போதற்கு, புதியதில் மிகுசுவையும், நலனும் அளிக்கும் தேங்காய்ப் பால் மிக விரைந்து புளித்தும், தீதாகவும் போகும் தன்மையும், இணையும் புதுத் தொடர்பில் இனியராயிருந்து, காலம் கழியக் கழிய மேலும் நலமும் சுவையும் வாய்ந்தோராய் விளங்கும் தூயமனமும், அறிவுநலமும் வாய்ந்தார் நட்புக்கு, தொடக்கத்தில் நறுஞ்சுவை பயப்பதுவாக விருப்பத் தோடமையாது, எவ்வளவு காலஞ் செல்லினும் சுவையினும் நலத்தினும் மேன்மேலும் மிகுவதல்லது மாறுபாடும் வேறுபாடும் உறாத தேனின் தன்மையும் உவமைகளாகக் கூறப்பெற்றன.*

***குடுமித் தேங்காய்*** *- குடுமிவிட்டு உரித்த தேங்காய், விட்ட குடுமியைச் சிறப்பித்தலால், உரித்த கால முதிர்ச்சி தெரிவிக்கப் பெற்றது. மட்டை உரிக்கப் பெற்று, நன்கு உலர்ந்து முற்றிப் பால் பிழியும் பக்குவம் பெற்ற தேங்காய் என்க.*

***துருவிப்பிழிதல்*** *- தேங்காயைப் பூத்துருவிப் பிழிந்து பாலெடுத்தல்.*

***கடும்பால்*** *- ஆவின் ஈன்றணிமைப் பால், சீம்பால்.*

***கடும்பால் ........ தீம்பால்*** *- சீம்பாலை விடச் சுவையும் நலமும் தருகின்ற தேங்காய்ப்பால்.*

***முதிர முதிர*** *- (பிழியப்பெற்ற பால்) காலமுதிர்ச்சி தோன்றத் தோன்ற.*

***முகங்கெடப் புளிக்கும்*** *- வாயால் பருகுதற்கு அருகில் சென்ற முகம் தன் தன்மையிற் கெடும்படி புளிப்பும், நெடியும் வீசும்.*

***துதைசொல் பூரியர்*** *- மிக நெருக்கமாகி நின்று உரைக்கும் சொற்களையுடைய கீழ்மைக் குணமுடையவர். பூரித்தல்-மிகுதல். பூரியர் உலகியல் உணர்வான் மிகுந்து தோன்றும் பொதுக் குணமாந்தர்.*

***தோன்றா நட்பு*** *- தோன்ற வேண்டாத நட்பு.*

*அஞ்சுவல் யாமே* - முற்காலங்களில் அவ்வாறு விரும்பத்தகாதவர் நட்பு ஏற்பட்டதற்கும் இனி ஏற்படுவதற்கும் யாம் அஞ்சுகின்றோம்.

*மஞ்சமை குன்றத்து* - சிறு அளவில் நீர்த்துளி நிரம்பிய மென்மேகம், பொருந்துகின்ற குன்றத்தில்.

*மலர்வாய் குடைந்து* - மலர்களின் இதழ்களை விலக்கி உட்புகுந்து.

*தூமி தூமி ஈண்டிய* - துளி துளியாகச் சேர்க்கப் பெற்ற.

*மூரித்தேறல்* - முதிர்ந்து செந்நிறம் பாய்ந்த தேன்; முதிர்தலால் செந்நிறம் பாய்தல் இயல்பாயிற்று.

*நெஞ்சுதளை யவிழ்ந்து* - நெஞ்சின் அகப்புறக் கட்டுகள் நீங்கி,

*தமிழ் பெற* - இனிமை பெற.

*கெழீஇய* - உரிமை யுணர்வுடைய.

*தகையோர்* - பெருமைமிக்கோர்.

*தொடர் போல்* - இணைவுப் போல்; நட்புப்போல்.

*முற்ற முற்ற* - முதிர்ச்சியடைய அடைய.

சுவை மூவாது: சுவை தளராது! மூப்பு தளர்வைக் குறித்தது. 'நெஞ்சுதளை யவிழ்ந்து தமிழ்பெறக் கெழீஇய, தகையோர் தொடர் போல் முற்ற முற்றச் சுவை மூவாதே" என்று கூட்டுக.

நெஞ்சின் கட்டுகள் அவிழாவிடத்து உரிமை உணர்வு செலுத்தவும், செலுத்தியதை உணரவும் இயலா வென்க.

*உணர்வின் தூவியல்* - மனவுணர்வின் தூய்மையான இயற்கையாந் தன்மை, தூவியல்- தூய இயல்பு.

*உரவோர்* - அறிவுணர்வுடையோர். உரன்- அறிவுப் புலன்.

*இணைவுற* - தொடர்புறும்படி, உரவோர்பால் தொடர்பு நிகழுமாறு.

*ஆகலின்* - எனவே, (அத்தகையாரைத் தேடி)

*நெஞ்சு, நீ பல் யாண்டு நட* - முன் பூரியர் நட்பிற் கலந்து கவன்று நின்ற நெஞ்சமே, உரவோரொடு பொருந்துவதன் பொருட்டு, நெடுங்காலமேனும் நெடுந்தொலைவேனும் சலிப்புறாது நடந்து கொண்டிரு என்பதாம்.

இப்பாட்டின் கண் பூரியர்க்குத் தேங்காயும், அவரிடத்துப் பெறும் நட்புக்கு அதனின்று பிழிந்த பாலும் உவமைகளாகக் கூறப்பட்டன.

மட்டையை நீக்கிய பின்னரே பயன் படுத்துவதற்குரிய நிலையில் தேங்காயைப் பெறமுடிவது போல், பூரியர் தம் உலகியல் அழுத்தங்களை நீக்கிய பின்னரே, தொடர்பு கொள்வதற்குரிய தகுதியை அவரிடமிருந்து பெறமுடியும் என்க.

தேங்காயின் குடுமி, அவர் தம் ஆரவாரத்தைக் காட்டுவதாகும்.

தேங்காயின் வலிந்த ஓட்டை உடைத்து, முடிகளைத் துருவிப் பிழிந்து பாலெடுப்பது போல், அவரிடம் நெருங்கி அவர் மனவோட்டை உடைத்து உணர்வூட்டித் துருவி ஆராய்ந்து நட்பைப் பெறுவது கூறப்பெற்றது.

தொடக்கத்து அவர் நட்பினால் கிடைக்கும் நகை நலன்களுக்கும் சுவை நலன்களுக்கும், தேங்காயின் வெண் பருப்பும், சுவை நீரும் உவமைகளாம் என்க. காலக் குறுமையில் தோன்றும் அப்பயன்களும், அவரைப் பெற்ற புதிதில் கிடைப்பன போல்வனவாம் என்க.

தேங்காயை உடைக்கும் ஒலியில் பூரியரின் பொருந்திய சொல்லொலியும் நகையொலியும் வெளிப்பட்டு நிற்பதும் கண்டு மகிழ்க!

இனி, தகையோர் தொடர்புக்குத் துளி துளியாகத் திரட்டப் பெறும் தேனை உவமித்துக் கூறியது, அதன் கிடைத்தற்கரிய அருமையும், சுவையும், முதிர்வு நலனும் உணர்த்துவான் வேண்டி யென்க.

தேன் பருகுவதல்லாது, சிறிது சிறிதாகச் சுவைக்கப்பெறுதல் போலும், பெரியோர் நட்பு ஒரேயடியாக நுகரப் பெறுதல்லாது அவ்வக்கால் சுவைக்கப்பெறுதல் காண்க.

மெல்லிய வெண்மேகம் அமைந்த மலைச்சாரலின் கண் உள்ள நறிய பூக்களினின்று எடுக்கப்பெறும் தேன் என்றது, அவர் தூய மெய்ப் பொருள் சான்ற உயரிய வாய்மை நெஞ்சத்தையும், அந்நெஞ்சினிடத்து மலர்ந்து அன்பு கமழும் சொற்களையும், அவற்றினின்று பெறும் அறிவுத் தேனையும் குறித்தல் வேண்டி என்க.

அவர் சொற்களின்று அவ்வப்போது சிறிது சிறிதாக வெளிப்படும் அறிவு நலன்களை ஒருங்கு திரட்டி நலம் பெறுதல் துளி துளியாக ஈண்டிய முதிர்வுற்ற தேனினால் சுட்டப் பெற்றது என்க.

உரவோர் நட்பு உரிமைக்கும் கெழுதகைமைக்கும் இடனாயிருப்பதை மலர்வாய் குடைந்து ஈட்டிய *மூரித்தேறல்* என்பதனான் உணர்க. வாய்குடைதல் என்னும் வினை அவர்பால், செலுத்தும் உரிமை உணர்வைக் குறித்த தென்க.

'தேங்காய்த் தீம்பால் முதிர முதிர முகங்கெடப் புளிக்கும் துதை சொற் பூரியர்' என்றவிடத்து, உவமேயத்தை உவமையால் விளக்கியும், 'மலர் வாய் குடைந்து, துமி துமி ஈண்டிய மூரித்தேறல் தகையோர் தொடர்போல் முற்ற முற்றச் சுவை மூவாது' என்ற விடத்து, உவமையை உவமேயத்தால் விளக்கியும் போந்தது, முன்னதின் உவமைக்கும் பின்னதின் உவமேயத்திற்கும் காட்டிய சிறப்பும் உயர்வும் என்க.

*நட நீ நெஞ்சு* என்றதில் உறுதியும் 'பல் யாண்டு' என்றதில் அருமையும் சோர்வுறாமையும் கூறப் பெற்றமை காண்க.

இது **பொதுவியல்** என் திணையும் **பொருண் மொழிக் காஞ்சி** என் துறையுமாம்.

# 41 குன்றும் மறவார்

உறக்கத் தெழுந்தழி வுணர்வின சிலவே
உறக்கத் தெழுந்துயிர்ப் பூர்வன சிலவே
கண்படப் புலர்ந்த கனவின சிலவே
எண்படு கனவின் எதிர்வன சிலவே
நினைவுள் உயர்த்தழி நீர்மைய சிலவே
நினைவின் விளைதரு நிகழ்வின சிலவே
நிகழ்ச்சியி னுறுபயன் நேர்வன சிலவே
திகழ்தரு பயன்பிறர் தேர்வன சிலவே
பொலிவுறு வினைகளுட் புகழ்வன சிலவே
மலிபுகழ் வினைதரும் உயிரின சிலவே
உயிரொடும் உடலெனும் உறவின சிலவே
உயிரொடும் உயிரென உறைவன சிலவே
என்றிவை தேறலின் எம்மின்
குன்றும் மறவார் குழன்மோந் தோரே!

**பொழிப்பு:**

ஆழ்ந்த உறக்கத்தின் கண்ணே உள்ளத்தின் அடிமனத்துள் எழுந்து, அவ்வுறக்கத்தின் கண்ணாகவே (அங்கேயே) அழிந்துபடுகின்ற உள்ளுணர்வு நிலைகள் சிலவாம் என்க. அவ்வாறு அழிந்தன போக, (உறக்கத்தின் கண்ணாக எழுந்து) அழிந்து படாமல் நின்று, என்றும் நிலைத்த உயிருணர்வைப் பற்றிக் கொண்டு, அதனொடு ஊர்ந்து திரிகின்ற உணர்வு நிலைகள் சிலவாம் என்க . (அவ்வுணர்வு நிலைகள் சில வற்றுள்ளும்) அவ்வக்கால், ஆழ்ந்துறங்காது மென்துயிலாகக் கண்மூடும் பொழுதில் புற மனத்துள் தோன்றும் கனா நிலைகள் சிலவாம் என்க; அவ்வாறு தோன்றும் எண்ணப்பெறாத கனவு நிலைகளுள்ளும் எண்ணிக்கைப்படும் கனவுகளுள் நினைவுட் பொருந்துவன சிலவேயாம் என்க; அந்நினைவுட் பொருந்திய வற்றுள்ளும், அங்ஙனே தோன்றி அங்ஙனே அழிந்தொழியும் தன்மையன சிலவாம் என்க. அவ்வாறு அழிந்தொழியாது நின்ற மிகச்சிலவுள்ளும், நனவின்கண் நிகழ்ச்சியாக விளைவு தரத் தக்கன சிலவாம் என்க. விளைந்துநின்ற நிகழ்ச்சிகளுள்ளும் உற்ற பயனுக்கு உதவுவன சிலவேயாம் என்க. அவ்வாறு பெறும்

பயன்களுள்ளும் பிறர்க்கெனப் போய்ச் சேர்கின்றவை மிகச் சிலவாம் என்க ; அங்ஙன் அவர்ப் பொருட்டாய்ப் போய்ச் சேரும் பயன் நிலைகளுள், அவர்கள் தம் பொருட்டாய்த் தேர்ந்து பயன்படுத்திக் கொள்ளும் நிலைகளோ மிகச்சிலவே என்க. அவ்வாறு தம் பொருட்டாகவும் தேர்வுற்று விளங்கித் தோன்றும் வினை நிலைகளுள், காலத்தானும் இடத்தானும் அழிவுறாது நின்று புகழப் பெறுவன மிகமிகச் சிலவேயாம் என்க. அவ்வாறு புகழ் பெறத்தக்க வினைகளைத் தரும் உயிர்களோ இவ்வுலகத்து ஒரு சிலவே என்க. அச்சிலவுயிர்களுள்ளும் அவை ஈண்டு உயிர்க்கின்ற வரை உறவு கொள்ளும் உடல்களைப் பெறுவன சில என்க. ஆனால், அவ்வாறின்றி, அவ்வுயிர் இங்குமோ வேறெங்குமோ நின்று இயங்குகையில் அவ்வுயிரொடும் பொருந்திய உயிராக நின்று, ஒன்றி உறையுந்தன்மை வாய்ந்த உயிர்கள் மிகமிகவும் சிலவாம் என்னும் இவ்வரிய உண்மைகளை அவர் தேர்ந்து தெளிந்தார் ஆகலின், எம்மின் குழலை மோந்தவர், அக்குழலுக்குரிய எம்மையும் , யாம் வதியும் இக்குன்றையும் என்றும் மறந்துபட மாட்டார் (விரைவில் வருவார்) என்க.

விரிப்பு:

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்தவிடத்து, அவன் வரவு குறித்து ஐயுற்ற தோழிக்குத் தலைவி, உயிரின் உணர்வு நிலைகள் உணர்த்தித் தன்னொடும் தொடர்புற்ற அவன், வெறும் உடல் உறவினன் அல்லன், உயிருறவினன்; எனவே தன் குழலை மோந்த உணர்வு நிலைப்பட்டு நிற்கக், காலமும் இடனும் மறவாது வினைமுடித்து உறுதியின் வருவான் என்றது.

உறக்கம் - புறப்புலன்களும் புறமனமும் ஒடுங்கி அடிமனம் ஒன்றே உணர்வினதாகக் கொள்கின்ற அழுந்திய துயில். இந்நிலையைச் 'சுழுத்தி' என்பர் சிவமெய்ந்நூலார். இது க்னவு நிலையினும் ஆழ்ந்த ஒடுக்கம் உடையது.

இதன் அடுத்த படிநிலைகளாய பேருறக்கமும் (துரியம்) உயிர்ப் படக்கமும் (துரியதீதம்) மெய்யுணர்வினார்க்கே வாய்ப்பனவாகிய மிகு உணர்வுறக்க நிலைகளாகலின் அவற்றை ஈண்டுக்குறித்திலள் என்க.

உறக்கத்து எழுந்து - புறப்புலனும் புறமனமும் ஒடுங்கிய அவ்வாழ்ந்த உறக்கத்து, அறிவொடு தொடர்பறுந்த அவ்வடிமனத்து விருப்பந்தவிர்த்து, (முன்னைய பிறவிப் படிநிலை வளர்ச்சியான் கிளர்ந்து) உள்நின்ற உயிருணர்வான் எழுந்து தோன்றி.

புற அறிவுத் தொடர்பறுந்த நிலையிற் செயற்படுவது உயிருணர்வொடு பொருந்திய உண்மையறிவாம் என்க. என்னை ? **'நுண்ணிய நூல்பல கற்பினும்**

*மற்றுந்தன் உண்மையறிவே மிகும்.'* (குறள் 373)* என்றவிடத்துச் சுட்டிய முன்னைய உண்மை அறிவால் என்க. அவ்வறிவுணர்வான் கிளர்ந்தெழுந்து புறமனத்துக்கே புலப்படாத உள்ளுணர்வு நிலைகள் அவை.

*அழி உணர்வின் சிலவே* - அவ்வாறெழுந்து அவ்வாறே அழிந்து போகின்ற உள்ளுணர்வு நிலைகள் சிலவாம் என்க.

*உறக்கத்தெழுந்து உயிர்ப்பு ஊர்வன சிலவே* - அவ்வாறு அங்கேயே அழிந்த உணர்வு நிலைகள் கழிய, அடிமனத்தினின்று வெளிப்போந்து புறமனத்தின் கண்ணே உணர்வின் அளவாக ஊர்ந்து நிற்கும் உணர்வு நிலைகள் சிலவாம் என்க.

இவ்வுணர்வு நிலைகளுட் சிலவே கனவு நிலைகளுட் புலப்படும் புறமன உணர்வலைகள்.

*கண்படப் புலர்ந்த* - ஆழ்ந்துறங்காது கட்புலனும் அதனையடுத்த பிற புறப்புலன்களும் அடங்கிய நிலையிலும், புற அறிவு அடங்கா நிலையிலும், புறமனத்தே புலர்ந்து தோன்றுகின்ற.

*கனவின சிலவே* - கனவாகும் உணர்வு நிலைகள் சிலவாம் என்க.

*எண்படு கனவின்* - எண்ணிக்கையழிந்த கனவு நிலைகளின் எண்ணற்ற கனவுகளுள் எண்ணிக்கைக்குட்படாதன பல உள. அவை போக நம் புற அறிவின் எல்லைக்குள்வந்து புகுந்து நாம் நினைவுநிலையில் வைத்து எண்ணிப் பார்க்க முடிந்த கனவு நிகழ்ச்சிகள்.

*எதிர்வன சிலவே* - அக்கனவு நிகழ்ச்சிகளுள் நினைவுள் எதிர்ந்து தோன்றுவன சிலவே எதிர்தல்-எதிர் ஒளிர்தல் (Reflection) நினைவு நிகழ்ச்சியைச் 'சாக்கிரம்' என்னும் உட்சொல்லாற் குறிப்பர் சிவனியமெய்ந் நூலார்.

கனவு பலவற்றுள்ளும் சிலவே நினைவுள் தோன்றும்.

*நினைவுள் உயிர்த்தழி நீர்மைய சிலவே* - அவ்வாறு நினைவுள் தோன்றும் உணர்வுகள் பலவற்றும் காலப்போக்கில் அழிந்து போகும் புல்லிய உணர்வுகள் சில. அவ்வாறு போனவை கழிய எஞ்சுவனவும் மிகச்சிலவாம் என்க.

*உயிரொடும் உடலெனும் ...... சிலவே* - அப்புகழ் பெறும் மிகமிகச் சிலவாம் மாந்த உயிர்களுள், இறுதிவரை உடலளவானும் தொடர்பு கொள்ளும் உயிர்களோ மிகவும் சிலவே என்க. என்னை? உலகியல் தொடர்பாகப் பிறிதோர் உயிர் நின்ற உடலொடு பொருந்தி, அவ்வுடல் அழியுங்கால், அத்தொடர்பையும் அறுத்துக் கொள்ளும் தன்மையுள்ள பொது உயிர்கள் சில என்க. பல உயிர்கள் அவ்வாறு உடலளவானும் தொடர்பு கொள்ளாது,

அவ்வுடலைப் பற்றிய எழிற் பொருட்டாயினும், இளமைப் பொருட்டாயினும் தொடர்பு கொண்டிருந்து, அப் புறவெழிலும் இளமைப் பருவமும் அழியுங்கால் அவ்வுடல் தொடர்பையையும் தவிர்த்துக் கொள்ளும் தன்மையவாம் ஆகலின்.

*உயிரொடும் உயிரென ... சிலவே* - அவ்வாறின்றி, உலக வாழ்வு உள்ளளவும் மற்றோர் உயிர் தங்கிய உடலொடு பொருந்தியிருந்து, இவ்வுலகத்தில் வாழ்வாங்கு கூடி வாழ்ந்து, தான் தொடர்புற்ற உயிருடல் அழிவுறுங்கால், அவ்வுடலோடு தன் உடல் வாழ்வையும் தவிர்த்துக் கொண்டு, பிரிந்தேகும் அவ்வுயிரொடு தம் உயிரையும் பொருத்திக் கொண்டு ஈருயிரும் ஓருயிராய் ஒன்றி உறைந்து நின்று, என்றென்றும் இன்புற்றியங்கும் மீமிசை மாந்த உயிர்கள் மிகமிகச் சிலவே என்க.

*என்றிவை எம்மோர் தேறலின்* - என்று இவ்வரிய உண்மைகளைத் தேர்ந்து அப்புகழ்க்குரிய வினைகளையே செயலுக்குரியவாகக் கொண்டு. எமக்குரிய எம் தலைவர் விளங்கி நிற்றலுமின்றி, எம் உயிரொடு தம் உயிரையும் பொருத்திக் கொண்டு ஓருயிராக இயங்குவார் ஆகலின்.

இவ்விடத்துத் தலைவி, தான் கனவின் கன்றிய காதல் கொண்டு, உடல் நலம் துய்த்தத் தலைவர்க்குத் தகுதி சாற்றினாள் என்றபடி, *'எம்மோர்'* என்றதால், எமக்கே உரியர் என்று உரிமையும், பிறள் ஒருத்தியை நாடா ஒழுக்கமும் சிறந்தார் என்று தலைவனைக் குறித்துப் பெருமையுற்றாள் என்க.

மேலும் தாங்கள் இருவரும் வேறு வேறு உயிர்கள் அல்ல ; ஓருயிரே என்றும் தோழிக்குணர்த்தினாள். எம் நட்பு வெறும் உடலொடு தொடர்புடையதன்று; உயிரொடு தொடர்புடையது என்றும் தெருட்டினாள் என்க.

உலகத் தொடர்புக்காக மட்டும் எங்கள் உடல்கள் பொருந்தி இன்பம் நுகரவில்லை. உயிர்த் தொடர்புக்காகவே எம் இருவரின் உடல்களும் பொருந்தின என்றாள்.

இனி, இப் பிறவியே எங்கள் ஓருயிர் ஈருடலாகப் பிறவியெடுக்கும் இறுதிப் பிறவி. மற்று, அடுத்து வரும் பிறவிகளுள் ஒருடல் ஓருயிராகவே பிறந்து இயங்குவோம் என்றும் குறிப்புணர்த்தினாள் என்க.

இங்ஙன் ஓரினப்பட்ட உயிர்கள் ஒன்றோடு ஒன்று பொருந்தி உறைந்து உயிர்த்திரட்சி பெற்று இறைமை எய்துவதே மேம்பட்ட மெய்யறிவுக் கொள்கை என ஈண்டு உணர்த்தப் பெற்றது என்க.

*குழல் மோந்தோர்* - எம் கூந்தலை மோந்தவர். குழல் மோந்தோர் என்றது தம்மை உடலாற் பொருந்தியவர் என்று இடக்கரடக்காகக் குறித்திட வேண்டி என்க.

*எம்மின் குன்றும் மறவார்* - எம் குழலை மோந்தவர், எம்மையும் யாம் வதியும் எம் குன்றையும் மறவாமல் நினைத்து விரைவில் மீண்டும் வந்து மணப்பார் என்றபடி.

*குழலை மோந்தவர்*, அக்குழலிற் சூடிய பூவின் மணத்தையும், அம்மணம் நிறைந்த பூ மலரும் குன்றையும் யாங்ஙன் மறத்தற் கியலும் என்றாள் என்க.

'புறவுலகம் மறந்த ஆழ்ந்த உறக்கத்து எழுந்து தோன்றும் பல்லாயிரங்கோடி உணர்வு அலைகளுள் அழிந்தன போக எஞ்சியவை சிலவாம்; அவற்றுள் மேனிலை உணர்வுக்கு வந்து உயிரியக்கத்தொடு கலந்து நிற்கும் உணர்வுகளோ மிகச்சில; அவற்றுள் பல அழிந்தவை போக, கட்புலன் முதலிய புறப்புலன் ஒடுங்கிப் புறஅறிவு ஒடுங்காத துயில் நிலையில் கனவுகளாய் முகிழ்க்கும் பன்னூறு உணர்வு நிலைகளுள், நினைவு நிலையில் எதிர்ந்து தோன்றுவன மிகமிகச் சிலவாம்; அவற்றுள்ளும் நிகழ்ச்சிகளாக மலர்வன மிகவும் சிலவாம்; அந்நிகழ்ச்சிகளுள்ளும் தனக்கு மட்டும் பயன்படும் நிகழ்ச்சிகள் சிற்சிலவாம்; அச்சிற்சில நிகழ்ச்சிகளுள்ளும் பிறர்க்குப் பயன்தரும் நிகழ்ச்சிகள் மிகச் சில; அவற்றுள்ளும் பிறர் பயன் படுத்திக்கொள்வன மிகவும் சிற்சில; அவற்றுள் புகழ்ச்சிக்குரியனவோ இன்னுஞ் சில; அத்தகு புகழ்ச்சி வினைகளைச் செய்யும் உயிர்களோ உலகில் சிற்சில; அச்சில மீமிசை மாந்த உயிர்களுள் சிலவே இவ்வுலக வாழ்வின் இறுதிவரை தாம் நட்புக்கொண்ட உடலொடு தொடர்புடையன மிகச் சிலவே என்க. (பிறவெல்லாம் எழிலொடும் இளமையொடும் கழிவன.) அத்தகு தேறிய உடல் தொடர்புற்ற சிற்சில உயிர்களுள் மிகவும் சிலவே தாம் நட்புக் கொண்ட உயிர்களோடு இறுதிவரை பொருந்தி உறைந்து நிலையான இன்பம் பெறுவன. இவ்வுயிரியக்க உண்மைகளை எம்மொடு தொடர்பு கொண்ட எம் தலைவர் தேர்ந்து உணர்ந்துளார் ஆகையால், அவரொடு யாம் கொண்ட தொடர்பும் வெறும் உடல் தொடர்பினது அன்று; உயிர்த் தொடர்பினது. எனவே எம் உயிரியங்கும் இவ்வுடலையும் அது வதியும் இக்குன்றையும் அவர் மறத்தற்கியலாது; எம்மொடு புணர்ந்த காலத்து எம் கூந்தல் மணத்தையும் அதற்கு ஏதுவாகிய மணமிகுந்த மலரையும், அது மலரும் இக் குன்றையும் அவர் நினைவுகூர்ந்து விரைவில், எம்மை மணந்து கொள்ளுதற்குரிய பொருளை ஈட்டிக் கொண்டுவந்து என்னை மணந்து கொள்வார்; எனவே, தோழி! நீ அவர் பற்றி ஐயப்படாதொழிக'-என்று தலைவி தெருட்டிக் கூறினாள் என்று கூறியதாகும் இப் பாடல்.

இது, *பாலை* யென் திணையும், *வரைவிடை வைத்த பிரிவினை ஐயுற்ற தோழியைத் தலைவி தெருட்டிக் கூறியது* என்னுந் துறையுமாம்.



# 42 சாய்த்தலும் நன்றே!

*வற்றக் காய்ந்த வறற்களிப் பிளவை*
*துற்றப் பொழிதரத் துளும்புநீர் ஏரிக்*
*கொடுங்கரை யிரிந்தூர் குலைவுறு முன்னம்*
*பாய்கால் எற்றுப் பயன்கொளு பான்மையின்*
*ஆய்வழித் தேங்கிய ஆக்கம்*
*சாய்வழிச் சாய்முன் சாய்த்தலும் நன்றே!*

**பொழிப்பு:**

*அடி மண்ணும் ஈரம் வற்றும்படி காய்ந்து வறண்ட களிமண் நிலத்து, வெடித்துப் பிளந்த பிளவுகள் மீண்டும் நெருங்கி இணையுமாறு பொழிந்த மழையால் நிரம்பித் துளும்புகின்ற ஏரியின் வளைந்த கரை உடைந்து, அண்டையயல் ஊர்கள் நிலை குலையுமுன், அவ்வூர் மக்கள் வடிகால் வெட்டி, வீணாய்ப் போகும் அவ்வேரி நீரைப் பயன் கொள்ளுதல் போல், ஏதோ ஓர் ஆகின்ற வழியான் வந்து தேங்கிக் கிடக்கும் ஆக்கம், தானே கட்டுடைத்துக் கொண்டு அது சாய வேண்டிய வழிச் சாய்வதற்கு முன்னம், அதனைப் பல்வகைப் பயன்களுக்கும் பலர்பாலும் தாழும்படி செய்தல் அனைத்தினும் நன்றாம் என்க.*

**விரிப்பு:**

*இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.*

*ஏதோ ஓர் ஆகின்ற வழியால் ஒருவர் பால் வந்து தேங்கிக் கிடக்கும் செல்வம், அது தானே வழியில் கழிந்து போகுமுன், அதனைப் பலர்க்கும் பயன் தரும் வகையில் பயன்படுத்த முயற்சி செய்வது நல்லது என்னும் இயற்கை உண்மையை எடுத்துக் கூறுவதாகும் இப்பாடல்.*

*நன்றாக நீர் வறளும்படி காய்ந்து பாளம் பாளமாக வெடித்துக் கிடக்கும் களிமண் நிலத்தில், அவ்வெடிப்புகள் பொருந்தி இணையும்படி மழை பொழி தருகிறது. அதனால் ஏரி நிரம்பி நீர் துளும்பி நிற்கிறது. நீரின் அழுத்தம் தாளாமல் கரை உடைப்பெடுத்துக் கொள்ளும்; அதனால் அண்டையயல் ஊர்கள் முழுகி அழியும் என்பதை முன்னுணர்ந்து கொண்ட மக்கள் அதற்கு வடிகால் எடுத்து நீரை ஒழுங்குபட வாய்க்கால் வழிச் செலுத்திச் சேய்மையிலுள்ள வயல்களுக்குப் பாயும்படி செய்கின்றனர். அதுபோல் நிரம்பிய செல்வம் ஏதோ ஓர் ஆகும் வழியால் ஒருவரிடம் வந்து*

தேங்குகின்றது. அதனை அவ்வாறே தேக்கி வைத்திருப்பின், அது மீண்டும் ஏதோ ஒரு போகும் வழியில் போய்விடும். அந்நிலையில் அது பயன் ஒன்றும் பயவாது, அழிவையும் உண்டாக்கிவிடும். அதனை முன்னுணர்ந்து கொண்டு, அதனைப் பயனுடைய வழிகளுக்குச் செலவிட வேண்டும்; அதுவே அறமும் உலகப் பயன் கருதியதும் ஆகும் என்பது இப்பாட்டு.

*வற்றக் காய்ந்த* : அடிநீரும் வற்றிப் போகும்படி வெயிலிற் காய்ந்த.

*வறல் களிப் பிளவை* : வறண்டு வெடித்த களிமண் பிளவுகள்.

*துற்ற* : பொருந்தி ஒன்றோடு ஒன்று இணையும்படி.

*பொழிதர* : மழையானது நன்கு பொழிய.

*துளும்பு நீர் ஏரிக் கொடுங்கரை* : நிறைந்து துளும்புகின்ற நீரையுடைய ஏரியினது வளைந்த கரை.

*இரிந்து* : இடிந்து விழுந்து

*ஊர் குலைவுறு முன்னம்* : அண்டை அயல் ஊர்கள் நிலைகுலையும் முன்.

*பாய்கால் எற்று* : அந்நிரம்பிய நீர் பாய்ந்து ஓடித் தேவையான சேய்மை நிலத்திற்குப் பயன்படும்படி வாய்க்கால்களை எடுத்து ;

*பயன் கொளும் பான்மையின்* : அந்நீரின் பயனை முழுதாகக் கொள்ளும் தன்மை போல்.

*ஆய்வழித் தேங்கிய ஆக்கம்* : ஏதோ ஓர் ஆகின்ற வழியில் வந்து தேங்கிய செல்வம் முதலிய ஆக்கங்கள்.

*சாய்வழிச் சாய்முன்* : ஏதோ ஒரு வழியில் முழுதும் வீழ்ந்து போகு முன்.

*சாய்த்தலும் நன்றே* : நாமே, அச்செல்வம் நல்ல வழிக்குப் பயன்படும்படி ஈடுபடுத்துவதும் நல்லறமாகும்.

வற்றக் காய்ந்த நிலம் என்றதால் முன் வறுமையுற்ற நிலை உணர்த்தப்பெற்றது.

வறற்களிப் பிளவை என்றதால் வறுமையால் தாக்குண்டவர் தம்முன் பூசலிட்டு உறவும் உற்றமும் வேறுபடப் பிரிந்து நின்ற நிலை கூறப்பெற்றது. துற்றப் பொழி தர என்றதால், செல்வம் வந்த விடத்து அப்பிளவுகள் நீங்கி ஒருமையுறும் இயற்கைத் தன்மை காட்டப்பெற்றது. துளும்புதல், நீர் அளவு மீறலால், தன் இயங்கு நிலை அழுத்தம் மிகுந்து அசைவுற்றுக் கரை மீற முற்படுதல்.

*கொடுங் கரை* : வளைந்த கரை.

*ஏரி :* ஏருக்குப் பயன்படும் நீர் தேங்கியிருக்கும் நிலை.

*இரிதல் :* இடிந்து விழுதல், முரிதல், இணைவு அறுதல்.

*பாய்கால் :* நீர் பாய்ந்தோடும் வாய்க்கால்.

*ஆய்வழி :* ஏதோ ஒரு வகையான் ஆகிவரும் வழி.

*பரியினும் ஆகாவாம் பாலல்ல; உய்த்துச்*
*சொரியினும் போகா தம.*

- என்னும் குறட்பாவை நினைவு படுத்தியது இக்கருத்து.

*சாய்வழி :* ஒரேயடியாகப் போகும் வழி.

இவ்விடத்துக்

*கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்*
*போக்கும் அதுவிளிந் தற்று.*

- என்னும் குறட்பாவை ஓர்க.

வாய்க்கால் வெட்டி விடாமைப்பொழுது, ஏரி நீர் கரையுடைத்து அண்டை அயல் ஊர்களுக்கு அழிவை உண்டாக்குதல் போல், அறவழியில் செலவு செய்யப் பெறாமல் தேங்கியுள்ள பெருஞ்செல்வம் வேறு வழியிற் கழிந்து குற்றங்களையும் தீங்குகளையும் உண்டாக்கும் என்க.

இங்கு,

*ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்கொன்று*
*ஈதல் இயல்பிலா தான்.*

- என்னும் மெய்ம்மொழியை நினைக்க.

செல்வம் தேங்குதல் அரிது. ஏதோ ஒரு வகையான் தேங்கி நிற்பின் அது நல்வழிக்குச் செலவிடப் பெறுதல் வேண்டும். அல்லாத வழி, அஃது அவ்வழியில் சென்று அது குற்றங்களையும் கொடுமைகளையும் விளைவிக்குமாம் என்க.

- இது, *காஞ்சிப் பொதுவியல்* எண் திணையும் *முது காஞ்சி* என் துறையுமாம் என்க.



## 43 எழிலிருந்த வாறே

மெய்யெனக் கொள்ளினுங் கொள்ளுக; பேதை
வெய்தீர் முயக்கென் றிகழினும் இகழ்க;
எதிர்ப்படு ஞான்றும் விழிமுகங் கவிழ்ந்த;
வதிந்த காலும் நாணுறக் குனிந்த;
இனைத்துங் காண்டிலை அம்ம, ஏர்ந்தே
பணையார்ந்த நெடுந்தோள் பதிய
எனையூர்ந்த காளைக்கு எழிலிருந்த வாறே!

**பொழிப்பு:**

உண்மையென்று கருதிக் கொண்டாலும் கொள்ளுக ; அல்லது (பொய் என்று கருதிக் கொண்டாலும் கொள்ளுக ;)

பேதைப் பெண்ணாகிய எனது உடல் வெப்பம் தீரும்படியாக (அவனுடன் நினைவின்றி முயங்கிக் கிடந்த) முயக்கம் என்று கருதி இகழ்ந்தாலும் இகழ்க. அவனை நேருக்கு நேராக எதிரில் கண்டு காதலித்த பொழுதும் நாணத்தால் விழிகளும் முகமும் கவிழ்ந்து கொண்டன. அவனுடன் மணங்கொண்டு வாழ்கின்ற இப்பொழுதும் அதே நாணம் மேலுற அவை குனிந்து கொள்ளுகின்றன. எனவாக, இன்றுங்கூட, நான் கண்டில்லை. அம்ம, உயர்ந்து பருத்த அழகிய நெடிய தோள்கள்( என் மார்பில் பதியும்படி) என்னைப் புணர்கின்ற காளை போலும் என் தலைவற்கு எழில் இருந்த அவ்வகையினை.

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

'நின் தலைவனது எழில் நலம் எவ்வாறு' என்று நொதுமல் தோழி யொருத்தி, கற்பு காலத்துத் தலைவியிடம் வினாவுகின்றாள். அவட்குத் தலைவி இவ்வாறு விடை கூறுகின்றாள் என்பதாகும் இப்பாட்டு.

'அவன் அழகு நலன் முழுமையாக எவ்வாறிருக்கும் என்பதை, அவனொடு மணம் பொருந்தி இல்லறம் மேவிய எனக்கு இன்று வரையிலும் கூடத் தெரியாது. முன்பு அவனைக் காதலித்துக் களவொழுக்கம் கொண்டிருந்த காலை, அவனை நெருங்கிய பொழுதெல்லாம் அவன் அழகை முழுமையாகப் பார்த்துச் சுவைக்க முடியாதவாறு என் விழிகளும்

முகமும் நாணத்தால் கவிழ்ந்தே யிருந்தன. திருமணம் ஆகி, உரிமையுடன் என்னைப் பொருந்தி வாழும் இன்றும் அவன் அழகைப் பருக வியலாமல் அதே நாணம் தடுக்கின்றது.'

*மெய்யெனக்...... கொள்ளுக.* - மெய்யென்று நினைத்துக் கொண்டாலும் நினைத்துக் கொள்க. ஐய உம்மையால் பொய்யென்று கருதினாலும் கருதிக் கொள் என்பது வருவித்துரைக்கப் பெற்றது. மெய் என்று முதற்கண் கூறியதால் இது மெய்யேயாம் என்று உறுதியும் உரைக்கப்பெற்றது.

மெய்-மெய் (உடல்) போலும் உண்மை. உயிர் உளதாதலை மெய்யென்று உறுதிப் படுத்துதலான் அஃது உடலுக்கும், நுண் பொருளுணர்வாகியதைப் பருப்பொருளான் உணர்த்துதலான் அஃது உண்மைக்கும் சொல்லாகியது.

*பேதை* - அறிவுப் பேதைமை. பருவங்குறித்ததன்று. தன் கணவனை ஏறிட்டுப் பார்க்கின்ற அறிவுத் துணிவும் கொள்ளாளாகையால் பேதை எனப் பெற்றது.

*வெய்தீர் முயக்கு* - உடலின் காம வெப்பம் தீரும்படி தழுவுகின்ற தழுவல். தீர்தல்- தணிதல்.

*இகழினும் இகழ்க* - உடல் வேட்கையின் வெக்கை தணிக்கின்ற மெய்யுறு புணர்ச்சியில் அறிவு மயங்கிய பேதை என்று இகழினும் இகழ்க என்றபடி. இகழ்ச்சி உடலின் காம வெப்பம் மிகுந்தவள் என்னும் நிலையால் கூறப்பெறுவது.

*எதிர்ப்படு ஞான்றும்* - தலைவன் களவுக் காலத்து தன் எதிர் வந்து தோன்றிய பொழுதும்.

*விழிமுகம் கவிழ்ந்த* - விழியும் முகமும் (நாணத்தால்) கவிழ்ந்து கொண்டன.

*வதிந்த காலும்* - கற்புக் காலத்துத் திருமணம் கொண்டு வாழ்கின்ற இப்பொழுதும்.

*நாணுறக் குனிந்த* - நாணம் மேலேறும்படி அவை குனிந்தன.

*இனைத்தும் காண்டிலை* - இற்றை அளவிலும் கண்டதில்லை.

*அம்ம* - நொதுமலுக்குரிய பொது விளி.

நொதுமல்- உறவும் பகையுமல்லாத ஒரு தொடர்பு நிலை. முன்பே தோழி என்னும் உறவு பூண்டிருந்தால் அவளுக்குத் தலைவியின் குறிப்பு தெரியுமாகையால் இவ்வினா அவள் கேட்டிராள்; பகையெனினும் இக்கேள்வி எழற்கு இடமில்லை; ஆகையான் நொதுமல் என்று கருதி, அதன் குறிப்பாக அம்ம என்னும் பொது விளி தோன்றிய தென்க.

*ஏர்ந்த* -உயர்ந்த

ஏ, ஓ உயர்ச்சி குறிக்கும் ஓரெழுத்தொரு மொழியும் முன்னொட்டுமாம். ஏணி, ஓங்கல் என்னும் சொற்களின் முன்னொட்டுகளைக் காண்க.

*பணையார்ந்த* - பருமையும் அழகும் நிறைந்த.

நெடுந்தோள் பதிய: நெடிய தோள்கள் அழுந்தும்படி.

தலைவனை ஏறெடுத்துப் பாரா நிலையில் அவன் தோளழகு கூறியது, மெய்தொட்டுப் பயின்ற உணர்வினால் என்க.

*எனையூர்ந்த காளை* - என்னை மேலேறிப் புணர்ந்த காளை போன்றவன்.

*எழிலிருந்தவாறு* - அழகிருந்த வகையினை.

'தலைவனின் உடல் அழகையும் முக அழகையும் நேரிடையாகக் கண்டு பருக முடியாதவாறு என் நாணம் தடுத்தது. அவனை முதன் முதலாகக் கண்டு காதலித்த பொழுதும் இதற்கு வாய்ப்பில்லாமற் போயிற்று; மணந்து கொண்டு இல்லறம் பயிலும் இன்றும் அறியவியலாமற் போனது' என்று கூறித் தன் நாண மிகுதியை உணர்த்தினாள் என்க.

இது *முல்லை* என் திணையும். *கற்புக் காலத்துத் தலைவனது எழில் நலங்கேட்ட தோழிக்குத் தலைவி கூறியது* என்னுந் துறையுமாம்.



# 44 பொய்வழங் கிலனே !

எள்ளாடு செக்கர் நெய்கழி ஈமென்று
உள்ளத் துவப்பின் ஓங்குதிமில் எருத்தம்
ஒய்யென் னோசைக்கு உறங்கியாங் குலவரும்
செய்யூர்க் கொண்டல் மெய்யிலா னெனினும்
பொய்வழங் கிலனே தோழி தொய்குழல்
நெய்வீப் பெய்யும் நாளுமொன் றுண்டே!

**பொழிப்புரை:**

எள்ளைச் செக்கிலிட்டு ஆட்டுகின்ற செக்கர், இறுதியில் எள்ளில் உள்ள நெய்யைப் பிழிந்து கொண்டு, அது கழிந்த கழிவாகிய பிண்ணாக்கைத் தனக்குத் தருவர் என்னும் உள்ள உவப்புடன், ஓங்கிய திமிலையுடைய எருது, செக்கு ஆடுதலால் தோன்றிய 'ஒய்'யென்னும் ஓசையைக் கேட்டவாறு உறக்கம் கொண்டு சுழன்று வரும் தன்மையுடைய, வயல்கள் சூழ்ந்த மருத நிலத்தலைவன், எனக்கு மெய்யாக நடக்கிலான் எனினும் பொய் கூறும் தன்மையன் அல்லன், தோழி, அவிழ்ந்து தொய்ந்து கிடக்கும் என் கூந்தல் நெய்யும் பூவும் செரிந்து கொள்ளும் நாளும் ஒன்று உண்டு.

**விரிப்பு :**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

'நெய்யும் பூவும் இல்லாமல் நின் கூந்தல் இவ்வாறு அவிழ்ந்து பாரிக் கிடத்தல் என்ன' என்று வினாவிய தோழிக்குத் தலைவி இது கூறினாள் என்க.

'எள்ளைச் செக்கிலிட்டு ஆட்டுகின்ற மருத நிலத்தைச் சார்ந்தவன் என் தலைவன். அவன் ஊர் வயல்கள் நிறைந்த செய்யூர். எனவே அவன் கொண்டல் என்னும் பெயர் பெற்றான். அவன் இக்கால் என்னைத் துறந்து, என் நலமும் இழந்து, அயற் பெண்ணொருத்தியின் மயல் மேற்கொண்டு புறவொழுக்கம் கொண்டான். அவனின் பொருள் தீரும் வரை காதல் காட்டி, அவனை அவள் கை நெகிழ்க்கும் நாள் ஒன்று வரும். அக்கால் அவன் என்னை நாடி வருவான். அது போழ்து யானும் நெய் சொரிந்து தலைவாரிப் பூச்சூடி மகிழ்வேன் என்று தலைவி விடையாகக் கூறியது இப்பாட்டு.

தலைவி குறிப்பாகக் கூறும் விடையில் அவள் தனிமைத்துயரும்

தலைவனின் புறவொழுக்கமும், அவன் மேல் உள்ள பழியும், அவன் மேல் இவள் வைத்த அன்பும் நம்பிக்கையும் தெளிவாகப் புலப்படுகின்றன.

*எள்ளாடு செக்கர்* - எண்ணெய்க்காக எள் ஆடுகின்ற செக்கையுடைய செக்கர்.

*நெய்கழி ஈமென்று* - நெய் கழிந்த எச்சத்தை (பிண்ணாக்கை)த் தனக்குத் தருவர் என்று கருதி. நெய்கழி- பிண்ணாக்கு.

*உள்ளத்து உவப்பின்* - உள்ளத்தெழுகின்ற மகிழ்ச்சியொடு.

*ஓங்கு திமில் எருத்தம்* - உயர்ந்த திமிலை உடைய எருது.

*'ஒய்'யென் ஓசைக்கு* - செக்கு ஆடுதலினால் எழும் 'ஒய்' என்னும் ஓசையினுக்கு (செவி தந்து)

*உறங்கியாங்கு உலவரும்* - (அவ்வோசையைக் கேட்டபடி) கண்களை மூடியவாறு தூங்குவது போல் அச்செக்கைச் சுற்றி வரும்.

*செய்யூர்* - வயல்களையுடைய செய்யூர் என்னும் பெயரிய ஊரைச் சார்ந்த.

*கொண்டல்* - மருத நிலத்தலைவன். (மேகம் போன்ற தலைவன். கொண்டல்-மழையைக் கொண்டுவரும் மேகம்.)

*மெய்யிலானெனினும் ......... தோழி* - எனக்குத் தான் எங்குச் செல்கின்றான் என்னும் மெய்யை உரைக்காது (பிறள் ஒருத்தியிடம்) சென்றான் எனினும், 'வருவேன்' என்று கூறிவிட்டு போனபடி வருவான்; அவன் பொய் வழங்கிலான், தோழி! என்றவாறு.

'அவன் சென்றவிடத்தை எனக்குக் கூறிலன் ஆகையால் அவன் மெய்யில்லாதவன் ஆயினும், அவன் பொய்யும் உரையான் ஆகையால், வருவேன் என்றுரைத்தபடி வருவான்' என்று நம்பிக்கையுடனும் அன்புடனும் கூறினாள் என்க.

*தொய் குழல்* - நெய்யில்லாது அவிழ்ந்து பரந்த என் கூந்தல்.

*நெய்வீப் பெய்யும் ....... உண்டே!* - நெய்யும் பூவும் ஒருசேரப் பெய்து கொள்ளும் நாளும் ஒரு நாள் உண்டு; அதுவரும்- என்றாள் என்க.

இதில், **நாளும் ஒன்று உண்டு** என்றதால் உறுதியும், **பொய் வழங்கிலனே** என்றதால் அன்பும், **மெய்யிலான்** என்றதால் சினமும், **கொண்டல்** என்றதால் அவன் தனக்குக் காலத்தாலும் இடத்தாலும் பொழிதல் இலாதவன் எனக்குறித்த ஏக்கமும், அவனின் ஊர் **செய்யூர்** என்றதால் அவனின் விளைவு சான்ற செல்வ நிலையும், அவ்வயல் போல் தான் அவன் பொழிவுக்கு ஏங்கி நின்ற காதல் குறிப்பும் குடும்ப நோக்கமும் புலப்பட உரைத்தாள் என்க.

இனி, எள்ளாடு செக்கர் என்றவழி, எள்ளை ஆட்டிப்பிழிந்து கொள்வது போல், தலைவனைக் காதல் உணர்வினால் ஆட்டிப் பொருளைப் பிழிந்து கொள்ளும் அயலாளது உளநிலையும், நெய்கழி ஈயுமென்றதால், தலைவனது பொருளாகிய சாற்றைப் பிழிந்து கொண்டு எஞ்சியுள்ள சக்கைபோல் தலைவனை மட்டில் தனக்கவள் தருவாள் என்னும் எதிர்பார்ப்பும், பொருள் நீங்கிய பின்னேனும் அவன் தனக்குக் கிடைப்பான் என்னும் தலைவியது உள்ள உவப்பும், *ஓங்கு திமில் எருத்தம்* என்றதால் பெருமை சான்ற அவள் கற்பும், *ஒய்யென் ஓசைக்கு உறங்கியாங்கு உலவரும்* என்றதால் ஊரார் அவனை உரைத்த பழிகேட்டவாறு, இயக்க மற்றவளாய் அவள் இல்லிருந்து உலவுவதும் புலப்பட்டன என்க.

எள்ளை ஆட்டி எண்ணெயைப் பிழிந்து கொள்ளும் செக்கர் போலும், தலைவனது புறவொழுக்கக் காதலி, தலைவனைக் காதலுணர்வால் ஆட்டி அவன் கைப்பொருளைப் பறித்துக் கொள்வாள். ஆயினும், அவ்வெண்ணெயைப் பிழிந்து கொள்ளும் செக்கர் எஞ்சிய நெய்கழியையேனும் அவ்வெருதுக்குத் தருவதுபோல், அக்காதலியும் தன் தலைவனை வெறுங்கையனாகவேனும் தனக்குத் தருவாள். எனவே அதுவரை அவன் வருவான் என்னும் உள்ள உவகையுடன் செக்கை இழுக்கும் எருது, அது சுற்றப்படுதலால் எழும் 'ஒய்' யென்னும் ஓசையைக் கேட்டவாறு, உறங்கிக்கொண்டே சுற்றி வருதல் போல், தானும் அவன் மேல் ஊரார் உரைக்கும் பழிச் சொற்களைக் கேட்டவாறு புறவுணர்வற்றவளாய்ப் புலனொடுக்கத்துடன் இல்லிருந்து வருகிறாள் தலைவி. வயல்கள் நிறைந்த ஊரின் மேகம் போன்ற தலைவன் அவனாகையால், தலைவிக்கு அவன், மழைமேகம் போல் வேண்டிய விடத்து வேண்டிய காலத்துப் பொழியாதவாறும், வேண்டாதவிடத்து அளவின்றிப் பொழியுமாறும், தன்னிடத்து அன்பு மழை பொழியாமல் தன் புறவொழுக்கக் காதலியிடத்துக் காதன் மழை பொழிகின்றான். அவன் தலைவியை விட்டு நீங்குகையில் எவ்விடத்துச் செல்கின்றான் என்று கூறாமல் சென்றானாகையால் அவன் மெய்யிலான் ஆகின்றான். ஆனால் அதேவிடத்து'வருவேன்' என்று கூறிப் போந்ததால், அவன் வருவான்; ஏனெனில் அவன் பொய் வழங்காதவன். அவன் வரும் வரை அவள் பெருங்கற்பு தோன்ற இல்லிருக்கின்றாள், என்றெல்லாம் பொருள் விளங்கும்படி அவளேன் நெய்யும் பூவும் சொரிந்து தலை புனைந்து கொள்ளவில்லை என்று கேட்ட தோழிக்கு விடை கூறுகின்றாள், தலைவி என்க.

***இது முல்லை என் திணையும், புனைந்து கொள் என்ற தோழிக்குத் தலைவன் பொருள் தேடச்சென்றவிடத்துப் பயிலும் புறவொழுக் கத்தால் கவன்று இல்லிருக்கும் தலைவி தன் கற்பு தோன்ற உரைத்தது என்னுந் துறையுமாம்.***

# 45 வினவுதி ராயின் ...

*யாண்டுசில வாக நரையுள வாகுதல்*
*யாங்கா குதியென வினவுதி ராயின்*
*பூண்டவென் மனைவியோ மாண்டமைந் தில்லாள்*
*ஆண்டொன் றீன்ற மக்களும் அறிவிலர்*
*ஒன்றுரை வினையொன் றுழப்பர் இளையரும்*
*மன்றறந் திறம்பியது எமையாள் அரசும்*
*ஆன்றோர் நெஞ்சம் அழலத் திரிதரும்*
*இறந்த ஒழுக்கினார் எள்ளுரை*
*நிறைந்த ஊர்யான் நெருங்கிய ஊரே!*

பொழிப்பு:

*கழிந்த யாண்டுகள் சிலவேயாக, நினக்கு நரை வந்து ஆகியது யாங்ஙனம் ஆயினை என வினாவுவீராயின், யான் இல்லறம் பூண்ட என் மனைவியோ பெருமை பொருந்திய குணங்களொடு அமைந்திலள் ஆயினள்; ஆண்டுக்கு ஒன்றாக அவள் ஈன்று தந்த எண்ணில் மிகுந்த என் மக்களும் அறிவிலராக வாய்த்தனர். ஒன்று உரையாக, வினை ஒன்றாகச் செய்து, என் துணையாளரும் எனக்குத் துன்பம் விளைவிப்பர்; மன்ற அற முறைகள் திரிந்து வேறுபட்டது, எங்களை ஆள்கின்ற அரசும்; இவையன்றிச் சான்றாண்மை நிரம்பியவர் உள்ளங்கள் கொதிப்புற்று வருந்தும்படி, எவ்விடத்தும் வீணே திரிந்து கொண்டிருக்கின்ற ஒழுக்கம் தவறியவர்களின் வாயினின்று வெளிப்படும் எள்ளத்தகுந்த இழிவுரைகள் நிறைந்து கேட்கின்ற ஊர் யான் நெருங்க இருந்து வாழும் ஊரே!*

**விரிப்பு:**

*இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.*

இளையோன் ஒருவன் நரை வாய்ந்தானாக, அவனை 'நீ யாங்ஙனம் இவ்விளமைப் பொழுதிலேயே நரை வந்து வாய்க்கப் பெற்றனை' என்று வினாவிய முதியோர் ஒருவர்க்கு அவன் விடை கூறுவதாகப் பாடப் பெற்றதிப் பாடல்.

*இது புறநானூற்று 'யாண்டு பலவாக' என்னும் பிசிராந்தையார் பாடலை நினைந்து அதற்கு மறுதலையாகப் பாடப்பெற்றது.*

பொந்தியகையற்றுக் கவல் நிறைந்த வாழ்க்கை இளமையிலேயே நரையைத் தோற்றுவிக்கும் என்னும் உளவியலை அடியொட்டியது இது.

'யான் மணம் பூண்ட என் மனைவியோ மாண்பு அமைதல் இல்லாதவள் ஆயினள்; எனவே இல்லறச் சிறப்பின்மையால் என் மனங்கவன்று ஏறுபோல் பீடு நடை குன்றிக் குமைந்தேன். ஆண்டுக் கொன்றாக அவள் பயந்த மக்கள் பலருள் ஒருவரேனும் அறிவறிந்தவராக வாயாமற் போயினமையால், பெறத்தக்க பேறின்றி நெஞ்சம் அழன்றேன். என் வினைவாழ்க்கையிலோ, என் துணையாளரும் பணியாளரும் யானொன்றுரைக்க, அவர் அக் குறிப்பறியாது, நின்ற நெடுமரம் போல், வினையொன்றியற்றிப் பாடுகெடுப்பாராகலின் மனம் உழன்றேன்; இனி, என்னையும் எம்மையும் ஆள்தற்கு வந்து வாய்த்த அரசோ, அவையத்து அறமுறை திரிந்து மாறி நடக்கும் அரசாக அமைந்ததாகலின், அதுபற்றியும் அறிவு கனன்று கடுந்துயருற்றேன். இனி, இவையனைத்தும் ஒருபுறங்கிடக்க, சான்றோர் நெஞ்சம் கொதிப்புற்று வருந்தும்படி, என்றும் எவ்விடத்தும், முனைப்பும் வினைப்பாடும் முற்றத் துறந்தாராய் இளைஞரும் பிறரும் இறந்து பட்ட ஒழுக்கமும் பண்பும் கொண்டு, தத்தமக்குள் பிறர் எள்ளத்தகுந்த இழிவுரைகளும் பழியுரைகளும் ஆடக் கொண்டோராக ஊர்வலம் வரும் நெரிசல் மிக்குடைய ஊரின் கண்ணே வந்து வதியலுற்றேன் ஆயினேன்; பின் என்னை, எனக்கு இவ்விளமைக்கண்ணே முதுமை வந்தாற்போலும் தலை நரை காணாது போகுமோ கண்டேன், என்றானாக, 'என்னை? நினக்கு இளமை நரை பூண்டது' என்று வினாவியவர்க்கு உரை தந்தான் என்க.

*யாண்டு சிலவாக* - நினக்குக் கழிந்த ஆண்டுகள் சிலவே ஆக. (நின் அகவை (வயது) குறைவாக இருக்க.)

*நரையுள வாகுதல்* - நினக்கு நரை உளதாக இருத்தல்.

*யாங்கு ஆகுதி* - யாங்ஙன் ஆகினை.

*என வினவுதிராயின்* - என வினவுவீர் ஆயின்.

***பூண்ட என் மனைவியோ*** - யான் மணம்பூண்ட என் மனைவியாகியளோ.

***மாண்டு அமைந்தில்லாள்*** - மாட்சிமையற்று அமைவில்லாதவள் ஆகினள்.

***ஆண்டு ஒன்று ஈன்ற மக்களும் அறிவிலர்*** - ஆண்டுக் கொன்றாக அவள் ஈன்று தந்த மக்களும் அறிவறியா மக்களாயினர்.

***ஒன்று உரை வினை ஒன்று*** - உரைத்தது ஒன்றாகச் செய்வது ஒன்றாக.

***உழப்பர் இளையரும்*** - என் வினைக்கென வந்து வாய்த்த எனக்குக் கீழாயினோரும், மனத்துயர் தருவர்.

*மன்று ........ அரசும்* - ஆளுமை முறை சார்ந்த அரசமன்றமும், நெறி முறை மாறி வேறுற்றுப் போனது.

*ஆன்றோர் நெஞ்சம் அழல* - அறிவும் ஒழுக்கமும் சான்ற உயர் நெறியாளர் தம் நெஞ்சு, புறச்சூழ்நிலை கண்டு கொதிப்புறும்படி.

*திரிதரும் இறந்த ஒழுக்கினார்* - மாக்கள் போல் தாறு மாறாகக் குறிக்கோளற்று ஊர்க்கண், குறுக்கும் நெடுக்குமாகத் திரிகின்ற, தவிர்ந்த ஒழுக்கமுடைய அரம்ப மாக்கள்.

*எள்ளுரை நிறைந்த* - எள்ளத் தகுந்த இழிவுரைகளே எங்கும் கேட்கும்படி மலிந்து நிற்கின்ற.

*ஊர்யான் நெருங்கிய ஊரே!* - ஊராக இருக்கிறது, யான் வந்து நெரிசலில் நசுங்கி வதியும் ஊர்.

மாந்தனுக்கு புறக்கூறாக அமைந்த செல்வநிலை வாழ்க்கை எத்துணைச் சிறப்பாக அமையினும், அகக்கூறாக உள்ள இல்லற அமைவும், அதையொட்டிய நாள் நடைமுறைகளும் சிறப்புற அமைய வில்லையாயின் அவன் மகிழ்ச்சியுற்றிருக்க இயலாதெனும் உளவியல் உண்மையை உணர்த்தியதாகும் இப்பாடல்.

அகச் சிறப்பமை வின்மையால் மகிழ்ச்சி இயலாதாகவே எத்துணைச் சிறந்த உணவுண்டு இளமை பேணினும், உடல் காலக் கழிவின்றியே முதுமை தோற்றுவிக்கும் என்னும் உடலியல் உண்மையுங் கூறியது இது.

இது *பொதுவியல்* என் திணையும் *பொருண்மொழிக் காஞ்சி* என்னுந் துறையுமாம் என்க.



## 46 மருட்கை யுன் துணிவே

அம்ம, வாழி தோழி! நின் காதல்
இம்மா நிலத்தும் பெரிதே! பொழிந்த
விசும்பின் தூய்தே; கதிரின் செவ்விது;
மணியின் காழ்த்தது; பனியின் தண்ணிது;
அறவோர் நெஞ்சினும் அகன்றது; நெறியின்
துறவோர் உளத்தினுந் திண்ணிது; மறவன்
கொடுங்கை அம்பினுங் கூரிதே; அவன்றன்
நெடுங்குறி யெய்பினும் நேரிதே; புலவர்
தடையறு கற்பனை மடையி னாழ்ந்தது;
கொடையருள் நெஞ்சினும் புடைநனி கனிந்தது;
நிணநீர்ப் பெருக்கி முரசுத்தலை செருக்கிப்
பணைக்கால் அலைத்த பருங்கூர்ங் கோட்டின்
களிறு வீழ்த்திய வரியினுந் துணிந்ததே!
குலந்தரு பிரிவைக் குலைத்ததுன் வளைக்கை!
அலர்தலை மிதித்துத் துமித்ததுன் அணிகழல்!
இழிநோக் கெரித்ததுன் எரியுமிழ் இணைவிழி!
பழியறத் துடைத்ததுன் பண்புறு நெஞ்சம்!
செங்கால் நாரையின் தூங்கி யிருந்து,
நுங்குறி பற்றினை; மருட்கையுன் றுணிவே!
சான்றவர் பாங்கின் ஊன்றிய நெஞ்சும்
தோன்றுயர் வினையின் நான்றிய உணர்வும்
தாழ்வறப் பெற்றோன் தடந்தோள்
வாழ்வெனப் பற்றி வரைந்தனை கொண்டே!

**பொழிப்பு:**

அம்ம! தோழியே! நீ என்றும் வாழ்வாயாக! நினது காதல் இவ்வுலகை விடப் பெரியது; நிறைந்து பெய்த மழைக்குப் பின்னுள்ள விசும்பைப் போல் தூயது; ஒளிக்கதிரைவிடச் செவ்வையானது; வயிரத்தைவிட உறுதியானது; பனியை விடக் குளிர்ந்தது; அறம் பேணுவார் நெஞ்சைவிட விரிந்து அகன்றது; நன்னெறியில் துறந்தார் உள்ளத்தைவிடத்

திண்மையானது; மறவனுடைய வளைந்த கையின் அம்பைவிடக் கூர்மையானது; அவனின் நீண்ட குறியின் இலக்கை விட நேரானது; புலவரின் தடையில்லாத கற்பனை மடுவினும் ஆழமானது; கொடை மேவிய அருள் நெஞ்சத்தைவிட முழுதும் மிகுந்த கனிவுடையது; மதநீரைப் பெருக்கி, தன் முரசு போன்ற தலையை நிமிர்த்துப் பெருத்த கால்களை அசைத்து வந்த, பருமையும் கூர்மையும் சான்ற மருப்புகளை உடைய ஆண்யானையைப் போரிட்டு வீழ்த்திய வரிப் புலியைவிடத் துணிவானது! வளையல்களணிந்த நினது கை, குலத்தால் ஏற்பட்ட பிரிவுணர்வைக் குலைத்துச் சிதைத்தது; அதன் மலர்ச்சியுற்ற தலையை வெற்றிக் காப்பிட்ட நின் கால்கள் மிதித்துத் தோய்த்தன; அதன் இழிவான நோக்கத்தை, அனலை கக்கும் நின் இரண்டு விழிகளும் எரித்துத் தீய்த்தன; குலப்பிரிவால் நேரவிருந்த பழியை உன் பண்பு சான்ற உள்ளம் துடைத்து நீக்கியது! சிவந்த கால்களையுடைய நாரையைப் போல், அமைந்திருந்து உன் குறியாகிய கணவனைப் பற்றிக் கொண்டனை; உன் துணிவு வியப்பை உடையது, சான்றோர்கள் பக்கத்துப் பொருந்திய உள்ளமும் அவ்வுள்ளத்துத் தோன்றிய உயர்ந்த வினைப்பாடுகளில் பிடிப்புற்ற நல்லுணர்வும், என்றும் தாழ்வில்லாதபடி அமையப் பெற்றவனின், பருத்த தோளை, இதுதான் நமக்குற்ற வாழ்வு என எண்ணி அதனை இறுகப்பற்றி மணந்து கொண்டனை; (அதனால்)

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

குலப்பிரிவை மதியாது, கலப்பு மணம் புணர்ந்து கொண்ட தலைவியின் துணிவையும் முனைவையும் வியந்து பாராட்டித், தோழி வாழ்த்தியதாகும் இப்பாட்டு.

புன்மையோர் அமைத்த குலப்பிரிவுணர்வுகளுக்குக் குமுகத்தின் எத்திறத்தாரும் கட்டுப்பட்டு அடங்கி, அவற்றைத் துணிந்து விலக்காது, மணவினை முதலிய மங்கல வினைகளில் அப்பிரிவு மேற்கொண்டு வாழ்வு நடத்துகையில், தலைவி அப்பிரிவுணர்வை எதிர்த்து நின்று, தான் விரும்பிய காதலனையே மணந்து பொருந்திய நிகழ்ச்சியைத் தோழியொருத்தி வியந்து பாராட்டி, வாழ்த்திப் பாடியதாகும் இது.

அக்குலப் பிரிவு மதர்த்துப் பொங்கி ஊரை அலைக்கழிக்கும் யானை போல்வது; அதைத் தன் துணிவால் புலியைப் போல் முறியடித்துப் பொருதி, வீழ்த்தினாள் என்கிறாள் தோழி.

முதற்கண், தோழி தலைவியின் காதலை வாழ்த்திப், பின்னர் அதன் தூய்மை நலன்களைக் கூறி மகிழ்ந்து, அதன்பின் அவள் அக்காதல் வெற்றி பெறுவதன் பொருட்டு, அதற்குத் தடையாயிருந்த குலப்பிரிவைப் போராடி

பொருதியதைச் சுட்டி வியந்து, அடுத்து, அதுவரை அவள் அமைதியாயும் உறுதியாயும் இருந்ததைப் பாராட்டிப் பின் அவளின் காதலனின் பெருமை கூறி உவந்து, இறுதியில் அவள் பெற்ற வெற்றி வாழ்வை போற்றிக் கூறினாள் என்க.

*அம்ம!* - கேட்பித்தற் பொருளில் வரும் விளி. நீ கேட்பாயாக !

*வாழி தோழி* - நீ பெற்ற மணவாளனுடன் என்றென்றும் தோழியே, நீ வாழ்வாயாக!

*நின் காதல் ....... பெரிதே* - நின்னுடைய காதல் திறம் இவ்வளவு பெரிய உலகத்தைப் பார்க்கினும் மிகப் பெரியது.இயற்கையின் தோற்றமாகிய இவ்வுலகின் இயக்கமும், அதன்கண் நின்றுநீடும் உயிர்களின் வாழ்க்கைத் தொடரியக்கமும் மாந்தர் அறிவுணர்வுக் கெட்டாத ஆற்றல் சான்றன. ஆனால் அவற்றினும் நின் காதல் யாராலும் கணித்துக் கூற முடியாத பேராற்றல் வாய்ந்ததாகலின், அஃது இவ்வுலகினும் பெரிது ஆகின்றது.

*பொழிந்த விசும்பின் தூய்தே* - மழை முகில் கட்டியிருந்து,. மழையாக அறப் பொழிந்த பின்னர் உள்ள கலங்கமற்ற வானத்தைப் போலும் நின் காதல் தூய்மையானது.

தூய்மைக்குக் கலங்கமற்ற வானத்தை உவமையாகச் சொன்னாள் வெறுந் தூய்மையான வானம் என்னாது, நிறைந்து மழை பொழிந்த பின்னர் உள்ள மாசற்ற வானத்தை உவமை கூறியது, அதன் குளிர்மையும், அகற்சியும், உயர்வும் கருதி என்க. மேலும் நீலவானம் அன்பின் பெருக்கிற்கு ஓர் அடையாளமும் ஆம். மழை பொழியாத வானம் வறட்சியும் களங்கமும் உள்ளதென்க.

*கதிரின் செவ்விது* - சிறிதும் கோட்டமில்லாத ஒளிக்கதிரைப் போலும் செப்பமானது.

*மணியின் காழ்த்தது* - உறுதியில் வயிரமே வலிதாகலின் அது போலும் வலியது என்றாள்.

*பனியின் தண்ணிது* - பனியைப் போலும் குளிர்ச்சி மிக்கது.

*அறவோர் ...... அகன்றது* - அறம் செய்வோர் நெஞ்சினும் அகற்சி சான்றது. அறவுணர்வு உடல், உயிர்க் கட்டுகளைத் தாண்டி அன்பாக விரிந்து, அருளாகப் படர்ந்து நிற்பதாகலின் அகற்சிக்கு அதனை உவமித்து, அதனினும் அகன்றது என்றாள்.

*நெறியின் ...... திண்ணிது* - நெறிப் படத் துறந்தவர் தம் உள்ளத்தினும் உறுதி சான்றது. நெறிப்படத் துறவாதார் உள்ளம் உறுதியிழக்குமாதலின் நெறிப்படத் துறந்தார் உள்ளத்தை உவமை கூறினாள் என்க. என்னை?

'நெஞ்சில் துறவார் துறந்தார் போல் வஞ்சித்து வாழ்வார்' என்றாராகலின்.

*மறவன் ...... கூரிதே* - வில்லாண்மை வல்ல மறவனின் வளைந்த கையில் உள்ள அம்பை விடக்கூரியது. தான் கொண்ட குறி தப்பாமல் சென்று தைப்பதற்கு அம்பு கூரியதாக அமைய வேண்டுவது போல, தலைவியும் அவள் கொண்ட காதல் குறியாகிய காதலனைச் சென்று சேர்வதாகிய அவள் அன்புணர்வும் மிகக் கூரியதாகும் என்றாள். இனி, அதனினும் கூரியது என்றது அம்பு தைப்பது ஒரு பருப்பொருளையோ, ஒரு அஃறிணைப் பொருளையோ என்றிருக்க, இவன் அன்புணர்வாகிய அம்பு ..தத்துப் பற்ற வேண்டுவது ஒரு மாந்த உயிரையும், அதன் நுண்பொருளாகிய உள்ளத்தையும் ஆகலின், அதனினும் கூர்மையானது இதுவென்றாள் என்க.

*அவன்றன் ..... நேரிதே* - அவன் தான் கொண்ட நெடுவதாகிய குறிக்கு எய்யும் அம்பு செல்லும் வழியினும் நேரானது. அம்பு செல்லும் வழி மிக நேராக அமைவதாகலின் அதனினும் நேரானது என்றாள். என்னை? அன்புணர்வு அவ்வம்புக் குறியினும் நெடிது பாய வேண்டியிருப்பதால், செலவு நோக்கியும் தொலைவு நோக்கியும் அதனினும் நேரிது என்றாள் என்க.

*புலவர் ...... ஆழ்ந்தது* - புலவர் தம் தடையில்லாத கற்பனை என்னும் ஆழமான மடுவை விட ஆழமானது. தலைவியின் காதல் உணர்வு புறத்தோர் எளிதே உணரவியலாத அளவிற்கு மிக ஆழமானது என்று குறிப்பிடவேண்டி, அதற்கு ஈடாகத் தடையில்லாத கற்பனை வளஞ்சான்ற புலவர் தம் ஆழமான உணர்வை எடுத்துக் கூறி, அதனினும் ஆழமானது என்றாள். தடையற்ற கற்பனை உணர்வு மேம்பட்ட புலவர்க்கே கைவரப் பெற்றதாகும் என்க.

*கொடையருள் ...... கனிந்தது* - கொடையுணர்வு சான்ற அருள் நெஞ்சினும் முழுமையாக மிகவும் கனிந்த உணர்வுடையது. கொடை உள்ளஞ்சான்றவர் தம் புற உடைமைப் பொருள்களையே பிறர்க்கு ஈகஞ்செய்யும் அருள் உணர்வு கொண்டவராய் இருப்ப, இவள் தன்னையும், தன் உயிரையுமே தன் காதலன் பொருட்டு ஈந்தாளாகலின், அவர்தம் உணர்வினும் இவள் காதல் உணர்வு மிகவும் கனிவுடையது என்றாள் என்க.

*நிணநீர்ப் பெருக்கி* - உணர்வெழுச்சியால் மத நீரைப் பெருக்கி.

*முரசுத்தலை செருக்கி* - முரசு போலும் திரண்டு பருத்துள்ள தலையை நிமிர்த்தவாறு.

*பணைக்கால் அலைத்த* - பருத்த கால்களை அலை போலும் அசைத்துக் கொண்டு வரும்.

*பருங்கூர்ங் கோட்டின் களிறு* - பருத்த கூரிய மருப்புகளையுடைய ஆண் யானையை.

*வீழ்த்திய வரியினும் துணிந்ததே* - (அத்தகைய ஆண் யானையைப்) போரிட்டுக் கொன்று வீழ்த்திய வரிப்புலியை விடத் துணிவானது (நின் காதலுணர்வு) என்றாள் என்க.

ஈண்டு, ஆண் யானையும் அதன் மதர்ப் பெழுச்சியும் சாதி வேறுபாட்டு உணர்வுக்கு உருவகமாகக் கூறப்பெற்றன. குமுகாயத்தில் மக்களிடை வேரூன்றிக் கிடக்கும் சாதியுணர்வானது, ஒரு மதம் பிடித்துத் தலை செருக்கிக் கால்களை அலைக்கழித்து வரும் ஓர் ஆண் யானை போல்வது. அவ்வுணர்வு அடங்கியிருப்பது போல் இருந்து, அவ்வப்பொழுது எழுச்சி கொள்வது, யானையிடத்து அடங்கியிருந்து அவ்வப்பொழுது எழுச்சி கொள்ளும் மதம் போல்வது. மதம்-வெறி. தலை செருக்குதல் என்பது அச்சாதியுணர்வால் பெருமை கூறிச் செருக்குதல். பணைக்கால் அலைத்தல் என்பது, அச்சாதியுணர்வால் பிற அன்பு, அறம், ஒப்புரவு போலும் மென்மையும் உயர்வும் சான்ற நல்லுணர்வுகள் மிதிக்கப் பெற்று நிலை குலையுமாறு அலைவுறுத்தல் என்றபடி. பருங்கூர்க்கோடு என்பது, பெருமையும் ஆரவாரிப்பும் வன்மையும் கொண்ட சாதி அடையாளங்கள். களிறு என்று சாதியுணர்வை, ஆண் யானையாக உருவகித்தது, பெண்கள் இயல்பாகவே அச்சாதிப் பிரிவுகளைப் பொய்யாக்கும் கலவைக் கூடலுக்கு இசைந்தவர்களாகையால், ஆண்களாலேயே அச் சாதிக்கட்டு வலிப்பெற நின்றது என்பான் வேண்டி என்க. வீழ்த்துதல்-போரிட்டுத் தோல்வியுறச் செய்தல்- அழித்தல்.

தலைவியை வரிப்புலியாக உருவகித்தது, சாதி வேறுபாடுகளுடன் அவள் பொருத எழுச்சியையும் முனைப்பையும் காட்ட வேண்டி என்க. ஓர் ஆண் யானையின் எழுச்சியைவிடப் புலியின் சீற்றம் வலிதோ என்பார், 'யானைவெரூஉம் புலிதாக்குறின்' என்னும் கருத்தை ஓர்க.

இனி, அவ்வரிப்புலியினும் துணிவானது இவள் காதலுணர்வு என்றது, அவ்வரிப்புலி தன்னைக் காத்துக் கொள்ளவே, அவ்வியானையை எதிர்த்துப் போரிட்ட நிலையில், இவள் தன்னோடு தன் காதலனையும், காக்கவும் மீட்கவும், யானையினும் வலிதாகிய அச் சாதிப் பாகுபாடுகளுடன் புலியினும் துணிவாகப் போரிட வேண்டியிருந்ததால் என்க.

*குலந்தரு ...... வளைக்கை* - குலங்களால் ஏற்படுத்தப்பெற்ற உயர்வு தாழ்வெனும் பிரிவுணர்வை நிலைகுலையும்படி செய்தது வளையல்களணிந்த நின் கை.

*அலர்தலை ...... அணிகழல்* - சாதிகளின் மலர்ச்சியுற்ற தலையை இனி மலர்ச்சியுறாதவாறு, மிதித்துச் சிதைத்தது, கழல் அணிந்த நின் கால்.

*இழிநோக்கு ............ இணைவிழி* - சாதி வேறுபாட்டின் இழிவான நோக்கத்தை எரித்துத் தீய்த்தது, தீயை உமிழும் நின் கண் இணைகள்.

தான் கொண்ட காதலில் வெற்றி பெற்றுக் கலப்பு மணம் புணர்ந்து கொண்டாளாதலின், அச்சாதி வேறுபாட்டை நிலை குலையும்படியும், மிதித்துச் சிதைவுறுமாறும், எரித்துத் தீய்க்கவும் செய்தாள் என்க,

*பழியற ........... நெஞ்சம்* - குலத்தால் வேறுபட்ட இருவரும் மனம் ஒன்றிக், கொண்ட காதல் நிறைவேறாது பொய்க்கும் என்று சாதியுணர்வினார் பேசிய பழிச்சொல்லை இல்லாமற் போகும்படி துடைத்தல் செய்தது, பண்புற்ற நின் நெஞ்சம்.

*செங்கால் நாரையின்* - சிவப்பு நிறக் கால்களை உடைய நாரையைப் போல்.

*தூங்கியிலிருந்து* - மனம் பதறாமல் காலம் பொருந்தும் வரை அமைந்திருந்து. 'தூங்குக தூங்கிச் செயற்பால'என்றாராகலின்.

*நுங்குறி பற்றினை* - நுன் குறியாகிய நின் காதலனைக் கைப்பற்றிக் கொண்டனை.

*மருட்கை உன் துணிவே* - இந்த உன் துணிவு வியப்புடையது.

*சான்றவர் ..... நெஞ்சம்* - சான்றோர் மருங்கில் பொருந்தி, அவர்தம் நோக்கினும் போக்கினும் கருத்துக் கொண்ட உள்ளமும்.

*தோன்றுயர் ...... உணர்வும்* - உள்ளத்தே தோன்றுகின்ற உயர்ந்த உணர்வின் அடிப்படையாக மலர்ந்த வினைகளில் கட்டப் பெற்றுத் தொங்கிய உள்ளமும்.

*தாழ்வறப் பெற்றோன் தடந்தோள்* - தாழ்வில்லாமல் அமையப் பெற்றவனின் பருத்த தோளை.

*வாழ்வெனப் பற்றி* - இதுவே நமக்குற்ற வாழ்வு என இறுகப்பற்றி.

*வரைந்தனை கொண்டே* - அவனை மணந்து கொண்டனை நீயே!

'தோழியே! இதனைக் கேட்க! நீ என்றும் வாழ்வாயாக; நின் காதல் இவ்வுலகினும் பெரியது; பொழிந்த விசும்புபோல் தூயது; கதிர் போல் செப்பமானது; மணிபோல் உறுதியானது; பனிபோல் குளிர்மையானது; அறவோர் நெஞ்சைவிட அகன்றது; முறைப்படத் துறந்தோர் உள்ளத்தை விடத் திண்ணியது; மறவன் கை அம்பைவிடக் கூர்மையானது; அவன் இலக்கை விட நேரானது; புலவரின் கற்பனை மடுவைவிட ஆழமானது; கொடை சான்ற உள்ளத்தை விடக் கனிந்தது; யானையை எதிர்த்துப் போரிட்டு வீழ்த்திய புலியைப் பார்க்கினும் துணிவு கொண்டது; நின்

வளையல்களணிந்த கை குலப்பிரிவைக் குலைத்தது; நின் கழல் அணிந்த கால் அதன் தலையை மிதித்துத் துவைத்தது; உன் இரண்டு விழிகளும் அதன் இழிந்த கோட்பாட்டை எரித்துத் தீய்த்தன; உன் பண்புடைய நெஞ்சம் அதனால் வரும் பழியைத் துடைத்தது; செங்கால்களையுடைய நாரையைப்போல் அமைந்திருந்து உன் குறியாகிய கணவனை நீ பற்றிக் கொண்டனை; உன் துணிவு வியப்பானது; சான்றோர் துணையோடு உயர்ந்த வினைகளில் நாட்டம் கொண்டவனின், பருத்த தோள்களை நீ வாழ்வு இதுதான் என்று விடாமல் பற்றி மணந்து கொண்டனையே' என்று வேறு குலத்தவன் ஒருவனை நயந்து காதலான் மணந்து மனையறம் புகுந்த தலைவியை வாழ்த்தியும் பாராட்டியும் உரைத்தாள் என்க.

இது *முல்லை* என் திணையும் *பாங்கி வாழ்த்தல்* என்னுந் துறையுமாம் என்க.



# 47 முன்றில் வேங்கை

*முன்றில் வேங்கை முடக்கிளை நரலோ*
*டொன்றி யழைத்த ஒருவழி தானும்*
*இன்றே துணித்தனர் இனியே*
*மன்றொன் றுண்டே மருவவெந் தோளே!*

**பொழிப்பு:**

இல்லத்து முன்புறம் உள்ள வேங்கை மரத்தின் வளைந்த கிளை (இன்னொரு கிளையுடன் உராய்ந்து ஒலிக்கும்) ஓசையோடு ஓசையாகப் பொருந்தி (தலைவியை, நீ விளித்து) அழைத்து, (இது நாள் வரை பழகிய) ஒரே ஒரு வழியினையும், இன்று(அம் மரத்தை வெட்டித் துண்டித்து விட்டனர் (வீட்டார்). இனி, எம்தோளை மருவுவதற்கு மன்றல் ஒன்றுதான் உண்டு.

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

இரவுப் பொழுதில் தலைவியுடன் வந்து பழகிய தலைவனிடம், 'நீ, இனி அவ்வாறு பழகுதல் இயலாது; எனவே மணந்து கொள்; என்று தோழி கூறியதாக அமைந்ததிப் பாட்டு.

“வீட்டின் முன் உள்ள வேங்கை மரத்தினது ஒரு கிளை முடம் பட்டு வளைந்திருந்ததால், அது வேறொரு கிளையுடன் மோதிக் காற்று வீசும் பொழுதிலெல்லாம் அக்கிளையுடன் உராய்ந்து ஓர் ஓசையை எழுப்பிக் கொண்டிருந்தது. அந்த ஓசையுடன் இணைந்து தலைவியை விளிக்கும் அழைப்போசையைச் செய்ததால், இதுவரை பிறர் அறியாவாறு அவளும் வந்து கொண்டிருந்தாள். நீயும் அவளுடன் கூடி மகிழ்ந்து கொண்டிருந்தாய். ஆனால் இன்று பகலில், வீட்டினர் அம்மரத்தை வெட்டி வீழ்த்தி விட்டனர். இனி உன் அழைப்போசையுடன் இணைந்து ஒலித்த அக் கிளையினோசை எழாது. எனவே தலைவியை நீ அழைக்கவும் இயலாது. அழைப்பின், வீட்டினரும் கண்டு கொள்ளலாம். ஆகவே, இனி நீ இரவில் இவ்விடம் வராதே. தலைவியின் தோளை நீ மருவி மகிழ வேண்டுமாயின், நீ அவளை மணம் செய்து கொள்ளும் வழிதான் ஒன்று உண்டு; அதைச் செய்”என்று, இரவில் தலைவியைப் பார்க்க வந்த தலைவனிடம் தோழி அறிவுறுத்துகின்றாள்.

*முன்றில் வேங்கை* - வீட்டின் முன்புறம் உள்ள வேங்கை மரத்தின்.

*முடக்கிளை நரல்* - வளைந்த கிளை இன்னொரு கிளையுடன் மோதிக் காற்றில் அசைய எழுகின்ற ஓசை. நரல்-ஓசை.

*நரலோடு ஒன்றி யழைத்த:* - தானும் அம்முடக் கிளை எழுப்பிய உராய்வு ஒலியுடன் சேர்ந்து, தலைவியை விளித்து அழைத்த ஒரு வழியையும்.

*இன்றே* - இன்று பகலிலேயே.

*துணித்தனர்* - அம்மரக் கிளையையும் அதனால், உன் அழைப்புக் குதவிய வழியையும் துண்டித்து விட்டனர்.

*இனியே ....... தோளே!* - இனிமேலும் நீ தலைவியை முன்போல் தழுவி மகிழ விரும்புவாயின், திருமணம் செய்து கொள்ளும் வழிதான் ஒன்றுண்டு. எனவே, நீ அவளை விரைந்து மணந்து கொள்வாயாக.

இதில் முடக்கிளை என்றதால் அவ்வோசையுடன் நீ சேர்ந்து அழைத்து அவளைக் கூடுவது தவறான வழி என்றும், மன்றொன்றுண்டே என்றதால், திருமணம் செய்வது ஒன்றுதான் இனிச் செவ்விய வழி என்றும் சுட்டப் பெற்றன.

இது, *குறிஞ்சி*யென் திணையும் *இரவுக் குறிக்கண் வந்து மீண்ட தலைவற்குத் தோழி வரைவு வேண்டியுரைத்தது* என் துறையுமாம்.



# 48 மொய்துயி லொன்றாம்

கையணை யாக மெய்வெளிக் கிடத்திப்
பெய்பனி போர்த்திய பெற்றி யோர்க்கும்
புனைநார்ப் பின்னிய புல்லடுக் கத்து
வினைநாட் கலைந்து வீழ்ந்துருள் வார்க்கும்
மெய்யுறுத் தில்லா மெத்தெனப் பஞ்சின்
தொய்யுட் சேக்கை துவட்டி யோர்க்கும்
மொய்துயி லொன்றாம் போலச்
செய்வினை பலவாச் செறுவிளை வொத்தே!

**பொழிப்பு:**

கையையே தலைக்கு அணையாக வைத்து உடலை வெட்ட வெளியிற் கிடத்தி, பெய்கின்ற பனியையே போர்வையாகப் போர்த்து உறங்கும் தன்மையோர்க்கும், புனையப் பெற்ற நாரினால் பின்னியதும், மூங்கிலைக் கொண்டு கோத்துக் கட்டப்பெற்றதுமான கட்டிலில், வினைமிகுந்த நாளுக்கென அலைந்து, ஓய்வின்றி வினையாற்றிக் களைத்து, அயர்வை நாடி, விழுந்து உருண்டு புரள்வார்க்கும், மேனி உறுத்தலில்லாத மெத்தென்னும் பஞ்சால் பொதியப் பெற்றதும், தொய்வுடையதுமான படுக்கையில் படுத்து, அது துவளும்படி அயர்வார்க்கும், மொய்த்து வருகின்ற தூக்கம் ஒரு தன்மையுடையதாக இருப்பது போலவே, இவ்வுலகத்துச் செய்யப் பெறுகின்ற வினைகள் பலவாக இருப்பினும், அமைகின்ற விளைவு மக்கள் துய்ப்பு என்னும் ஒரு தன்மை நோக்கியதாகவே இருக்கின்றது.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

உலகத்துள்ள பலரும் பலவாறான வினைகளில் ஈடுபட்டு தம் வாணாளைப் போக்குகின்றனர். வினைகளின் தொடக்கமும் நடப்பும் முடிவும் பல்வேறு வகையாகின்றன. ஆனாலும் அவற்றின் பயன் முழுவதும் மாந்தனின் துய்ப்பு என்னும் ஒரு விளைவுக்குள்ளேயே அடங்கிவிடுகின்றது. எந்த வினையும் அவன் துய்ப்புக்காகவே செய்யப் பெறுகிறது. எனவே, உலக வினைகளின் முடிவு மாந்த உயிரின் துய்ப்பு என்று முடிவாகின்றது. இந்த உயரிய அரிய மெய்ப்பொருள் உண்மை இங்கு ஓர் உவமையால் விளக்கப் பெறுகிறது.

மாந்தர்கள் வினைகளின் பொருட்டாகப் பலவாறான முயற்சிகளில் ஈடுபட்டுப் பலவகையாக இயங்குகின்றனர். பலவேறு இடங்களுக்குப் பல்வேறு திசைகளில் அலைகின்றனர்; பலவகையான உணவுப் பொருள்களை உண்கின்றனர்; பலவேறு சுவைகளை விரும்புகின்றனர். அவ்வாறே நாளிறுதியில் அவர்கள் பலவாறான இடங்களில் படுத்து உறங்குகின்றனர். ஒருவன் கையையே தலையணையாகக் கொண்டு வெட்டவெளியில் பனியில் படுத்துறங்குகின்றான்; இன்னொருவன் நாரால் பின்னிய கட்டிலில் படுத்து உறங்குகின்றான், மற்றொருவன் மெல்லிய பஞ்சு பொதிந்த மெத்தையில் படுத்து அது துவளுமாறு புரண்டுருண்டு உறங்குகின்றான். ஆனால், அவ்வனைவர்க்கும் உறக்கம் என்னும் அவ் வோய்வின்ப உணர்ச்சிநிலை ஒன்றுதான்.

*கையணையாக* - கையே அணையாக கையைத் தலைக்கு அணையாக வைத்து.

*மெய் வெளிக் கிடத்தி* - மெய்யை (உடலை) வெட்ட வெளியிற் கிடத்தி அஃதாவது படுக்கக் கிடத்தி.

*பெய் பனி போர்த்திய வெற்றியோர்* - பெய்கின்ற பனியையே போர்வையாகப் போர்த்துக் கொண்ட தன்மையோர்; அஃதாவது வெற்று மேனியுடன் வெட்ட வெளியில் படுத்துத் தூங்கும் தன்மையுடையவர்.

*புனைநாரப் பின்னிய புல்லடுக்கம் :* - புனையப்பெற்ற நாரால் பின்னிய கட்டில். மூங்கில் கட்டில்.

*புல்லடுக்கம் :* மூங்கிலால் -இணைத்துக் கட்டியது.

*வினைநாள் :* வினைக்குரிய நாள்.

*வீழ்ந்துருள்வோர் :* படுத்துப் புரள்வோர்.

*மெய்யுறுத்தில்லா :* மேனி உறுத்தாத.

*மெத்தென :* மெத்தென்று உள்ள

*பஞ்சின் தொய்யுள் சேக்கை :* பஞ்சாலான தொய்வு உடைய படுக்கை.

*துவ்ட்டியோர் :* படுக்கை துவளுமாறு படுத்துருண்டு தூங்குவார்.

*மொய்துயில் :* மொய்க்கின்ற தூக்கம் வந்து சூழ்கின்ற உறக்கம்.

*செய்வினை பலவா :* ஒவ்வொருவரும் செய்கின்ற வினைகள் பலவாக இருக்க.

*செறுவிளைவு :* செறுத்த விளைவு- அமைந்த பயன்.

*ஒத்து* : ஒத்தது. வினைகள் பல; விளைவு ஒன்று.

இவ்வுலகத்து மனஞ்சார்ந்ததும், அறிவு சார்ந்ததும், உடல் சார்ந்ததும், காலஞ் சார்ந்ததும், திசை சார்ந்ததும், இடஞ் சார்ந்த — பூதங்கள் தனித்தும் இணைந்தும் சார்புற்றதும் ஆகிய எண்ணிறந்த வினை முயற்சிகள் பலவாக இருப்பினும், அவையாவற்றின் முடிவும் பயனும் உயிர் துய்ப்புறுவதும், அதன்வழி அது மீமிசை உயர்ந்து மலர்ந்து ஒளிபெறுதலுமே என்க; அஃது, எதுபோலாம் எனில், அனைவரின் படுக்கை நிலைகள் வேறு வேறாயினும், அவர்தம் துயிலும் உறக்க நிலை அவ்வுயிர்களுக்கு ஓய்வும் ஆறுதலும் ஒடுக்க வின்பமும் தரும் துய்ப்புணர்வு ஒன்றாதல் போல் என்க.

இது *பொதுவியல்* என் திணையும், *பொருண்மொழிக் காஞ்சி* என் துறையுமாம்



# 49 பெண்பால் அல்லன்!

அம்ம, வாழியோ! மன்றல் ஆகுமதி!
முப்பெதிர் கொளாநின் யாக்கை யாப்பற
நாட்பூந் தும்பை நல்லிதழ்ப் போலும்
முடிநரை சேரலும் கட்குழி வாங்கலும்
வடிநரம் பெழுந்து மெய்யொளி சுவறலும்
பிடியொடு நடக்கும் பெற்றியும் யாங்கெனப்
பூவா ராடை புரள உடுத்தி
முருகின் விரைமா முகம்பட அப்பி
இடக்கை தாழ ஏக்குற நடக்கும்
கல்விக் கழகத்து இளையோள் ஒருத்தியை
வல்லென் வாயில் மறித்து வினவ, அச்
செல்வக் குடிமகள் செறிய நோக்கிக்
கண்ணொளி கழன்றீர் போலும்! ஐய,யான்
பெண்பால் அல்லன்; பிறழக் கொண்டு
வினாயினிர் என்று வெகுண்டான்;
எனாவெடுத் துரைப்பலிவ் விழிநிலைப் போக்கே!

**பொழிப்பு:**

'அம்ம நீ வாழ்வாயாக; திருமணமும் நினக்கு ஆகுக! முதுமையை எதிர்கொள்ளாத நின் (இளைய) உடல் தளர்வுறும்படி, அன்று பூத்த தும்பைப் பூவின் நல்ல (வெள்ளை) இதழ்களைப் போல நின் முடியானது நரை சேர்ந்ததும், நின் கண் குழி வாங்கியதும், வடிவு செய்யும் நரம்பானது வெளியே புலப்படும்படி எழுந்து நின்றதும், மெய்யானது ஒளி வற்றிப் போனதும், நீ நன்னடை பெறாது, பிடிகளைத் தாங்கி நடக்கின்ற தன்மையும் எப்படி வாய்ந்தன' எனப் பூக்கள் செறிந்த ஆடையைத் தரையில் புரளும்படி உடுத்திக் கொண்டு, முக அழகு செய்யும் மணமுள்ள மாவைப் பூசியும், இடக்கை தாழும்படி சோர்வுற நடந்து செல்லும், கல்லூரிக் கண் பயிலும் இளைய பெண் ஒருத்தியைத் திடுமென வலிந்து வழியை மறித்துக் கேட்க, அந்தச் செல்வக் குடியைச் சேர்ந்த பெண் எம்மை அடர்த்து நோக்கி, 'நீவிர் கண்ணொளி தவிர்ந்தீர் போலும்! ஐயன்மிர்! யான் பெண்பால் அல்லன்; என்னைப் பெண்ணென்று தவறாக எண்ணிக் கொண்டு இவ்வினாவை

என்னிடத்துக் கேட்டீரே' என்று வெகுண்டுரைத்தான். இவ்வகைத்தான உலக நாகரிகத்தின் இவ்விழிந்த போக்கினை என்னவென்று எடுத்துரைப்போம்!

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

கல்விக் கழகத்துப் பயிலும் ஆண்மகன் ஒருவன், தன்னை ஒரு பெண்ணைப் போல் புனைவு செய்து கொண்டு புறம் வந்ததையும், அவன் தன் இளமைக்குரிய வாலை நிலைகள் திரிந்து, முதுமை நிலைக்குரிய தன்மைகளைப் பெற்றிருந்ததையும் நன்கு புலப்படுத்துவான் வேண்டிக் கூறியதாகும் இப்பாடல்.

கல்வி பயிலும் இளைஞர் தம் ஆண் தன்மைக்குரிய வகையில் ஒப்பனை செய்து கொள்ளாமல், பெண்ணியல்புக்கான வகையில் தம்மைப் பலவாறு தோற்ற உடைகளால் சுவடித்துக் கொள்ளும் இழிநிலை இயல்புகளைப் பகடி செய்ததாகும் இது.

நாகரிகம் என்னும் பெயரால் இளைஞர் தம் நடைமுறைகளால் சீரழிவுற்றுச் சிதைந்து வருவதைக் கண்டித்ததும் ஆகும் இது.

இளைஞன் ஒருவன் பெண் போலும் முகமா பூசி, பெண்கள் அணியும் பூவண்ணத் துணிகளில் உடையுடுத்துப் பெண்ணென மயங்குமாறு நீள் முடி வளர்த்து, பல்வேறு எண்ணத் திரிபுகளால் தன் இளமை நழுவ முதுமைச் சாயலுற்றுத் தோன்றினன். அவனைப் பெண்ணென மயங்கி, 'அம்ம, நீ வாழ்க; விரைவில் திருமணமும் பெறுக' என வாழ்த்தியும், அவன் அதற்கு நாணுறாமல், 'நீவிர் கண்ணொளி கெட்டீர் போலும்; நான் பெண்ணல்லன்; ஆணே யாகும்' என வெகுண்டுரைத்தான். அது கேட்டு, 'இவ்வுலகின் இழிநிலைப் போக்கு என்னே!' என்று வருந்தியுரைக்கின்றதாக அமைந்ததிப்பாடல்.

*அம்ம, வாழியோ* - அம்மா, நீ வாழ்வாயாக.

*மன்றல் ஆகுமதி* - திருமணம் ஆகுமாக. பெண்போலும் தோற்றமுற்றிருந்த அவனை, அவள் என்றெண்ணி, நல்லெண்ணத்தால் வாழ்த்துவர். மன்றல் - மன்றினில் நடைபெறும் திருமணம்.

மூப்பெதிர் நிற்கும் ஒருத்தி மணவணி காணாது நிற்கின்றாளே என்று வருந்தி, அவளுக்கு விரைவில் திருமணம் ஆகுக என்று வாழ்த்தினார் என்க.

*மூப்பெதிர் கொளா நின் யாக்கை* - முதுமைக் காலத்தை எதிர் கொளா நின்ற நின் உடல். எதிர் கொளா நிற்றல் - எதிர் கொள்ளல். மூப்புக்காலம் விரைவில் வந்துறுமாறு நின்ற உடல் என்றபடி. உடல் மூப்புக் கொள்ளும்படி இருந்தும், இன்னும் திருமணம் கொள்ளாமல்

இருக்கின்றாளே என்பதால் கவலுற்றுத் 'திருமணம் கொள்க' என்று வாழ்த்தினார் என்க.

*யாப்புற* - கட்டுக் குலையும்படி யாக்கை யாப்பற என்று கூட்டி, உடல் கட்டுக் குலையும்படி என்று பொருள் கொள்க.

*நாட்பூந் தும்பை ........ சேரலும்* - அன்றை நாள் பூத்த வெள்ளிய தும்பைப் பூவின் நல்ல இதழ்களைப் போலும் நிறத்தினதாய் முடிநரை சேர்ந்திருந்ததும்.

*கட்குழி வாங்கலும்* - கண்கள் குழி வாங்கி உள்ளழுந்தியிருந்ததும்.

*வடிநரம்பு எழுந்து* - உடலின் கண் வார்ந்த நரம்புகள் பார்க்க இயலுமாறு எழுந்திருந்ததும்.

*மெய்யொளி சுவறலும்* - உடலின் இளமையொளி வறண்டு போய் உடல் பளபளப்பின்றி யிருந்ததும்.

*பிடியொடு நடக்கும் பெற்றியும்* - இயல்பான நிமிர்ந்த நடை இன்றி, எதையாவது பிடித்துக் கொண்டு நடக்கும் தன்மையும்.

*யாங்கு என* - எவ்வாறு ஆகியன என்று கேட்க.

*பூவாராடை புரள உடுத்தி* - பூக்கள் போலும் ஓவியம் நிறைந்து விளங்கும் ஆடையை மெய் துவளும்படி தளர உடுத்தி;

*முருகின் விரைமா முகம்பட அப்பி* - அழகு செய்யும் மணமுள்ள மாவை முகம் நன்கு புலப்படுமாறு அழுந்தப் பூசி;

*இடக்கை தாழ ஏக்குற நடக்கும்* - இடக்கையைப் பெண்கள் போல் தாழ வீசி, சோர்வுறும்படி நடந்து செல்லும்;

***கல்வி .... ஒருத்தியை*** - கல்லூரிக் கண் பயிலும் இளம்பெண் ஒருத்தியினை.

*வல்லென் ..... வினவ* - விரைந்து செல்லும் வழியைத் திடுமெனத் தடுத்துக் கொண்டு கேட்க.

*அச் செல்வக் குடி மகள்* - செல்வக் குடியில் பிறந்த அந்தப் பெண்.

*செறித்து நோக்கி:* - உறுத்த நோக்கி; உற்றுப் பார்த்து.

செல்வ மிகுதியால் புன்மையும் போலிமையும் சார்ந்த நாகரிகத்தில் படிந்திருந்தானாகையால், அவ்வினா அவனுக்குச் சினத்தை எழுப்பியது; எழுப்பவே வினாவியவரை முறைத்துப் பார்த்தான் என்றபடி.

***கண்ணொளி கழன்றீர் போலும்*** - நீவிர் கண்ணொளி அவிந்து போனீர் போலும்.

*ஐய, யான் பெண்பால் அல்லன்* - ஐயா, யான் பெண்பாலினள் அல்லன்; ஆண்பாலனே.

*பிறழக் கொண்டு வினாயினிர்* - என்னைப் பெண்பாலாக எண்ணி, இக்கேள்வியை ஆண்பாலான என்னைக் கேட்டீர்.

*என்று வெகுண்டான்* - என்று சினத்துடன் கூறினான்.

***எனாவெடுத் துரைப்பல் இவ் விழிநிலை போக்கே!*** -ஆணைப் பெண்ணென்று மயங்கும்படியாக உடையுடுப்பதும் புனைந்து கொள்வதுமான இவ் விழிந்த புன்மை நாகரிகப் போக்கினை என்னவென்று எடுத்துரைப்போம்.

போலி நாகரிகப் பரவலால் நேரும் பாலியல் தோற்ற மாற்றங்களை அளவிட்டு உரைக்கவியலாது. இஃது, அப்புன்மை நாகரிகத்தால் உருவாகும் இழிவு நிலைகளுள் ஒன்று என்பதாக, என்னவென்று எடுத்துரைப்போம்' என்னும் தொடருக்குப் பொருள் கொள்க.

இது *பொதுவியல்* என் திணையும், *இயனிலை திரிதல்* என்னும் துறையுமென்க. இயற்கை நிலை திரிந்த தன்மைகளை எடுத்துக் கூறலின் இயனிலை திரிதல் என்னும் புதுத்துறை வேண்டுவதாயிற்று.



# 50 யாவர்ப் பாடுகம்

*யாவர்ப் பாடுகங் கொல்லோ கழகம்*
*மூமுறை நிறீஇ முத்தமிழ்ப் புரந்தோர்*
*அன்றே மாய்ந்தனர் அரசும் பொடிந்த*
*வென்றியுந் தோற்பு மின்றே யிரப்பார்க்*
*கொன்று தரலிலர் தரினுமுள் உவந்து*
*நன்றி நினைவிலர் கற்றல் நனியிலர்*
*உள்ளஞ் செவ்விலர் ஊருயும் பாடிலர்*
*கள்ளத்து முதலாக் களவூ தியத்துப்*
*பொய்ம்மை வாணிகப் போலி வாழ்வினர்*
*மெய்யறு சமயத்துச் சாதி மீட்பிலா*
*வெய்ய புன்குழாம் வீழ்ந்து*
*செய்யுட் கருவினார் தோன்றுநாள் வரையே!*

**பொழிப்பு:**

யாவரைப் பாடுவம் கொல்; தமிழ்க் கழகத்தை முதல், இடை, கடை என மூன்று முறை நிறுவி, முத்தமிழையும் புரந்த செந்தமிழ்ச் சான்றோர்கள் அன்றையே மாய்ந்து போயினர்; அக்கழகங்களைப் பேணிய தமிழரசுகளும் காலத்தாக்குதலில் பொடிந்து போயின. இனி, வெற்றியும் தோல்வியும் இல்லை; இற்றையோ இரப்பவர்க்கு ஒன்று தருபவரும் இலர்; தரினும் உள்ளம் மகிழ்ந்து நன்றி நினைப்பவரும் இலர்; கல்வியைச் செப்பமுறக் கற்பவரும் ஈண்டிலர். உள்ளத்தால் சிறந்தவர்களும் இலர். ஊர் மக்கள் உய்ய வேண்டும் என்றெண்ணி அவர் பொருட்டாய் உழைப்பவரும் இலர். கள்ளத்தையே முதலாகக் கொண்டு, களவையே ஊதியமாகப் பெறும் நோக்கில், பொய்ம்மை வாணிகஞ் செய்யும் போலி வாழ்க்கையினரே இங்குளர். மெய்ம்மை அற்ற சமயங்களையும் சாதி வேறுபாடுகளினின்று மீளாத தன்மையினையும் கொண்ட கொடிய புல்லிய மக்கள் கூட்டம் வீழ்ந்தழிந்து, செய்யுள் தோன்றுவதற்குக் கருவாக நிற்பவர்கள் தோன்றுகின்ற நாள் வரைக்கும்.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

செய்யுள் தோன்றுவதற்கு உள்ளத்தில் நல்ல கரு ஒன்று உருவாகல் வேண்டும். இனி, ஒருவரைப் புகழ்ந்து பாடும் செய்யுளாயின், அதற்குத் தகுமாறு கருவாக அமைபவர் ஒருவர் இருத்தல் வேண்டும். அத்தகையவர் செயல்களையோ, அறிவு நிலைகளையோ, கொடைத் தன்மையினையோ, வீரவுணர்வையோ, வெற்றி தோல்விகளையோ, தொண்டு நிலைகளையோ, நல்லற வாழ்க்கையினையோ கருவாகக் கொண்டு, அவரின் உயர்வாந் தன்மைகளைப் பிறரும் பின்பற்றவேண்டிப் புலவர்கள் அவர் பற்றிய செய்யுள்களைப் பாடி மகிழ்வர். ஆனால் அவ்வாறு ஒருவர் மேல் உவந்து பாடி மகிழ்கின்ற நிலையில் இற்றைக் காலத்து எவரும் இலர். எனவே, அத்தகைய ஒருவர் தோன்றும் வரை யாரைப் பாடுகோம் என்று வருந்திக் கூறியதாகும் இப்பாடல்.

உண்மைப் புலமை மனத்தைக் கவர்கின்ற இனிதாந்தன்மை நிறைந்தவர் இக்காலத்து எவரும் இலரே, இனி, எவரைப் பாடுவோம் என்று கவல்வது.

*யாவர்ப் பாடுகம்* - யாது சிறப்புக் கருதி இக்காலத்து யாவரைப் பாடுவோம்.

*கழகம் ........ புரந்தோர்* - தமிழ்க் கழகத்தை முதல், இடை, கடை என்று மூன்று முறை நிறுவி முத்தமிழ் மொழியைப் புரந்த சான்றோர்.

*அன்றே மாயந்தனர்* - அக்காலத்திலேயே மாண்டு போயினர். இல்லெனின் நான்கு, ஐந்து என்று மேலும் கழகங்கள் தோன்றியிருக்கும். இனி, அவ்வாறு இல்லாதவிடத்து முத்தமிழ்ப் புரக்கும் சான்றோரும் இல்லாமற் போயினர். அத்தகையவர் இருப்பின் அவரைப் பாடலாம். அவர் இல்லாதவிடத்து எவரைப்பாடுவது என்றபடி.

*அரசும் பொடிந்த* - இனி, புலவர்களைப் பேணிய தமிழ் அரசுகளும் காலக் காய்ச்சலுள் பொடிந்து போயின. எனவே அவரையும் பாடுதற் கியலாமற் போனது.

*வென்றியும் தோற்பும் இன்றே* - அரசுகள் இலவாகவே அவற்றுள் வெற்றியும் தோல்வியும் நிகழா வாயின. அவை நிகழுமாயினும் வெற்றியை வாழ்த்திப் பாடவும் தோல்வியைத் தாங்கிப் பாடவும். ஒல்லும். எனவே அதற்கும் இடமில்லை என்றவாறு.

*இரப்பார்க்கு ஒன்று தரலிலர்* - மற்று, இக்காலத்து இரவலர்க்கு ஒன்று ஈயும் வள்ளலரும் இலர். அவ்வாறிருப்பின் அவரையேனும் பாராட்டிப் பாடலாம் என்று அழுங்கியதென்க.

*தரினும் ........ நினைவிலர்* - அவ்வாறு ஒரோவொருகால் எங்கேனும் இரவலர்க்கு ஈயும் புரவலர் இருப்பினும், அவர் ஈந்ததை நன்றியுடன் நினைத்துப் போற்றும் பண்பினாரும் இலர். இருப்பின் அவரையேனும் மெச்சிப் பாடலாம் என்றவாறு. உள்ளுவந்து நன்றி நினைவிலர் என்றது,

நன்றி வாயால் சொல்வதினும் உள்ளத்தால் நினைக்கத் தக்கது என்றும், அதுவும் உவந்து நினைக்கத் தக்கது என்றும் பொருள் கொள்வான் வேண்டி என்க.

*கற்றல் நனியிலர்* - இனி, கல்விச் சிறப்பால் பெருமையுறுவோரும், அதுவழி புலவர் நெஞ்சத்துப் புக்குப் புலவளங் கொள்வாரும் இலர் என்றவாறு.

*உள்ளம் செவ்விலர்* - உள்ளச் செப்பம் வாய்ந்தாரும் இலர் என்றபடி. என்னை, உள்ளச் செப்பம் வாய்த்த விடத்து வாழ்வின் அனைத்துச் செப்பங்களும் நிறைவுற அமையுமாகலின், அத்தகையோரையும் காணாத நிலையில் அவரைப் பாடுதற்கும் இயலாது போயிற்றென்க.

*ஊரும் பாடிலர்* - ஊர் மக்கள் உய்யும் படியாகப் பாடாற்றுவார் இலர் என்றபடி. தூய பொதுநலவுணர்வுடன் குடி செய்ய வல்ல நடுநிலையும் ஈகவுணர்வும் உடையவர்கள் இருப்பின், அவரை ஊக்குவிப்பான் வேண்டி அவர்தம் பொதுத் தொண்டைப் பாராட்டிப் பாட வியலும். ஆனால் அத்தகையோரும் இலராயினர் ஆகையின், அவரையும் பாடற் கியலாது போனதென்க.

*கள்ளத்து முதலா* - கள்ளத்தையே தம் வாணிக முதலாக வைத்து.

*களவு ஊதியத்து* - களவுப் பொருளையே ஊதியமாகக் கொள்ளுகின்ற.

*பொய்ம்மை வாணிக* - பொய் வாணிகஞ் செய்யும்.

*போலி வாழ்வினர்* - போலித்தனமான வாழ்க்கை நிலைகளை உடையவர்கள்.

இக்காலத்து உள்ளவர்தம் வாழ்வு நிலையை அனைத்து வகையினர்க்கும் பொருந்துமாறு கூறியது.

கள்ளத்தையே அடிநிலை வாணிக முதலாக வைத்துப் பொய்யையே வாணிகஞ் செய்து, களவு கொண்ட பொருள்களையே ஊதியமாகக் கருதி மகிழும் போலி வாழ்க்கையை உடையவர்கள். இவர்களை எங்ஙன் பாடுவது என்று கவன்றது.

*மெய்யறு சமயத்து* - மெய் நெறிகள் அற்றுப் பொய் நெறிகள் மலிந்த மதங்களைக் கொண்டதும்.

*சாதி மீட்பிலா* - சாதிச் சகதியில் விழுந்து மீட்க வியலாத இழிவு நிறைந்ததும் ஆகிய.

*வெய்ய புன்குழாம்* - வெய்தாகிய புன்மை நிறைந்த மக்கள் கூட்டம். வெய்து-கொடியது. வெம்மையும் புன்மையும் நிறைந்த மாந்தக் கும்பல்.

*வீழ்ந்து* - வீழ்தலுற்று. அழிந்து போய்.

*செய்யுட் கருவினார்* - புலவர்கள், தாம் புலனெறிச் செய்யுள்கள் யாத்தற்குரிய உட்கருவாகும் தகுதியுடைய பெருமக்கள்.

*தோன்றுநாள் வரையே* - தோன்றுகின்ற நாள் வரைக்கும். 'செய்யுட் கருவினார் தோன்றுநாள் வரையே, யாவர்ப் பாடுகம் கொல்லோ' என்று அடிமுடி கூட்டுக.

'இன்றுள்ள நிலைகள் மாறி மக்கள் கூட்டமும் நன்னிலை பெற்று உயர்ந்த தன்மைகளைப் பெறும் சிறந்த மக்கள் தோன்றும் வரை யாரைப் பெருமையுறப் பாடுவது' என்று அழுங்குகின்றது புலவர் நெஞ்சம்.

'முக்கழகம் நிறுவிய சான்றோர் போல்வரும் இன்றிலர் ; அரசுகளும் இல்லை; எனவே வெற்றி தோல்விகளுக்கும் இன்று இடமில்லை ; இரவலர்க்கு ஈயும் புரவலர்களும் இல்லை ; ஈயினும் நன்றி நினைக்கும் நல்ல பண்பினாரும் இலர் ; கல்வியில் சிறந்த நல்லறிவாளரும் இன்றிலர் ; உள்ளச் செழுமை வாய்ந்த உயர்ந்தோரும் இலர் ; ஊருக்காக உழைக்கும் பொதுநலங் கருதும் குடிசெய்வாரும் இலர்; இவர்கள் இல்லாத நிலை ஒருபுறத்து உளதாக இருக்கின்றவர் எல்லாரும் கள்ளத்தை முதலாகக் கொண்டு களவை ஊதியமாகப் பெறுதற்குப் பொய்யையே வாணிகமாக நடத்திப் போலி வாழ்க்கை வாழ்பவராக உள்ளனரே. இவருள் எவரைப் பாடலுக்குக் கருவாகக் கொண்டு பாடல்கள் செய்வது? எனவே, உயர்ந்த புலனெறிச் செய்யுளுக்கு இலக்கணமாக விளங்கிப் பாடுகின்ற உணர்வை யெழுப்புதற்குக் கருவாக நிற்கும் பெருந்தகையினார் இங்குத் தோன்றுகின்ற வரை எவரையும் பாடுதற்கு இயலாது' என்று, புலமைமிகு நெஞ்சம் உள்ளழுங்குவதாக அமைந்ததிப்பாடல் என்க.

இது, **பொதுவியல்** என் திணையும், **புலனெறி அழுங்கல்** என்னுந் துறையுமென்க. புலமை வெளிப்பாட்டுக்குரிய நெறி பற்றி வருந்திக் கூறுவதாகலின் புலனெறி அழுங்கல் என்னும் புதுத்துறை வேண்டுவதாயிற்று.



# 51 எழுந்தனர் இவரே!

தும்பை சூடிலர்; இடைவாள் செருகிலர்;
வெண்கலை உடுத்திலர்; கொல்வேல் ஏந்திலர்;
தடமுர சார்த்திலர்; இடம்பொழு தமைத்திலர்!
வடம்பிணிப் பறுத்த மதக்களி றன்ன
தடம்பட நடந்த கால்கழல் பூண்டிலர்!

வேத்தவை நுழைந்திலர்; யாத்தநூல் அறிகிலர்!
பூத்த இளமுகத் தொளியுமிழ் கண்ணும்
முத்த வெய்துளி நுதலுஞ் சிவப்பக்
கொள்கை பொறித்த கொடிதோள் தாங்கி
வெல்கை யொன்றே வேண்டுவோராகி
வானம் அதிரச் சூழ்ந்துகோள் ஆர்த்து
மானங் காத்திட எழுந்தனர் இவரே!

புன்றலை முதிரா யாக்கையி னோரே!
முகமயிர் அரும்பா இளவயி னோரே!
பால்முகம் மாறாப் பசுமையோ ராகி
நூல்முகம் புகூஉம் பள்ளி யோரே!

செம்புது வெள்ளம் ஒப்போ ராகித்
தம்புதுக் கொள்கை தெருத்தொறும் முழக்கி
வைகறை தொடங்கிக் கதிரொடு நடந்தே
யாமமுந் துயிலாத் தறுக ணோரே!
மண்ணும் வேண்டிச் சூழ்ந்தனர் இலையே!
பொன்னும் விழைந்தனர் இலையே! பொருதும்
நோக்கும் அரும்பிலர்; நுண்கலை பயின்றிலர்;
கருவியுங் கொண்டிலர்; போர்முகம் கண்டிலர்;
சுவடியும் கோலுந் தூக்குவ தன்றிக்
கவடும் படையும் தாமறி கல்லார்!

படையும் மலைந்திலர்; நடையுந் தளர்ந்திலர்!
இடையிடை நெகிழ்தலும் இறுதலும் இல்லார்!
விறலே அவர்தம் கோளே! விறற்கு
மறலே அவர்தாம் தூக்கிய படையே!
ஊண்தவிர் நோன்பொடும் உயிர்தீர் முயல்வொடும்
காண்குநர் கண்ணீர் கலுழக் காலமும்
நன்றுந் தீதும் நினையா ராகி
ஒன்றும் நெஞ்சொடு சென்றனர் உவந்தே!
தொல்லோர் மரபின் அரசரும் அல்லர்;
வல்லோர் வழியின் துறவோர் அல்லர்;
பொருளும் இன்பும் அறத்தொடு நடந்தே
இருள்தீர் வாழ்வும் விழையா ராகி
அற்றைத் தமிழ்த்தாய்க் கிற்றை மகரென
ஒற்றைத் தனிநீள் நினைவொடு சென்றார்!

மூவா இளமை முதுமொழிக் கேய்ந்த
தாவாப் பெருந்துயர் தகர்ப்பா ராகி
நெய்யெரி புகுத்திய புகழோர் சிலரே!
மெய்யழி பட்ட மேலோர் சிலரே!
கடுஞ்சிறை தாங்கிய வல்லோர் சிலரே!
கொடுங்குறை யுறுப்பொடு நைந்தோர் சிலரே!
யாங்கன் உரைப்பவக் கொடுங்கோல் வினையே!

பூங்கண் மதிமுகப் புன்னகைச் செவ்வாய்
செந்தமிழ் வாழ்கெனச் செப்பிய உரைக்கே
ஈர்ந்தண் உலகமும் இருணீள் விசும்பும்
தாமுங் கொடுப்பினும் தகுநிறை வன்றே!
ஒன்றும் ஈயான் ஆகினும் ஒழிக;
கொன்றும் அடங்கிலாச் சாப்பசி கொண்டு
படையற நின்ற நடையி னோரை
விளையா நின்ற இளையோர் தம்மை
மலர்முகை சிதைத்துத் தழலிடற் போல
உலர்தீ நெஞ்சினன் உயிர்வாங் கினனே!

ஆடல் இளமகள் நல்லுயிர் அயின்ற
கேடுறு நன்னனும் இவன்வினை நாணும்!

*மொழிக்கென வெழுந்தார் இவர்பிற ரிலரே!*
*பழிக்கென நின்றோன் இவன் பிற னிலனே!*
*மயர்தீர் கொள்கைச் சான்றோர் அழுங்க*
*உயர்செந் தமிழ்க்கே உறநின் றாரை*
*வெய்வேட் டெஃகம் விதிர்ப்பறத் தாங்கிக்*
*கொய்துயிர் துணித்தது கொலையோன் கோலே!*

*புன்றலைச் சிறாஅர் செந்நீர் ஆடியோன்*
*முந்நிற நெடுங்கொடி முன்றிலும் சிதைக!*
*அன்னோன் தாங்கிய அரசுஞ் சிதைக!*
*முற்றா இளவுயிர் தமிழ்க்கெனப் போக்கி*
*வற்றா நெடும்புகழ் வழிவழிக் கொண்ட*
*இளையோர் காத்த எந்தமிழ்*
*கிளையுறப் பொலிக குலைவிலா தினியே!*

## பொழிப்பு

(1-12) போர் செய்யப் புறப்பட்டதற்கு அடையாளமான தும்பைப் பூவை இவர்கள் சூடியிலர்; இடையிலே கைவாள்களையும் செருகியிலர்; போர் செய்யப் போவோர் உடுத்தும் வெள்ளை உடைகளையும் உடுத்தியிலர்; கொல்கின்ற வேல்களையும் ஏந்திலர்; பெரிய முரசங்களை ஆர்த்திலர்; போர் தொடங்குவதற்குரிய இடத்தையும் பொழுதையும் இவர்கள் அமைத்துக் கொண்டார்களில்லர். கயிற்று வடங்களைப் பிணித்த பிணிப்புகளை அறுத்துக் கொண்டு, இடங்கள் நலியுமாறு நடக்கின்ற மதங்கொண்ட களிறுகளைப் போல் இவர்கள் தம் கால்களில் வெற்றிக் கழல்களைப் பூண்டாரல்லர். இவர்கள் வேந்தரின் அவைக்குள் நுழைந்தும் இலாதவர்; போர் நுணுக்கங்களை கூறுவதற்கென யாக்கப்பெற்ற நூல்களையும் இவர்கள் அறிந்தவரல்லர்; பூத்த மலர் போலும் இளமை முகங்களில் ஒளி சிந்துகின்ற கண்களும், முத்துப் போலும் அரும்பியிருக்கும் வெயர்வைத் துளிகள் சேர்ந்த நெற்றியும் சிவக்க, கொள்கை முழக்கங்களை பொறித்த கொடிகளைத் தோள்களில் தாங்கி வெற்றி யொன்றையே விரும்புவோராகி, வானம் அதிரும்படி, அனைவரும் சூழ்ந்து நின்று, கொள்கைகளை முழக்கித் தமிழ்த்தாயின் மானம் காக்கும்படி எழுந்து விட்டனர் இவர் காண்!

(13-16) இளமைத்தலை முதிராத உடம்பையுடையவர்கள் இவர்கள். முகத்தில் குறுமயிர் அருப்பம் கொள்ளாத இளமையினோர் இவர்கள். பால் நாறும் முகம் மாறாத பச்சை இளந்தையராகி, நூல்களில் முகம் பதிப்பதன் பொருட்டுப் பள்ளிக்கண் விடப்பட்டவர்கள் ஆவர் இவர்கள்.

(17-26) செந்நிறந் தாங்கிய புதுமழை வெள்ளத்தைப்போலும் பொங்கி யெழுந்தவராகித், தமிழ்மொழியின் மேல் தாம் வைத்த பற்றாகிய புதுமைக் கொள்கையினைத் தெருத் தோறும் முழக்கி, வைகறை தொடங்கிக் கதிரவனொடு ஏற நடந்து, இரவின் நடு யாமத்திலும் துயில் கொள்ளாத வீரவுணர்வு கொண்டவர்கள் இவர்கள். மாற்றார் நிலத்தைத் தாம் கொள்ள வேண்டி இவர்கள் ஒன்று திரண்டவர்கள் அல்லர்; பொன்னையும் விரும்பினர் இல்லை; எதற்காகத் தாம் போராடவேண்டும் என்ற நோக்கமும் அரும்பாத அகவையினர்; நுண்ணிய போர்க்கலைகளைப் பயின்றில்லாதவர்கள்; கருவிகளையும் தம் வயின் கொண்டு வராதவர்கள்; போர் முகம் கண்டிராதவர்கள்; கற்கவும் எழுதவும் உள்ள சுவடிகளையும், தூவல் முதலிய எழுதுகோல்களையும் தாம் தூக்கி வரும் பழக்கத்தினரன்றிப் போர்ச் சூழ்ச்சிகளையும், கருவிகளையும் அறிந்திலாதவர்கள்.

(27-34) இவர்களைத் தடுத்து நிறுத்தும் காவலர் படையைக் கண்டும் இவர்கள் மலைப்புற்றாரிலர்; முன்னேறி நடக்கும் நடையும் தளராதவர்கள்; இடையிடையில் தாம் ஒன்றிய போக்கில் நெகிழ்ச்சியும் முறிவும் இல்லாதவர்கள்! வெற்றிதான் அவர்களின் குறிக்கோள்! அவ் வெற்றி பெற வேண்டியதற்கான வீரவுணர்வே அவர்கள் தூக்கியிருக்கும் படைக்கருவி. உணவைத் தவிர்க்கின்ற நோன்பு உணர்வொடும், உயிர் கழலினும் ஊழ்க்காத முயற்சியொடும், பார்ப்பவர்களுக்குக் கண்களில் நீர் கசியும்படி, பகல், இரவு என்னும் பொழுதுகளையும் நல்லது, தீது என்னும் நிலைகளையும் நினையாதவர்களாகிக், குறிக்கோளில் பொருந்திய நெஞ்சத்தோடு மகிழ்வுடன் சென்றனர்.

(35-40) தொன்மைக் காலத்தினின்று வழி வழியாக வரும் அரச மரபினர் அல்லர் இவர்கள்; வலிமைமிகு சான்றோர் வழியாக வந்த துறவியரும் அல்லர் இவர்கள். பொருளீட்டமும், இன்ப நாட்டமும் அறம் பிழையாதவாறு நடக்கின்ற இருள்தவிர்ந்த வாழ்க்கையினையும் விரும்பாதவராகி, அன்றைய தமிழ்த்தாய்க்கு இன்று பிறந்த மக்களென, ஒன்றேயாகிய, தனித்த, நீண்ட நினைவொடு இவர்கள் சென்று கொண்டிருந்தனர்.

(41-47) மூவாததும், இளமை கொண்டதும், முதிர்ந்ததும் ஆகிய தமிழ் மொழிக்கு வந்து நேர்ந்து அழிவுறும்படி வருத்துகின்ற பெருந்துயரத்தைத் தகர்த்தெறிவதன் பொருட்டுத் தொடங்கியபோரில் தம்மை நெய்யூட்டிய எரிக்குள் புகுத்துக் கொண்டழிந்த புகழுடையோர் சிலர் உளர்; உடலழிவுற்ற மேன்மையோர் சிலர் உளர்; கடுமையான சிறைக்குள் அடைக்கப் பெற்ற துன்பத்தைத் தாங்கி கொண்ட வலிமையினார் சிலர் உளர். கொடுமையாகக் குறைக்கப் பெற்ற எச்ச உறுப்புகளுடன் துன்புற்று வருந்தியவர்கள் சிலர் உளர். எவ்வாறு உரைப்போம் அக் கொடுமை சான்ற அரசின் செயல்களை?

(48-57) பூப்போலும் கண்ணும், மதிபோலும் முகமும், புன்னகை செய்கின்ற சிவந்த வாயும் கொண்ட அவ் விளைஞர்கள் 'செந்தமிழ் வாழ்க'

எனக் கொள்கை முழங்கிய உறத்துரைக்கு, ஈரமும் குளிர்ச்சியும் உடைய இவ்வுலகமும், இருள் நீண்ட விசும்பும் ஆகிய இரண்டையும் அன்பளிப்பாகக் கொடுப்பினும் அவை தகுந்த நிறைவாக இரா. ஆயினும், ஒரு பொருளும் ஈயாதவனாகினும் ஒழிக. மாந்த உயிர்களைக் கொன்றும் அடங்கிடாமல் சாவையே பசியாகக் கொண்டு, கருவிகளில்லாமல் வெறுங்கையராக நின்ற, இப் போராட்ட நடையினோரை - முழுவதும் விளையாமல் நின்ற இளைய பருவத்தினர் தம்மை, மலர் மொட்டுகளைச் சிதைத்து நெருப்பிலிடுதல் போல் உலர்ந்த பொருளில் பற்றுகின்ற தீயைப் போன்ற கொடுமையுற்ற நெஞ்சையுடையவன் உயிர்களை வாங்கினான்.

(58-65) நீராடிய அன்னிமிஞிலியின் நறுவிய உயிரைத் தின்ற கேடு சான்ற நன்னன் என்னும் அரசனும், இவ்வினைக்கு நாணுவான் ! தமிழ்மொழி காப்பதற்கென்றே எழுந்தவர்கள் இவர்களைத் தவிர வேறு இலர்; அது போல் பழிக்கெனவே நின்றவனும் இவனைத் தவிர, (தமிழ் வரலாற்றில்) வேறு எவனும் இலன். மயக்கம் தீர்ந்த கொள்கையையுடைய சான்றோர் வருந்தும்படி, உயர்ந்த மொழியாகிய செந்தமிழுக்குத் துணையாகி நின்றவரை, கொடிய வேட்டெஃகத்தை நடுக்கமுறாது தாங்கி உயிர் கொய்து உடலைத் துண்டு செய்தது கொலையவனின் கொடுங்கோல் !

(66-72) இளந்தலைமை உடைய சிறுவர்களின் குருதியில் குளித்தவனின் மூன்று நிற(ப்பேராயக் கட்சி)க் கொடியும் அரண்மனை முன்றிலும் சிதைந்தொழிக! அன்னவன் தாங்கிய அரசும் சிதைந்தொழிக! முற்றாத இளவுயிர்களைத் தமிழ்மொழிக்கெனவே போக்கிய வழி, வற்றாத நெடிய புகழை வழி வழியாகக் கொண்ட இளைஞர்கள் காத்த எம் தமிழ்மொழி பல கிளைகளும் மல்கிக் குலைவுகள் இலாது இனிப் பொலிந்து விளங்குக.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

உலக வரலாற்றிலேயே மொழிக்கென வெழுந்த முதற்புரட்சியும், தமிழக மறுமலர்ச்சி வரலாற்றின் திருப்பமும் ஆகிய 1965-ஆம் ஆண்டு இந்திப் போராட்டத்திற் கலந்து செந்நீர் சிந்தி, விழுப்புண் ஏற்ற தமிழ் மறவர்கட்குப் பாடியது இப் பாடல்.

*தும்பை சூடிலர்* - போரெழுச்சிக்கு அடையாளமாகிய தும்பைப் பூவை அணியாது முனைந்த மாணவர் எழுச்சியைக் கூறியது. தும்பைப் பூவைச் சூடாது போருக்கெழுந்தனர் இவர் என்றது.

*இடைவாள் செருகிலர்* - தம் இடைகளில் வாள்களைச் செருகி யில்லர். மொழிப் போராகலின் கருவி தவிர்த்தலைக் கூறியது.

*வெண்கலை உடுத்திலர்* - போர்க்கென் றெழுவார் வெள்ளிய ஆடையை உடுத்தல் மரபு. வெளிராடை அற்றைப் போர்ச் சீருடை போலும். அதனை

உடுத்திலர் என்றது.

*கொல் வேல் ஏந்திலர்* - கொல்லும் வேலையும் ஏந்திலர்.

*தடமுரசு ஆர்த்திலர்* - போரின் தொடக்கம் அறிவிப்பான் வேண்டி எழுச்சி முரசும் ஆர்த்தலைச் செய்திலர்.

*இடம்பொழுது அமைத்திலர்* - போர் நடத்தற்குரிய இடத்தையும், பொழுதையும் தேர்ந்து கொண்டிலர் என்பது.

*வடம்பிணிப் ...... பூண்டிலர்* - தம் கால்களில் இட்ட கயிற்று வடங்களை அறுத்துக் கொண்டு, கட்டுத் துறையினின்று வெளியேறும் மதக்களிறுகள் போல், அதர்ந்த நடை கொண்ட கால்களில் வெற்றிக்கழல் பூண்டிலர். படை மறவரல்லாத பள்ளி மாணவராகலான் அணிகள் கைதரப் பெறுதல் இலையாகலின்.

*வேத்தவை* - அரசரவை; வேந்தரவை வலித்தது. அரசு ஆளுமை அறியாத நிலையினர் என்றது.

*யாத்த நூல்* - போர் நுணுக்கங்கள் தொகுத்துக் கூறும் நூல். போர்த்திறன் பற்றி அறியாமை கூறியது.

*பூத்த ...... சிவப்ப* - மலர்போலும் இளமை முகம் அம்முகத்து ஒளியை உமிழ்க்கும் கண்கள். முகத்துக்கண் முத்துப் போலும் வெயர்வைத்துளிகள் சார்ந்த சிவந்த நுதல். இவை மாணவர்தம் இளமை நிலையையும் முயற்சி முனைப்பையுங் குறித்தன என்க.

*கொள்கை பொறித்த கொடி* - 'தமிழ் வாழ்க' எனும் கொள்கை வரியெழுதிய கொடி.

*தோள் தாங்கி:* - தோள்களிலே சாய்த்துத் தாங்கி.

*வெல்கை ...... ஆகி* - தமிழ் வெற்றியையும் இந்தி மொழியின் திணிப்புத் தவிர்ப்பையும் விரும்புவோராகி.

*வானம் ...... ஆர்த்து* - ஒன்று சூழ்ந்து திரண்டு, வானம் அதிரும்படி கொள்கைகளை முழக்கி.

*மானம் ...... இவர்* - தமிழ் மானத்தையும்; தமிழர் மானத்தையும் காத்திட இவர் எழுந்தனர்.

*புன்றலை* - இளமைத் தலை.

*முகமயிர்* - முகத்து அரும்பு மீசையும் தாடை அணலும்

*பால் முகம்* - குழந்தைமை முகம்.

*பசுமையோர்* - இளமையோர்.

*நூல்முகம் புகூஉம்* - பொத்தகத்து முகஞ்செலுத்தும், கல்வி கற்கும்.

*செம்புது வெள்ளம் ஒப்போர்* - செந்நிறஞ்சான்ற புதிய வெள்ளம் போல் அலைவும் அடர்வும் விரைவும் உடைய இளைஞர் கூட்டம்.

*தம் புதுக்கொள்கை* - 'தமிழே வேண்டும்; இந்தி வேண்டாம்' என்னும் புதுமைக் கொள்கை.

*தெருத்தொறும் முழக்கி* - தெருத்தொறும் வலஞ்சென்று முழக்கி.

*வைகறை ...... தறுகணோரே* - முன் காலை தொடங்கிக் கதிரவன் போக்கொடு தாழும் பகல் முழுதும் நடந்து, நள்ளிரவிலும் கண்மூடாத வீரம் மிக்கவர்.

*மண்ணும் ...... இலையே* - பிறரின் ஆட்சி நிலத்தைத் தன் ஆளுமை நிலத்தொடு இணைத்துக் கொள்ளும் ஆசை இவர்களுக்கு இல்லை.

*பொன்னும்....இலையே* - பொன்னுக்கும் பொருளுக்கும் ஆசையில்லாதவர்.

*பொருதும்....அரும்பிலர்* - போராட வேண்டும் எண்ணமும் தோன்றாதவர். இயல்பான எழுச்சி கொண்டாராதலின்.

*நுண்கலை* - போர்க்குரிய நுண்ணிய முறைகள்.

*கவடும் படையும்* - போருக்கான சூழ்ச்சிகளும் கருவிகளும்.

*படையும் மலைந்திலர்* - தம்மைத் தடுத்து நிறுத்தும் காவலர் படைக்கும் அஞ்சி மயங்கிப் பின்வாங்காதவர்.

*இறுதல்* - இற்றுப் போதல். தனித் தனியாகப் பிரிந்து போதல்.

*விறல்* - வெற்றி; *மறல்* - வீரம்.

*ஊண்தவிர்நோன்பு* - ஊணும் தவிர்த்த கொள்கையுரம்.

*உயிர்தீர்முயல்வு* - உயிர் தீரும் வரை செய்யப் பெறும் முயற்சி.

*காண்குநர் கண்ணீர் கலுழ* - இவர்களின் எழுச்சியையும், வீரவுணர்வையும், அதே பொழுது அவர்களின் இளமையையும் கல்வி பயில வந்தார் போராட வேண்டி வந்ததே என்னும் நினைவும், பார்ப்பவர் கண்களில் கண்ணீரை வருவித்தன என்க.

*நன்றும் தீதும் நினையாராகி* - கல்வியால் ஏற்படும் நன்மையும் இவ்வகைப் போராட்டங்களால் நேரும் தீமையும் நினைத்துப் பாராதவராகி.

*ஒன்றும் நெஞ்சொடு* - கருத்து வேறுபாடற்றுப் பொருந்தி ஒரே எண்ணத்தோடு கூடிய நெஞ்சோடு

*தொல்லோர் மரபின் அரசர்* - பழம் பாண்டிய, சோழ, சேரர் என்னும் மரபில் வந்த அரச வழியினர்.

*வல்லோர் அல்லர்* - தவம் முதலிய அருந்திறல்களால் வலிமை பொருந்திய துறவிகள் வழியினரும் அல்லர்.

*பொருளும் ...... விழையாராகி* - அறவழிகளால் ஈட்டிய பொருளும், அதன் வழி இன்பமும் கூடிய, இருள்தீர்ந்த தூய வாழ்க்கையும் விரும்பாதவர்கள் ஆகி.

*அற்றைத் தமிழ்த்தாய்* - பன்னெடுங்காலம் முந்தித் தோன்றிய தமிழ் என்னும் தாய்.

*இற்றை மகர்* - இன்று இக்காலத்துள்ள மக்கள்.

*ஒற்றைத் தனி நீள் நினைவு* - ஒன்றேயாகித் தனித்து நின்ற நெடிய நினைவாகிய தமிழின் முன்னேற்றம்.

*மூவா இளமை....ஏய்ந்த* - முதுமை யுறாமல் என்றும் இளமைத் தன்மையே சார்ந்த மிகப் பழமையான மொழியாகிய தமிழ் மொழிக்கு வந்து பொருந்திய.

*தாவாப் பெருந்துயர்* - நீங்காத பேரிடர்.

*நெய்யெரி புகுத்திய புகழோர்* - நெய்யினால் தோற்றிக் கொண்ட எரியில் தன் உடலைப் புகுத்திக் கொண்டு மாய்ந்த புகழை உடையவர்.

*மெய்யழி பட்ட* - உடலம் மாய்த்துக் கொண்ட

*கொடுங்குறை யுறுப்பொடு* - உறுப்புகள் குறைந்த கொடுமையான நிலையொடு.

*யாங்கன் .... வினை* - இம் மொழிப் போராட்டத்திற்கென வெழுந்த மாணவர் எழுச்சியை அடக்குவான் வேண்டி. இக்கொடிய அரசு மேற்கொண்ட கடிய நடவடிக்கைகளையும் அவற்றினால் ஏற்பட்ட தீய விளைவுக்களையும் எவ்வாறு உரைப்பல் என்றபடி

*ஈர்ந்தண் உலகம்* - குளிர்ந்த தண்ணீர் சூழ்ந்த இந்த உலகம்.

*இருள் நீள் விசும்பு* - நீண்ட இருள் தோய்ந்து கிடக்கும் இவ் வானம்.

'செந்தமிழ் வாழ்க'வென முழக்கமிட்டுக் கூறி ஊர்வலம் வரும், அவ்விளைமையோர்க்கு வானையும் இந்நிலத்தையும் பரிசிலாகக்

கொடுப்பினும் அது நிறைவாக இராது. அவ்வுணர்வின் பெருமை அக் கொடையினும் உயர்ந்தது என்றபடி.

*ஒன்றும் ஈயான் ஆகினும் ஒழிக* - அவர்களின் ஈக உணர்வுக்குப் பரிசாக வானையும் நிலத்தையும் போல் ஒன்றினையும் அவர்களுக்குத் தரான் ஆயினும் போகட்டும்.

*கொன்றும் ..... கொண்டு* - ஏற்கனவே நடந்த முன்னைய நாள் போராட்டங்களில் மாணவ இளைஞர்கள் பலரைச் சுட்டுக் கொன்றும் அவனின் சாக்காட்டுப் பசி அடங்காது, மீண்டும் அந்த வெறிகொண்டு.

*படையற நின்ற நடையி னோரை* - எவ்வகையான கருவிப் படைகளையும் கொண்டிலராய், வெறுவராய்க் கொள்கை முழக்கத்தோடு மட்டும் ஊர்வலம் செல்லும் இவரை.

*விளையா நின்ற இளையோர் தம்மை* - தமக்காகவும் நாட்டுக்காகவும் இன்னும் பல நிலைகளிலும் விளைந்து வரவேண்டிய தன்மையுடைய இவ்விளைய மாணவரை.

*மலர் முகை ....: போல* - மலரவேண்டிய மொட்டுக்களைக் கசக்கியும் கிள்ளியும் சிதைவு செய்து நெருப்பிலிட்டுப் பொசுக்குதல் போல.

*உலர்தீ நெஞ்சினன்* - உயிர்களை வற்றடிக்கும் தீப்போலும் கொடிய நெஞ்சையுடையவன்.

*உயிர் வாங்கினனே* - அவர்களின் உயிர்கள் மேலும் நீங்கும்படி காவலர்களை விட்டுக் கொன்று தீர்த்தான்.

*ஆடல் இளமகள் ..... நாணும்* - நீராடல் செய்த இளமகள் ஒருத்தி அரசன் தோட்டத்து விளைந்த மாங்காயொன்று ஆற்றில் விழுந்து மிதந்து வர, அதனை அறியாமல் எடுத்து உண்டதால் அவளைக் கொன்ற கொடிய நன்னன் என்னும் அரசனும், இந்தி மொழி படிக்க மறுத்துப் போராடிய மாணவர்களைச் சுடுவித்துக் கொன்ற இவனின் வினைக்கு நாணுவன் என்று பழியும் இழிவும் சாற்றியது.

நன்னன் நிகழ்ச்சியைக் குறுந்தொகை 292 -ஆம் பாட்டால் தெரிந்து கொள்க.

*மொழிக்கென....இலரே!* - தாய் மொழியைக் காப்பதற்கென்று எழுச்சி கொண்டவர் இம்மாணவரைவிட, வேறு எவரும் இலர்.

*பழிக்கென...இலனே!* - அதே போல் பழி மேற்கொள்ள எழுந்தவன் இவனினும் வேறு எவனும் இலன்.

*மயர்தீர் கொள்கை* - குற்றமற்ற கொள்கையை உடைய சான்றோர் அழுங்க சான்றோர்கள் வருந்தும்படி.

குற்றமற்ற நடுவு நிலையுள்ள சான்றோர் பலர், மாணவர்கள்மேல் அடக்குமுறை செய்து அவர்களைக் கொல்லற்க என்று வேண்டியும், அவர் மொழி கேளாது, அவர்கள் நெஞ்சம் துயருறும்படி கொல்வித்தான் என்பது.

*உயர்செந் .... நின்றாரை* - உயரிய செந்தமிழ் மொழிக்குக் காப்பென நின்றவரை.

*வெய்வேட்டெஃகம் விதிர்ப்பறத் தாங்கி* - கொடிய துமுக்கிகளை நடுக்கமிலாது தாங்கி.

*கொய்துயிர்...கோலே* - உயிரைக் கொய்து துண்டித்தது ஆட்சியதிகாரத்தில் அமர்ந்த கொலைஞனின் கொடுங்கோல் ஆணை.

*புன்றலைச் சிறாஅர்* - இளமைத் தலைகளையுடைய சிறுவர்களின்.

*செந்நீர் ஆடியோன்* - குருதியில் குளித்தவன்.

*முந்நிற நெடுங்கொடி* - கோட்டையின் நீண்ட கம்பத்தில் கட்டப்பெற்ற மூன்று நிறமுள்ள பேராயக் கட்சியின் கொடி.

*முன்றிலும் சிதைக* - அக்கொடியுடன் அவ்வரசின் ஆளுகை முற்றமும் சிதைக. முன்றில் - சிதைதல் என்றது அவ்வரசின் ஏற்றம் சிதைக என்பது.

*அன்னோன் தாங்கிய அரசும் சிதைக* - அவ்விளைஞர்களைச் சுடுவித்த முதலமைச்சர் ஏற்று நடத்திய அரசும் இனி உருக்கொளாதபடி சிதைந்தொழிக என்றவாறு. இது வஞ்சினம். முதலமைச்சர் சார்ந்து நடத்திய அரசு பேராயக் கட்சி யரசு. முதலமைச்சர் திரு.பக்தவச்சலம். இவ்வஞ்சினப் பாடல் வெளிவந்த பின்னர் அவர் அரசாட்சி அவ்வாறே சிதைந்தது. மீண்டும் அவர், அரசுக்கட்டிலேறும் வாய்ப்பின்றியே போனார்.

*முற்றா இளவுயிர்* - முதிராத இளைஞரின் உயிர்.

*தமிழ்க்கெனப் போக்கி* - இந்தியழிப்பினின்று தமிழைக் காப்பதற்கென்று போராடி உயிர்விட்டு.

*வற்றா நெடும்புகழ்* - வற்றுதல் இல்லாத நீண்ட நெடிய புகழ்.

*வழி வழிக் கொண்ட* - தொன்மைக் காலத்திலிருந்து இன்று வரை வழி வழியாகக் கொண்ட.

*இளையோர் காத்த எந்தமிழ்* - இளைஞரால் காக்கப்பெற்ற எம்முடைய தமிழ்மொழி.

*இனி, குலைவிலாது கிளையுறப் பொலிக* - இனிமேல், எவ்வகைக் குலைவுமிலாது, கிளைமொழிகளை ஊன்றி மேன்மேலும் பொலிவுற்று விளங்குக.

- இது வாழ்த்து!

- 1938-இல் சென்னை மாநிலத்தின் ஆட்சிப் பொறுப்புப் பேராயக் கட்சியினர் கைக்கு வந்தது. அக்கால் முதலமைச்சராக விருந்த திரு. இராசகோபாலாச்சாரி (இராசாசி) 'இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவேன்' என்று தெரிவித்தார். அதையடுத்துத் தமிழகத்தில் இந்தி யெதிர்ப்புணர்வு தொடங்கி வலுப்பெற்றது. அக்கால் பல்லாவரம் பொதுநிலைக் கழக ஆசிரியர் உயர்திரு. மறைமலையடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார், கோ. துரைசாமி (G.D.Naidu), பாகநேரி காசிவிசுவநாதன், ஈழத்துச் சிவானந்த அடிகள், அருணகிரி அடிகள், சண்முகானந்த அடிகள், பெரியார் ஈ.வெ.இராமசாமி, அண்ணாத்துரை, சண்முகவேலாயுதம், சி.டி.நாயகம், தமிழவேள் உமாமகேசுவரன், சச்சிதானந்தம், தூத்துக்குடி மாசிலாமணி, சாமி சகசானந்தா, அருள் தங்கையா, பாரிப்பாக்கம் கண்ணப்பர், முத்தையா, பரலிசு.நெல்லையப்பர், சற்குணர், இராபி.சேது. வச்சிரவேல், பி.டி.இராசன், சௌந்தரபாண்டியன், சாத்தூர் கந்தசாமி, ஏ.டி.பன்னீர்செல்வம், கா.சுப்பிரமணியனார், கருமுத்து தியாகராசன், பண்டுவர் தருமாம்பாள், மூவாலூர் இராமாமிர்தத் தம்மையார், சென்னை மலர்முகத்தம்மையார், சரகுவதி சிற்சபை, கந்தம் உரோசம்மாள், சரோசினி மாணிக்கவாசகம் (மறைமலையடிகள் மூத்த மருமகள்) கோபிசெட்டிப் பாளையம் மாரியம்மாள், மறை திருநாவுக்கரசு, பரவத்து இராசகோபாலாச் சாரியார், கே.எம். பாலசுப்பிரமணியம், டி.ஏ.வி.நாதன், கே. இராமையா, பாலசுந்தரப் பாவலர், எசு.சம்பந்தம், பல்லடம் பொன்னுசாமி, மீனாம்பாள் சிவராசு முதலிய அறிஞர்களும், கட்சித் தலைவர்களும், துறவிகளும், பெரியோர்களும் ஆகப் பலர் எதிர்த்து அறிக்கைகள் விட்டும், மாநாடு நடத்தியும், போராடியும், மறியல்கள் செய்தும், சிறை சென்றும், அடிதடி பட்டும் இந்தித் திணிப்பை எதிர்த்து நின்றனர்.

இப்போராட்ட எதிர்ப்பால் இந்தி நுழைப்பு ஒரேயடியாகத் தீராமல், சிறிது சிறிதாகவும், மெல்ல மெல்லவும், தமிழகத்தில் காலூன்றியே வந்தது. அக்கால் வெளிவந்த செய்தித்தாள்கள் பலவற்றுள்ளும், இந்தி யெதிர்ப்புத் தொடர்பான கட்டுரைகள், பாடல்கள், அறிக்கைகள், தீர்மானங்கள் அனைத்தும் வெளிவந்தன. ஆனால் இந்தி படிப்படியே நுழைக்கப் பெற்றே வந்தது. இடையிடையே இந்தி யெதிர்ப்புப் போராட்டங்கள் நடத்தப் பெற்றும் பயனில்லை.

இறுதியாக, 1965 சனவரி 25-ஆம் பக்கல் மாணவர் எழுச்சிப் போராக இந்தி யெதிர்ப்புணர்வு வெடித்தது. இப் போர் பிப்ரவரி 12-ஆம் நாள் வரை தீவிரமாக நடந்தது. அக்கால் பேராயக் கட்சி தமிழகத்தில் அரசு வீற்றிருந்தது.

திரு. பக்தவத்சலம் முதல்வராக அமர்ந்து, மாணவர்களின் எதிர்ப்புணர்ச்சியைச் சற்றும் பொருட்படுத்தாது தில்லியாட்சியரின் கையாளாக விருந்து, அடக்குமுறைகளையும், வன்மங்களையும் கையாண்டு மாணவர்கள் பலரையும் பொதுமக்கள் பலரையும் சுட்டு வீழ்த்தி, நடுவணரசால் 'எஃகு நெஞ்சர்' என்று பாராட்டப் பெற்றார். அக்கால் நடந்த இந்தியெதிர்ப்புப் போரில் ஏற்பட்ட பொதுவிழப்புகளும், உயிரழிவுகளும் நிகழ்ச்சிகளும் பற்பல. அவற்றுள் சில வருமாறு :

1. அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர் இராசேந்திரனும் இளங்கோவனும் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

2. கோடம்பாக்கம் சிவலிங்கமும், விருகம்பாக்கம் அரங்கநாதனும் தீக்குளித்தனர்.

3. சென்னை, கோட்டைக்கு ஊர்வலமாகச் சென்ற கல்லூரி மாணவர்களைக் காவலர்கள் அடித்து நொறுக்கியதில் ஏறத்தாழ 50 மாணவர்கள் படுகாயமுற்றனர்.

4. முப்பது பொது உந்துகள் கொளுத்தப்பட்டன.

5. கல்லூரிகள், பள்ளிகள் அனைத்தும் ஒன்றரை மாத காலத்துக்கு மூடப்பட்டிருந்தன.

6. சென்னை நகர வீதிகளில் குதிரைக் காவலர்கள் உலாவந்த வண்ண மிருந்தனர்.

7. ஆயிரக்கணக்கான மாணவியர் கறுப்புப் புடவை, சட்டையுடன் மதுரை ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

8. சனவரி 25முதல் 28 வரை ஏறத்தாழ 2000 பேர் சிறைப்படுத்தப் பெற்றனர்.

9. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் காலவரையறையின்றி மூடப்பட்டது.

10. காவலர்கள் கல்லூரிகளுக்குள் புகுந்து மாணவர்களை அடிக்கையில் பேராசிரியர்கள் பலரும் காயம் பட்டனர்.

11. சென்னை, திருச்சி, மதுரை, காஞ்சி, சிதம்பரம், சேலம், நெல்லை, திருவாரூர், சிவகாசி, பட்டுக்கோட்டை, அரக்கோணம், தாளவாடி, ஆரணி, இராணிப்பேட்டை, வேலூர், ஆலந்தூர், வளவனூர், இடைப்பாடி, மகுடஞ்சாவடி, திண்டிவனம், நெய்வேலி, வெங்காலூர், புதுவை, கடலூர், குன்னூர், கும்பகோணம், கடையநல்லூர், திருப்பூர், நாகர்கோயில், காரைக்கால், சாத்தூர், அருப்புக்கோட்டை, வாசுதேவநல்லூர் முதலிய ஊர்களில் தொடர்ந்து கிளர்ச்சிகள் நடந்து வந்தன.

12. சென்னைக் கடற்கரையில் இந்திப் பொத்தகங்கள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன.

13. அமைச்சர் மகன் ஒருவனும், காவல் அதிகாரி மகன் ஒருவனும், அமைச்சர் ஒருவர் மருமகனும் போராட்டங்களில் கலந்து கொண்டனர்.

14. மதுரையில் மலையுந்து(Jeep)க்கும் பேராயக் கட்சி அலுவலகத்திற்கும் தீ வைக்கப் பெற்றது.

15. மதுரையில் வடநாட்டினர் உணவு விடுதியைத் தாக்கி அதன் இந்திப் பெயர்ப் பலகைக்கும், குடியரசு நாளைக் கொண்டாட அமைத்த பந்தலுக்கும் தீ வைத்தனர்.

16. நாடெங்கும் இந்தியரக்கியின் கொடும்பாவிகள் கொளுத்தப் பட்டன.

17. சென்னை இசுடான்லி மருத்துவமனைப் பயிற்சி மருத்துவர்கள் ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்தனர்.

18. சென்னை பச்சையப்பன் கல்லூரிக்குள் புகுந்து பேராசிரியர்களை அரம்பர்(ரௌடி)கள் என்று கூறி மாணவர்களைக் காவலர்கள் அம்மணமாக நிறுத்தி வைத்து அடித்தனர். மாணவர்களைப் பார்க்க வந்த பெற்றோர்களும் இந்தக் கொடுமைக்கு ஆளாயினர்.

19. திருச்சி, கீரனூரில் 20 அகவை முத்து என்பவர் இந்தித் திணிப்பை எதிர்த்து நஞ்சுண்டு இறந்தார்.

20. கோவையில் கடைகள் சூறையாடப்பட்டன.

21. தொடர் வண்டிகள் கொளுத்தப்பட்டன.

22. சோமனூர், திருப்பூர், கரூர், குறிஞ்சிப்பாடி, திருவொற்றியூர், தக்கோலம், மணப்பாறை, புதுவை ஆகிய தொடர்வண்டி நிலையங்கள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன.

23. சென்னை, வேலூர், ஈரோடு, சேலம், கோவை, திருச்சி, மதுரை, திருநெல்வேலி, தூத்துக்குடி, கரூர், திருப்பூர் முதலிய இடங்களுக்கு பட்டாளங்கள் அனுப்பப்பட்டன.

24. அமைச்சர்கள் சுப்பிரமணியமும் அழகேசனும் வேலை விடுப்பு நாடகம் நடத்தினர்.

25. கல்கத்தாவிலும் பள்ளிகள் மூடப்பட்டன.

26. கரூரில் காவல்துறை அதிகாரி தாக்கப்பட்டார்.

27. திருச்சி - மரக்கடை அஞ்சலகம் தீ வைக்கப்பட்டது.

28. ஏறத்தாழ 20 தொடர் வண்டி நிலையங்கள் சேதப்படுத்தப்பட்டன.

29. பொள்ளாச்சி நகரமே வெறிச்சோடிக் கிடந்தது.

30. மதுரை, கூடலூரில் இரு காவலர்கள் உயிருடன் கொளுத்தப் பட்டனர். திருப்பூரில் இரு காவல் அதிகாரிகள் உயிருடன் கொளுத்தப்பட்டனர்.

31. நூற்றுக்கணக்கான அஞ்சல் பெட்டிகளும், பொதுத் தொலைபேசி நிலையங்களும் தீக்கிரையாகின.

32. கர்னூலிலும், கேரளாவிலும், ஆந்திராவிலும் மாணவர்கள் கொதித்தெழுந்தனர்.

33. தஞ்சை அஞ்சலகம், தூத்துக்குடி அஞ்சலகம் தீவைத்துக் கொளுத்தப்பட்டன.

34. திருச்சி, அய்யம்பாளையம் தொடக்கப்பள்ளி ஆசிரியர் வீரப்பன், சத்தியமங்கலம் உழவர் முத்து இருவர் மேலும் தீக்குளித்தனர்.

35. சென்னை, ஆழ்வார்ப்பேட்டை மாநகராட்சிப் பள்ளிக்குத் தீ வைத்தனர்.

36. அனைத்துத் தொடர்வண்டிகளும் ஒரு கிழமை காலத்திற்கு ஓடவில்லை.

37. அரசினர் உந்துகள் பதினைந்து நாட்களுக்கு ஓடவில்லை.

38. பஞ்சாபிலும் துமுக்கிச் சூட்டில் நான்கு பேர் இறந்தனர்.

39. மொத்தம் 50 உந்து வண்டிகள் கொளுத்தப்பட்டன.

40. புதுவை அரவிந்தர் பாழி தாக்கப்பட்டு தீ வைக்கப்பெற்றது.

41. இந்திப் படம் காட்டாதே என்று நாகர்கோவில், சென்னை, கோவை முதலிய இடங்களில் கொட்டகைகளின் முன் போராடித் தடுத்து நிறுத்தினர்.

42. செங்கோட்டையருகில் தண்டவாளம் பெயர்க்கப்பட்டது.

43. கல்கத்தாவிலும் போராட்டம் தொடங்கியதால், பள்ளிகளை 15 நாட்கள் மூடும்படி கல்கத்தா அரசு ஆணையிட்டது.

44. ஆரணி அஞ்சலகம் சூறையாடப்பட்டது.

45. திருத்தணியில் மாணவர்கள் தொடர் வண்டிக் கடைவைக் கதவுகளை உடைத்துத் தூள் தூளாக்கினர்.

46. அனந்தப்பூரில் ஏறத்தாழ 3000 பேர் தொடர் வண்டி நிலையத்தைத் தாக்கினர்.

47. 12 வானூர்திகளில் பட்டாளம் வரவழைக்கப்பட்டது.

48. குடியேற்றத்தில் மாணவர்களுக்கும் காவலர்களுக்கும் கைகலப்பு நேர்ந்து, காவலர்கள் மாணவர்கள் மேல் 14முறை துமுக்கிச் சூடு நடத்தினர்.

49. கடையநல்லூரில் தொலைவரிக் கம்பிகள் அறுக்கப்பட்டன. அஞ்சலகப் பெயர்ப் பலகைகள் உடைக்கப்பட்டன.

50. 1965 -இல் நடந்த இந்தி யெதிர்ப்புப் போராட்டத்தில் காவலர்கள் சுட்டதால் இறந்தவர்கள் மொத்தம் 68பேர். தீக்குளிப்பில் இறந்தவர்கள் 5பேர். தீயிடலில் மாண்டவர் ஒருவர். மக்களால் தாக்கப்பட்டு மாண்ட

காவலர்கள் 4பேர். சுடப்பட்டு இறந்த 68 பேரில் குமாரபாளையத்தில் 15பேர்; பொள்ளாச்சியில் 10 பேர்; புதுச்சேரியில் 10 பேர்.

1965-ஆம் ஆண்டில் நடந்த இந்திப்போரில், மாணவர் அடர்ந்தெழுந்த உணர்வெழுச்சியைக் குறித்தது; இப்பாடல். அக்கால், தமிழகத்து, இனங்காக்கவும் மொழி பேணவும் நின்ற கட்சிகள் பலவிருந்தும், தலைவர் பலரிருந்தும் அவற்றுள் ஒன்றினாலும் அவருள் ஒருவராலும் தூண்டப் பெறாமல், தமிழ் காத்தற்குத் தாமே எழுச்சியுற்று வீறுகொள நின்ற உயர்பள்ளி, கல்லூரி மாணவர்தம் வலிந்த போக்கை வரலாறு படுத்துவதாகும் இப்பாடல். இனி, இது தொடர்ந்து வரும் பன்னிரு பாடல்களும் இத்தகையினவே.

இது, **செந்தமிழ்த் தும்பை** என் திணையும் **புன்மொழி பொருதல்** என் துறையுமாம் என்க. திணை, துறை புனைந்த புதியன.

செந்தமிழ்க்கெனப் பொருத வெழுந்தது 'செந்தமிழ்த்தும்பை'யும் தமிழ்மீதூர்ந்து அழிக்க வந்த இந்தியென் புன்மொழி நோக்கிப் பொருதி நின்றது 'புன்மொழி பொருதலு'ம் ஆம்.



# 52 தேறுக நெஞ்சம்

*தேறுக நெஞ்சம் வீறுகொள நின்றே!*
*ஈற்றப் பொலிந்தது நின்மக னிசையே!*
*முத்தோர் மரபின் யாத்த முத்தமிழ்!*
*காத்தோர் நிரலின் தலைநின் றனனே!*
*மொய்ம்பொடு முதலா வம்மென் நோக்கின்*
*கல்விக் கழகத்து ஐயற் றுறந்த*
*செல்வத் தனிமகற் சேர்த்தினை அம்ம!*
*வெய்குழ லெஃகம் உமிழ்ந்துயிர் கழன்ற*
*மெய்யோன் தமிழ்ச்சீர் மீமிசை நிறுத்தி,*
*அறப்பூண் விளங்கிய ஆகம் பனிப்ப*
*மறப்பூண் பயந்தநின் வயிறு குளிர*
*ஆய்நினக் குரியன் அனைவர்க்கு மாகிய*
*உளங்கிளர் மாக்கதை உள்ளி*
*இளங்கிளர் உணர்வின் ஏந்தலன் றாயே!*

**பொழிப்பு :**

தேற்றிக் கொள்க (நின் நெஞ்சத்தை பெருமை பெருமாறு நின்று.) அழிவு இறுதி இல்லாமல் விளங்கி நின்றது நின்னுடைய மகனது புகழ். அறிவின் முதிர்ந்த தொன்மையோர் தம் வழிவழி முறைமையால் நிலைபெறுவித்த மூவியல் தமிழ் மொழியினைக் கட்டிக் காத்தவர் வரிசையில் முதலாக நின்றனன், அவன்! நிறைந்த வலிமையொடு, தன்னைச் சேர்ந்த அனைவரினும் முதல்வனாக வருக என்னும் நோக்கத்துடன், கல்வி கற்பிக்கப்பெறும் கலைக் கழகத்து, தன் தந்தையைத் துறந்த, உடன் பிறப்பில்லா ஒரு மகனைக் கல்வி கற்க வேண்டுமென்று சேர்த்தனை. அம்ம! வெப்பமான எஃகுக்குழலாகிய வேட்டெஃகத்தினின்றும் உமிழப் பெற்ற குண்டினால், உயிர் நீங்கப் பெற்ற உடலையுடையவன், தமிழ் மொழியின் பெருமையை மேலும் உயர்நிலைக்கண் கொண்டு சேர்த்து நிலைபெறச் செய்து, வாழ்வறத்தின் சிறப்பால் விளங்கித் தோன்றிய நின் மார்பு கண்ணீரால் நனையும் படியும், மறத்திற்கே சிறப்பு தோன்றுமாறு நின்ற அவனைப் பெற்றெடுத்த நின் வயிறு குளிரும் படியும், பெற்ற தாயாகிய நினக்கு உரியவன், தான் செய்த தமிழ்காக்கும் வினையால் தமிழர்

அனைவர்க்கும் உரியவன் ஆகிப் பெருமைபெற்ற, உள்ளத்தைக் கிளர்ச்சியுறச் செய்யும் பெருமைக்குரிய வரலாற்றை நினைந்து, இளமை கிளர்ந்தெழும் உணர்வினால் சிறந்தோனுடைய தாயாகிய நீயே!

**விரிப்பு :**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக் கல்விக் காலத்துத் தமிழ் காக்க முன் நின்று உயிர் துறந்த இளவல் அரசேந்திரன் நற்றாயைத் தேற்றிப் பாடியதாகும் இப் பாடல்.

***தேறுக நெஞ்சம்....நின்றே!*** - பெருமிதத்தால் உயர்ந்து நின்று, நின் நெஞ்சத்தைத் தேற்றிக் கொள்வாயாக. 'இளங்கிளர் உணர்வின் ஏந்தலன் தாயே, தேறுக நெஞ்சம் வீறுகொள நின்றே' என்று கொண்டு கூட்டுக. நின் மகன், பிறர்போல், இயற்கையான் வரும் பொதுவான இறப்பால் நின்னைப் பிரிந்து சென்று விடவில்லை. செம்மாப்புற்ற ஒரு கொள்கை நோக்கி அதனைச் செயற்படுத்தும் பொருட்டாக உயிர் துறந்தனன். எனவே நீயும் 'எல்லாரையும் போல் அவன் இறப்புக்காக வருந்த வேண்டுவதில்லை. அவன் பெற்ற பெருமையை எண்ணி, நின் அழுங்கல் நெஞ்சத்தைத் தேற்றிக் கொள்வாயாக என்று தெருட்டியதாகும்.

***ஈற்றுப் ... இசையே!*** - அழிவால் முடிவுறாத சிறந்த தன்மையுடையதாய், இவ்வுலக இறுதிவரை விளங்கி நிற்பதாகும் நின் மகனுடைய புகழ்.

என்னை; மொழிக்கு உறுதி சேர்க்கும் முயற்சியில் ஈடுபட்டோனது மொய்ம்புகழ் அம் மொழி யுள்ளளவும் நின்று நிலைபெறுவ தாகுமன்றோ! ஆகவே, தமிழ்மொழி இவ்வுலகுள்ளளவும் நிலைபெறுவது போல், அவன் புகழும் நின்று நிலை பெறும் என்க.

***மூத்தோர்*** - அறிவின் முதிர்ந்த தொன்மையோர்; சான்றோர்.

***மரபின் யாத்த முத்தமிழ்*** - வழி வழி முறைமையால் நிலை பெறுவித்த மூவியல் தமிழ். யாத்தல்- நிலை பெறுவித்தல்; கட்டு வித்தல். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்துறுப்பிலக்கண வகையால் கட்டுக் கோப்பு செய்விக்கப் பெற்ற, இயல், இசை, நாடகமெனும் மூவியல்பானாகிய தமிழ் மொழி!

என்னை; முதலொலி எழுத்துகள் இன்னின்ன வென்றும், அவை தழுவி வரும் மூலச் சொற் கூறுகள் இவை யிவை என்றும், அவற்றான் புறப்பாடுறுவனவும், புலப்பாடுறுவனவும் ஆகிய பொருண்மொழிக் கோள்கள் இவை யிவை யென்றும், சொல்லும் பொருளும் நிரலுற நிறுத்தி, உளமும் உறனும் துலக்குறக் காட்டி, அழகும் பழகும் உணர்வொடு புணர, காலமும் இடமும் கடந்து நிலை பெறூஉம், சிறந்தோர் நெய்யும் செய்யுள் அமைப்புகள் இவையிவை யென்றும், அவை ஏய்ந்து வரும் சொல்லும் பொருளும் மிளிரத் தோன்றி, மணிவகை போலும் மல்கி நின்ற, அணி

வகை ஆவன இவையிவை யென்றும், தேட்டமிலார்க்குத் தெளிவுறுமாறு காட்டி நின்ற ஐந்துறுப்பிலக்கணம் என்க. என்றதன்பின் , நின்று நிலவிய அன்றைய நற்றமிழ், இயல்பின் இயங்கும் உரைபெறு கட்டுரை, மயல் தவிர் பொருளொடு மல்கிய *இயலும்;* ஒலியொடு வெழுத்தும், எழுத்தொடு சொல்லும், சொல்லொடு பொருளும், பொருளொடு பண்ணும், பண்ணொடு தாளமும், தாளத்தோடு இசையும் ஆலத்தோன்றி, கிளப்போரையும் கேட்போரையும் உளத்தாலும் உவகை முதலிய உணர்வுகளாலும் பிணிப்பிக்கும் *இசையும்,* இவ்விசையும் இயலும் அசைவுறாநின்று, உடலோடிய உணர்வையும், உணர்வோடிய சுவைகளையும் ஒரு நன்னெறிக்கண் கட்டி நிறுத்தி, உளத்தையும் உரனையும் வளத்தகப் படுத்தும் நாடகமென்னும் பூடக அமைப்பும், கொண்டு தழுவித் தொன்று தொட்டு, காலத்துக் காலத்து, இடத்து இடத்து, சழக்கு நிலைமிக்கு வழக்குத் திரியினும் புழக்கு தமிழ் தோற்றத்துப் பொலிவுற நிற்கும் மூவா இளமை முத்தமிழ் என்க.

*காத்தோர் நிரலின்* - இத்தகு பெருமை பெறுமாறு நின்ற தமிழை, நினைவு, மொழி, மெய் என்னும் மூவுரத்தானும் காத்தல் வினையாற்றுவோர் வரிசையின்.

*தலைநின்றனனே* - முதலிடத்து வைத்து எண்ணப் பெறுமாறு இருந்தனன்.

*மொய்ம்பொடு* - நிறைந்த வலிமையொடு.

*முதலா வம்மென் நோக்கின்* - தன்னைச் சார்ந்த அனைத்து மாணவரினும் முதலாமவனாக வருக என்னும் நோக்கத்துடன்

*ஐயற்றுறந்த செல்வத் தனிமகன்* - தந்தையைத் துறந்த உடன் பிறப்பற்ற ஒரு தனிமகனை.

*கல்விக் கழகத்துச் சேர்த்தினை அம்ம* - கல்வி பயிலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கொண்டு சேர்த்தினை.

*வெய்குழல் எஃகம் உமிழ்ந்து* - வெம்மையான வேட்டெஃகத் தினின்று உமிழப் பெற்ற குண்டினால்.

*உயிர்கழன்ற மெய்யோன்* - உயிர் நீங்கப்பெற்ற உடலையுடையவன்.

*தமிழ்ச்சீர் மீமிசை நிறுத்தி* - தமிழ் மொழியின் பெருமையை மிக உயரத்தில் கொண்டு சேர்த்தி -மேலும் பெருமைப் படுத்தி.

என்னை, தமிழ் மொழி வழங்கும் நிலத்தில், வேற்று மொழியாகிய இந்தி மொழி ஆளுமைக்கு வருவதைத் தடுத்து நிறுத்தும் நோக்கத்துடன் போராடி, அப்போராட்டத்தில் தன்னைக் காவாகத் தந்து, அப் பிறமொழி ஆளுமை முயற்சியை முறியடித்து, அதனால் தமிழுக்குத் தேடிய பெருமை. அஃது இழிவை எதிர்த்துப் பெற்றதாகலின் முன்னின்ற பெருமையினும் மிகுந்த பெருமை என்க.

*அறப்பூண் விளங்கிய ஆகம் பனிப்ப* - வாழ்வறத்தின் சிறப்பால் விளங்கி நின்ற பெருமிதம் தாங்கிய மார்பகம், விடுகின்ற கண்ணீரால் நனைந்து குளிர.

*மறப்பூண் ..... குளிர* - மறவுணர்வுக்கே சிறப்புத்தோன்றுமாறு நின்ற மகனைப் பெற்றெடுத்த வயிறு, அவனீட்டிய புகழால் குளிர்ச்சி பெறுமாறு.

*ஆய்நினக் குரியன்* - தாயாகிய உனக்கென உரியவன்.

*அனைவர்க்கு மாகிய* - அனைத்துத் தமிழர்க்கும், அவர் மொழியைக் காத்ததால், கொண்டாடுதற்கு உரியவன் ஆகிய.

*இளங்கிளர் உணர்வின் ஏந்தலன்* - இளமை கிளர்ந்தெழும் உணர்வினால் சிறந்தோன்.

*உளங்கிளர் மாக்கதை உள்ளி* - உளத்தைக் கிளர்ச்சியுறச் செய்யும் அவனுடைய பெருமை மிகு கதையை எண்ணி.

*தாயே!* - தாயாகிய நீயே.

'இளமை கிளர்ந்தெழுகின்ற உணர்வுடைய ஏந்தலன் தாயே! தந்தையற்ற நின் ஒரு தனி மகனை, அவனையொத்த மாணவர்களுள் கல்வியான் முதலிடத்தே வருமாறு கலைக்கழகத்துள் சேர்த்தினை. அவன் தமிழ் காக்கும் போராட்டத்துள் தலைநின்று, வேட்டெஃகத்தால் சுடப்பெற்றுத் தமிழ் மொழியின் பெருமையை உயர்த்தி, நின் மனம் வருந்தும்படியும், நின் வயிறு குளிரும்படியும் வீரனாகி உயிர் துறந்தான். அவ்வழி, நினக்கு மட்டுமே உரியவனாகியிருந்த அவன் தமிழர் அன்னவர்க்கும் உரியவனாகிப் பெருமை பெற்றான். உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்யும் இப்பெருமையுடைய அவன் வீர வரலாற்றை நினைந்து, வெற்றியுணர்வால் பெருமிதம் கொள்ளும்படி, அவன் மறைவால் துயருறும் நின் நெஞ்சத்தைத் தேற்றிக் கொள்வாயாக!' என்று, தமிழ்க்கென உயிர் செகுத்தோனது தாயைத் தெருட்டிக் கூறியதாகும் இப்பாடல்.

இது, *செந்தமிழ்த் தும்பை* என்திணை *மாணவவென்றி* என் துறையுமாகும்.

திணை, புனைந்த புதியது. என்னை, மாணவனாகி, நிறை பருவத்தேயே, வீரனாகிப் புகழ் வென்றானைப் பாடியதாகலின் 'மாணவவென்றி ஆயிற்று என்க.



## 53 மறல்கொடு நெஞ்சின் மாமகன்

ஆற்றிலம் என்றே அழுங்கினர் சான்றோர்!
நோற்றிலம் என்றே நொந்தனர் முதியோர்!
பெற்றிலம் என்றே ஆடவர் புலம்பினர்!
தாயர் ஆகிலம் என்றனர் தாயர்!
உடப்பிறந் திலமே என்மார் இளையோர்!
படற்கிலம் நோக்கெனப் பாவையர் கலங்கினர்!
முந்தினம் அலமென நைந்தனர் உழையோர்!
பிந்தினம் அலமெனக் காவலர் பிதற்றினர்!
முதிராச் சிறுமொழி முனிந்து முத்தமிழ்க்
கதிரெரி எஃகம் அணிமுன் னின்று
மறல்கொடு நெஞ்சின் மாமகன்
விறல்பெறத் தாங்கி வீழ்ந்த ஞான்றே!

**பொழிப்பு :**

(இத்தகு வீறு பொருந்திய மறச்செயலை நாம் நம் வாணாளில்) ஆற்றிலமே என்று உள்ளம் வருந்தினர் நன்று எண்ணி நல்லனவே செய்யும் அறிஞர்; (இது போலும் வீரனை நாம் மகனாகப் பெறுதற்கு நாம் நோன்பு) நோற்ற திலமே என்று எண்ணி நோகலுற்றனர், முதியவர்கள் ; (இவனனைய ஓர் ஆண்மகனை யாம் பெற்றிருக்கவில்லையே என்று) ஆடவர்கள் வாயரற்றிப் புலம்பினர்; (இவனனைய ஒரு மறவனுக்கு) நாம் தாயராக வில்லையே என்று கூறினர், தாய்மார் பலர்; (இவன் போலும் ஒருவனொடும்) நாம் ஒரு வயிற்றில் பிறக்கவில்லையே என்று இளைஞர்கள் உரைத்தனர் : (இவனைப் போலும் ஒருவனின்) கண்களில் நாம் படவும் காதலுறவும் வாய்ப்பிலையே என்று இளநங்கையர் மனம் வருந்தினர்; (இவன் செய்தது போலும் ஒரு மறச் செயலைச் செய்தற்கு நாம்) முந்திக் கொண்டோம் இலமே என்று இவன் நண்பர்கள் உள்ளம் துயருற்றனர் ; (ஐயகோ, நம் வேட்டெஃகத்தால் வெடியுண்டு இவன் மாய்ந்திடாதவாறு) நாம் நம் செயலில் சிறிது பிந்திக் கொண்டோம் இலையே என்று ( இவனைச் சுட்ட) காவலர் மாறுமொழி கூறி வாய் பிதற்றினர்; அண்மையில் தோன்றி, இலக்கண இலக்கியங்களால் முற்றி முதிர்ச்சியுறாத சிறுமை மொழியாகிய இந்தியை- அதன் திணிப்பைப் -பொறுத்துக் கொள்ளாமல், சினங்கொண்டு, முத்தமிழ் நலனுக்காக, தீக்கதிர்களை உமிழ்கின்ற வேட்டெஃகம்(துமுக்கிகள்) சூழ வைத்த காவலர்களின் முன்னர் அஞ்சாமல் எதிரேறி நின்று;

வீரங்கொண்ட நெஞ்சையுடைய பெருமகனாகிய அரசேந்திரன் என்னும் மாணவன் தான் கொண்ட கொள்கை வெற்றி பெறும்படி, தன்மேல் வந்து தாக்கிய எஃகுக் குண்டுகளைத் தாங்கி, அதனால் உயிர் பிரிந்து வீழ்ந்த அந்த பொழுதிலே!

**விரிப்பு:**

இப் பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

முதிராச் சிறுமொழி இந்தி முனிந்து, முத்தமிழ் காக்க முன்னின்று, வேட்டெஃகம் தாக்கி வீழ்ந்த, அண்ணாமலைப் பல்கலைக் கழக அரசேந்திரனைப் பாடியது, இது.

இந்தியெதிர்ப்பில் உயிர் நீத்த அரசேந்திரனையும் அவன் வீரச் செயலையும், கேட்டபொழுது, சான்றோரும், முதியோரும், ஆடவரும், அன்னையரும், இளையோரும், பாவையரும், உழையோரும், காவலரும் அழுங்கலாகவும், ஆற்றிலராகவும், இரங்கலாகவும் என்னென்ன கூறி வருந்தினர் என்பதை இப்பாடல் தெரிவிக்கின்றது.

'இத்தகு வீறுமிக்க ஒரு வீரம் பொருந்திய செயலை நாம் நம் வாழ்நாட்கண் செய்ததில்லையே' என்று சான்றோர் ஆற்றாமையால் வருந்தினர்.

முதியவர்கள் 'இத்தகைய வீரன் ஒருவனை நாம் மகனாகப் பெறுதற்குத் தவம் செய்ய வில்லையே' என்று மனம் நொந்து கூறினர்.

'இவன் போலும் ஓர் ஆண்மகனை- நாம் பெறாமற் போனோமே என்று ஆடவர்கள் புலம்பிக் கொண்டனர்.

'இத்தகைய வீரன் ஒருவனுக்கு நாம் தாயாக வில்லையே' என்று அன்னைமார் மனம் வருந்தினர்.

'இன்னவன் ஒருவனுடன் நாம் உடன் பிறந்திலமே' என்று இளைஞர்கள் வருந்தினர்.

'இவனைக் காதல் செய்யும் வாய்ப்பு நமக்கு கிட்டிலையே ; என்று கன்னிப் பெண்கள் கலங்கினர்.

'இவனுடன் தோழர்களாக நாம் இருந்தும், இவ்வீரச்செயலுக்கு நாம் முந்திக்கொள்ளவில்லையே' என்று அவன் தோழன்மார் நெஞ்சம் நைந்தனர்.

'ஐயகோ, இத்தகு ஒரு மறவனை நாம் கொன்றுவிட்டோமே ! நாம் சற்றுப் பிந்தி வந்திராமற் போனோமே! அக்கால் இவன் அடிபட்டுச் சாகாமல் இருக்க வாய்ப்பேற்பட்டிருக்குமே ! என்று காவலர்களும் பலவாறு பித்துப் பிடித்தவர் போலும் வாயரற்றிக் கொண்டனர்.

- இவ்வாறு பலரும், அவ் வீரமகனாகிய அரசேந்திரன், இந்தி மொழிப் போரில் குண்டடிபட்டு உயிர் துறந்தபொழுது, பலவாறாக எண்ணி, உரைத்துத் தம் வருத்தத்தைத் தீர்த்துக் கொண்டனர் என்றவாறு என்க.

*ஆற்றிலம்* - ஆற்றி இலம் என்னும் சொற்கள் புணர்ச்சியில் இடைக் குறைந்து நின்றன. ஆற்றுதல் நன்றாற்றுதல் - நல்லது செய்தல்.

*அழுங்கினர்* - வருந்தினர், நெஞ்சுள் வருந்துதல்.

*சான்றோர்* - சான்றாகி நிற்பவர். பிறர்க்கு எடுத்துக்காட்டாகி நிற்கும் பெருந்தகையாளர்.

*நோற்றிலம்* - நோற்று இலம்- நோன்பு செய்திலம். முதியோர் நொந்தனர் என்றிருத்தலின், முதுமையில் கடந்த காலத்திற்கு வருந்துதல் என்க.

*பெற்றிலம்* - பெற்று இலம்- பெற்றிருத்தல் இல்லேம்.

பெறற்குக் காரணமாயினர் அவராகலின் ஆடவர் புலம்பினர் ஆயினர்.

*தாயர் ஆகிலம்...தாயர்* : வெறுமனே தாயர் ஆகிலம் எனின், தாய்ப்பேறே வாயாதவர் என்றாகுமாகலின், அஃதில்லாமை குறிக்கத் தாயர் என்று தம் பேறு குறித்தனர் என்க.

*உடப் பிறந்திலம்* - உடன் பிறந்திலம் என்பன வலித்துப் புணர்ந்தன.

*படற்கிலம் நோக்கு* - நோக்கில் படுதற்கு இலம்.

*கலங்குதல்* - மனமும் கண்ணும் ஒருசேரக் கலங்கி வருந்துதல்.

*உழையோர்* - பாங்குளார். நண்பர்.

*பிந்தினம்...பிதற்றினர்* - பிந்தினோம் அல்லம் எனல் நிகழ்ச்சி நடந்த பின்னைக் கூறுதலாகலின் பிதற்றுதல் ஆனது.

*முதிராச் சிறுமொழி* - வளர்ச்சியுறாத சிறிய பயன்தரும் இந்தி மொழி.

*முனிந்து* - அதன் புகுதலைக் கடிந்து வெறுத்து.

*முத்தமிழ்க்கு அதிர் எரி எஃகம் அணிமுன் நின்று* - முத்தமிழ் காத்தலின் பொருட்டு, அதிர்கின்ற ஒலியுடன் எரியுமிழ்கின்ற வேட்டுக் குழல் தாங்கிய அணியினர் முன்னே துணிந்து நின்று.

*மறல் கொடு நெஞ்சின் மாமகன்* - வீரம் கொண்ட நெஞ்சுடைய பெருமை மிக்கவன்.

*விறல்பெறத் தாங்கி* - வெற்றி பெறும்படி நெஞ்சில் ஏற்று.

*வீழ்ந்த ஞான்று* - உயிர் கழன்று விழுந்த பொழுது.

இப்பாடல், 1965-இல் தமிழகத்தில் நடந்த இந்திமொழித் திணிப்பை எதிர்த்தெழுந்த போரில், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அரசேந்திரன் என்னும் மாணவன் காவல் சூட்டைத் தாங்கி மடிந்தபொழுது, அவன் வீரப் பிறப்பைப் பலரும் பாராட்டியுரைத்ததைக் கேட்டுப் பாடியது.

இது, *செந்தமிழ்த் தும்பை* என் திணையும், *மொழி மறம்* என் துறையும் என்க. திணையும் துறையும் புதியன.

# 54 கோணை அரசியல்

கவுள்நனை வேழம் கணைபட் டாங்கு
செயிர்வுமே லோங்கிய கல்விச் செவ்வியர்
ஒருதலை மாமணி உகுத்தோன் பெயர்ந்த
மனைமுகத் தவன்றனி ஈட்டங் குவித்து
முழங்கு விறற்பறை முருக மூட்டும்
அழற்போல் வெவ்வெரி அடரக் கொளுத்திய
காட்சி கண்டோர் தமிழ்கண் டோரே
பூட்கை அறிந்தோர் தமிழறிந் தோரே!
பொன்றிய தமிழ்ச்சீர் புதுக்கி மலர்த்தும்
மாணவர் அறவினை மகிழார்
கோணை அரசியல் கொள்கையி னோரே!

**பொழிப்பு :**

கசிகின்ற மதநீரால் கதுப்பு (கன்னம்) நனையப் பெற்ற ஆண் யானை, எய்த அம்பினாலும் குத்துப்பட்ட விடத்து, அடங்காச் சினம் மேலெழும் தன்மையில் (அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்) கல்வி பயில வந்த மாணாக்கர்கள், தங்களுள் ஒருவனாகிய தலைமைத்திறம் பொருந்திய சிறந்த ஒளி மணி போன்ற வீரன் அரசேந்திரனைச் சுட்டு வீழ்த்தச் செய்தோனாகிய கழகப் பதிவாளன், (முன்னரே அஞ்சித் தன் வாழிடமாகிய மனையைத் துறந்து) புறம் போகிய பின்னை, அம் மனையின் முன்றிலில், (அவன் உள்ளே விட்டுச் சென்ற மனைப்பொருள்களாகிய) சிறப்புடைய ஈட்டங்களை (கதவை உள்ளே சென்று, கொண்டு வந்து போட்டுக்) குவித்து, தொடர்ந்து முழங்குகின்ற வெற்றி முரசம், (ஈரத்தால் தளர்வுற்று முழக்கொலிகுறைய, அதனை மீண்டும் விறைப்பேற்றுதற் பொருட்டுத் தீக் கொளுவிக் காட்டி) முருகுவிக்க மூட்டுகின்ற தழல் போல் வெம்மை மிகுந்த எரியினை அடர்ந்து எரியும்படி கொளுத்தி மூட்டிய அக் காட்சியைக் கண்டவர்கள்தாம், (அவர்கள் சினந்து போராடுவதற்குக் காரணமாக விருந்த தமிழ் மொழியின் சிறப்பினை, அவ்வுணர்வின் வழி) உண்மையில் கண்டவர்கள் ஆவார்கள்; அவர்களின் உறுதிப்பாட்டை (இவ் வகையான செயல் வழி நேரில் கண்டு) அறிந்தவர்கள் தாம், (அவர்களின் எழுச்சிக்கு அடிப்படையாக விருந்த) தமிழ் மொழியின் சிறப்பினை உண்மையிலேயே அறிந்தவர்கள் ஆவார்கள்.

குறைந்து விட்ட தமிழ் மொழியின் சிறப்பியல்களை மீண்டும் புதுமை செய்து மலர்ச்சியுறச் செய்யும் மாணவர்களின், இவ்வலிந்த முயற்சி (அழிவின் பாற் பட்டதன்று); அறத்தின் பாற் பட்ட செயலே என்று கருதி மகிழாதவர்கள் (எவரேனும் இருப்பின் அவர்கள்) கொடுமையான வல்லதிகார அரசியல் கொள்கை உடையவர்களாகவே இருத்தல் வேண்டும்.

**விரிப்பு :**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்த்திறங் காக்க வெழுந்த மாணவருள் அரசேந்திரனைக் கொல்லுவித்த கழகப் பதிவாளர்தம் உடைமையைத் தீக்கொளுவியழித்த மாணவர் தந்திறம் வியந்து பாடியது இது.

அரசேந்திரன், குண்டடிபட்டு மாய்ந்தான் என்ற செய்தி கேட்டதும், மாணவர்கள் , இதற்கெல்லாம் அடிப்படை, பல்கலைக் கழக வளாகத்திற்குள் காவலர்களை வரவிட்ட பதிவாளரின் செயலன்றோ என்று எண்ணி, வெகுண்டெழுந்து, அவர் வீடு சென்றனர். செல்லவும், கழகப் பதிவாளர் அதன் முன்பே, தம் வீட்டைப் பூட்டிவிட்டுக் குடும்பத்துடன் வெளியேறியிருந்ததைக் கண்டனர். காணவும், மீண்டும் கொதிப்பு மேலிட்டவராய் அவர் வீட்டை உடைத்து, உள்ளே இருந்த அவரின் உடைமைகளையெல்லாம் வெளியே எடுத்துக் கொண்டு வந்து போட்டுக் குவித்துத் தீ வைத்துக் கொளுத்திச் சாம்பலாக்கினர். இந்த நிகழ்ச்சியை நேரில் பார்த்தவர்கள், அம் மாணவர்களின் எழுச்சிக்குத் தமிழ் அன்றோ காரணம் என வியந்தனர். அந்த நிலையை நேரில் கண்டு வியந்து எழுதியதாகும் இப்பாடல்.

***கவுள்*** - யானையின் கதுப்பு, -கன்னம்

***நனைவேழம்*** - மத நீரால் நனைக்கப்பட்ட ஆண்யானை.

***கணை பட்டாங்கு*** - ஏற்கனவே மதம் பிடித்துள்ள ஆண் யானையின் மேல், அம்பு தைத்தது போல்.

***செயிர்வு*** - கடுஞ்சினம்.

***கல்விச் செவ்வியர்*** – கல்வி பயிலும் மாணாக்கர்கள். மாண்பு என்னுஞ் சொல்லின் அடிப்படையாகத் தோன்றிய மாணாக்கர் என்னுஞ் சொல்லுக்கு இணையான புதுச்சொல், செவ்வியர்.

***ஒரு தலை மா மணி*** - மாணவர்களுள் தலை சிறந்த வீரனாகிய அரசேந்திரன்.

***உகுத்தோன்*** – உயிரை உகுக்கச் செய்தோனாகிய பதிவாளன்.

*பெயர்த்த* - வெளியேறிப் புறம்போகிய. எவர்க்கும் தெரிவியாது சென்றமை பெயர்தல் எனலாயிற்று.

*மனைமுகத்து....குவித்து* பதிவாளனின் மனையின் முன்றிலில் அவனது தனி ஈட்டமாகிய மனையடை பொருள்களைக் கொண்டு வந்து குவித்து, தனியீட்டம் என்றது அவன் அல்வழியில் தொகுத்த குறிப்பாயிற்று.

*குவித்து* - ஒன்றெனக் கூட்டி.

*முழங்கு விறல் பறை* - வெற்றிப் பண் முழங்கித் தொய்ந்த பறைத் தோல்.

*முருக மூட்டும் அழல் போல்* - பறைத் தோலின் தொய்வு நீங்கிச் சூடேறி விறைப்புறுதற்கு மூட்டுகின்ற எரி நெருப்புப் போல்.

*வெவ்வெரி அடர* - வெப்பமான தீ நாக்குகள் நெருங்கி எரிய.

*காட்சி கண்டோர்* - அக்காட்சியினை நேரில் கண்டவர்களே;

*தமிழ் கண்டோரே* - உண்மையில் தமிழ் மொழியின் ஆற்றலைக் கண்டவர்கள் ஆவார்கள்.

மாணவர்கள் பதிவாளனின் உடைமைகளை அவர் வீட்டினின்று வெளியே எடுத்துக் கொண்டுவந்து போட்டுக் குவித்துத் தீமூட்டி எரித்தது, அவர்கள் தமிழ் மொழியை இந்தி நுழைப்பினின்று காக்க வெழுந்த எழுச்சியினால் ஆதலின், அவ்வெழுச்சிக்குக் காரணமாகிய தமிழ் மொழியின் உணர்வாற்றாலே மாணவர்களின் உள்ளூர நின்றது, என்றது.

*பூட்கை* - கொள்கை உறுதி.

*பூட்கை ... தமிழறிந்தோரே!* - மாணவர்களின் கொள்கை உறுதியை நேரில் அறிந்தவர்கள்தாம். (அதற்குக் காரணமாகிய தமிழ் மொழியின் சிறப்பியல்கள் இவ்வளவு உறுதியைத் தர வல்லனவா என்று எண்ணித்) தமிழை உண்மையில் அறிந்தவர்கள் ஆவார்கள்.

*பொன்றிய* - குறைந்த, மறைந்த.

*தமிழ்ச்சீர்* - தமிழ் மொழியினது பழைமை, புதுமை, முதுமை, இளமை, தனிமை, இனிமை, திண்மை, நுண்மை, புகன்மை, (புகலுந் தன்மை), அகன்மை (விரிந்த தன்மை) உண்மை,எண்மை(எளிமை), நயன்மை (விரும்புந் தன்மை), இயன்மை, (இயற்கைத் தன்மை), தாய்மை, தூய்மை, வியன்மை, பயன்மை, (பயன்படும் தன்மை), எழின்மை, பொழின்மை (பொருள் தரும் தன்மை), இழுமை(இளகல் தன்மை), முழுமை (நிறைந்த தன்மை), செம்மை, மும்மை (இயல், இசை, நாடகம் எனும் மூன்றியல் தன்மை), சீர்மை, ஓர்மை (ஓரியல் தன்மை- ஒருமைத் தன்மை) ஆகிய இருபத்து ஆறு சிறப்பியல்களை).

*புதுக்கி* - (இவ்வாறு தமிழ் மொழியின் சீர்மைகள் பலவாக இருப்பினும், அவை நலிந்தும் மெலிந்தும், திரிந்தும் திசைந்தும், மறைந்தும் குறைந்தும்,

மறந்தும் இறந்தும் காணப்படும் தன்மைகளைச் சரி செய்து அவற்றைத் தற்கால அறிவியல் வளர்ச்சிக் கேற்பப்) புதுமை செய்து,

*மலர்த்தும்* - அதனை எதிர்கால நிலைப்பாட்டுக்கு உரிய வகையில் விரிவும் மலர்ச்சியும் உறும்படி செய்கின்ற.

*மாணவர் அறவினை* - (மாணவர்தம் எழுச்சியை வன்முறை என்று இகழாமல், புதியதோர் உலகு செய்யும் புரட்சிப் பணியாகிய) கூர்தலற மேம்பாட்டு உழைப்பு என்று கருதி.

*மகிழார்* - இவ்வாறு ஓர் எழுச்சி வந்ததே என்று எண்ணி மகிழ மாட்டாதவர்கள்.

*கோணை அரசியல்* - நேரல்லாமல் வளைந்த கொள்கைகளையும் நடைமுறைகளையும் கடைப்பிடித்து நடத்தப் பெறும் இக்கால வல்லாண்மை அரசியல் தன்மையின்,

*கொள்கையினோரே* - கொள்கையைக் கொண்டவர்களே!

இப்பாடலின் வரலாற்று நிகழ்வினை முன்னைய மூன்றுபாடல் களானும் உரைகளானும் கண்டு கொள்க.

மாணவர்களின் எழுச்சி அறமுடைய செயலன்று என்று மனமும், முகமும் சுளுக்குவார், கைதேர்ந்த அரசியல் கரவுடையவர்களே அன்றி, உண்மையின் தமிழ் மொழியின் சிறப்பியல்களை அறிந்தாரல்லர் என்று தெளிப்பான் வேண்டி உரைத்தது என்க.

இப்பாடல் முன்னது திணையும், *முதுமொழிபேணல்* என்துறையும் என்க.

திணையும் துறையும் புதியன.



## 55 கல்லாப் புலைமொழி

அண்ணா மலைசெய் பல்கலைக் கழகத்து
உண்ணில் போக்கிய இளையோர் அண்மி
தெருவலம் வந்து சூளுரை முழக்கி
ஒள்ளிய கொள்கை சுவர்தொறும் வரைந்து
மைநிற நெடுங்கொடி பன்மனை தூக்கி
நெடுந்தொடர் வண்டித் தடம்படுத் திருந்து
கல்லாப் புலைமொழி கற்கெனத் தூண்டிய
ஒல்லாப் பேதையர் அரசு கடிந்து
காவல் மாடத்து ஏவல் பணிந்து
வல்சிறை போகி மெய்யடி பட்டு
நெருப்புரை யாற்றி உறுப்பறை போகிய
தடந்தோள் மாணவர்க் குள்ளுயிர் கீண்ட
தாழா நல்லிசைத் தமிழே
வாழிய நெடுநீர் வையநாள் வரையே!

பொழிப்பு :

அண்ணாமலையார் உருவாக்கிய பல்கலைக்கழகத்தின் (உணவு விடுதியிலிருந்து ஏற்பட்ட கலவரத்தின் பொருட்டாய்) வெளியேற்றப்பட்ட இளைஞர்கள் யாவரும் ஒன்று கூடித் தெருத் தெருவாய் ஊர்வலம் வந்தும், (இந்தியை நுழைய விடமாட்டோம் எனப் பலவாகிய) உறுதி உரைகளை முழக்கியும், தெளிவான அறிவு சான்ற கொள்கை மொழிகளை ஆங்காங்குள்ள சுவர்கள்தோறும் வரைந்தும், நீண்ட கறுப்பு நிறக் கொடிகளைப் பல வீடுகளில் ஏற்றி நிறுத்தியும், நெடிய தொடர்வண்டித் தடங்களில் படுத்து, வண்டிகளைத் தடுத்தும், கல்விச் சிறப்பில்லாத புல்லிய மொழியாகிய இந்தியைக் கற்றுக் கொள்ளத் தூண்டிய, அதைத் தடுத்து நிறுத்தவியலாத பேதைமை சான்றவரின் அரசமைப்பைக் கடிந்தும், காவல் நிலையங்களில் உள்ள காவலர்களின் கட்டளைப்படி பணிந்தும், சிறைப்பட்டும், உடல் வருந்த அடிபட்டும், நெருப்புப் போலும் கொதிப்பான உரைகளைக் கூறியும், உடல் உறுப்புகள் தாக்கப்பட்டதால் ஊறுபட்டும், நின்ற பருத்த தோள்களை உடைய மாணவர்களுக்கு, அத்தகைய வீர உணர்வு பெறுமாறு உள்ளுயிரைக் கிளர்ச்சியுறச் செய்த, தாழ்ச்சியுறாத

நல்ல புகழை உடைய தமிழ்மொழியே, நீ வையமானது இருக்கின்ற நாள்வரை இருந்து வாழ்வாயாக!

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

கல்லாப் புலைமொழி இந்தியை எதிர்த்து நின்ற செல்லா நல்லிசை மாணவர் தமக்கு உள்ளுணர்வு கீண்டிய தமிழை வாழ்த்திப் பாடியது இது.

"இந்தி நுழைப்பால், தமிழ் உணர்வு கொளுத்தப்பெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து மாணவர்கள், கலவரத்தின் காரணமாக உணவு விடுதிகளிலிருந்து வெளியேற்றப்பட்ட பின்னை, அவர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஆங்கிருந்து தெருத் தெருவாய் இந்தியை எதிர்த்து முழக்கமிட்டுக் கொண்டு ஊர்வலம் சென்றும், இந்தியை எதிர்க்கின்ற கொள்கை வரிகளை ஆங்காங்குள்ள சுவர்கள் தொறும் எழுதியும், நீண்ட கறுப்புக் கொடிகளைப் பல வீடுகளில் ஏற்றியும், தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்க வேண்டி, ஆங்குள்ள நீண்ட தொடர்வண்டிகளைத் தடுத்து நிறுத்தியும், கல்விச் சிறப்பில்லாத புல்லிய இந்திமொழியைக் கற்கத் தூண்டிய அறிவற்ற அரசு ஆளுமையைக் கடிந்தும், அவற்றால் காவலர்களின் பிடிக்குள்ளாகிச் சிறைப்பட்டும், அவர்களால் உடல் உறுப்புகள் ஊறுபடுமாறு அடிபட்டும், அக்காலும் அடங்காமல், நெருப்புப் போலும் சுடுகின்ற சொலவகங்களைக் கூறியும் நின்ற, பருத்த தோள்களை உடைய மாணவர்களுக்கு, அவர்கள் அத்துணை வீர உணர்வு பெறுமாறு, அவர்களின் உள்ளுயிரைக் கிளர்ச்சியுறத் தூண்டிய, தாழ்ச்சியுறாத நல்ல புகழையுடைய தமிழ் மொழியே, நீ, உலகம் உள்ளளவும் நின்று வாழ்வாயாக" என வாழ்த்தியதாகும் இப்பாடல்.

*அண்ணாமலை செய் பல்கலைக் கழகத்து* – கல்வி வள்ளல் அண்ணா மலையால் கட்டுவிக்கப் பெற்ற பல்கலைக் கழகத்தின்.

*உண்ணில் போக்கிய* – உண்ணுகின்ற இல்லமாகிய உணவு விடுதிகளிலிருந்து வெளியேற்றப்பட்ட.

*இளையோர்* – இளைமை பொருந்திய மாணவர்கள்.

*அண்மி* – ஒன்றுகூடி.

*தெருவலம் வந்து* – தெருக்கள் தோறும் ஊர்வலம் வந்து.

*சூளுரை முழக்கி* – கொள்கை உறுதிகளை உரக்க ஒலித்து.

*ஒள்ளிய கொள்கை* - தெளிந்த அறிவார்ந்த கொள்கை மொழிகளை.

*மைநிற நெடுங்கொடி* – கறுப்பு நிறமுடைய நீண்டகொடி.

*பன்மனை தூக்கி* – பல வீடுகளிலும் தூக்கி நிறுத்தி.

*கல்லாப் புலைமொழி* – கல்விச் சிறப்பில்லாத புன்மை சான்ற மொழி இழிந்த மொழி - இந்திமொழி.

*கற்கெனத்தூண்டிய* – கற்றுக் கொள்ளுங்கள் எனத் தூண்டிய.

*ஒல்லாதப் பேதையர்* – இந்தி நுழைவைத் தடுத்து நிறுத்தவியலாத பேதைமை சான்றவர்.

*அரசு கடிந்து* – அரசைக் கடிந்து.

*காவல் மடம்* – காவல் நிலையம்.

*ஏவல் பணிந்து* – கட்டளைக்குப் பணிந்து.

*வல்சிறை போகி* – வலிந்த சிறைகளுக்குள் அடைக்கப்பட்டு.

*மெய்யடி பட்டு* – உடல் வருந்த அடிபட்டு.

*நெருப்புரை* – கொதிக்கின்ற உணர்வுரை.

*உறுப்பறை போகிய* – உடல் உறுப்புச் சிதைவு ஏற்பட்ட

*உள்ளுயிர் கீண்ட* – உள்ளுயிரில் தோய்ந்திருந்த தமிழுணர்வைக் கிளர்ச்சியுறச் செய்த.

*தாழா நல்லிசைத் தமிழ்* – என்றும் எதிலும் தாழ்ச்சியுறாத சிறந்த புகழ்பெற்ற தமிழ்மொழி.

*நெடுநீர் வையம்* – நீண்ட கடலையுடைய உலகம். வண்டிபோல் சுழன்று ஓடுவதால் உலகை வையம் என்றனர்.

*வையநாள் வரை* – உலகம் நிலைத்திருக்கின்ற நாள் வரைக்கும்.

வட அரசு தென்மாநிலங்களின் மேல் கட்டாயமாகத் திணிக்கின்ற இந்தி என்னும் கல்விச் சிறப்பற்ற புல்லிய மொழியை எதிர்க்கத் திறமையற்ற மாநில அரசு, அதைக் கற்குமாறு மாணவர்களைத் தூண்டியதும், அதால் வெறுப்புற்று மனக் கொதிப்படைந்த மாணவர் பலரும் குறிப்பாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக் கல்வி பயின்ற மாணவர்கள் பலரும், போராட்டம் நிகழ்த்திய முறைமையைக் கூறி, அவ்வுணர்வெழுச்சிக்குக் காரணமாயமைந்த தமிழ் மொழியை வாழ்த்திக் கூறியதாகும் இப்பாடல்.

இப்பாடல் முன்னது திணையும், *முதுமொழி வாழ்த்து* என் துறையும் என்க.

திணையும் துறையும் புதியன.



## 56 கொதிப்புறு நறுநெய்

எவர்கொல் அவர்க்கே முனிவாற் றும்மே!  
அரைசாள் இழிசின் புரைசூழ் நெஞ்சினன்;  
பறைவாய் தெறிக்கும் பத்த வச்சலன்  
பெயரா விருக்கை நினைவிற் றப்பி  
வடவர்ப் பணியும் முடவெள் ளறிவின்  
இட்ட போக்கிற் கிடறாக் காவலர்  
சுட்டுக் கிடத்திய செந்தமிழ்ச் சிறாஅன்  
வளங்கூர் நாவின் இளங்கோ  
மருந்தகத் துளைந்துயிர் துறப்பப் புடைந்து  
கற்பத் தூக்கிய சுவடி வீசி  
வெற்புத்தோளில் விறலேற்றித்  
தெறுவிழியில் தீயேற்றிச்  
செந்நாவிற் செற்றத்தார்  
உண்ணாவி அறக்கழல  
ஒருசூலிற் பன்னூறாப்  
புற்றீயற் புறப்பாட்டின்  
கதிர்கொன்ற களமென்ன  
எதிர்நின்ற மரம்வீழ்த்தி  
ஓச்சுமுகத் தடக்கையின்  
காச்சிதர்க்கும் களிறன்ன  
மலையெரிவாய் பீர்ந்தன்ன  
உலைநெஞ்சின் வெளியேறிப்  
புதுப்புனலின் கதழ்போகிக்  
கொதிப்புறு நறுநெய் யாக  
விதிர்ப்புறப் படைப்புல மெதிர்ந்த ஞான்றே!

பொழிப்பு :

எவர்தாம் அவர்களுக்கு எழுந்து நிற்கும் கடுஞ்சினத்தை ஆற்றக்கூடியவர்; அரசு ஆள்கின்ற இழிமையும் சிறுமையும் கொண்டு, தவறான நடவடிக்கைகளையே ஆராய்கின்ற உள்ளத்தினனும், பறைபோல்

முழங்குகின்ற கட்டளைகளைத் தெறிக்கின்ற வாயினனும் ஆகிய பக்தவச்சலன் என்னும் முதலமைச்சன் , தன் பதவியழுத்தத்தினின்றும் பெயராமல் இருந்த இருக்கையின் நலத்தினால், தன் நினைவில் தவறியும், தனக்கு மேலராகிய வட நாட்டினர்க்குப் பணியும், கோணலான வெள்ளிய அறிவினோடும், தான் இடுகின்ற கட்டளைக்குச் சற்றும் இடராத போக்கினை உடைய காவலர்கள், துமுக்கியால் சுட்டுக்கிடத்திய செந்தமிழ் காக்கும் இளையோனாகிய, வளமையும் கூர்மையும் உடைய நாவினனாகிய இளங்கோ என்னும் மாணவன், மருத்துவமனையின் கண் துன்புற்று உயிர் துறந்தானாக; அதனால் அளாவியெழுந்த மாணவர்கள் தாங்கள் கற்பதற்காகக் கொண்டு சென்ற நூல் சுவடிகளை ஒரு புறத்தே வீசியெறிந்து விட்டுத் தங்களுடைய மலை போலும் தோள்களில் வீரத்தை ஏற்றிக் கொண்டு கனல்கின்ற விழியில் தீயினை ஏற்றிக் கொண்டு, கல்வி பயிலும் செவ்விய நாவில் சினத்தை உடையவராக, உள்ளுயிர் அறவே கழன்று வெளியே கழியுமாறு ஒரு கருப்பப் பேற்றில் பல நூறு ஈசல்கள் புறப்பட்டு வெளியேறுதல் போல், கதிர்களைப் பிடுங்கி யெறிகின்ற நெற்களம் போலும், எதிரே நிற்கின்ற மரங்களையெல்லாம் வீழ்த்தி, ஓச்சியவாறு, முகம் படுத்திய பருத்த கைகளை நீட்டிக் கொண்டு, காட்டை அழிக்கின்ற களிறுகள் போல், எரிமலையின் வாயினின்று சிதறியடிக்கின்ற உலைபோன்ற நெஞ்சுகளை உடையவராகி, (அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்றும்) வெளியேறிப் புதுவெள்ளத்தின் பொங்குகின்ற சினத்தவராகிய போக்குடையவராகிக் கொதிக்கின்ற நல்ல நெய்போல், பிறர்நடுக்கமுற, அக் காவலர் படைகளை எதிர்த்துப் போரிட்ட பொழுதில்!

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

அண்ணாமலை நகரத்துத் தமிழ்காக்கத் துஞ்சிய அரசேந்திரனொடு, குண்டடிபட்டு மருந்தகத்து உயிர்துறந்த இளங்கோவனைப் பாடியது.

'கொதிப்புறு நறுநெய்யாக, விதிர்ப்புறப் படைப்புலம் எதிர்ந்த ஞான்றே, எவர்கொல் அவர்க்கே முனிவாற்றும்மே' -என இறுவாய்த் தொடையாக வைத்துப் பொருள் கொள்ளுக.

அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவன் அரசேந்திரன் காவலர்களின் குண்டடிபட்டு, அவ்விடத்திலேயே மாய்ந்தான் ; அவன் நண்பனாகிய இளங்கோவனோ துமுக்கிச் சூடுபட்டு, மருத்துவமனையில் துன்புறக் கிடந்து இறந்து போனான். அவன் இறந்து போன செய்தியைக் கேள்வியுற்ற மாணவர்கள் கொதிப்புடன் வீறுகொண்டெழுந்து, காவலர் படையுடன் போரிட எதிர்ந்த காட்சியைக் கூறுவதாகும் இப்பாடல்.

காலமும் சூழலும் முன்னைய பாடல்களுள் காட்டப் பெற்றன.

**எவர்கொல் அவர்க்கே முனிவு ஆற்றும்மே** – எவர்தாம் அவர்க் கெழுந்த

சீற்றத்தை ஆற்றக்கூடியவரோ! எவரும் இல்லை என்பதாகப் பொருள் கொள்க.

*அரைசு ஆள்... நெஞ்சினன்* - அரசு ஆளுகின்ற இழிமையும் சிறுமையும் கொண்டு, தவறான நடவடிக்கைகளையே ஆராய்கின்ற உளத்தினன் பக்தவச்சலன் என்னும் முதலமைச்சன்.

*பறைவாய் தெறிக்கும்* - பறைபோலும் முழங்குகின்ற அடக்கமிலாத வாய்.

*பெயரா விருக்கை நினைவில் தப்பி* - தன் பதவியமுத்தத்தின் ஆசையால் அதனின்று அசையாமல் குந்தியிருந்த இருக்கையின் நலத்தினால், தன் நினைவில் தவறியும்.

*வடவர்ப் பணியும் முடவெள்ளறிவின்* - தனக்கு ஆட்சி நிலையில் மேலராகிய வடநாட்டு நடுவணரசினர்க்குப் பணிந்து போகின்ற கோணலான வெள்ளிய புல்லறிவினோடு.

*இட்ட போக்கிற்கு இடராக் காவலர்* - அவன் இடுகின்ற கட்டளைகளுக்குச் சற்றும் மாறாக நடவாத காவல்படையினர்.

*சுட்டுக்கிடத்திய* - துமுக்கியால் சுட்டுக்கிடத்திய.

*செந்தமிழ்ச் சிறாஅன்* - செந்தமிழ்காக்கும் இளையோனாகிய.

*வளங்கூர் நாவின் இளங்கோ* - வளமையும் கூர்மையும் உடைய நாவினான இளங்கோவன் என்னும், மாணவன்.

*மருந்தகத்து உளைந்து உயிர்துறப்ப* - மருத்துவ மனையின்கண் துன்புறக்கிடந்து உயிர் துறந்ததனால்.

*புடைந்து* - அளாவியெழுந்த மாணவர்கள்.

*கற்பத் தூக்கிய சுவடி வீசி* - தாங்கள் கற்பதற்காகத் தூக்கிக் கொண்டு சென்ற நூற்சுவடிகளை ஒருபுறத்தே வீசியெறிந்துவிட்டு.

*வெற்புத் தோளில் விறலேற்றி* - தங்களின் மலைபோலும் தோள்களில் வீரத்தை வருவித்துக் கொண்டு.

*தெறுவிழியில் தீயேற்றி* - கனல்கின்ற விழியில் தீயினை ஏற்றிக் கொண்டு.

*செந்நாவில் செற்றத்தார்* - தங்களுடைய கல்வியிலும் செவ்விய நாவில் சினத்தை உடையவராக.

செவ்விய நாவில் சினத்தை உடையவராக என்றது, கொதிக்கின்ற கடுமையான உரைகளை முழக்குகின்ற தன்மையராக என்றற்கு.

*உண்ணாவி அறக்கழல* - உள் உள்ள உயிர் அறவே கழன்று வெளியேறும்படி, உயிர் போகின்றவாறு முழங்கிச் சென்றார்கள் என்றவாறு.

*ஒருசூலிற் பல்நூறாய்ப் புற்றீயல் புறப்பாட்டின்* – ஒரு முறை சூலுற்று வெளிப்போந்த பலநூறு ஈசல்கள் புறப்பட்டு வெளியேறுதல் போல்.

*கதிர்கொன்ற களமென்ன* – கதிர்களைப் பிடுங்கி எறிகின்ற நெற்களம் போல்.

*எதிர்நின்ற மரம் வீழ்த்தி* - எதிரதாகத் தென்பட்டு நிற்கின்ற மரங்களையெல்லாம் வீழ்த்தியவாறு.

*ஓச்சு முகத் தடக்கையின்* - ஓச்சியவாறு முகத்தின் மேல் வைத்த பருத்த தும்பிக்கைகளை நீட்டிக் கொண்டு.

*காச்சிதர்க்கும் களிறன்ன* – காட்டை அழிக்கின்ற ஆண்யானைகளைப் போல்.

*மலையெரி வாய் பீர்ந்து அன்ன* – எரிமலையின் வாயினின்று பீச்சியடித்துச் சிதறுதல் போன்ற.

*உலை நெஞ்சின்* – கனற்குழம்பின் நெஞ்சுகளை உடையவர்களாகி

*வெளியேறி* – (அண்ணாமலை பல்கலைக் கழகக் கட்டிடத் தினின்றும்) வெளியே போந்து.

*புதுப்புனலின் கனல் போகி* – புது வெள்ளத்தின் பொங்குகின்ற சினத்தவராகிய போக்குடையவராகி ;

*கொதிப்புறு நறுநெய்யாக* - கொதிக்கின்ற நல்ல நெய்யைப் போல்.

*விதிர்ப்புற* – பார்க்கின்ற பிறர் நடுக்கமுற.

*படைப்புலம் எதிர்ந்த ஞான்றே* – அக் காவலர் படைகளை எதிர்த்துப் போரிட்ட பொழுதில்.

இந்தியெதிர்ப்புப் போரில் இளங்கோவன் காவலரின் குண்டடிபட்டு. மருத்துவமனையில் உயிர்துறந்தான் என்று கேள்வியுற்ற அளவில், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துப் பயின்ற அவனின் ஒருசாலை மாணவர்கள், கிளர்ந்தெழுந்து, கொதிப்புற்று, அக் காவலர் படையை எதிர்ந்து போய்ப் போராட்டம் நடத்தியதன் சூழலை விளக்குவதாகும் இப்பாடல்.

இப்பாடல் முன்னது திணையையும் *பயில்வோர் எழுச்சி* என்துறையும் என்க.

திணையும் துறையும் புதியன.



## 57 எம்மாண் மகனே!

இவனியா ரென்குவீ ராயி னிவனே
தாறலை பாகர் தந்துயர் பொறாஅது
ஊறுதக நினைக்கும் உயவல் யானை
கையுகத் தறைந்து கால்தலை நெறிக்கு
மெய்யே போலும் பொய்சேர் கொற்றம்
வழங்குமொழி உலப்ப இலங்கில் வறுமொழி
பாரிப் புடன்று நூறப் புக்க
கொலைகோற் காவலர் குறிகொள் எஃகம்
அதிரப் படர்ந்தா ராக
எதிர்தலைப் பட்ட எம்மாண் மகனே!

**பொழிப்பு:**

இவன் யார் என வினவுவீராயின், இவனே, தம் கைகளில் உள்ள கோட்டியினால், தன்னைத் துன்புறுத்தும் யானைப்பாகரின் துயரத்தைப் பொறுத்துக் கொள்ளாமல் தன்னைத் துன்புறுத்தியவர்க்குத் தானும் துன்பம் செய்ய மிகுதியும் கருதுகின்ற மதங் கொண்ட யானை, தன் தும்பிக்கையை நீட்டி அவரை எடுத்துக் கீழே அறைந்து, தன் காலில் அவர் தலையை நசுக்கிச் சிதைக்கின்ற உண்மையைப் போல, பொய்யே நிறைந்த அரசு, முன் வழக்கில் உள்ள தமிழ்மொழியைக் குழப்புகின்ற நிலையில் சிறப்பில்லாத எளிய மொழியாகிய இந்தி மொழியை வளர்த்துப் பரப்புவதை எதிர்த்துப் போராடி அழித்திட (மாணவர்கள்) முயல, (அவர்களைத் தடுக்குறும் நோக்கத்துடன்) கொலையுறச் செய்யும் கோலைக் கொண்ட காவலர்கள், குறிவைத்தவாறு வேட்டெஃகம் தாங்கி, அஃது அதிரும்படி சுட்டுக்கொண்டே பரந்து வந்தாராக, அவர்கள் முன் எதிர்ந்துபோய் இறந்துபட்ட மாட்சிமை பொருந்திய எம் ஆண்மகனே!

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவன் இளங்கோ மருந்தகத்துத் துஞ்சினானாக, அவனை யாரென விளித்த அயலார்க்கு, அவன் நற்றாய் சொல்லியது.

'இவனியார் என்குவீ ராயி னிவனே-கொலைகோற் காவலர் குறிகொள் எஃகும் அதிரப் படர்ந்தாராக, எதிர்தலைப்பட்ட எம் மாண் மகனே'- என்றும்.

'தாறலைப் பாகர் தந்துயர் பொறாஅது ஊறுதக நினைக்கும் உயவல் யானை, கையுகத் தறைந்து கால்தலை நெறிக்கும் மெய்யே போலும்— நூறப் புக்க'- என்றும்.

கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுக.

இப்பாடல் முன்னைய பாடலின் தொடர்ச்சி.

காலமும் சூழலும் முந்தைய பாடல்களுள் கண்டுகொள்க.

*இவனியார் என்குவீர் ஆயின்:* - (இதோ இங்கு இறந்த கிடக்கும்) இவன் யார் என்று வினவுவீர் ஆயின்.

*தாறு அலை பாகர் தம் துயர் பொறாது* - தாறு (கோட்டி - அங்குசம்) கொண்டு, குத்தித் துன்புறுத்தும் யானைப் பாகரின் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளாமல்.

*ஊறுதக நினைக்கும் உயவல் யானை* - தம்மைத் துன்புறுத்தி யவர்க்குத் தானும் துன்பம் செய்ய மிகுதியும் நினைக்கின்ற மதங்கொண்ட யானை.

*கை உகத்து அறைந்து* - தன் தும்பிக்கையை உயரத்து தூக்கித் (தன் மேலே ஏறியிருந்த பாகனைப் பற்றியெடுத்துத் தரையில் வீசி) அறைந்து.

*கால் தலை தெறிக்கும்* - காலால் தலையை நசுக்கிச் சிதைக்கும்.

*மெய்யே போலும்* - உண்மையான நடைமுறை போல.

*பொய்சேர் கொற்றம்* - பொய்யைக் கூறும் பொய்யர்களையே சேர்ந்திருக்கும் இவ் வரசு.

பொய்யைக் கூறுவது, 'இந்தி படித்தால் நன்மை வரும், ஒருமை வளரும், வேலை கிடைக்கும் ' என்றவாறு என்க.

*வழங்குமொழி உலப்ப* - வழக்கில் உள்ள தமிழ் மொழியைக் குழப்பிச் சீரழிக்க.

*இலங்கில் வறு மொழி பாரிப்பு* - சிறப்பில்லாத -விளக்கமில்லாத வறிய- எளிய மொழியாகிய இந்திய மொழியை வளர்த்துப் பரப்புவதை.

*உடன்று* - (மாறுபட்டு) எதிர்த்துப் போராடி

*நூறப்புக்க* - அழித்தற்கு (மாணவர்கள்) முயற்சி செய்ய.

***கொலை கோல் காவலர்*** - கொலைகளைச் செய்யும் கோல்களை உடைய காவலர்கள்.

*குறிகோள் எஃகம் அதிர* - (மாணவர்கள் முயற்சியைத் தடுக்கும் நோக்கத்துடன்) குறி வைத்தவாறு வேட்டெஃகத்தைத் தாங்கி, அஃது அதிரும்படி, சுட்டுக் கொண்டே

*படர்ந்தாராக* - பரந்துபட்டு வந்தாரக.

*எதிர் தலைப் பட்ட எம் மாண் மகனே* - (அவ்வாறு வந்த காவலர்கள் முன்னம்) எதிர்ந்து போய் இறந்து பட்ட மாட்சிமை பொருந்திய எம் ஆண் மகனே, இவன்!

எம் என்றதால் தந்தையும் உடனிருந்தது பெறப்பட்டது.

பாகன் தன்னைக் கோட்டியால் துன்புறுத்தியதால், யானை மிக்க சினம் கொண்டது. எனவே மதங் கொண்டது. உடனே தன் முதுகில் ஏறியிருந்த பாகனைத் தன் தும்பிக்கையை நீட்டி, வாரித் தரையில் அறைந்து கொன்று, தலையை மிதித்துத் துவைத்தது.

அதுபோல் இந்திமொழி என்னும் கோட்டியால் அடிக்கடி துன்புறுத்திய பொய்யர் சூழ்ந்த அரசைச், சினங்கொண்ட மாணவர் துவைத்தெடுக்கப் போர்க்கோலம் பூண்டனர் - என்று உவமையை ஒருபுடைப் பொருத்திப் பொருள் கொள்க.

'அடர்ந்தெழுந்த சினங்கொண்ட மாணவர் எழுச்சியைத் தடுத்து நிறுத்தும் பொருட்டுக் காவலர்கள், குறிவைத்தவாறு வேட்டெஃகம் தாங்கிப் படர்ந்து வந்தனராக, அவர் முன்னம், அஞ்சாமல் எதிர்ந்துபோய், அக் குண்டடிபட்டு இறந்து பட்ட மாட்சிமை பொருந்திய எம் மகன், இவன்' என்று அவனைப் பெற்ற நற்றாய், அவன் யார், ஏன் இறந்தான் என்று கேட்ட அயலார்க்கு இஃது உரைத்தனள் என்க.

இப்பாடல் *முன்னது* திணையும் *மாண்மகன் துஞ்சல்* என் துறையும் என்க. திணையும் துறையும் புதியன.



## 58 பாடுக புலவீர்

பாடுக புலவீர் பீடுடைப் பாவே!
ஏவா அரைசின் எண்ணியது துணியும்
காவலர் போறீர் நீவிர்! இற்புகுந்து
யாவர் தேடினிர் என்னலும்; அம்மையீர்!
மேவறு சின்மொழி கடிந்து தலைக்கூடி
மூவறு நாளா ஆவணந் துமிய
சூர்படு ஓதையும் எழுச்சியும் சூடுமா
ஊர்கொள் அமலை அறிந்திலிர் போலும்!
கலைபுகு கழகத்துப் புலைபுக,
சுவடிச் சிறாஅர் கவடியி னாட்ட
ஊணும் உறக்கமுந் துறந்து, பகலிரவாக்
காவற் படுப்பதுங் காண்கிலிர் போலும்!
இவ்வே மறுகின் எழுந்த கூட்டத்து
எம்மோன் ஒருவன் முன்பல் தெறித்துக்
குருதி பிதிரக் கூர்ங்கல் எற்றிக்
கடிதின் நுழைந்தோர் செங்கண் விடலை,நும்
இற்புறத்துக் கரந்தா னாக அவனைக்
கைப்படத் தொடர்ந்தேம் காட்டுதிர் என்ன; அம்
முதியோள் நடுக்குற வெழுந்து,
முன்றிலும் அகத்தும் மடையினுங் காட்டி
ஒன்று மறிகிலே மென்றா ளாக;
வந்தோர் மனம்பெறக் கழிய, உட்புகுந்து
நென்னிறை குரம்பை ஒளியவுள் ளிறக்கிய
புன்றலைச் சிறுவனை அகவிப் புறந்தூக்கி
அன்னைத் தமிழ்க்கே அவலங் கடிந்தோய்
நின்னை மகனாப் பெற்றிலேன் பதடியென
இளந்தலை முகர்ந்து குருந்துதோள் நீவி
வெல்க தமிழென விறல்பெற முழக்கி
மல்க நீர்விழி மறைப்பச்
செல்கென விடுத்த சீர்மை நினைந்தே!

பொழிப்பு:

*பாடுவீராக, புலவரீர் பெருமிதம் தோன்றும் படி யாக (இது போலும்) பாட்டினை. இது செய்க என்று கட்டளையிடார்(எனினும்) , அரசினரின் எண்ணம் இதுதான் என்று தெரிந்து செய்யத் துணிந்துவிடுகின்ற காவலர்கள் போலும், (இருக்கின்றீர்கள்) நீங்கள். (என்) வீட்டிற்குள்ளே (கேளாது) புகுந்து, யாரைத் தேடுகின்றீர்கள். என்று கேட்டதும், (அதற்கு அக்காவலர்கள்). 'அம்மையீர், (தமிழ்நாட்டின் கண் வந்து) பரவுகின்ற சிறுமொழி(யாகிய இந்தி)யை, (அவ்வாறு பரப்புதலை விரும்பாமல்) கண்டித்து, ஒன்று கூடி, கடந்த பதினெட்டு நாள்களாகக், கடைத்தெருக்கள் தூளிபடவும், அச்சங்கொள்ளும் (படி நடக்கும்)ஆரவாரங்களும், போராட்டங்களும், (அதன் விளைவாகக் காவலர்தம்) துமுக்கிச் சூடுகளும்- இவ்வாறாக ஊரே அமர்க்களப்படும் நிலைகளை நீங்கள் அறியமாட்டீர்கள் போல் தெரிகிறது.'*

*'(எனவே) கல்விபயிலும் இடங்களிலெல்லாம், புன்மையான செயல்கள் புகுந்தவாறு, நூல்களை எடுத்துச் சென்று பயில வேண்டிய மாணவர்கள், எங்களைக் கவடி விளையாடுகின்றவர்களைப் போலும் ஆட்டங் காட்டுகின்றனராக! அதனால், யாங்கள் உண்ணும் உணவையும், உறக்கத்தையும் அறவே கைவிட்டவராகப், பகலும் இரவும் (கண் விழித்துக்) காவல் செய்ய வேண்டியுள்ளதையும், தாங்கள் காணவில்லைபோல் இருக்கிறது.'*

*"இப் பக்கத்துத் தெருவில் எழுச்சிகொண்ட கூட்டத்தின் (ஆரவாரத்தில்) எம் காவலன் ஒருவனை முன்பல் தெறித்துவிழவும், அதனான் குருதி பீறிடவும், ஒரு கூரிய கல்லை எடுத்து வீசிவிட்டு, விரைந்து (ஓடிவந்து) இப்புறம் நுழைந்து, சிவந்த கண்களை உடைய ஓர் இளந்தையன், உங்கள் வீட்டின் உட்புறமாக ஒளிந்து கொண்டானாக அவனைப் பிடிப்பதற்காக நாங்கள் வந்துள்ளோம்; (அவன் எங்கே இருக்கிறான்) என்று காட்டுங்கள்"எனவும் ;*

*அம் முதியவள் உடல் நடுக்கத்துடன் எழுந்து, வீட்டின் முன்பகுதியிலும், உள்புறத்தும், (பின்னுள்ள) சமையற்கட்டிலும், (அவர்களை அழைத்துச் சென்று, அவன் இல்லாததைக் காட்டி), 'எங்கே போயிருப்பான் என்று ஒன்றும் கண்டுபிடிக்கக் கூடவில்லையே' என்று கூறினாளாக. அதனால் வந்திருந்த காவலர், மனம் நிறைவுற்றுச் செல்லலும், (அதன் பின்னை அவள்) வீட்டிற்கு உள்ளாகச் சென்று, நெல்லை நிறைத்து வைக்கும் குரம்பையின் உள்ளே ஒளியச் செய்வதற்காக இறக்கிவிட்ட, புல்லிய மென்தலையினை யுடைய சிறுவனைக் கூவி அழைத்து வெளியே தூக்கிக் கொணர்ந்து, 'தமிழன்னைக்கு வந்த துயரத்தைக் கடிந்து நின்றாயே ! நின்னை (யான்) மகனாகப் பெறாத பதடியாகினேனே' என்று கூறி அவனது இளந்தலையினை முகர்ந்து மூங்கில் போலும் இளந்தோளை நீவிக்*

*கொடுத்துத், 'தமிழ் வெல்க' என்று வீறுணர்வுடன் முழக்கி, மண்டுகின்ற நீர் கண்களை மறைக்கும்படி, 'நீ சென்று விடு' என்று விடுத்த சிறந்த செயலை எண்ணியே!*

**விரிப்பு :**

*இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.*

*போராட்டத்தில் ஈடுபட்டுக் காவலர் மேல் கல்லெறிந்த இளந்தையன் ஒருவன், காவலரால் துரத்தி வரப்படுங்காலை ஆங்குள்ள இல்லமொன்றினுள்ளே ஓடிப் புகுந்தானை, முதியோள் ஒருத்தி நெற்குரம்பையினுள்ளே ஒளித்து வைத்துக் காத்து, அக்காவலர் வெளியேறிய பின்னை, வெளியில் விடுத்துப் போற்றிய சீர்மையைப் பாராட்டியது.*

*'மல்கு நீர்விழி மறைப்பச், செல்லென விடுத்த சீர்மை நினைந்தே, பாடுக புலவீர் பீடுடைப்பாவே!' என இறுவாய்த்தொடையாக இணைத்துக் காட்டுக.*

*பாடுக புலவீர் பீடுநடைப் பாவே* - *பாடுங்கள் புலவர்களே (இத்தகைய) பெருமை மிகு பாடல்களையே!*

*புலவர்கள் இக்கால் பாடுபொருளாக, வீணான வெறுஞ் செயல்களை, வெற்றுச் சொற்களால், கற்பனை நயமும் வளமும் இன்றி, வெறிதாகப்பாடித் தம் புலமைத் திறனைப் புழுதியில் இறைக்கும் புல்லிய செயல்களைத் தவிர்த்து, இத்தகைய* ***அச்சமும் நகையும், வீரமும் வெகுளியும், வியப்பும் உவகையும், அன்பும் அமைதியும்*** *பொலிந்த, இலக்கிய நயஞ்செறிந்த பாக்களையே மக்கள் மனங் கொள்ளவும் நலந்துளும்பவும் பாடி மகிழ்தலும் மகிழ்வித்தலும் வேண்டும் என்னும் வேண்டுகையாகப் பாடியதாம் இப் பாடல். என்னை?*

*'ஏவா அரைசின் எண்ணியது துணியும், காவலர் வரவும் 'சூர்படு ஓதையும் எழுச்சியும் சூடுமா, ஊர்கொள் அமலையும் என்பதில், அச்சமும் ;*

*'சுவடிச்சிறாஅர் கவடியின் ஆட்ட, ஊணும் உறக்கமும் துறந்து, பகலிரவாக் காவற்படுப்பதும்' என்பதில்* ***நகையும்;***

*'எம்மோன் ஒருவன் முன்பல் தெறித்துக் குருதி பிதிரக் கூர்ங்கல் எற்றிக் கடிதின் நுழைந்தோர் செங்கண் விடலை, நும் இற்புரத்துக் கரந்தானாக' -என்பதில்* ***வீரமும்;***

*அவனைக் கைப்படத் தொடர்ந்தோம்; காட்டுதிர்'- என்பதில்* ***வெகுளியும்;***

*'வந்தோர் மனம்பெறக் கழிய உட்புகுந்து நென்னிறை குரம்பை ஒளிய உள்ளிறக்கிய புன்றலைச் சிறுவனை அகவிப்புறந்தூக்கி என்பதில்* ***வியப்பும், உவகையும்;***

'அன்னைத் தமிழ்க்கே அவலங் கடிந்தோய் நின்னை மகனாப் பெற்றிலேன் பதடியென, இளந்தலை முகர்ந்து குருந்து தோள் நீவி'- என்பதில் *அன்பும்*

'மல்கு நீர்விழி மறைப்பச் செல்கென விடுத்த சீர்மை நினைந்தே' என்பதில் *அமைதியும்;*

-இணைந்து வந்து, எண் சுவையையும் இப்பாடல் வெளிக்கொணர் வதை ஓர்ந்து உணர்ந்து மகிழ்க.

-இனி, இத்தகைய சுவை நலங்கொழிக்கும் பாடல்களைப் பாடுவீர்களாக என்பதுடன், வீர இளையோனைக் காவல் கையகப்படுத்தாமல் கரந்து வைத்து வாழ்த்தி வழியனுப்பிய முதியோனின் சீர்மையை எம்மைப்போலும் நீவிரும் பாடுக என்பதாகவும் பொருள் கொண்டு போற்றுக என்பதுமாம்.

*ஏவா அரைசின் ....... காவலர்* - கட்டளையிடாமலேயே அரசினரின் நோக்கும் போக்கும் உணர்ந்து, அதைச் செயலாக்கத் துணிந்து நிற்கும் காவலர் என்க.

*காவலர் போறீர்* - காவலர் போல்வீர் என்பது, வகரங்கெட்டு, இடையினம் வலிந்து, நெடில் குறுகிற்று.

போல்தல் - போலல்-போறல் (தொல்-பொருள்-கள-கா-3) போல்வீர்-போலீர்-போறீர் ( கலி-9-11; அகம் 29-12).

*இற்புகுந்து .... என்னலும்* - எம் இல்லுள்ளே (கேளாது) புகுந்து, யாரைத் தேடுகிறீர்கள் என்று கேட்டலும்.

*மேவுறு சின்மொழி* - மேவுறுதலுறும் சிறிய மொழியாகிய இந்தி, சிறிய மொழி என்றது, வளமின்மையும், பரப்பின்மையும், செப்பமின்மையும், சிறப்பின்மையும் கருதி என்க.

*கடிந்து* - கண்டித்து, *தலைக்கூடி* ஒன்றுகூடி.

*மூவறு நாளா* - பதினெட்டு நாள்களாக.

*ஆவணம் துமிய* - கடைத்தெரு தூளிபட.

*சூர்படு ஓதை* - அச்சம் கொள்ளும்படியான போராட்ட ஆரவாரம். ஓதை- ஓசை யென்னுஞ் சொல் திரிந்து பேரோசையைக் குறித்தது.

*சூடு — துமுக்கிச் சூடு. அமலை* - அமர்க்களப்படுத்தும் நிலை.

*கலை புகு கழகம்* - பள்ளிகளும் கல்லூரிகளும்.

*புலை புக* - புல்லிய செயல்கள் புக. கல்விக்குத் தேவையற்ற போராட்டம் முதலிய ஆரவாரச் செயல்கள்.

*கவடிச் சிறா அர்* - மாணவர்கள்.

*கவடி* - இரண்டு அணியினர் போராடும் ஒரு விளையாட்டு. மாணவர்கள் காவலர்களை எதிரணியினராகக் கருதிக் கவடியாட்டத்தில் விளையாடுவது போல் ஆட்டங்காட்டினர் என்பது.

*சாவற் படுப்பது* - காவல் காப்பது.

*இவ்வே- இவ்விடத்தே. மறுகு* - தெரு.

*எம்மோன் ஒருவன்* - எம் போலும் ஒரு காவலன்.

*பிதிர* - வெளிப்பட; .

*செங்கண் விடலை* - போராட்டத்தில் தொடர்ந்து ஈடுபட்டதாலும், சினந்து எழுச்சி கொண்டதாலும் கண்கள் சிவந்து காணப்பட்ட இளந்தையன் இளந்தைப்பருவம் - பிள்ளைமைக்கும் இளைமைக்கும் இடைப்பட்ட பருவநிலை.

*இற்புறத்து* - வீட்டின் பக்கல்.

*கரந்தானாக* - மறைந்தான் ஆக.

*கைப்படத் தொடர்ந்தேம்* - கைப்பிடிக்கத் தொடர்ந்து வந்தேம்.

*காட்டுதிர்* - அவன் ஒளிந்துள்ள இடத்தைக் காட்டுங்கள்.

*நடுக்குற வெழுந்து* - முதுமையால் உடல் நடுங்கியவாறு எழுந்து *முன்றில்*- வீட்டின் முன்புறம், அகம்வீட்டின் உட்புறம் ; மடையினும் சமையற்கட்டு உள்ள, வீட்டின் பின்புறம்.

*மனம் பெறக் கழிய* - மனம் நிறைவுற்ற, வெளியே செல்ல.

*நென்னிறை குரம்பை* - நெல் கொட்டிவைக்க உதவும் சிறிய தொம்பை! பெரிய குதிர்.

*புன்றலைச் சிறுவன்* - இளந்தலையை உடைய பள்ளிச் சிறுவன்.

*அகவி* - கூவி அழைத்து;

*பதடி* - பதர் போன்றவள்.

அவன் போலும் போராட்ட உணர்வுடைய ஒரு வீரமகனைப் பெற்றிலாததால், தன்னைப் பதடி என்று கூறிக் கொண்டாள் என்க.

*குருந்து தோள்* - இளம் மூங்கிலைப் போலும் மென்மையான தோள்.

*விறல் பெற* - வீறுணர்வு பெறும்படி

*மல்குநீர் விழி மறைப்ப* - மல்குகின்ற கண்ணீர் விழிகளை மறைக்கும்படி

*செல்கென விடுத்த சீர்மை நினைந்தே* - நீ சென்றுவிடுக என்று விடுத்த சிறந்த செயலை எண்ணியே ; *(பாடுக புலவர் பீடுடைப் பாவே என்று புணர்த்துக)*

இளம் உள்ளம் ஒன்றின் தாய்மொழிப்பற்றையும், அவர்களை வேட்டையாடிய காவலர்களின் கொடுமையையும், அவர்களை ஆட்டிவைத்த அரசினர்தம் அச்சுறுத்தும் தன்மையையும், போராட்டம் நடந்த காலத்து, அதில் ஈடுபட்டாருக்குப் பொது மக்கள் துணையாயிருந்து, காத்தொழுகிய சீர்மையையும் வெளிப்படுத்தி உரைப்பதாகும் இப்பாடல்.

இப்பாடல் *முன்னது* திணையும், *செந்தமிழ்ச் சீர்மை* என் துறையும் என்க.

திணையும் துறையும் புதியன.



## 59 மருட்கை யதுவே!

மலைமென் னெஞ்சே! மருட்கை யதுவே!
குலையுங் குடரும் விதுப்புற் றனவே!
தமிழ்தோய் உளத்துத் துணிவீ தென்கோ
வேந்துமுன் ஓச்சிய விறலீ தென்கோ
வளமான் தோன்றல் இளமை என்கோ
அலைபுலை கொற்றத்து விளைவீ தென்கோ
உலைவூங் குயிரின் உவகை என்கோ
ஆடுநெய் யொழுக முச்சியி னப்பிப்
பாடுவெள் ளருவி பாய்தல் போலும்
கன்னெய் முழுகிக் கனல்புகுந் தாடிய
செஞ்சிக் கோட்டத்துத் தேவனூர்ச் செம்மல்
பொய்யுடல் கருகிப் புறமாறி
மெய்யுடற் கொண்டு மிளிர்ந்த செயலே!

**பொழிப்பு:**

திகைக்கும் என் நெஞ்சம்! வியப்புக்குரியது அது! நெஞ்சாங்குலையும் குடலும் நடுக்கமுற்றன. தமிழ் உணர்வு தோய்ந்த உள்ளத்தின் துணிவு, இஃது என்று சொல்லுவமா? அரசின் முன் ஓங்கி நின்ற வெற்றிச் செயல் இஃது என்று சொல்லுவமா? பெருமைக்குரிய குடியில் பிறந்த ஒருவனின் இளமைச் செயல் என்று சொல்லுவமா? துன்புறுத்தலும் புன்மைச் செயல்களும் உடைய அரசின் அடிப்படையில் விளைந்த செயல் இஃது என்று சொல்லுவமா? துன்புற்ற உயிரின் விடுதலை மகிழ்ச்சி என்று சொல்லுவமா? ஆட்டிய எள் நெய்யை, வழிந்து ஒழுகும்படி, தலையின் உச்சியில் தேய்த்துக் கொண்டு, இசைக்கின்ற வெள்ளிய அருவியில் பாய்தல் போலும், கன்னெய்யை (பெட்ரோலை) உடல் முழுதும் ஊற்றிக்கொண்டு, நெருப்பில் குளித்து ஆடிய, செஞ்சிக் கோட்டத்துள்ள தேவனூரைச் சேர்ந்த வீரன், கோடம்பாக்கத்தின் முச்சந்தியில், தன் பொய்யுடலை கருக்கிக் கொண்டு, உயிர் வெளியேறி, மெய்யான புகழுடலை வாழ்விடமாகக் கொண்டு ஒளியாய் விளங்கி நின்ற செயலே!

**விரிப்பு:**

இப் பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

இதுவும் முந்தைய பாடல் காலத்து நடந்த வியப்புக்குரிய ஒரு செயலைப் பாராட்டியதாகும்.

செஞ்சிக் கோட்டத்துத் தேவனூர்ச் செம்மல் சிவலிங்கம் என்னும் இளையோன், வடவராட்சியின் இந்தித் திணிப்பைக் கடிந்து கோடம்பாக்கத்துக் கூடல் மறுகில், கன்னெய் யூட்டி எரிபுகுந்து துஞ்சிய செயலை மருட்கையுறப் பாடியதாகும், இது.

'மெய்யுடற்கொண்டு மிளிர்ந்த செயலே, மருட்கையதுவே, மலைமென் னெஞ்சே' என்று இறுதியும் தலையும் இணைத்துப் பொருள் கொள்க.

*மலைம்* - மலையும் என்பது இடைக் குறைந்தது- திகைக்கும்.

இஃது உண்மைகொல் என்று திகைத்தது நெஞ்சம்!

*மருட்கை* - வியப்பு! அது மிளிர்ந்த அச் செயல்.

*குலை* - நெஞ்சாங்குலை; குடர்-குடல்- கடைப்போலி.

*விதுப்புறுதல்* - நடுக்குறுதல்.

*தமிழ்தோய் உளத்துத் துணிவு* - தமிழ் உணர்வு தானே வந்து பொருந்திய உள்ளத்தில் தோன்றிய துணிவு. என்னை? தமிழில் தான் தோய்தலும், தன்னில் தமிழ்வந்து தோய்தலும் ஆகிய இரண்டு வினைகளுள், முன்னது மகிழ்வுறுதலும், பின்னது துணிவுறுதலும் ஆம் என்க.

*வேந்து முன்* - அரசின் முன்னம்.

*ஓச்சிய விறல்* - ஓங்கி நின்ற வெற்றிச் செயல்.

*வளமான் தோன்றல்* - வளப்பமான குடியில் தோன்றியவன். இவ்விடத்து வளப்பம் பெருமையைக் குறித்தது.

*இளமை என்கோ* - இளமையின் துணிவான செயல் என்பமா?

*அலைபுலை கொற்றம்* - மக்களை அலைத்தலும் புன் செயல்களைச் செய்தலும் ஆகிய அரசு. கொல்லுதல் உரிமையால் கொற்றம் ஆயிற்று. வெல்லுதல் நிலை வெற்றி ஆனதுபோல. அரசு மக்கள் உயிரைக் கொல்லும் உரிமைபெற்றது. அரசு என்னும் சொல்லும், அரைசு - அழித்தல்நிலைப் பொருளைக் கொண்டதே. இனி, ஆள் என்னும் வேரடியால் ஆட்சியும், மன் (நிலைபேறு, வலிமை) என்னும் வேரடியால் மன்னனும் வருதல் காண்க. வேய்தல் (முடியணிதல்) பற்றி வேய்ந்தன்- வேந்தன்- வேந்து எனவும் வருதல் வரலாற்றுப் படிநிலை வளர்ச்சி நிலையைக் குறிக்கும் சொல்.

*உலைவு ஊங்கு உயிர்* - துன்புற்று நீங்கும் உயிர்.

*முச்சி* - தலை உச்சி.

*அப்புதல்* - வாரிப் பொதிதல்; கையால் தேய்த்தல்.

*கூடல்மறுகு* - ஒன்றுக்கு மேற்பட்ட தெருக்கள் இணையும் இடம். முச்சந்தி- நாற்சந்தி ஆகிய இடம்.

*பொய்யுடல்* - இருந்து, இல்லையாகிவிடும் உடல். பொய்த்தல் இல்லை என்றாதல்.

*புறம் மாறி* - ஓரிடத்தினின்று வேறு இடத்திற்கு மாறிப் போதல்

*மெய்யுடல்* - இருக்கும் உடல்- புகழுடல்.

உயிரானது இருந்த உடலினின்று கழன்று, என்றும் இருக்கும் புகழ் உடலில் புகுதல்.

புகு- புகல் (நுழைதல், சொல்லுதல்)- புகழ். உயிர் உடல் மறைவுக்குப் பின், நுழைந்து வாழும் உடல் என்றும் புகன்று கொண்டிருப்பதற்கு உரிய தன்மையானும், புகுந்து வாழும் தன்மையானும், *புகல்* என்னும் சொல் உயர்வு சிறப்பெய்தி *புகழ்* என்னும் நிலைசிறப்புச் சொல்லாய்த் திரிந்தது. வினைச்சிறப்பு நிலைபற்றி, எழுத்துச் சிறப்புப் பேறு பெற்று, நிலைத்த சொல்லானது. சொற்கள் தம் தம் வினைகளுக்குரிய முறையில் உருமாறுதல் சொற்பிறப்பியல் கோட்பாட்டில் ஒருவகை என்க.

*மிளிர்தல்* - மின்னுதல், ஒளிர்தல், மின் எனும் வேரடியாகப் பிறந்த சொல்.

தமிழ் உணர்வு முற்றிய உள்ளத்தின் துணிவையும், அலைபுலை கொற்றத்து விளைவையும், உயிரின் காழ்ப்புத் தன்மையில் அது தன்னை இடம் பெயர்த்துக் கொள்ளும் வலிவையும், கொள்கைக்கென உயிர்பெயர்தல் உவகை தருவது என்னும் உயிர்முதிர்ச்சித் தன்மையையும் இப் பாடலுள் கண்டுகொள்க.

இப்பாடல் *முன்னது* திணையும், *கன்னெய் ஆடல்* என்துறையும் என்க.

திணையும் துறையும் புதியன.



# 60 இருந்தனை தமிழொடு

புனையினும் பூட்டு கழலறப் போகும்
மிசையினும் மேனி திரங்கலும் ஆகும்
ஓம்பினும் வன்மை காலத்து ஒழியும்
சாம்பினும் அழலுணச் சாம்பர் கழியும்
ஒக்கல் புறத்தழ விக்கல் மேலுற்று
முக்கலும் முனகலும் அடர்ந்துநா புலர்ந்து
திக்கலும் திணறலும் ஆகி உரைதப்பிக்
கக்கலும் கழிச்சலும் ஆலக் கண்ணவிந்து
நன்னடை நெற்றி நகர்ந்தும் கிடந்தும்
திண்மமும் மாறி நீர்மமும் கொள்ளாப்
புறங்கடை வாயிற் புகட்டிய தொழுக
வெள்விழி யேறி அறிவு வெளிறி
மெலமெல ஆவி கழிவுறு மேனாள்
இருந்து போகிய இடம்பார்த் தழூஉம்
பெருந்திரள் மாக்கள் பெறுவது மிலையெனும்
இழிதகைக் கஞ்சியோ மகனே
தழல்குளித் திருந்தனை தமிழொடு சிறந்தே!

பொழிப்பு:

பலவாறு (பூட்டியும் அணிந்தும் உடுத்தும் பூசியும்) புனைவு (அழகு) செய்து வந்தாலும், எலும்புகளால் பூட்டப் பெற்றுத் தசைகளால் பொதியப் பெற்றுத் தோலால் வேயப்பெற்ற. இவ்வுடலானது, தன் கட்டமைப்புக் கழன்று இறுதியில் ஒன்றுமில்லாமற்போகும்; (பலவாறு, பலவகையான பண்டங்களை) உண்டு காத்து வந்தாலும், இம் மேனியானது, காய்ந்து சுருங்கிப் போகும்; இதன் நலன்களைப் பலவாறு பேணிப்புரந்து நின்றாலும், இவ்வுடல் வலிமையானது, குறித்த காலத்தில் இல்லாது போய்விடும்; அவ்வாறு வலிமை ஒழிந்து, ஒடுங்கிப் போன உடலை எரி உண்டு தீர்த்துச் சாம்பலாகச் செய்யினும், அதுவும் ஒன்றுமில்லாமல் மண்ணில் கழிந்துபோகும்; உறவினர்கள் புறமாக இருந்து அழவும், இறுதி விக்கலானது மேலேறி நின்று, மூச்சு முட்டவும், ஒலி முனகலும் மிகுந்து, நாவானது உலர்ந்து போய், உரை திக்கலும் திணறுவதும் ஆகி, பேச இயலாமல் உரை

தப்பிப்போய், உண்டது வாய் வழியாகவும், செரித்தது கருவாய் வழியாகவும் ஒலியுடன் வெளியேவர, கண்கள் ஒளி அவிந்துபோக முன்னர் இருந்த நல்லநடையானது தடுமாறி,நகர்ந்தும், படுகிடையாய்க் கிடந்தும், பருவுணவு உண்ட நிலை மாறி, நீர்ம உணவும் கொள்ள வியலாமல், இன்னொருவர் புகட்டிய நீர்ம உணவும் புறக்கடை வழியாக ஒழுக, வெள்ளை விழி மேலே ஏறவும், அறிவானது மங்கிப் போகவும், மெல்ல மெல்ல ஆவியானது கழிகின்ற மேலை வரும் நாளில், தாம் இறுதியாகப் படுத்திருந்து உயிர் போகிய இடத்தைப் பார்த்து அழுகின்ற, பெருந்திரளான மக்கள் தம் வாழ்நாளிலும், தாம் பெறப்போகின்றது இந்நிகழ்ச்சி தவிர வேறொன்றுமில்லை எனும், இழிவு மிகுந்த இவ் வாழ்வின் முடிவுக்கு அஞ்சியோ, மகனே, தீயில் குளித்துத் தமிழ்மொழியுடன் என்றும் சிறப்புற சாகா நிலையில் இருக்கின்றாய், நீயே!

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

இதுவும் முந்தயை பாடல் காலத்து நடந்து வியப்புக்குரிய ஒரு செயலைப் பாராட்டியதாகும்.

தீக்குளியல் செய்த தேவனூர்ச் செம்மல் சிவலிங்கத்தை உடல் நிலையாமை முன்னிருத்திப் பாடியது.

***புனையினும்*** - அணிகளைப் பொருந்தப் பூட்டியும் மேலுற அணிந்தும், உடுக்கை உடுத்தும், மண நெய்யுந் தூளும் பல பூசியும் உடலைப் புனைவு (அழகு) செய்யினும்.

*பூட்டு* - எலும்புகளாலும், தசைகளாலும், நார் நரம்புகளாலும் தோலாலும் பூட்டப்பெற்ற இவ்வுடல் சேர்க்கையானது.

***கழலற*** - அறக் கழன்று- கட்டமைப்புக் கழன்று.

***மிசையினும்*** - பலவகையான பண்டங்களை உண்ணினும்.

***மேனிதிரங்கல்*** - உடலானது காலத்தால் காய்ந்து சுருங்குதல்.

***ஓம்பினும்*** - (இதன் நலன்களைப் பலவாறு) பேணிப் புரந்தாலும். வன்மை- வலிமை;

***காலத்து ஒழியும்*** - காலத்தால் இல்லாமற் போகும்.

***சாம்பினும்*** - ஒடுங்கிப்போயினும்.

***அழலுண*** - அழல் உண்ண; ***சாம்பர்*** -சாம்பல்

***ஒக்கல்.*** - உறவினர். பொருந்தியிருப்பவர்.

***முக்கல்*** - காற்று வெளியேற வலிந்து முயலுதல்.

*முனகல்* - சிறிது சிறிதாகக் காற்று வெளியேறும் ஒலி.

*அடர்ந்து நா புலர்ந்து* - நா வறண்டு உலர்ந்து போய்.

*உரை தப்பி*- உரை மாறுதல் - தவறுதல்.

*கக்கலும் கழிசலும் ஆல* - உண்டது மேல் வாய் வழியாகவும் செரித்தது கீழ்வாய் வழியாகவும் ஒலியெழுப்பி வெளியே வர.

*கண்ணவிந்து* - கண் ஒளி இழந்து.

*நெற்றி* - தடுமாறி.

*நகர்ந்தும் கிடந்தும்* - இயன்றவழி நகர்ந்தும், இயலாவழிக் கிடந்தும்.

*திண்மமும் மாறி நீர்மமும் கொள்ளா* - பருப்பொருள் உணவும் தவிர்ந்து, நீர்ம உணவும் கொள்ள முடியாமல்.

*புறங்கடை வாயில்* - வாயின் புறத்துள்ள கடைவாயில்.

*புகட்டியது ஒழுக* - பிறரால் நீர்ம உணவாகப் புகட்டப் பெற்றது, உள்ளே போக இயலாமல் ஒழுகும்படி.

*வெள்விழியேறி* - கண்களின் வெள்ளை விழி மேலேறி நிற்க.

*அறிவு வெளிறி* - அறிவுணர்வானது அறவே இல்லை என்று ஆகும் படி இல்லாமற் போக.

வெள்ளை விழி மேலேறிக் குத்திட்டு நிற்பதும், அறிவு அறவே இல்லாமற் போவதும், இறப்பின் இறுதி நிகழ்ச்சிகள்.

*மெலமெல ஆவி கழிவுறு மேனாள்* - மெல்ல மெல்ல ஆவி கழிந்து போகின்ற அடுத்து வரும் இறுதி நாள்.

*இருந்து போகிய இடம்* - இறுதியாகச் சாப்படுக்கையில் படுத்திருந்து உயிர்விடும் இடம்.

*பார்த்து அழும்* - இந்த இடத்தில்தானே அவர் படுத்திருந்து உயிர்விட்டார் என்று உறவினர் பார்த்து அழுகின்ற இடம்.

*பெருந்திரள் மாக்கள் பெறுவதும் இலையெனும்* - மிக்க அளவில் திரண்ட மக்கள், தாங்கள் தங்கள் வாழ்வில் இறுதியாகப் பெறப்போவதும் இம் முடிவைவிட்டு வேறொன்று இல்லை என்னும்.

*இழிதகைக்கு* - இழிவான தன்மைக்கு.

*அஞ்சியோ* - இதுபோலும் இழிவான வாழ்க்கைக்கு யானும் ஒருப்படுவதோ என்று அஞ்சியோ.

*தழல் குளித்து* - நெருப்பில் குளிப்பது போல் மூழ்கி.

*தமிழொடு சிறந்து இருந்தனை* - என்றும் உள்ள தமிழ்மொழியுடன் பிறர்போல் அழிவுறாது சிறப்புற என்றும் நீ இருந்தாய் கொல்.

'எல்லாரும் வழக்கமாக வாழ்ந்து, ஒரு சிறப்பும் பெறாமல் இயல்பாக மறைந்தொழியும் வாழ்க்கை போல் நாமும் வாழ்ந்து மடிய வேண்டுமோ? என்று ஏற்படும் இழிவுக்கு அஞ்சியவனாகத் தமிழ்மொழிக்கெனப் போராடித் தீக்குளித்து மாய்ந்தனன் கொல்லோ, தேவனூர்ச் செம்மல் சிவலிங்கம்? 'அவன் புகழ் தமிழ் உள்ளளவும் சிறந்து நிற்கும்' என்பதாகும் இப்பாடல்.

இதில் ஒரு மாந்தன் பலவாறான சிறப்புகளொடு வாழ்ந்தாலும், பலவகையினும் துய்ப்புச் செய்து இன்பம் பெற்றாலும் இறுதியில் அவன் வாழ்க்கை, எவ்வகைச் சிறப்பும் இன்றி எல்லாருக்கும் ஏற்ற இயல்பான முடிவே பெறுகிறது. எனவே இயல்பாக மாய்ந்தொழியும் வாழ்க்கைக்கு ஒரு சிறப்புத் தேடுவது, அதனை ஒரு கொள்கையோடு முடித்துக் கொள்வதே ஆகும் என்னும் உயர் நோக்கத்தை வலியுறுத்தி இந்தி மொழித் திணிப்பை எதிர்த்துத் தமிழ்மொழிக்கெனத் தன் உயிரைத் தீக்குளித்து மாய்த்துக் கொண்ட சிவலிங்கத்தை முன்னிருத்திப் பாடியது இப்பாடல்.

உயிர் நிலையாமையும், உடல் அழிவும் நன்கு புலப்படுத்திக் கூறப்பெற்ற இப் பாடலில், இறப்புக் காலத்து நேரும் சாவுக் குறிகள் விளங்கக் காட்டப் பெற்றுள்ளன.

விக்கல் மேலுறுதலும், மூச்சு முட்டுதலும், நா வறண்டு போதலும், உரை திக்குவதும், பேசுதற்குத் திணறித் தொல்லைப் படுதலும், உண்டது கக்கலும், உள்ளே செரித்துப் போனது தன்னுணர்வின்றியே நீர்மலமாய்க் கழிவதும், அவற்றின் ஒலியாரவாரமும், கண்கள் ஒளி குன்றுவதும், தப்பித்தவறி எழுந்தால் நடை தடுமாறுவதும், எனவே நகர்வதும் இயலாதவிடத்துக் கிடப்பதும், பருவுணவு கொள்ளவியாலாமையும், கொண்ட நீர்ம உணவும் உள்ளே செல்லாமல் புறக்கடை வாய்வழி வெளியே ஒழுகுவதும், வெள்ளை விழி மேலேறுதலும், அறிவு மறைவதும், ஆவி மெதுமெதுவாய்க் கழிவதும் ஆகிய சாவின் படிப்படியாக நிகழும் இறுதி நிகழ்ச்சிகள் நன்கு புலப்படுத்தப் பெறுகின்றன.

இவையன்றியும், இயல்பாக, எல்லார்க்கும் வந்து நேரும் வாழ்விலும் சாவிலும் என்ன சிறப்புள்ளது? உயிரை ஒரு கொள்கைக்காக இழப்பதில்தான் சிறப்பு உள்ளது என்னும், உயர் நோக்கம் இடம் நோக்கிச் சுட்டப்பெற்றது என்க.

இப்பாடல் முன்னது திணையும், *தழற்குளியல்* என் துறையும் என்க.

திணையும் துறையும் புதியன.

# 61 கொள்கை முழக்கிய குரிசில்

இவளே,
பாரிய கூந்தல் புழுதி துவையத்
தலைதரை கிடத்தியும் எழுந்துமார் பெற்றியும்
செவ்விழி உகுநீர் நனைவாய் அரற்றியும்
எரியுண் மூங்கில் இணைகொடி யாகி
இனித்துணை யறியா இவனிள மனையே!
இவரே,
தந்தை கொள்கை தாமறி கல்லா
அன்னை அழுங்கல் ஆற்றுதல் அறியாது
எதிர்ந்த சூழலுக் கதிர்ந்த நெஞ்சொடு
விசித்தழா நின்ற இவன்மு மகாரே!
இவனே,
வடவர் திணித்த வளரா மடமொழி
கடியத் துணிந்து காட்சியின் காட்ட
உடலந் தீக்கொள உயிர்தீந் தமிழ்க்கெனக்
கொள்கை முழக்கிய குரிசில்
விருகம் பாக்கத்து அரங்க நாதனே!

**பொழிப்புரை:**

(இவள் யார் என்குவீராயின்) இவளே, பரந்த கூந்தல் புழுதியில் தோயவும், தலையைத் தரையில் கிடத்தியும், பின் எழுந்து மார்பில் அடித்தும், சிவந்த விழிகளிலிருந்து உகுக்கின்ற கண்ணீரில் நனைகின்ற வாயால், அரற்றி அழுதும், எரியால் உண்ணப்படுகின்ற மூங்கிலைப் போல், நெய்யை ஊற்றிக் கொண்டு தீயால் பற்றியெறிந்து உண்ணப்படுகின்ற இவள் கணவன்மேல் இணைந்து பற்றியிருந்த கொடியாகி, இனிமேல் ஒரு துணையும் அறியாத இவனுடைய இளமை பொருந்திய மனைவி; (இவனருகில் நிற்கின்ற) இவர்கள், தந்தையினது கொள்கை நெறியைத் தாங்கள் அறிய முடியாதவர்களாகத் தங்கள் அன்னையினது அழுகையையும், ஆற்றுகின்ற தன்மையும் அறியாமல், ஏற்பட்ட இச்சூழலுக்கு அதிர்ந்துபோன நெஞ்சுடன், விசித்தழுது நிற்கின்ற இவனுடைய மூன்று மக்கள்! (இதோ, எரியால் உண்ணப்பட்டுப் பிணமாய்

கிடக்கின்ற) இவன், வடவர் திணித்த வளராத மழுங்கல் மொழியாகிய இந்தி மொழியைக் கடிந்து தடுப்பதற்குத் துணிந்து நின்று, அவ்வுணர்வைக் காட்சியின் அளவில் காட்டுதற்கு, உடலில் தீக்கொளுவிக் கொண்டு, தன் உயிர் தீந்தமிழுக்கெனக் கொள்கையை முழக்கிய சிறந்த வீர மகனாகிய, விருகாம்பாக்கம் என்னும் ஊரினனான அரங்கநாதன், ஆவான்.

**விரிப்பு:**

இப் பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

இதுவும், முந்தைய பாடல் காலத்து நடந்த வியப்புக்குரிய ஒரு செயலைப் பாராட்டியதாகும்.

இந்தி யெதிர்ப்புக்காக, தீக்குளியல் செய்த விருகாம்பாக்கத்தைச் சேர்ந்த அரங்கநாதனைப் பாடியது.

*பாரிய* – பரந்த.

*புழுதி துவைய* – புழுதி தோயும்படி தரையில் புரள,

*தலைதரை கிடத்தியும்* – தலையைத் தரையில் மோதி முட்டி அழுதல்,

*மார்பு எற்றுதல்* – மார்பில் கைகளால் அடித்துக்கொண்டு அழுதல்,

*செவ்விழி உகுநீர் நனை வாய் அரற்றி* – அழுது சிவந்த விழிகளிலிருந்து உகுக்கின்ற கண்ணீரால் நனைந்த வாயால் புலம்பி அழுது.

*எரியுண் மூங்கில் இணைகொடி யாகி* – எரியால் உண்ணப்பட்டு எரிந்து கொண்டிருக்கின்ற மூங்கில் மேல் இணைந்து சுற்றிய கொடி எவ்வாறு அதுவும் கருகிக் குலைந்து போகுமோ, அவ்வாறு குலைந்து நிற்கின்ற கொடி போன்றவள் ஆகி.

*இனித் துணை யறியா* – இனிமேல், வாழ்வுத் துணை யறியாத,

*தந்தை கொள்கை* – தங்கள் தந்தையின் கொள்கையாகிய இந்தியெதிர்ப்பை,

*தாமறிகல் லாது* – தாங்கள் அறியாமல்.

*அழுங்கல் ஆற்றுதல்* – அழுகையைத் தேற்றி அடக்குதல்,

*எதிர்ந்த சூழல்* – இக்கால் ஏற்பட்டிருக்கின்ற சூழ்நிலை.

*அதிர்ந்த நெஞ்சொடு* – அதிர்ச்சி யடைந்த உள்ளத்தொடு.

*விசித்தழா நின்ற* – தேம்பியழுது நிற்கின்ற.

*இவன் மூமகார்* – இவனுடைய மூன்று மக்கள்.

*வடவர் திணித்த வளரா மடமொழி* – வடநாட்டு ஆட்சியினர் தென்னாட்டு மக்கள் மேல் திணித்திருக்கும், வளர்ச்சியுறாத மூடமொழி. அறிவாற்றல் இல்லாத மொழியாகிய இந்திமொழி,

*கடியத் துணிந்து* – (இந்தி மொழித் திணிப்பைக்) கண்டித்துத் தடுத்து நிற்கத் துணிவு கொண்டு,

*காட்சியின் காட்ட* – தன் உணர்வைக் காட்சியளவாகச் செயலில் காட்டுதற்கு.

*உடலம் தீக் கொள* – உடலில் கன்னெய் (பெட்ரோல்) ஊற்றிக் கொண்டு தீப்பற்றும்படி செய்து.

*உயிர் தீந்தமிழுக்கு என* – தன் உயிர் தமிழுக்காகவே இருந்தது ; இக்கால் அதற்குத் தீங்கு வந்ததால் அதற்காக அது மாய்ந்தது என எண்ணும்படி

*குரிசில்* – சிறந்த வீர மகன்; ஆண் மகன்; தலைவன்.

*விருகாம்பாக்கத்து அரங்க நாதன்* – சென்னையில் உள்ள விருகாம்பாக்கம் என்னும் ஊரில் தோன்றிய அரங்கநாதன் என்னும் பெயரினன்.

தன் இளம் மனைவியையும், மூன்று மக்களையும் பொருட்டென நினையாது, இந்தித் திணிப்பால் தமிழ்மொழிக்கு நேர்ந்த தீங்கையே பெரிதென நினைந்து, அத் தீந்தமிழ்மேல் தான் கொண்ட பற்றினைக் காட்டுதற்கும், இந்தித் திணிப்புக்குத் தன் எதிர்ப்பை வெளிப்படுத்துதற்கும், "உடலைத் தீயினுக்கும், உயிரைத் தமிழ்க்கும் தந்தேன்" என எழுதி வைத்துவிட்டு, தன்மேல் கன்னெய்யை ஊற்றித் தீ வைத்துக் கொண்டு, மாய்ந்து போன, விருகாம்பாக்கத்தைச் சேர்ந்த அரங்கநாதன் என்னும் வீரனைச் சுற்றியிருந்தார் கேட்கப் பாடியதாகும், இப் பாடல்.

இப் பாடல் முன்னது திணையும், *கன்னெய்யாடல்* என் துறையும் என்க.

திணையும் துறையும் புதியன.



## 62 யாவர் காக்கும்

எம்மையுங் காவார்; தம்மையுங் காவார்;
கொம்மைப் பருவத்துச் சின்னாட் கூடலில்
நினக்கியான் பயந்தநின் மகாரையுங் காவார்;
முகில்படு முன்றில் முக்கொடி நிறுத்தி
அகல்நெடுங் கொற்றத்து அரசாண் டிருந்த
ஒருமா முதுமொழித் திருவையுங் காவார்;
வடவர் ஊன்றிய தமிழ்மா நன்னிலம்
கெடாஅது நிறுத்துஞ் சிறாரையுங் காவார்
செற்றலர் எதிரின் கிளையோடு பொருதும்
அற்றைநாள் தமிழரைப் போலா திழிந்த
இற்றைநாள் மாக்களை அறிந்தும் எமைவிடுத்து
யாவர் காக்குமென் றெண்ணித்
தீப்புகுந் தாவி துறந்தனை நீயே!

**பொழிப்பு:**

(உண்டியும் உறையுளுங் கொடுத்துக் காக்கவேண்டிய கடமை கொண்ட நீ போயின பின்றை, இதோ தனித்து நிற்கும்) என்னையும் என்னோடு பொருந்தியவரையும் காத்து நிற்கார்; (அடிமையும் அறியாமையும் பட்டு நிற்கும்) தங்களையும் காத்துக் கொள்ளார்; இளமைப் பருவத்தின் பொழுதில், சில நாள்கள் நின்னைக் கூடியதன் பயனாக, நின்வழி, நான் பிறப்பித்த நின்னுடைய மக்களையும் காத்து நிற்றலைச் செய்யார்; வானின் முகிலிடைத் தோயும்படி, அரசமனை முன்றிலில் மூவேந்தர் நாட்டிய மூன்று கொடிகள் நிறுத்தப்பெற்றிருந்த, அகலிய நீண்ட ஆட்சியமைத்து, அரசாண்டு கொண்டிருந்த, உலகின் ஒரே பெரிய முதுமொழியாகிய தமிழ்ச்செல்வியையும் இவர்கள் காக்கும் திறமுடையவர்கள் அல்லர்; வடநாட்டினர் வந்து புகுந்து பெயராமல் நிற்கும் தமிழகம் ஆகிய பெரிய நல்ல நாட்டையும், படிப்படியாகச் சிதைந்து போதலினின்று அது கெடாமல் காத்தற்குப் போராடிக் கொண்டிருக்கும் (இந்திப் போராட்ட) இளைஞர்களையும் (அவர்களுக்கு வந்து நேரும் துன்பங்களினின்று) காத்து நிற்க முயற்சி செய்ய மாட்டார்; பகைவர்கள் வந்து போருக்கு எதிர்ந்து நிற்பின், தம் இனத்தொடும் எழுந்து முன்னின்று போர் செய்யும் திறம் வாய்ந்த, அன்றைய நாளில் இருந்த தமிழ் மறவர்களைப் போல் அல்லாமல்,

(மானத்தும் மறந்தும் தாழ்ந்து அடிமைப்பட்டுக் கிடக்கும்) இன்றைய நாள் (தமிழுணர்வு திரிந்த) பெருமை குன்றிய மக்களது (இனவுணர்வற்ற) தன்மையை நீ அறிந்திருந்தும் எங்களை (இவர்களிடையில்) தமியராக விட்டு விட்டு, வேறு எவர் வந்து காப்பார்கள் என்று எண்ணங்கொண்டு நீ, நெய்யால் ஊட்டப் பெற்ற தீயினுள் புகுந்து உன்னுடைய உயிரைத் துறந்தனையோ?(அறியக் கூடவில்லையே!)

**விரிப்பு:**

இப் பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

இதுவும், முன்னைய பாடலில் பாடப்பெற்ற, தீப்புகுந்து ஆவி துறந்த *விருகம்பாக்கத்து அரங்கநாதனைத்* தம் மூன்று மக்களொடும் சூழ்ந்து நின்ற மனைவி அரற்றிப் பாடியது.

*எம்மை* - என்றது, அவள் தன்னையும் தன்னைச் சார்ந்த பெற்றோர் முதலியரையும் சுட்டியது.

*தம்மை* - என்றது தமிழின மக்களை.

*கொம்மைப் பருவம்* - அழகும், நலமும், வலிமையும் சான்ற இளமைப் பருவம்.

*சின்னாள் கூடல்* - குறைந்த காலமே கூடியிருந்த இளமை வாழ்வைச் சுட்டியது. குறைந்த கால இளமை வாழ்வில்.

*நினக்கு யான் பயந்த நின்மகார்* - நின்னால் கருப்பெற்ற யான் ஈன்றளித்த நின் மூன்று குழந்தைகள்.

*முகில்படு முன்றில்* - வானில் தோய்ந்த முகிலிடையில் தடவி நின்ற அரசமனை முன் கோபுரத்தில்.

*முக்கொடி நிறுத்தி* - சேர, சோழ, பாண்டியரின் வில், புலி, கயல் ஆகிய மூன்று கொடிகளையும் நிறுத்தி.

*அகல் நெடுங் கொற்றத்து* - அகன்று நீண்டிருந்த ஆட்சி எல்லையில்.

*அரசாண்டிருந்த* - ஆட்சி செய்து கொண்டிருந்த;

*ஒருமா முதுமொழித் திரு* - உலகின் ஒருபெரும் முதுமை மொழியாகிய தமிழ் என்னும் செல்வி.

*திருவையும் காவார்* - அத்தமிழ் ஆகிய செல்வியையும் காவாத பற்றும் ஆக்கவுணர்வும் அற்றவர்.

*வடவர் ஊன்றிய தமிழ்மா நன்னிலம்* - வடநாட்டு ஆரியர் முதலியர் வந்து நிலைப்பட்டுவிட்ட தமிழ் நாடாகிய நல்ல நிலம்.

*கெடா அது நிறுத்தும் சிறார்* - தமிழ்நாட்டை, அகப்புற அழிவுகளால் சிதைந்து போய்விடாமல், அதன் பெருமையைக் காத்து நிற்கும் இந்திப் போராட்ட இளைஞர்.

இந்திப் போராட்டக் காலத்து இது நடந்தமையாலும், அப் போராட்டதுடன் தன் தானும் ஒருவனாய் நின்று, இவன் உயிர்துறந்தது நிகழ்ந்தமையாலும், ஈண்டுச் சிறார் என்றது இந்திப் போராட்ட இளைஞரைக் குறித்தது.

*செற்றலர் எதிரின் கிளையொடு பொருதும் அற்றைநாள் தமிழர்* - பகைவர்கள் தமிழ்நாட்டின் மேற் போர் தொடுப்பாராகில், தமிழருள் நிலத்தால் வேறுபட்டிருந்த அனைத்துக் கிளையினரும் ஒன்றாய் இணைந்து, பகையை எதிர்த்துப் போராடும் இனவுணர்வு வாய்ந்த முன்னாளைய தமிழர்.

*போலாது இழிந்த* - (அவர்களைப்) போல் அல்லாமல் அறியாமையாலும் அடிமைத் தன்மையாலும் தாழ்ந்து இழிந்து நிற்கின்ற.

*இற்றைநாள் மாக்கள்* - இன்றைய நாளில் உள்ள, இனநலனும், மனநலனும் மானநலனும் திரிந்த மக்களைப் போன்ற மாக்கள் - விலங்குகள்.

*அறிந்தும்* - 'தம் மொழி இன, நாட்டு நலன்களையே காத்துக் கொள்ளாமல் அடிமையாகிவிட்ட இவர்களா போராட்ட வீரன் ஒருவனின் பெண்டு பிள்ளைகளைக் காக்கப் போகிறார்கள். ;' மாட்டார்கள்' - என்பதை நீ அறிந்து கொண்டிருந்தும்.

*எமை விடுத்து* - எங்களைத் தமியராக இவர்களிடையில் விட்டு விட்டு.

*யாவர் காக்குமென் றெண்ணி* - இவர்கள் இனத்துக் குரியவராகிய எங்களை, இவர்களையன்றி, வேறு எந்த இனத்தவர் வந்து காக்கப் போகிறார்கள் என்று எதிர்பார்த்து.

*தீப்புகுந்து ஆவி துறந்தனை நீயே* - கன்னெய்யால் கொளுவப் பெற்ற தீயினுள் நின்னுடலை அழியச் செய்து, ஆவியைத் துறந்து கொண்டனை, நீயே!

'தமிழை மட்டுமே காக்கப் போராடிய நீ, உன்னையே நம்பியிருக்கும் எங்க்ளைத் தங்களையே காத்துக் கொள்ள இயலாத இவ்வினத்தாரிடையில் தமித்திருக்க விட்டுவிட்டு, நின் ஆவியை எரிப்புகுந்து மாய்த்துக் கொண்டனையே, சொல், இனிமேல் எங்களைக் காப்பவர் யாவர்?' என்று தன் மன இறுக்கத்தை அவிழ்த்து அவன் மனைவி அரற்றி அழுதாள்' என்பதாகும் இப்பாடல்.

இப்பாடல் முன்னது திணையும் துறையும் ஆம் என்க.

திணையும் துறையும் புதியன.

## 63 அன்னையும் மறந்தாள்

அன்னையும் மறந்தாள்; ஆயமும் மறந்தாள்;
இன்ன பண்பினன் இனையரு ளாளன்
என்றிவை தேராது தந்தையும் மறந்தாள்;
மற்றிவள் விழுமத்து மன்றுகொள நின்ற
சிற்றில் ஆடுஞ் சிறுமியும் மறந்தாள்;
கிளைகிளை வந்த வுறவு மெண்ணாது
இளையோன் பாங்கின் விளைவும் ஓராது
நெருநல் பாவைக்கு அறுவை உடுத்துச்
சிறுவெண் முத்தத்துத் தொடையல் சாற்றி
மறுகின் ஆடிய குறுநுதல்
பறந்திய சென்றது யார்கொளப் பயின்றே!

பொழிப்பு:

(மறத்தற்கே இயலாதவளாகிய தன்னைப் பெற்ற) அன்னையையும் மறந்தாள்; (தன்னொடு சேர்ந்து விளையாடுகின்ற தன் அகவையொத்த) தோழிகளையும் மறந்தாள்; புறவுலகில் ஒருவனை இன்ன பண்பை உடையவன், இன்ன அருளாண்மை உடையவன் எனும் இம் மனவியல் கூறுகளைத் தேறவறியாத இவள், (அவ்வாறு தேறி இவளுக்குப் பொருந்தியவனை அறிவிக்கும் திறனுள்ள) தன் தந்தையையும் மறந்து போனாள்; மற்றும், இவள் தன் வாழ்வை அமைத்துக் கொள்ளும் பெருமையினாலும் தன்மையினாலும், அடுத்துள்ள தன் மணவாழ்வை அமைத்துக் கொள்வதற்குத் தொடர்ந்து நிற்கின்றவளும், இக்கால் சிற்றில் கட்டி விளையாடிக் கொண்டிருப்பவளும் ஆகிய தன் தங்கையாகிய சிறுமியையும் இவள் மறந்து விட்டாள்.

வழிவழியாக வந்த உறவினர்களின் தொடர்புகளையும் எண்ணாமல் இவள் பின்பற்றிச் சென்ற இளையவனின் உறவால் தொடரப்போகும் விளைவுகளையும் ஆராய்ந்து பாராமல், நேற்று (என்னும் கால நிலையில்), (தான் வைத்துக்கொண்டு விளையாடிய ) மரப்பாவைக்கு, ஆடைகளை உடுத்தியும், சிறிய வெண்முத்துக்களால் ஆன மாலையினைச் சாற்றியும் தெருவில் ஆடிக்கொண்டிருந்த சிறிய நெற்றியை உடைய இவள், (வெளியூர்க்குத் தன் காதலனுடன்) பறந்து சென்றது யார் பயிற்றுவித்த பயிற்சியினால்?

**விரிப்பு :**

*இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது*

*தான் அன்புடன் வளர்த்த மகள், தன் அன்னையையும் தன்னோடு ஒத்த ஆயத்தையும், தன்னைப் பேணிப் புரக்கும் தந்தையையும், தன் உடன் பிறந்த தங்கையையும், தன் உறவினர்களை மறந்தும், எண்ணிப் பாராமலும், தான் காதலித்து உடன்போகிய இளைஞனால் வரும் விளைவுகளையும் என்ணிப்பாராமல் விளையாடிக் கொண்டிருக்கும் மிக்கிளம் பருவத்தினளாகிய இவள் வீட்டை விட்டு வெளியேறிப் போனது, யார் பயிற்றுவித்த துணிவினால் என்று செவிலித்தாய் புலம்பி வருந்தியதாகும் இப்பாடல்.*

***அன்னையும் மறந்தாள்*** *– மறப்பதற்கும் அரியளாகிய தன்னைப் பெற்ற தாயையும் மறந்தாள்.*

*'உம்'மை சிறப்பும் அருமையும் உணர்த்தியது.*

***ஆயமும் மறந்தாள்*** *– தன்னோடொத்த மகளிர் கூட்டத்தையும் மறந்தாள்.*

*அன்னைக் கடுத்தபடி தன்னொடு நெருங்கியிருந்து பழகியும் பயின்றும் ஆடியும் மகிழ்பவர் அவளொத்த தோழியராகலின் அவரையும் மறந்தாள் என்பது வியப்புக்குரியது.*

***இன்ன பண்பினன், இணையருளாளன் என்றிவை தேராது*** *– இன்ன பண்பினை உடையவன், இந்த அளவின் அருளாளன் என்னும் இவ்வியற்கைப் பண்புகளைத் தேரவியலாதவளாகி.*

*பெண் ஒருத்தி, தான் மணக்கப்போவானைப்பற்றி அறிந்து கொள்வதற்கு இன்றியமையாத குணங்கள் இரண்டு ; அவை அவனது பண்பும் அருள் தன்மையுமாம் என்க.*

*பண்பு - அவன் அவளை வைத்து நடத்தும் இல்லறத்திற்கும், அருள், அவள்பால் அவன் கொள்ளும் ஆர்வத்திற்கும் அக்கறைக்கும் அடிப்படையாம் என்க.*

*இனி, இவ்விரண்டு பண்புகளையும் உலகியலறிவு சான்ற முதியோரே அன்றி அவன் புறவெழிலால் மயங்கும் காதற்பெண் அத்துணைச் சிறப்பாகத் தேர்தற்கு இயலாததாகையின் 'தேராது' என்றாள்.*

*இனி அவ்வாறு தேர்தற்கு உரியவருள் அவள் தந்தையே தக்கவராகலின், அக் கருத்தினைத் தொடர்ந்து அத்தகு* ***தந்தையும் மறந்தாள்*** *– என்றாள் என்க.*

*மற்றிவள் விழுமத்து, விழுமம் - பெருமை, மற்று, இவள் பெருமையினாம்; தன்மையினாலும் சிறப்பு, நன்மை எனும் பலபொருள் படும் ஒரு சொல்.*

*மன்றுகொள நின்ற சிற்றில் ஆடும் சிறுமி* : திருமணத்திற்கு அணியமாகி நிற்கின்ற, சிற்றில் விளையாடும் தங்கையாகிய சிறுமி.

அக்கையின் திருமணம் நிகழ்ந்து, அதன் பெருமையினதும் நன்மையினதும் அடிப்படையில் தங்கைக்கும் மணம் வந்து கூடும் தன்மை ஈண்டுக் குறிக்கப்பெற்றது.

*பெருமை* - அக்கை மணந்து கொண்ட மணமகனின் தன்மையால் வரும் குடும்பச் சிறப்பும், அவனுக்கொத்த தகுதியில் தங்கையையும் மணம்பேச வரும் மணமகனது சிறப்பும்.

*நன்மை* - அக்கையை மணந்து கொண்டவனால், அவள் தங்கையின் திருமணத்திற்கு வரும் குடும்பவுதவி; அது மணவினைத்துணையும் பொருளுதவியும் ஆகலாம் என்க.

*கிளைகிளை வந்த உறவு* – மரபான் தொடர்ந்து வரும் குடும்ப உறவு.

குடும்ப உறவு மேலும் தொடர்வான் வேண்டி, இவளை மணங்கொடுக்கவும், மணந்து கொள்ளவும் தகுதியுடைய உறவினர்கள்.

அவர்களையும் எண்ணாது, அவர்கள் இவளை மணந்து கொள்ளவியலாது போனதால் வரும் ஏமாற்றத்தையும் அ'தால் வரும் பகையையும் சிறிதும் உணராமல், அயலான் ஒருவனுடன், அவனைத் தன் விருப்பமாக மணந்து கொள்ள வேண்டி வேற்றூர் போகினளே என்று புலம்பினாள் என்க.

*இளையோன் பாங்கின் விளைவும் ஓராது* – இவளை உடன் போக்கிச் சென்ற இளைஞனாகிய இவள் காதலனின் புதிய கூட்டுறவால் வரும் பலவகையான எதிர்விளைவுகளையும் ஆராய்ந்து பாராமல்.

புதிய உறவால், இவளை முன்கூட்டி அறியாத புக்கக உறவினர்களாலும், இவள் பெற்றோரின், உற்றாரின் பெருமையறியாத புதுவுறவுக் கணவனாலும், அறியாமையும் மதிப்பின்மையும் கலந்து ஏற்படப்போகும் எதிர்விளைவுகள் என்க.

*நெருநல்* – நேற்று. கால அண்மைநோக்கி, உலகியல் வழக்கில் நேற்று என்றாள்.

*பாவைக்கு* – மரப்பாவைக்கு.

*அறுவை உடுத்து* – ஆடையை உடுத்தி.

*சிறுவெண் முத்தத்துத் தொடையல்* – சிறிய வெள்ளிய முத்துகளால் ஆகிய மாலை.

*சாற்றி* – சாற்றுவித்து, அணிவித்து.

*மறுகின் ஆடிய குறுநுதல்* – தெருவில் இறங்கி விளையாடிய சிறிய நுதலையுடைய இப் பெண்.

நெருநல் பொழுதில், மரப்பாவைக்கு ஆடையுடுத்து முத்து மாலை அணிவித்து விளையாடிய இச் சிறுபெண், அவ்விளையாட்டைப் போலவே இவ்வுடன் போக்கையும், இவள் கணவனையும் கருதி, மேற்கொண்டாள் போலும் என்று புலம்பினாள் என்க.

*பறந்திய சென்றது* – வீட்டை விட்டு வெளியேறிச் சென்றதைக் கூட்டைவிட்டுச் சிறகு முளைத்த பறவை பறந்து சென்றதுபோல் என்று கருதிக் கூறினாள் என்க. இய-விரைவு அசை.

*யார் கொளப் பயின்று* – யார் பயில்வித்துப் பயின்று கொண்டு.

தான் வளர்த்த அருமை மகள், தான் பெற்ற அன்னை தந்தையரையும் உற்றார் உறவினரையும் இத்துணை விரைவில் துறந்தும் மறந்தும், புதிய உறவான காதல் இளைஞனுடன் வேற்றூர் சென்றாளே, இம் மனத்துணிவை வருவித்தவரும் பயில்வித்தவரும் யாரோ அறிகிலேனே என அலமந்து புலம்பினாள் செவிலி என்க.

இப்பாடல் *பாலைத்* திணையும் *செவிலி புலம்பல்* என்னும் துறையும் என்க.



## 64 அறிதிகொல் மருந்தே

மருத்து வோனே! மருத்து வோனே!
திருத்தாக் கொடுநோய்க் கையிகந் தோரைக்
கருத்துகத் தணிக்கும் மருத்து வோனே!
பொறிப்புல னைந்துஞ் செறித்த வாகி
நெஞ்சு புதைத்து நஞ்சுரை குயில்வோர்
அஞ்சு வினைக்குயிர் அஞ்சா துழல்வோர்
நன்றி கொன்றவர் நன்னடைப் போலியர்
என்றிவர்க் கறிதிகொல் மருந்தே
கன்றிய நெஞ்சோர் களிப்புற வுரைமே!

**பொழிப்பு :**

மருத்துவோனே! மருத்துவோனே! நலப்படுத்தவியலாத கொடிய நோயினால், பலராலும் கைவிடப்பெற்றவர்களைக் கருத்துடன் (கவனித்துத்) தணித்து நலமாக்கும் (ஆற்றல் வாய்ந்த மருத்துவோனே! ஐந்து புலன்சார்த்த பொறிகளும் நல்ல முழுத்திறனுடன் இயங்குகின்ற நிலையில், தம் (உண்மை) நெஞ்சைப் புதைத்துக் கொண்டு, நஞ்சு தோய்ந்த இனிமை உரைகளைப் பேசுவோர், உலகம் அஞ்சுகின்ற செயல்களை அஞ்சாமல் செய்து திரிவோர் செய்த நன்மைகளைக் கொன்றவர்கள், புறத்தே நல்ல நடையினராகிய அகத்துப் போலியர் - என்னும் இவர்களை நலப்படுத்தும் மருந்தினை அறிவாயோ? அறியின், (இவர்களின் கொடிய நிலைகளைக் கண்டு) மனம் நொந்துபோய் இருப்பவர், மகிழ்வெய்தும்படி உரைப்பாயாக.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச்சார்ந்தது.

உலகியலில், நல்ல உடல் நலன்கள் சார்ந்தவர்களாகி, உள்ளத்தின் நல்லுணர்வுகளைப் புதைத்துக் கொண்டு, நஞ்சுபோலும் தீமை பயக்குகின்ற உரைகளை இனிமையாகப் பேசுவோர்களாலும், மக்கள் அஞ்சுகின்ற கொடிய செயல்களைத் துளியும் அஞ்சாமல் செய்வோர்களாலும் பிறர் செய்த உதவிகளுக்குரிய நன்றியுணர்வு இல்லாதவர்களாலும் வெளியில் நல்ல நடைமுறைகளை உடையவர்களாகி, அகத்தே வேறுபட்ட உணர்வுகளைக் கொண்ட போலி மாந்தர்களாலும் உள்ளம் நொந்து வருந்திய ஒருவர், பிறரால் நலமாக்க முடியாமல் கைவிடப்பட்ட கொடிய

நோயாளர்களையும் குணப்படுத்துகின்ற திறன்வாய்ந்த மருத்துவரிடம், மேற்கண்டாரைக் குணப்படுத்தும் மருந்தும் உளதோ? உண்டாயின் தெரிவிக்க வேண்டிக் கொண்டதாகும், இப்பாடல்.

*மருத்துவோனே மருத்துவோனே* - என இருமுறை அடுக்கியது, இன்றியமையாத் தேவையையும், மருத்துவரின் பெருமையையும் உணர்த்தியது.

*திருத்தாக் கொடுநோய்* – எவராலும் நீக்கவியலாத கொடிய நோயினால்.

*கையிகந்தோரை* : கைவிட்டவர்களை, கைவிடப்படுதல்- நோய் கடுமையானதால் அதை நலமாக்க இயலாமல் நோயாளிகளைக் கைவிட்டு விடுதல்.

*கருத்துகத் தணிக்கும்* – கருத்து மிகும்படி கவனித்து அந்நோயைத் தணிக்கும்.

மருத்துவோனே என்று மூன்றாம் முறையும் விளித்தது இனி கூறப்போகும் கருத்தையும் கவனிக்கவேண்டும் என்னும் வேண்டுதல் பொருளைக் குறித்தது என்க.

*பொறிப்புலன் ஐந்தும் செறித்தவாகி* – பொறிகள் மேல் நின்று இயங்கும் ஐந்து புலனறி நிலைகளும் செறிவுடன் இருந்து பழுதின்றி இயங்குவன வாகி.

*நெஞ்சு புதைத்து நஞ்சுரை குயில்வார்* – நெஞ்சு களனாக நின்று இயங்கும் மனச் சான்றினைப் புதைத்துவிட்டு, வாயில் நஞ்சுபோல் தீமை செய்யும் உரைகளைக் குயில்போல் இனிமையாகக் கூறுவார். குயிலுதல்- இனிமையாகப் பேசுதல். புணர்ச்சியில் உகரம் கெட்டது.

*அஞ்சு வினைக்கு* – மக்கள் அஞ்சத்தக்க செயல்களுக்கு.

*உயிர் அஞ்சாது உழல்வோர்* – உயிர்க்கு வருந் துன்பத்திற்கு அஞ்சாமல் சுழன்று இயங்குவோர்.

*நன்றிகொன்றவர்* – செய்த உதவிகளை நினைத்துப் பாராமல் அவற்றைச் செய்தவர்களுக்கே தீங்கு செய்பவர்.

*நன்னடைப் போலியர்* – புறத்தே நல்ல குணமுள்ளவர்கள்போல் நடந்து அகத்தே வேறுபடும் போலி மாந்தர்கள்.

*என்று இவர்க்கு* – என்னும்படியான இப்படிப்பட்ட உளநோய் கொண்டவர்களுக்கு.

*அறிதிகொல் மருந்தே* – அறிவாய் கொல் தக்க மருந்தினையே.

கொல் - அசைநிலை இனி கொல் மருந்தே எனக் கொண்டு, அவ்வாறு

மருந்தில்லாவிடினும், அவர்களைக் கொன்றழிக்கும் மருந்தையாகிலும் அறிவையோ என்று அசைக்கும் பொருள்கொண்டு உரைக்கலாம் என்க.

*கன்றிய நெஞ்சோர்* – மேற்கூறிய நால்வகை மக்கள் என்னுந் தோற்றத்துத் திரிபுள்ளம் கொண்டவர்களைக் கண்டு கொண்டு நொந்து கசிந்துபோன உள்ளமுடையவர்கள்.

*களிப்புற உரைமே* - மகிழ்வுறும்படி கூறுவாயாக.

பொதுவான நல்ல மாந்தர்களுக்குரிய வகையில் நோய்ப்படாத உறுப்புகளைக் கொண்டிருப்பினும், நஞ்சுள்ளம் உடையவர்களாக இனிய உரைகளைப் பேசுபவர்களையும், தீயனவற்றை அஞ்சாமல் செய்பவர்களையும், நன்மை செய்தார்க்கும் தீங்கு செய்யும் நன்றியற்றவர்களையும், நல்லவர்கள் போல் நடக்கும் போலி மாந்தர்களையும். திருத்துவதற்கு ஏதேனும் மருந்து உண்டோ, தீராமல் கைவிடப்பட்ட நோயாளர்களையும் மிக்கக் கருத்துடன் கவனித்து அவர்களின் நோய்களைத் தீர்க்கின்ற மருத்துவனே ! அவ்வாறு மருந்து உளதாயின், அந்த மாந்தத் திரிபுள்ளவர்களுக்கு அதனைக் கொடுத்து அவர்களைத் திருத்தி, அவர்களைக் கண்டு உள்ளம் வருந்துகின்றவர்கள் மகிழுமாறு, அவர்களை நல்லவர்களாகச் செய்வாயாக என்றபடி.

இப்பாடல் *பொதுவியல்* என்னும் திணையும், *முதுமொழிக் காஞ்சி* என்னும் துறையும் என்க.



# 65 குரக்கின் களிநடம்

*காசிற் கில்லை; கந்தற் கில்லை;*
*முசுநர் இளங்கை கொட்டி முழக்கி*
*அகடு வலிக்கும் உகுநகைக் கில்லை;*
*தகவுப் படுத்துந் தன்னைக் கோற்குத்*
*தாண்டியும் சுழன்றும் வேண்டிய ஆடுங்*
*காண்டகு குரக்கின் களிநடம் போல*
*என்னைக் கல்லா லன்னை*
*நன்னய வுரைக்கு மன்னாது நெஞ்சே!*

**பொழிப்பு :**

காசுக்காகவும் இல்லை ; கந்தல் துணிகளுக்காகவும் இல்லை (பார்க்கக்) கூடுவோர் இளைய கைகள் தட்டி வரவேற்று, மகிழ்ச்சியால் பேரொலி எழுப்பி வயிறு வலிக்க, உகுக்கின்ற நகை முழக்கத்திற்காகவும் இல்லை ; தன்னை நெறிப்படுத்தி இயக்குகின்ற தன் தலைவனின் கையிலுள்ள கோலுக்கு இசைந்தே, அதைத் தாண்டவும் சுழலவும் அவன் விரும்பிய வகையில் எல்லாம் ஆடுகின்ற, காணத்தகுந்த குரங்கின் களிப்பான நடனத்தைப் போல, என் தலைவனுக்கு அல்லாமல் அன்னையினது அன்பான மெல்லுரைகளுக்குப் பொருந்துவதில்லை என் நெஞ்சம்.

**விரிப்பு:**

இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

தலைவன் மீது ஆராக் காதல் கொண்ட தலைவி, தன்காதலைத் தன் நெருங்கிய தோழிக்குக் குறிப்பாக உணர்த்தியதாகும் இப்பாடல்.

தெருவில் நடந்த குரங்காட்டத்தைத் தன் இல்லத்தினின்று கண்டு களித்த தலைவி, அருகிருந்த தோழியிடம், அக்குரங்கைக் காட்டி, அது போல்வதே ஆகும் தன் நிலையும் என்று கூறித் தன் தலைவனிடம் தனக்கு இருக்கும் ஈடுபாட்டைப் புலப்படுத்திக் கூறினாள் என்க.

ஈண்டு இத் தெருவிலாடும் இக்குரங்கு, காசுக்காகவும் ஆடவில்லை, வேடிக்கை பார்க்கின்றவர்கள் கொடுக்கும் கந்தல் துணிகளுக்காகவும் ஆடவில்லை. அல்லது அங்குக் கூடியுள்ள சிறுவர்கள் குரங்கின் வேடிக்கைகளைப் பார்த்துக் கைகளைத் தட்டி மகிழ்ந்து ஆரவாரம் செய்து

எழுப்புகின்றவர்களின் சிரிப்பொலிக்காகவும் ஆடவில்லை. தன்னை அவ்வாறெல்லாம் பழக்கி, ஆட்டுவிக்கின்ற தன் தலைவனிடம் இருக்கிற கைக்கோலுக்காகவே அதைத் தாண்டியும் அதை வைத்துக் கொண்டு சுழன்றும் அவன் விரும்பிய வாறெல்லாம் எல்லாரும் காணத்தகுந்த மகிழ்வான நடனத்தை ஆடிக் காட்டுகின்றது.

தானும் அப்படித்தான்; தன் தலைவன் தன்னை அன்பால் பழக்கிக் காதல் என்னும் உணர்வால் ஆட்டுவிக்கின்றான். எனவே தன் தாய் தன்னிடம் நயமாக உரைக்கும் பிற உரைகளுக்கோ, அவர்கள் தனக்கு உணவும் உடையும் தந்து மகிழ்ந்து புரக்கின்ற அன்புணர்வுக்கோ தான் கட்டுப்பட வியலவில்லை. என்று தோழியிடம் தன் தலைவனிடம் தனக்குள்ள ஆழமான காதலை உணர்த்திக் கூறியதாகும் இப்பாடல்.

*காசிற்கில்லை கந்தற்கு இல்லை* – குரங்காட்டியின் கையிலுள்ள குரங்கு மக்கள் கொடுக்கும் காசுக்கோ, அல்லது அவர்கள் கொடுக்கும் கந்தல் துணிக்கோ ஆடுவதில்லை.

அதுபோல் தானும், தன் பெற்றோரோ அல்லது தன்னை மணம் செய்து கொள்ள விரும்புவான் வேண்டி வருவோனோ தனக்குப் பொருள் நலமும் உடைநலமும் கொடுப்பினும், தன் உள்ளம் அவற்றை நாடி அவர்களுக்குக் கட்டுப்பட்டு இயங்குவதில்லை என்றாள் என்க.

*மூசுநர்... இல்லை* – குரங்காட்டத்தைப் பார்க்கக் கூடியிருப்பவர்களுள் இளையோர் தம் கைகளை மகிழ்ச்சியால் கொட்டி, வயிறுகள் வலிக்கும்படி சிரிக்கின்ற பேரொலிக்காகவும், அக்குரங்கு மகிழ்ந்தோ அரண்டோ ஆடவில்லை.

அதுபோல், தன் பெற்றோரும் மற்றோரும் தன் அகவையையும் அழகையும், நடைமுறைகளையும் பார்த்து மகிழ்ச்சியாலோ அன்றி இகழ்ச்சியாலோ, ஒருபுறம் பாராட்டவும்-மறுபுறம் அவர் தூற்றவும் செய்யினும், அவ்வாரவாரங்களக்காகவும் தான் அவர்கள் வழி நிற்கவும் இயலாது.

*தகவுப் படுத்தும் தன்னைக் கோற்கு* – அதனைப் பயிற்றி இயக்கும் குரங்காட்டியாகிய அதன் தலைவனின் கையில் உள்ள கோலுக்கு இசைந்தே.

*தாண்டியும்...ஆடும்* – தாண்டவும் சுழலவும் ஆக அவன் விரும்பியபடியெல்லாம் ஆடுகின்ற.

*காண்டகு குரக்கின் களிநடம் போல* – காண்பதற்குகந்த குரங்கினது மகிழ்வான நடனத்தைப் போல.

*என் ஐக்கு அல்லால், அன்னை நன்னய உரைக்கு* – என் தலைவனின் அன்புரைக்கு அல்லாமல், என் தாயின் நன்மையும் நயன்மையும் சான்ற உரைக்கு.

*மன்னாது நெஞ்சு* – பொருந்தாது என் நெஞ்சம்.

குரங்கானது, தன்னை ஆட்டுவிக்கும் தன் தலைவனது கையிலுள்ள கோலுக்கு இயைந்து நடப்பதைப் போல், யானும் என் தலைவனது காதல் உணர்வுக்குக் கட்டுண்டு நடக்கின்றேன் என்றாள்.

குரங்கைத் தகவுப் படுத்துவது அவனது கோல், அதுபோல் தலைவியைத் தகவுப்படுத்துவது அவனது காதலன்பு. தகவுப் படுத்துதல், உடன்பட்டு ஒப்ப நடக்கச் செய்தல்.

கோலின் பொருட்டாக அக் குரங்கு தாண்டியும் சுழன்றும் களிநடம் பயில்வது போலத் தலைவியும் தலைவனின் காதற்பொருட்டாக, இல்லந்தாண்டிப் புறத்தே சென்றும், அன்பால் அவனைச் சுழல (சுற்றி) வந்தும், காதல் உணர்வால் களிப்புறக் களவு ஆடியும் வருகின்றதைத் தலைவி தோழிக்குக் குறிப்பாய் உணர்த்தினாள் என்க.

'அன்னையின் உரை நல்லது ; நயமானது; எனினும் என் உள்ளத்தே அது பொருந்துவது இல்லை. குரங்கு தன்னைச் சுற்றியிருப்பவரின் மகிழ்வும் பாராட்டும் நிரம்பிய சிரிப்பொலிக்கு இயையாது தன் தலைவனின் கைக்கோலுக்கே ஆடுவதுபோல், நானும் என் தலைவனின் காதல் உணர்வாகிய கோலுக்கே இவ்வாறெல்லாம் நடக்க வேண்டி உள்ளது, என்றாள் தலைவி.

குரங்காட்டத்தைப் பார்த்துக் கூட்டத்தில் உள்ள இளவோர் கைகொட்டி நகைப்பது போலத் தன் காதல்-களவு-நடவடிக்கைகளையும் தங்களின் அன்புணர்வை அறியாத மூடர் இழித்தும் பழித்தும் அவர் தூற்றுவதைக் குறிப்பாகவும், ஆனாலும் அதைத் தான் பொருட்படுத்தாததை உறுதியாகவும் உணர்த்தினாள் தலைவி என்க.

'மன்னாது நெஞ்சம்' என்ற தன் நெஞ்சம் தலைவனின் அன்பான காதலுணர்வுக்கு மட்டுமே அல்லாமல், பிறர் எவருடைய எவ்வுரையானாலும் அதற்குப் பொருந்தவும் பொருந்தாது, நிலைப்பாடும் எய்தாது என்றும் கூறினாள் என்க.

இனி குரங்கு தன் பெற்றோரையும் பிறந்தவிடத்தையும் விட்டு வெளியேறித் தன் தலைவனின் வாழ்வோடு பொருந்தி வாழ்வது போல், தானும் தன் பெற்றோரையும் பிறந்தவிடத்தையும் விட்டு வெளியேறித் தன் தலைவனோடு பொருந்தி வாழவிருக்கும் குறிப்பைத் தலைவி தோழிக்கு உணர்த்தி அறத்தொடு நின்றாள் என்க.

இப்பாடல் *குறிஞ்சி* என் திணையும் *'தோழிக்குத் தலைவி அறத்தொடு நிற்றல்'* என் துறையும் என்க.



# 66 ஈக மன்றோ ஈகம்

மானமும் உயிரும் வாழ்வும் கருதி
வானமும் நிலமும் நீரும் கடந்து
கானமும் புகுந்து களத்தினும் நெரிந்து
தானும் குடும்பும் இனமும் இடர்ப்பட
ஆயிரம் ஆயிரம் இளையரும் பெண்டிரும்
மாய்வதும் திரிவதும் ஆகிய நிலைகொள்
ஈழத் தமிழர் இடையினில் தோன்றிக்
காழ்த்த நெஞ்சின் கன்னி இளமுகை -
தன்னையும் இழந்து தமரையும் இழந்த
அன்னைக் குலத்தோர் அறங்கூர் மறத்தி -
'தானு'வென் பெயரினள் தன்னினம் அழித்த
வீணனுக் கெதிரா வெகுண்ட வெஞ்சினம்
நெஞ்சினும் உயிரினும் நிலைத்த நினைவொடு
ஒருதனி நின்றே ஊர்நடு சிதைத்த
ஈக மன்றோ ஈகம்
ஆகுமோ உலகவன் அழிவிலாப் புகழ்க்கே!

பொழிப்பு :

தன்னுடைய மானத்தையும் உயிரையும் வாழ்க்கையையும் காத்துக் கொள்ளக் கருதி, வானத்தையும் நிலத்தையும் நீரையும் கடந்து (வெளிநாடு ஏகியு)ம், (அவ்வாறு ஏகவியலாதவர்கள் அங்கேயே உள்ள) காடுகளில் புகுந்து (ஒளிந்து)ம் போராட்டக் களத்தில் (சிக்கிச்) சிதைந்தும் உயிரிழந்தும், அவரவரும், அவரவர் குடும்ப உறுப்பினர்களும், அவர்களின் இனமக்களும் இடர்கள் படுகின்ற, பல்லாயிரக்கணக்கான இளைஞர்களும், பெண்டிர்களும், மாண்டு போவதும், (ஊர் ஊராக, நாடு நாடாக ஏதிலிகளாகத்) திரிவதும் ஆகிய நிலைகளைக் கொண்டுள்ள ஈழத்தில் உள்ள தமிழர்களின் நடுவே பிறந்து தோன்றி, வயிரம் போன்ற (உறுதியான) நெஞ்சுடைய, கன்னிப் பருவத்தின் இளமை மொட்டுப் போன்றவளும், தன்னையும் (கற்பளவில்) இழந்தும், தன் குடும்பத் தினரையும் உறவினரையும் சாவளவில் இழந்தும் விட்ட - தாய்மைக் குலத்தில் தோன்றிய அறவுணர்வு கூர்தலுற்று மறவுணர்வாய் நின்ற மறத்தியும்- ஆகிய 'தானு' என்னும் பெயரை

உடையவள். தன் இனமாகிய தமிழினத்தை அழித்து வரும் வீணான ஆட்சியைச் செய்தவனாகிய இராசீவுக்கு எதிராக, வெகுண்டெழுந்த (வெப்பம் மிகுந்த பழிவாங்கத்தக்க) கடுஞ்சினம் தன் நெஞ்சத்திலும், உயிரிலும் (கலந்து) நிலைத்துவிட்ட மாறாத எண்ணத்தொடு, தான் ஒருத்தியே தனித்து நின்றாளாகி, ஊர் மக்களுக்கு நடுவில் அவனைச் சிதைத் தழித்துத் தன்னையும் இழந்து நின்ற ஈகமன்றோ (மற்ற எல்லா நிலையிலும் பிறர் செய்த ஈகங்களை விடச் சிறந்த) ஈகமாகும்! இவ்வகையில் அவள் பெற்ற அழிவிலாத புகழ்க்கு இவ்வுலகமே ஈடு ஆகுமோ ? (ஆகாது என்க.)

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது.

தமிழீழத்தில் நிகழ்ந்து வருகின்ற விடுதலைப் போராட்டக் காலத்து இடையில் நிகழ்ந்த, இந்தியாவின் தலைமையமைச்சராகவிருந்த இராசீவ் என்ற இந்திராவின் மகனும், சவகர்லால் நேருவின் பெயரனும், இலங்கைத் தமிழர்களினின்று தோன்றி, இராசீவ் இலங்கைக்கு அனுப்பிய அமைதிப்படை என்ற தமிழின அழிவுப் படையால் தாக்குண்ட தானு என்ற ஓர் இளம் பெண் தன் உடலிற் பிணித்த வெடிகுண்டுடன் நெருங்கி மோதி அழிக்கவும் அழியவும் பட்ட, அளவிடற்கரிய ஈகச் சாவைப் போற்றிப் புகழ்ந்து கூறியதாகும் இப்பாடல்.

'தானு' என்னும் பெயரினள், தன்னினம் அழித்த வீணனாகிய இராசீவுக்கு எதிராக வெகுண்டு எழுந்து, இலங்கையினின்று தமிழகம் போந்து, தனி ஒருத்தியாக, ஊர்மக்கள் நடுவில் நின்று வெடிகுண்டு பிணித்த உடம்புடன் அவனை மோதியழித்தலால், தானும் தன் இன்னிளவுயிர் நீத்துக் கொண்ட ஈகமறம், வேறெந்த ஈகத்தினும் தனிச்சிறப்பும் பெருமையும் கொண்டது ஆகலின் அ'து அழிவிலாப் புகழ் பெற்றது என்க.

இப்பாட்டு நான்கு வேறான செயற்படி நிலைகளைக் கொண்டது. ஆனாலும் நான்கு செயல்களும் படிப்படியே ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டது.

முதலது, தமிழீழத்தில் இனத்தாக்கம் நேர்ந்து, சிங்கள இனத்தாலும், இராசீவ் இந்தியாவினின்று அமைதிப்படை என்னும் பெயரால் அனுப்பி வைத்த அழிம்புப் படையாலும் தாக்கமுற்ற தமிழீழத் தமிழர், அது பொறாது, தங்களின் மானத்தையும் உயிரையும் வாழ்வையும் காத்துக்கொள்ள வேண்டி, வானூர்தி வழி வானையும், இயங்கிகள் வழி நிலத்தையும், கப்பல் வழிக்கடலையும் கடந்து வெளிநாடுகளுக்கு ஏகியதும்,

இரண்டது, அவ்வாறு வெளிநாடு ஏகுவதற்கியலாத தமிழ மக்கள், அங்குள்ள கானகங்களில் புகுந்து ஒளிந்து வாழ்தலும், இளவோராக உள்ள பல்லாயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் விடுதலைப் போராளிகளுடன் போராட்டக் களத்தில் விரும்பியோ விரும்பாமலோ,

போரில் ஈடுபட்டு, உடல்கள் சிதைதலும் உயிர்கள் சிதைதலும் ஆகி இடர் படுதலும்,

மூன்றது, அவ்வாறு இடர்ப்பாடுற்ற குடும்பங்கள் ஒன்றினைச் சேர்ந்த 'தானு' என்னும் ஒரு கழி இளம்பெண், அங்குள்ள படையினரால் கற்பிழந்தும், அவர் குடும்பத்தினர் அழிந்து பட்டதும்,

நான்கது, அவ்விடர்ப்பட்ட தானு, அறவுணர்வு தழுவிய மறவுணர்வு கொண்டு, தானும் தன் குடும்பும் இனமும் தாக்குண்ட கொடுமை பொறாதவளாகி, வெகுண்டு அவற்றுக்கெல்லாம் காரணனாகிய இராசீவ் என்னும் வீணனை அழித்தொழிக்கும் உள்ளத்தினும் உயிரினும் நிலைத்த பழிவாங்கும் கடுஞ்சினத்துடன் இந்தியா வந்து, தமிழகத்தில் சுற்றுச் செலவு மேற்கொண்டிருந்த இராசீவை, தன் உடலில் வெடிகுண்டு பொதிந்திருக்க நெருங்கி மோதி, மக்களெல்லாம் கூடியிருந்த கூட்டத்தின் நடுவில், அழித்தும் அழிவுண்டும் மாய்ந்ததும் -

- ஆகிய நான்கு செயல்களையும் உள்ளடக்கிக் கூறியதாகும் இப்பாடல்.

இந் நான்கு செயல்களும் ஒன்றின் ஒன்று அவலம் மிகுந்தது. இறுதிச் செயலாகிய தானுவின் தன்னழிவு மறம், கொடியன் ஒருவனை அழித்ததோடு தொடர்பு கொண்டதாகலின் ஈகவுணர்வால் பொருந்திய புகழ் கொண்டது. அதனால் உலகை ஈடு கொள்ளாப் பெருமை சான்றது.

இதில், தானு வென்னும் வீரத் தமிழ்ப்பெண், *'காழ்த்த நெஞ்சின் கன்னி இளமுகை'* என்றும், *'அன்னைக்குக் குலத்து ஓர் அறங்கூர் மறத்தி'* என்றும், புகழப்பெறுவது, அவளின் இளம் பருவத்தையும், முது செயலையும் இணைத்துப் பார்த்துப் பெருமை சாற்றுவது.

*'ஒரு தனி நின்றே ஊர்நடு சிதைத்த ஈகம்'* என்னும் தொடருள் வரும், *'ஒரு தனி'* என்பது, அவள் தனித்து நின்ற செம்மாப்பையும், *'ஊர் நடு சிதைத்த'* என்பது, யாருக்கும் தெரியாமல் மறைமுகமாக அன்றி எல்லார்க்கும் முன்னழித்த செந்துணிவையும், *'ஈகம்'* என்பது, அவள் உலக வெறுக்கையையும் கூறி, அவள் மனவுணர்வையும், இனவுணர்வையும், கொள்கை நிலையையும், இளமைப் பருவத்தையும் ஒருங்கே புலப்படுத்தி வீரத்தையும் அவலத்தையும் இணைத்துக் கூறியது என்க!

*மானமும் உயிரும் வாழ்வும் கருதி* - தமிழீழ விடுதலைப் போராட்டம் தொடங்கிய காலத்திலிருந்தே, அங்குள்ள தமிழ்ப் பொது மக்களுக்குப் பலவகையான தாக்கங்கள் ஏற்பட்டுள்ளன; ஏற்பட்டு வருகின்றன.

அத் தாக்கங்களால் தொடர்ந்து உயிரழிவுகள் நேர்ந்து வருகின்றன. அவர்களின் வாழ்க்கை நலன்களும் சீரழிக்கப்படுகின்றன. குடியிருப்புகள் தீ வைத்துக் கொளுத்தப்படுகின்றன. சொத்துகள் கொள்ளை யடிக்கப்படு கின்றன. பெண்கள் பாலியல் வன்முறைக்கு ஆளாகின்றனர். இதில் சிறுமியர், இளம் பெண்கள், திருமணம் ஆன மங்கையர், கருவுற்ற தாய்மார்கள், முது

இளம் பெண்டிர்கள் என்னும் வேறுபாடுகள் இல்லை; பாலியல் தாக்கங்களுக்குப் பின்னர் அவர்கள் கொலை செய்யப்படுகின்றனர். இவற்றைத் தடுக்க முயற்சி செய்யும் ஆடவர்கள் வெட்டிக் கொல்லப்படுகின்றனர். இளைஞர்கள் அனைவருமே போராளிகள் அல்லது போராளிகளாக மாறக்கூடியவர்கள் என்னும் கருத்தில் படைத்துறைத் தங்கில்(முகாம்)களுக்கு அழைத்துச் செல்லப்பட்டுக் கொல்லப்படுகின்றனர்.

இவ்வாறு அங்குள்ள தமிழர்களுக்கு மான அழிவும் உயிரழிவும் வாழ்வுச் சிதைவும் ஏற்படுவதால், அவற்றினின்று தங்களைக் காத்துக் கொள்ளக் கருதி, அவர்கள் வெளிநாடுகளுக்குத் தப்பிச் செல்ல வேண்டியவர்களாக ஆகுகின்றனர்.

*வானமும் நிலமும் நீரும் கடந்து* – எனவே, தமிழர்கள் வானூர்தி வழியாக வான் எல்லையைக் கடந்தும், இயங்கிகள் பேருந்துகள் வழியாகவும், நடந்தும் தாக்கம் ஏற்படுகின்ற நிலப் பகுதியினின்று வேற்றிடங்களுக்குப் பெயர்ந்தும், கப்பல் வழியாகக் கடல் எல்லையைக் கடந்தும் அயல் நாடுகளுக்குச் செல்கின்றனர்.

*கானமும் புகுந்து களத்தினும் நெரிந்து* – அவ்வாறு செல்ல இயலாதவர்கள்., நகரங்களில் நேரும் தாக்கங்களுக்கு அஞ்சித் தங்களைக் காத்துக் கொள்ளக் காடுகளில் ஓடி ஒளிந்து கொள்கின்றனர். அவர்களில் இளைஞர்களாகவும் ஆடவர்களாகவும் உள்ளவர்கள் போராளிகளுடன் சேர்ந்து, போராட்டக் களங்களிலும் சென்று சிதைபடுகின்றனர். *நெரிந்து* - நெருக்குண்டு - சிதைபட்டு - உறுப்புகள் இழந்து - உயிரிழந்து.

*தானும் குடும்பும் இனமும் இடர்ப்பட* - இவ்வகையில் அங்குள்ள தமிழர்களில் ஒவ்வொருவரும், அவர் அவர் குடும்பங்களும் இனமும் பலவகையிலும் இடர்ப்பாடுகள் எய்த.

*ஆயிரம் ..... ஈழத்தமிழர்* – பல ஆயிரக்கணக்கில் இளைஞர்களும் பெண்டிரும், இவ்வாறு உலகம் முழுவதும் போய் ஏதிலியர்களாக நாடு நாடாகத் திரிந்து வருவதும், பல நிலைகளில் மாய்ந்து போவதும் ஆகிய நிலைகளில் உள்ள ஈழத் தமிழர்கள்.

*இடையினில் தோன்றி* - அவர்களில் தானும் ஒருத்தியாகத் தோன்றி.

*காழ்த்த நெஞ்சின் கன்னி இளமுகை* – வயிரம் போல் உறுதியான நெஞ்சுடைய, கன்னிப் பருவத்தின் மலர வேண்டிய, இளமை சான்ற மொட்டுப் போன்றவள்.

*தன்னையும் இழந்து* - இராசீவ் அனுப்பிய படைத்துறையினரால் தன் பெருமையை இழந்து - சீர்குலைவுவற்று.

*தமரையும் இழந்த* - தன் பெற்றோரையும் உற்றாரையும் அக்காவல் படையினரால் இழந்த. தமர்-தம்மவர்- பெற்றோரும் உற்றாரும்.

*தானுவின் குடும்பத்தவர்கள் இந்திய அமைதிப் படையினரால் அழிக்கப்பட்டனர். தானுவும் அவர்களால் கொடுமையாகக் கற்பழிக்கப்பட்டவள். இந்தக் கொடுஞ் செயல்கள் தாம் அவளைப் பழிவாங்கும் உணர்வுக்குத் தள்ளின எனின் அது மிகையாகாது.*

*அமைதிப் படையினர் இவ்வாறு தனக்கும் தன் குடும்பத்தினர்க்கும் மட்டுமல்லாமல் பல நூறு குடும்பங்களுக்கும் தீங்கு செய்தது, தானுவால் பொறுத்துக்கொள்ள முடியாத வல்லுணர்வை அவளுக்குத் தந்திருக்க வேண்டும்.*

*தன் உற்றார் உறவினர் உயிர் அழிவிற்கும், தன்னுடைய மான அழிவிற்கும், அமைதிப் படையினர் காரணமானவர்களாக இருந்தாலும், அவர்களைப் பழிவாங்குவது தனக்கு இயலாது எனக் கண்டாள், தானு. எனவே, அவர்களைத் தமிழீழத்திற்கு அனுப்பி வைத்து, இந்நிலையை உருவாக்கிய இந்தியத் தலைமையமைச்சர் இராசீவே முழுவதும் பழிவாங்கத்தக்கவர் என, தானு உறுதி கொண்டிருக்க வேண்டும்.*

*தனக்கு மட்டும் நேர்ந்த துன்பமாக இதைக் கருதாமல், தன்னைப் போல் உள்ள பலர்க்குமே நேர்ந்த துன்பமாக அவள் கருதியது அவளின் தாய்மை உணர்வை நினைவு கூர்வதற்கு உதவியது; எனவே, அவள் அன்னைக் குலத்தைச் சேர்ந்தவள் என்று நினைவு கூரவேண்டுவதாயிற்று.*

***அன்னைக் குலத்து ஓர் அறங்கூர் மறத்தி*** - பிறர் துன்பத்தையும் தாங்கிக் கொள்ளும் சிறப்புப் பெற்ற) தாய்மைக் குலத்துத் தோன்றிய, அறவுணர்வுகூர்தலுற்றுப் படிநிலை வளர்ச்சி பெற்று மறவுணர்வாக முதிர்ந்து நின்ற ஒரு மறத்தியாகிய தானு.*

*அறம்- மாந்தவுணர்வின் முதிர்ச்சியுற்ற பண்பாடு. மறம்-துணிவின் முதிர்ச்சி. இந்த இரண்டு உணர்வுகளும் மாந்த உயிரியக்கத்தின் ஆக்கத்திற்காகப் பயன் தருவன ஆகையால், இயற்கை உணர்வுகளாம். மறம் எல்லா உயிர்களுக்கும் பொதுவானது.*

*முரண்பாட்டுணர்வாக முகிழ்த்து, எதிர்ப்புணர்வாக வளர்ந்து, வீரவுணர்வாக மறுமலர்ச்சியுற்று, மறவுணர்வாக முதிர்வடைவது, மறத்தின் படிநிலை வளர்ச்சி. முதலிரு உணர்வுகளும் ஐயறிவுத் திணைகளுக்கும், இறுதியிரண்டு மட்டுமே ஆறறிவு மாந்தர்களுக்கும் உரியனவாக இருக்கின்றன.*

*வீரம், அறவுணர்வுடன் இணைந்து இயங்கும் பொழுது மறமாக விளங்கித் தோன்றுகிறது. இனி, அறவுணர்வே படிநிலை வளர்ச்சியுற்று மறமாக மாறுவதுண்டு. அக்கால் அவ்வுணர்வு செயற்கரிய வீரச் செயல்களைச் செய்யும். போர்க்களத்தில் வீரர்கள் ஒருவர்கொருவர் பொருந்திக் கொள்வது வீரவுணர்வாகவே கொள்ளப் பெறும். அறங் கலந்த வீரமே மறம் என்பதைத் திருவள்ளுவரும் ஒப்புவர்.*

*அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை.* -76

அன்பும் பண்பு வினையுமே அறம் ஆகையால், மறவுணர்வுக்கும் அன்பு அடிப்படையாக உள்ளது.

தானு, தன்இன மக்கள்மேல் வைத்த அன்பு தொண்டுணர்வாக (அறவுணர்வாக) மலர்தலுற்றுத், துணிவுற்று, வீரமாகி, மறவுணர்வாகக் காழ்த்து, தன் இனத்துக்குத் தீங்குசெய்த இராசீவை ஒழித்துக் கட்டுமளவிற்குச் செயலுருவம் கொண்டது என்க.

அறவுணர்வு கூர்தலுற்று (பரிணாமம் உற்று) மறவுணர்வாகக் காழ்த்து நின்றதால், தானு அறங்கூர் மறத்தி எனப்பெற்றாள்.

அவள் இராசீவைக் குண்டால் தகர்த்தது கொடுமை என்று தமிழின எதிரிகள் கூறுவது வரலாறு தெரியா வெறுங்கூற்றாகும். அஃது ஓர் அறமான செயலே. அவள் செய்த கொலை அறவுணர்வு பொங்கியெழுந்து மறமாகி நின்று, செயல் கொண்டதன் விளைவாகும். அது தவறோ தண்டனைக்குரிய குற்றமோ அன்று. அவள் பின்னர்ச் செய்யப்போகும் இராசீவ் அழிவுக்கு முன்னர்க் கூறிய அமைவாக நிற்பது அறங்கூர் மறத்தி சொற்றொடராகும்.

*'தானு' வென் பெயரினள்* - தானு என்னும் பெயரை உடையவள். தானு என்னும் சமற்கிருதச் சொல்லுக்குக் காற்று, வெற்றியுடையவர்-என்பன பொருளாம்.

***தன்னினம் அழித்த வீணன்*** - தானுவின் இனமாகிய ஈழத்தமிழினத்தை அழித்திடச் செய்த வீணான செயலைச் செய்தவன் என்பது ஒரு பொருள்; இன்னொரு பொருள், வீழப்போகிறவன் (வீழ்நன்-வீணன்); ஒ. நோ. வாழ்நன்- வாணன்). என்பது இச்சொல் தானுவால் வீழ்ந்து அழிந்தவன் என்னும் பொருளையும் முற்காட்டித் தந்தது என்க. இராசீவின் பெயரைக் குறிப்பிட விரும்பாமல் வீணன் என்றது, அவரது கொடிய தன்மையினால் என்க.

***வீணனுக் கெதிரா வெகுண்ட வெஞ்சினம்*** - அந்த இராசீவ் என்னும் வீணனுக்கு எதிராக, தானு வெகுண்டு எழுச்சி கொண்ட கடுஞ்சினம்; வெகுளுதல் இயல்பான சினம்; வெஞ்சினம் வெம்மையான சினம்; அழிவை உண்டாக்குவது ஆகலின் வெப்பம் சுட்டப்பெற்றது.

***நெஞ்சினும் உயிரினும் நிலைத்த நினைவொடு*** - (உடலுறுப்பாகிய) நெஞ்சாங்குலையும், மூல உறுப்பாகிய உயிரியக்கத்திலும் நிலைப்பட்டு விட்ட அழிக்க முடியாத நினைவுடன். என்னை? நெஞ்சின் நினைவாக நிற்கும் ஓர் உணர்வு, ஒரு கால் மறந்து போதற்குரிய தாகலின், நெஞ்சில்

பற்றிய வெஞ்சினம், பழிதீர்க்கும் வஞ்சினமாகி, உயிருணர்விலும் பற்றி நிலைகொண்டு விட்டது என்க. நெஞ்சில் வெஞ்சினமாகி நிலைகொண்ட வஞ்சினம் , செயற்பட்டுப் பழிதீர்க்கப்படுமுன், ஒருகால் தானுவின் உடல்வேறு வகையில் அழிவுற்று, அத்துடன் அந்நினைவைத் தாங்கிய நெஞ்சாங்குலையும் அழிந்துபடின், அவ்வஞ்சினம் செயல்படாமலே அழிந்து விடக்கூடுமன்றோ? அதன்பின் அவள் கொண்ட வெஞ்சினத்தால் பயனேதும் இல்லையாகின்றதன்றோ? அவ்வாறு இறப்பு ஒருகால் நேர்ந்துவிடின் உடலும், அதன் வழி நெஞ்சாங்குலையும், அதன் வழி அதனுள்ளிருக்கும் 'இராசீவ் என்னும் கொடியவனை அழிக்க வேண்டும்' என்ற நினைவும் அழிந்து விட்டாலும் அப்பழிவாங்கும் வஞ்சின உணர்வு உயிரிலும் போய் நிலைத்திருப்பதால், அவ்வுயிர் மீண்டும் பிறவியுற்று, அந்நினைவு அழியாமல், அஃது எடுக்கின்ற மறு உடலுடன், இவ்வுலகத்து இயங்கி, அதே இராசீவைப் பழிவாங்கும் என்பதால் அந்நினைவு உயிரிலும் நிலைத்தது என்று கூறவேண்டியிருந்தது என்க.

*ஒரு தனி நின்றே* - தானு (துணையாள்கள் யாருமில்லாமல்) தான் ஒருத்தியாகவே (முயன்று) நின்று.

ஒரு சிறுசெயலுக்கும், பெரும்பாலார்க்கு ஒரு துணை தேவையாக உள்ளது. 'துணையோ டல்லது நெடுவழி போகேல்' என்று சான்றோரும் கூறினர். ஆனாலும், ஒரு படையாகப் போய்த் தாக்கி அழிக்க வேண்டிய வலிமை வாய்ந்த அரசராக நின்ற ஒருவரைத் தான் ஒருத்தியாகவே நின்று அழித்த துணிவையும் வீரத்தையும் வியந்து பாராட்டிக் கூறியது என்க.

*ஊர்நடு சிதைத்த* - (வேறு எங்காவது சந்திலோ பொந்திலோ, அறையிலோ, சிறையிலோ அல்லாமல்) ஊர்மக்களும் காவலரும் கூடியிருந்த பெருங்கூட்டத்தின் நட்ட நடுவில் எதிரியைச் சிதைத்த, சிதைத்தல்-உருவே தெரியாமல் சிதையச் செய்தல்.

தானு, தன் இனத்திற்கு அழிவைத் தேடும் கொடியவன் இராசீவை ஒழித்திட வெஞ்சினம் கொண்டு, இலங்கையிலினின்று இந்தியா வந்து, தமிழகத்திற்கு வந்த அவரை, தனித்த ஒருத்தியாக முன் நின்று ஊர் மக்களும், காவலர்களும் நிரம்பியிருந்த பெருங் கூட்டத்திற்கு நடுவில், தன் உடலில் வெடிகுண்டைப் பிணித்துக் கொண்டு, அவரை அணுகிக் குண்டை வெடிக்கச் செய்து, இராசீவை அழித்ததோடின்றித் தன்னையும் அழித்துக்கொண்டாள்; இது வெறும் வெறியுணர்வால் வரும் செயலன்று மிகப்பெரும் ஈகவுணர்வால்தான் இவ்வாறு செய்தற்கியலும், தானும் அழியப் போகிறோம் என்று ஓர் இன்றியமையாத செயலில் ஈடுபடும் செயல், குறைத்து மதிப்பிடற்குரிய செயலன்று, அது செயற்கரிய ஈகச் செயலே.

போர்க்களத்தில் தன் நாட்டுக்காக உயிர் துறக்கும் ஒருவர், உயிர் துறப்பது உறுதி என்று எண்ணிக் கொண்டு போவதில்லை. ஆனாலும் அது

வீரமென்றும் ஈகமென்றும் போற்றப் பெறுகின்றது. ஆனால் தானுவோ தான் செய்யப் போகின்ற செயலால் தன் உயிர் போவது உறுதி என்று நன்றாகத் தெரிந்தே அச்செயற்கரும் செயலைச் செய்தவள் ஆகின்றாள். எனவே, உலகத்தில் இத்தகைய ஈகம் பெரிதும் புகழுக்குரியதாகும்.

*ஈகம் அன்றோ ஈகம்* - இத்தகைய ஈகம் (தியாகம்) அன்றோ ஈகம். இச்செயல்தான் தன் இனமக்களைக் காக்க, தன் உயிரை ஈதல்; பிறிதெல்லாம் உயிரை இழத்தல். இழத்தல் ஈகமாகாது. அதில் விருப்பம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் இதில் விரும்பியே உயிரிழத்தலால் இவ்வகை ஈகம் பிற வகை ஈகங்கள் அனைத்திலும் பெரிதாகும் என்று உணர்தல் வேண்டும்.

*ஆகுமோ உலகு அவள் அழிவிலாப் புகழ்க்கே* - இவ்வாறான அருஞ் செயல் செய்து. ஈகத்தின் வடிவமாக இருந்து, தானு என்னும் இலங்கைத் தமிழ்ப்பெண் பெற்ற அழிவில்லாத புகழ்க்கு இவ்வுலகே ஈடாகாது என்க.

உலகம் ஈடாகாது என்பது, உலகின் புகழ்த் தன்மையை நோக்கி என்க.

உலகம் பெரும் புகழுடையது; நிலைத்த புகழுடையது. ஏனெனில் உலகில் உள்ள பொருள்கள்; உயிர்கள் அனைத்தும் அழிந்த பின்னர்தான் உலகம் அழிதரும்.எல்லாம் அழிந்தும்; தான் இருக்கின்ற பெருமை புகழ்-இவ்வுலகத்திற் குண்டு என்பார் திருவள்ளுவப் பேராசான் (336). அதனால் அனைத்துப் புகழினும் உலகே நிலைத்த புகழுடையது. இறுதி உயிர் அல்லது மாந்தன் அழியும் வரை உலகின் புகழ் நிலைத்திருக்கும்.

ஆனால், தானுவின் ஈகம், உலகின் நிலைத்த புகழினும் நிலைத்த புகழுடையது. அஃதாவது உலகம் உள்ளளவும் தானுவின் புகழ் நின்று இலங்கும் என்பது உறுதியால் அவள் புகழ்க்கு அவ்வுலகின் புகழும் ஈடாகாது எனப் பெற்றது என்க.

இனி, நேற்றிருந்த ஒருவர் இன்றில்லை என்னும் பெருமையை இவ்வுலகம் உடையது அன்றோ. அக்கூற்றுக்கு ஏற்ப, நெருநல் இருந்த இராசீவ் போல் பெருமை பெற்ற ஒருவர், மறுநாள் இல்லாமற்போன தனிப் பெருமையை இவ்வுலகம் பெறுமானால் அப்பெருமையை உலகிற்கு உண்டாகிக் கொடுத்தவள் தானு அன்றோ? தமிழினத்தை அழித்தவனை அழித்துத்தானு பெற்ற புகழ் உலகின் உள்ள தமிழரெல்லாரும் ஒப்பத் தகுந்த பெருமை வாய்ந்தது என்க.

அரசியல் உலகில், பலவகையான சூழ்ச்சிகள் செய்தும், மக்கள் பணத்தைத் தவறாகக் கொள்ளையிட்ட பெரும் பொருளைச் செலவிட்டும், சாதி மேலாண்மையாலும், மத மேலாண்மையாலும் இந்திய ஆட்சியின் உயர் பதவியில் அமர்ந்து, தமக்கு வேறான-மாறான-தமிழினத்தை அடியோடு ஒழிக்கக் கருதிப் பல அழிவுகளையும் அழிம்புகளையும் செய்து கொண்டிருந்த இராசீவ் என்னும் அறக்கொடியவர் ஒருவரை, அவரால்

ஏவிவிடப் பெற்ற அமைதிப் படையினரால், தன்னினமும், தன் குடும்பமும், தானும், அழிவும் இழிவும் பட்ட கொடுந் துன்பத்தால் வீறு கொண்டு, பழிவாங்கும் அறஞ்சார்ந்த மறவுணர்வெழுச்சியுடன், தமிழகம் போந்து, தானே ஒருத்தியாய் நின்று தன்னுடலில் கடுமையான வெடிகுண்டு ஒன்றைப் பிணித்துக் கொண்டு, தற்கொலைப் படையுறுப்பாகித் திருப்பெரும்புதூரில் 1991 மே மாதம் 21-இல் நடந்த தேர்தல் பொது நிகழ்ச்சியில் கலந்து கொள்ள வந்திருந்த அவரை நெருங்கிக் குண்டை வெடிப்பித்து, அவரையும் சிதைவுறச் செய்து, தானும் உயிரழிந்து போன, பெருந்தமிழ் மறத்தி, இன மீட்புக் கருதித் தன் வாழ்வையே இழந்து கொண்ட, வீராங்கனை-தானு என்னும் தமிழீழத்தைச் சார்ந்த இளம் பெண்ணின் ஒப்பிடற் கரிய ஈக(தியாக)த்தைப் புகழ்ந்து பாடியதாகும் இப்பாடல்.

இது, *மூதின்முல்லை* என் திணையும் *அறங்கூர் மறம்* என் துறையுமாம். துறை புதியது.

# 67 எக்கர் இடுமணல்

*எக்கர் இடுமண லொக்க உலகத்துப்*
*புக்காங்கு வாழ்ந்து பொன்றுநர் பலரே*
*அளிதவர் பிறப்பே எளிதவர் நிலையே*
*ஒளிதக உட்கிளர்ந்து மாணா வினையறப்*
*பழிசெய் பஞிலத் திரங்கித் தம்முயிர்*
*அரிதின் மாய்த்த பெரியோர் சிலரே*
*யாண்டவர் பிறந்தவ ராயினும் மாண்டக*
*வையத் தவர்வா முநரே*
*உய்யுநர் என்போர் அவர்வழி யோரே!*

**பொழிப்பு:**

இவ்வுலகின்கண் பிறந்து வாழ்ந்து இறப்போர் (யாறு குவித்த எக்கரிடத்து மணல் போல எண்ணற்றோராவர். அவர்தம் பிறப்பு இரங்கத் தக்கது. வாழ்க்கை நிலையோ எளிமையுடைத்து. அவர்களுள் மெய்யறிவு பொருந்துதலால் உள்ளம் எழுச்சியுற்று, இழி செயல்களின் நீங்கப் பெற்றுச் சான்றோரால் பழிக்கப்படுவனவற்றைச் செய்யும் மக்கள் தொகுதியின் இழிநிலைக்கு இரக்கமுற்று அம்மக்களைக் கடைத்தேற்றுதற்குத் தாம் மேற்கொண்ட அருமுயற்சியிலே தம்மை மாய்த்துக் கொண்ட பெருமக்கள் மிகச்சிலராவர். அவர்கள் யாண்டுப் பிறந்தவராயினும் இவ்வுலகின்கண் என்றென்றும் சிறப்புற வாழ்ந்து கொண்டிருப்பவராவர். வாழ்க்கையில் ஈடேறுவோர் என்று சொல்லப் பெறுவோர் அப்பெருமக்களின் வழியைப் பின்பற்று வோரேயாவர்.

**விரிப்பு:**

இப்பாடல் புறத்துறையைச் சார்ந்தது

உலகத்துப் பிறந்து வாழ்ந்து இறப்போர் எண்ணற்றோராயினும் அவர்களுள் மெய்யறிவான் மேம்பட்டுச் செய்வினையாற் சிறப்புடையராய், மக்களைக் கடைத்தேற்றும் அருமுயற்சியை மேற்கொண்டு தம் உயிரையும் மாய்த்துக் கொண்ட மிகச் சிலராகிய பெருமக்கள் எங்குப் பிறந்தவராயினும் இவ்வுலகின்கண் என்றென்றும் வாழ்வோர் என்றும் அவர்தம்

மெய்ந்நெறியைப் பின்பற்றுவோரே வாழ்க்கையில் ஈடேறுவோர் என்றும் விளக்குவது இப்பாட்டு.

*எக்கர் இடுமணல்* – யாறு அலையான் எற்றிக் குவித்த மணல் யாறு இடு எக்கர் மணல் எனக் கூட்டுக! யாறு வருவிக்கப்பட்டது.

*புக்கு ஆங்கு* – புகுந்து. புகுதல் - பிறத்தல். இவ்வுலகிற் புதுவதாக வந்தடைதலின் புகுதல் எனப்பட்டது. புலம்பன் உடல்தாங்கி வருதல் எனினுமாம். ஆங்கு-அசை.

*பொன்றுநர்* – இறப்போர்.

*பலர்* – எண்ணற்றோர். இதனையுணர்த்தற்கு எக்கர் மணலை உவமை கூறினார்.

*அளிது அவர் பிறப்பு* – அவர்தம் பிறப்பு இரங்கத் தக்கது. வாழ்க்கைப் பயனைப் பெற்று ஈடேறுதலின்றி வறிதே கழிதலின் பிறப்பு இரங்க்கத்திற் குரியதாயிற்று.

*எளிது அவர்நிலையே* – அவர்தம் வாழ்க்கை நிலையோ எளிமையுடைத்து. செயற்கு அரியன செய்யாது எளியன செய்தலால் அவர்தம் வாழ்க்கை நிலை எளிமையுடையதாயிற்று.

"*செயற்கு எளியவாவன;* உலகத் தொழில் செய்தலும் பொருளீட்டுதலும் இன்பந்துய்த்தலும் எளியாரை வாட்டுதலுமாம்" என்ப.

*ஒளி தக* – அறிவுபொருந்த ஒளி சிறப்பாக மெய்யறிவைக் குறித்தது. தக: - தக்கிருக்க - பொருந்த

*உள் கிளர்ந்து* – மன எழுச்சியுற்று. அஃதாவது அறியாமையால் பழிப்படுவன செய்து இழியும் மக்கள் கூட்டத்தின்பால் கொண்ட இரக்கத்தால் அம்மக்களைக் கடைத்தேற்ற விழைதலால் எழுந்த உணர்வு.

*மாணா வினை அற* – நற்குண நற்செயல்களுக்கு மாறான இழிசெயல்களைச் செய்யாது நீங்க.

*பழி* – சான்றோரால் பழிக்கப்படுவன. முதனிலைத் தொழிலாகு பெயர்.

*பஞிலம்* – மக்கள் தொகுதி. பஞ்ஞிலம் என்னுஞ் சொல் தொக்குப் பஞிலம் என நின்றது.

*அரிதின்* – அரிய வினைப்பாட்டின்கண். தந்நலந் தவிர்த்துப் பொதுநலங் கருதிச் சான்றோர் மேற்கொள்ளும் வினை அருவினை யாதலின் அதனை அரிது என்றார்.

*தம் உயிர் மாய்த்த* – தம் உயிரை மாய்த்துக் கொண்ட பொதுநலத் தொண்டில் உள்ளம் ஒன்றி ஈடுபடும் பெருமக்கள் தாம் மேற்கொண்ட வினையிலேயே அழுந்தி பலதலையான இடர்ப்பாடுகளை எதிர்கொண்டு, மனக்கவலையிலும் மெய்வருத்தத்திலும் உழன்று, உயிர் வாழ்க்கைக்குக் கட்டாயத் தேவையான ஊண் உறக்கங் கொள்வதிலும் நாட்டமின்றி, வேளை மறுத்து உண்டும், ஏலா உண்டியைத் தவிர்க்காமலும், நோயுற்ற வழி மருத்துவஞ் செய்து கொள்வதிலும் காலங் கடத்தித் தம் வாழ்நாளுக்கு ஊறுநேரத் தாமே வாய்ப்பளித்தலின் 'தம் உயிர் மாய்த்த' என்றார்.

பிறவற்றில் நாட்டமின்றித் தான் மேற்கொண்ட வினையில் முழுமுச்சாய் ஈடுபடுவானைக் குறித்து அவன் 'அதிலேயே கிடந்து மாய்கிறான்' என்னும் உலக வழக்கையும் நோக்குக.

இனிக் கொடும் பகைவரை இனங்கண்டு அவரிடத்து விழிப்பாய் இராமையும் தாம் மாய்க்கப்படுதற்கு இடஞ் செய்தலால் அதுவும் கொள்ளப்படும்.

*பெரியோர் சிலரே* – மேற்கூறியவாறு தம் உயிரையும் பொருட்படுத்தாது பொதுநலத் தொண்டாற்றுவது பெரிதும் அரிய செயலாதலின் அதனைச் செய்வாரைப் பெரியோர் என்றார்.

மேல்'பலர்' எனப்பட்டோர் எண்ணற்றோர் ஆதலின் ஈண்டுச் 'சிலர்' எனப்பட்டோர் மிகச் சிலர் எனக் கொள்க.

*யாண்டு அவர் பிறந்தவர் ஆயினும்* – மலை, கடல், யாறு முதலியவற்றான் இயற்கையானும் அரசால் செயற்கையானும் கண்டம், நாடு, பைதிரம் எனப் பாகுபடுத்தப்பட்ட இடப்பகுதிகளுள் எங்கே பிறந்தவர் ஆயினும்.

இனி, மொழியாலும் இனத்தாலும் தொழிலாலும் சமயத்தாலும் பாகுபட்டுக் கிடக்கும் மக்கட் பிரிவுகள் பலவற்றுள் எதன்கட் பிறந்தோராயினும் எனவும் கொள்க.!

*மாண்தக வையத்து அவர் வாழுநரே* – அப்பெருமக்கள் இவ்வையகத்தில் என்றென்றும் சிறப்புற வாழ்பவரேயாவர். அவர் இறந்தும் இறவாதவரே என்றவாறு.

*நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும்*
*வித்தகர்க் கல்லால் அரிது.*

என்னுந் திருக்குறளையும் ஈண்டு நோக்குக !

பெருமக்கள் மேற்கொண்ட அருவினையின் நற்பயன் உலகத்தார்க்குத் தொடர்ந்து கிட்டுதலானும் வாழ்தல், என்பது பிறர்க்குப் பயனுற வாழ்தல் என்பதே சிறப்பாகக் கொள்ளப் படுதலானும் அப்பெரியோர் உடலளவில்

மாய்ந்தாலும் இறப்பை வென்று என்றென்றும் வாழ்ந்துகொண்டிருக்கின்றனர் என அறிக!

*உய்யுநர்* – வாழ்க்கைத் துன்பங்களால் பல்லாற்றானும் அலைக்கழிக்கப்பட்டு அழிந்தொழியாமல் வாழ்க்கைப் பயனை முழுமையாகப் பெற்று ஈடேறுவோர்.

***என்போர்* – எனப்படுவோர்'** - என்று சிறப்பித்துச் சொல்லப் படுவோர். 'இல்வாழ்வான் என்பான்' என்றாற் போலச் செயப்பாட்டு வினை செய்வினை வாய்பாட்டில் நின்றது.

***அவர் வழியோரே* –** அப் பெரியோர்தம் பின்செல்லியரே அவர்தம் வழியைப் பின்பற்றுவோரே என்றவாறு.

பின்பற்றுதலாவது அப்பெரியோர் வகுத்துரைத்த மெய்ந்நெறியில் வழுவாது ஒழுகுதலும், அவர் தொடங்கி நடத்திய அறவினை அல்லது அருந்தொண்டினைத் தொடர்ந்து செய்து வருதலும் அவர் இடைவிட்ட வினைப்பாட்டைக் கடைக்கொட்கச் செய்து நிறைவேற்றுதலும் ஆகும்.

இப்பாடல் ***புறத்திணைப்*** பொதுவியலும் ***பொருண் மொழிக் காஞ்சி*** என்னுந் துறையுமாம்.



# 68 நாணுகம் பெரிதே

நாணுகம் பெரிதே நாணுகம் பெரிதே
மாணுறு தீந்தமிழ் மகனை யாகி
பூப்பறு நெஞ்சுகப் புரிந்து நாணொடு
காப்பறு நாவின் மீச்சுவை மிசைந்து
செவித்துளை புகுந்த வீரொரு பிறசொற்
கொள்ளார் வழியும் இடையிடைக் கிளந்து
கல்லாப் புல்லுரை கரைந்து கடுப்புற
வல்லேம் யாஅம் எனவலம் வரூஉம்
வெம்மார் மாக்களை விதந்து
நம்மோர் எனற்கு நாணுகம் பெரிதே!

**பொழிப்பு**

யாம் பெரிதும் நாணுகின்றேம்! யாம் பெரிதும் நாணுகின்றேம்! மாட்சிமை பொருந்திய இனிய தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட மகனாகப் பிறந்தும், மலர்ச்சியுறாத தன் மனம் விரும்பியவாறெல்லாம் செயற்பட்டு, நாணமும் அடக்கமும் அற்ற தன்நாவினால் சுவைமிகு உண்டிகளை உட்கொண்டு, தன் செவியாகிய துளையின்கண்ணே புகுந்த இரண்டொரு வேற்றுமொழிச் சொற்களை அவற்றை விளங்கிக் கொள்ளாதவரிடத்திலும் இடையிடையே வெளிப்படுத்தி, முறையாகக் கற்றுத் தெளியாத புல்லிய சொற்களால் உரையாடி ஆணவத்தோடு 'யாஅம் பெரிதும் வல்லமையுடையேம்' என்று ஊரைச் சுற்றி வருகின்ற கொடுமை வாய்ந்த கயவர்களைச் சிறப்பித்து நம்மேவர்கள் என்று கூறிக் கொள்வதற்கு யாம் பெரிதும் நாணுகின்றேம்.

**விரிப்பு:**

இப் பாடல் புறப்பொருள் பற்றியது.

சிறப்பு மிக்க தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட மகனாய் இருந்தும், மனம் பண்பட்டு விரிவடையப்பெறாது அதன்வழி விரும்பியவாறெல்லாம் செயற்பட்டுச் சுவைபட உண்டு நவைபடப் பேசிச். செருக்கொடு திரியும் இழிதகையாளரை அவர் தமிழர் என்பது பற்றி நம்மவர் என்று சொல்லிக் கொள்வதற்கு நாணிப் பாடியது இப்பாட்டு.

*நாணுகம் பெரிதே நாணுகம் பெரிதே :* மாந்தர் தம் நிலைக்குப் பொருந்தாத கருமங்களைச் செய்யப் பின்வாங்குதல் நாணம் எனப்படுதலின், ஈண்டு ஆசிரியர், தமிழினத்துப் பிறந்தார் சிலர் இழிதகையாளராய் இருந்தும் அவரைச் சிறப்பித்து நம்மவர் என்று சொல்லிக் கொள்வதற்குப் பெரிதும் நாணுகின்றேம் என்றார்.

அடுக்கு இளிவரல் மிகுதியான் வந்தது!

*மாணுறு தீம் தமிழ் மகனை யாகி :* 'தலைக் கழகக் காலத்திற்கு' முன்பே வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவர் முதன்முதலாக உயிர் மெய்க்குந் தனிவடிவு கண்டு ஒலியன் முறையில் நெடுங் கணக்கு வகுத்து, எண் பெயர் முதலிய பத்து அகமும் கிளவி புணர்ச்சி என்றும் இருபுறமுமாகிய பன்னீரெழுத்திலக்கணமும் தோற்றி, இயல் திரிவு திசை என்னும் மூவகைச் சொல்லும் முதனிலை ஈறு முதலிய அறுவகைச் சொல்லுறுப்பும் தொகையும் விரியுமாகிய பதினால்வகைச் சொற்றொடரும் ஆய்ந்தும், மருளறு சிறப்பின் பொருளிலக்கணம் கண்டும் இருவகை வழக்கினும் அருகுதலில்லா என்றுமுள தென்றமிழ், பன்னெடுங் காலத் தொன்மையும் ஏனை மொழிகளினு முந்திய முன்மையும் பல மொழிகளைத் தோற்றுவித்த தாய்மையும் பிறமொழிகளால் பிறழாத தூய்மையும், எற்றைக் காலத்தும் ஏற்புற வளரும் இளமையும் சொற்சிறப்பாலும் இலக்கியப் பரப்பாலும் வளமையும், இலக்கண வரம்பால் செம்மையும் இயல் இசை நாடகம் என்னும் மும்மையும், பழகுறு சிறப்பின் இயன்மையும் பலதுறை கொண்ட வியன்மையும் ஆய்வுச் செறிவால் நுண்மையும் அயன் மொழிகளுக்கும் சொற்பொருள் அளிக்கும் வன்மையும் என்றும் இருக்கும் நிலைமையும் ஏனை மொழிகளின் மேம்பட்ட தலைமையும், கலப்பு வேண்டாத தனிமையும் கேட்பார்க்கும் கிளர்வார்க்கும் இனிமையும் என மொழிநூன் மூதறிஞர் எடுத்துக் காட்டும் பதினாறு வகையின் ஓங்கிய சிறப்பும் பாங்குறப் பெற்ற மொழியாதலின் மாணுறு தமிழ் என்றார். இது மேலும் விரிப்பிற் சாலப் பெருகும்.

தீந்தமிழாவது இனிமை வாய்ந்த தமிழ். மாணுறு தமிழ் எனினே அமையும்; மற்றுத் தீந்தமிழ் என இனிமையை விதந்து வேறுபடக்கூறியது என்னை யெனின், தமிழின் பிற சிறப்புகளெல்லாம் ஆராய்ச்சி வகையான் புல மக்கள் மட்டுமே அறிந்துணரக் கிடக்க அதன் இனிமையோவெனின் இளஞ்சிறாரும், பொதுமக்களும் எளிதிற் சுவைக்குமாறும் மொழியறியா அயலவரையும் ஒலிவகையால் ஈர்த்து இன்புறுத்துமாறும் அமைந்திருத்தலின் அதன் ஏற்றங் கூறுமுகத்தான் அதனைத் தனித்தெடுத்துக் கூறினார் என்க!

செய்யுளும் ஒரு வகை வழக்கே யாயினும் அதன் பெருஞ்சிறப்புக் கருதி 'வழக்குஞ் செய்யுளும்' என்ற விடத்து வேறுபடுத்திக் கூறியது போல இதனைக் கொள்க.!

தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட மாந்தன் என்பார் தமிழ் மக்களை ஆகியும் என்றார். மகனை என்பதன்கண் ஐகாரம் அசைநிலை உம்மை தொக்கது.

தாய்மொழியாவது இயல்பின் வந்த உரிமைமொழி.

*பூப்பறு நெஞ்சு உகப்புரிந்து :* பூப்பறு நெஞ்சாவது மலர்ச்சியுறாத மனம்-கல்வி கேள்விகளானும் உலகியலறிவானும் பண்பட்டுப் பரந்த நோக்கும் நடுநிலையுணர்வும் பொது நல விழைவுங்கொண்டு விரிவுறாது, போலி நாகரிகப் போக்கும் ஆரவாரச் செருக்கும் தன்னல வேட்கையும் கொண்ட மனம்.

உகப்புரிதலாவது - மனம் விரும்பியவாறு புல்லிய செயல்களைச் செய்தல். மனம் பூப்பறு நெஞ்சு எனப்பட்டமையின் அதன் வழிபட்ட செயல்களும் புல்லியவை எனப்பட்டன. அவையாவன வெற்றாரவார வெறும்பகட்டுப் போலி நாகரிகச் செயல்களும் பிறவுமாம்.

*நாணொடு காப்பறு நாவின் மீச்சுவை மிசைந்து* - நாவிற்கு நாணமாவது அவையல் கிளவிகளை இடக்கர் அடக்காது பேசக் கூசுதல்.

*காப்பு* – கட்டுப்பாடு அதாவது தீயவற்றில் தலைப்படாத அடக்கம். நாவடக்கமாவது - பொய் குறளை கடுஞ்சொல் பயனில் சொல் என்னுஞ் சொற்குற்றங்களைத் தவிர்த்தல்.

இனித் தன் முயற்சியின்றிப் பிறருழைப்பின் வந்தவற்றைச் சுவைத்து உண்ணற்கும் ஏழை எளியோர் பசியால் வாடப் பார்த்தும் சிறிதும் இரங்காது உண்ணற்கும் அயலவர் முகஞ் சுளிக்குமாறு அநாகரிகமாக சுவைத்து உண்ணற்கும் கூசாமையையும் நாவிற்குரிய நாணமின்மையாகவும், அக்காலத்திலும் நோயுற்றவிடத்தும் சுவையைத் தவிர்க்கமாட்டாமல் ஏலா வுண்டியை விரும்பியாங்கு உண்ணுதலையும் நாவடக்கமின்மையாகவும் கொள்ளலுமாம்.

பசியும் உடனலமும் நோக்கியுண்ணாது சுவையையே பெரிதும் விரும்பு யுண்ணலைக் குறித்து மீச்சுவை மிசைந்து என்றார்.

*செவித்துளை......கரைந்து :* அரும்பொருள் குறித்து ஆன்றோர் கூறும் நறுந்தமிழ்ச் சொற்களை விரும்பிக் கேளாமையின் செவியைத் துளை என்றார்.

***இருடீர் மணிவிளக்கத்து ஏழிலார் கோவே***
***குருடேயும் அன்றுநின் குற்றம் – மருடீர்ந்த***
***பாட்டும் உரையும் பயிலா தனவிரண்டு***
***ஓட்டைச் செவியும் உள.***

எனும் ஏழில் மன்னனின் இழிநிலை குறித்த ஔவையார் பாடலிற் கண்டாங்கு ஈண்டு நறுந்தமிழ் பயிலா வெறுஞ் செவிகளை, அவற்றின் புன்மை தோன்றத் துளை என்றும், குறிக்கொண்டு கேளாது காதிற்பட்டன என்பார் புகுந்த என்றுங் கூறினார். இருமை ஒருமை பற்றிய ஈர் ஒரு என்னும் சிற்றெண்கள் அச்சொற்களின் சின்மை குறித்து நின்றன.

பிற சொல்லாவன ஆரியம், ஆங்கிலம் முதலிய பிற மொழிகளின் சொற்கள். விளங்கிக் கொள்வார் இல்லாதவிடத்தும் தம் உரையாட்டின் இடையிடையே பிறமொழிச் சொற்களை வெளிப்படுத்துதல் வரட்டுப் பெருமையும் போலி நாகரிகமும் கருதியும் நல்லறிவின்மையானும் என்க.

மேற்'புகுந்த' என்றமையின் ஈண்டுக் கிளத்தல் வெளிப்படுத்தல் எனப்பட்டது. பிறரை வலிந்தழைத்தும் தாம் முறையாகக் கற்றுத் தெளியாத புல்லிய சொற்களைப் பன்னிப் பன்னிப் பேசும் இயல்பு பற்றிக் கரைந்து என்றார். புல்லிய சொற்களாவன பொருட் சிறப்பற்றன.

*கடுப்புற வல்லேம் யாஅம் என வலம் வரூஉம் :* 'யாம் வல்லமை யுடையேம்' என வாய் நீட்டலும் குறிக்கோளின்றி ஊரைச்சுற்றி வருதலும் செருக்கு மிகுதியின் வெளிப்பாடுகளாம். *கடுப்பு* - செருக்கு, வலம் வருதல் சுற்றித் திரிதல் என்னும் அளவாய் நின்றது.

யாஅம், வரூஉம் என்னும் அளபெடைகள் இசைநிறைத்தன வேனும் அவை நிரலே செருக்கும் வியப்பும் உணர்த்தி நிற்றல் நுண்ணிதின் உணர்க!

*வெம்மார் மாக்களை....பெரிதே :* கடப்பாடு உணராதும் கட்டுப்பாடு இன்றியும் பிறருழைப்பை யுறிஞ்சியும், அறிவுநலமும், பண்பாடும் நாகரிகமுமின்றியும், வீறாப்புப் பேசித் தருக்கித் திரிவார் கொடுமை வாய்ந்த கயவர்களாதலின் அவர்களை வெம்ஆர் மாக்கள் என்றார்.

*மேல்'மகன்'* என்றவர் ஈண்டு 'மாக்கள்' என்றது. அத்தகையோர் தொகை மிகுதிபற்றி என்க! அவ் இழிதகையாளரை நம்மவர்கள் என்றாலும் அவர்கட்குச் சிறப்பாய் அமைதலின் விதந்து என்றார்.

மொழியுரிமையானும் இனச்சார்பு நிலச்சார்புகளானும் அவர்களை நம்மவர்கள் என்றல் எளிதில் தவிர்க்கவியலாமையின் நாணுகம் பெரிதே என்று மீண்டும் கூறினார்.

இப்பாடல் ***பொதுவியல்*** திணையும் ***முதுமொழிக் காஞ்சித்*** துறையுமாம்.



# 69 சாய்தலும் இல்லேம்

*சாய்தலு மில்லேம்; சாயினும் நனைவிழி*
*ஓய்தலு மில்லேம்; ஓயினும் புழுங்குளம்*
*மாய்தலோ யாண்டையு மிலமே! தோய்துயர்*
*எவனுமைத் தொடருவ தென்குவீ ராயின்;*
*குடிபுரந் துவக்கும் கொற்றமு மில்லை;*
*முடிபணிந் துய்யுங் குடியுமீங் கில்லை;*
*நிறையின் வாங்கிக் குறையின் மாறும்*
*கறைநெஞ் சத்துக் கள்வரே வணிகர்;*
*அஞ்சுடர் தவறினும் அறந்தவ றாத*
*செஞ்சொல் மன்றுந் தந்திறங் குன்றிய;*
*கூத்துங் கலையுந் தீத்திறம் பட்ட;*
*பூத்துயர் கற்பின் மடவரும், புரைந்து*
*மனைமுடி கழற்றிப் புனைமுடி பூண்டார்!*
*வலியோர் வலிந்தார்; மெலியோர் மெலிந்தார்;*
*குலம்பல வாகிக் கலாம்பல விளைத்த;*
*தந்துயர் பொறைந்து பிறர்துயர் கரையும்*
*செந்நெறிச் சான்றோர்க் கேமமு மின்றே!*
*புல்லென் உவகைக் குள்ளம் விற்று*
*நல்லியல் பழிகுவர்; நாணுத் துறந்தார்;*
*பொருள்தனி யொன்றே போற்றும்*
*இருள்மிகு வாழ்வோர்க் கிரங்குகை யானே!*

**பொழிப்பு :**

யாம் உடலைச் சாய்த்துப் படுத்தலும் இல்லேம்; ஒரோவழிப் படுப்பினும் ஈரந்தோய்ந்த விழிகளை மூடித் துயிலுதலும் இல்லேம்; ஒரோவழித் துயிலினும் வெதும்புகின்ற எம்மனம் மறதி கொள்ளுதல் ஒரு போதும் இலேம்!

'இங்ஙனம் செறிந்த துயரம் நம்மைத் தொடருவது ஏன் ?' என்று வினவுவீராயின், குடிமக்களைக் காத்து வாழ்வித்து உளம் மகிழும் நல்லரசும் நாட்டில் இல்லை; அரசுக்கு அடங்கி நடந்து குற்றங் குறைகளின் நீங்கி வாழும் குடிமக்களும் இல்லை. பிறரிடத்தினின்றும் தாம் மிகுதியாக வாங்கிக் கொண்டு பிறர்க்குக் குறைவாகக் கொடுக்கும் மாசுபட்ட மனத்தையுடைய கள்வர்களே வணிகர்களாக உள்ளனர்.

அழகிய ஒளிவீசும் ஞாயிறு இயங்குமுறை தவறினும் முறை பிறழாத நேர்மையான தீர்ப்பு வழங்கும் அற மன்றங்களும் தம் இயல்பினின்றுங் குன்றிவிட்டன. நாடகமும் பிறகலைகளும் தீய இயல்புடையன ஆகிவிட்டன. பொலிவுற மேம்பட்டு விளங்கும் கற்பிற் சிறந்த மகளிருங்கூட மனநிலை திரிந்து மனைக்குரிய ஆளுமையைக் கைவிட்டு ஒப்பனையால் செயற்கை முடியை அணிந்து கொள்வார் ஆயினர். பல்லாற்றானும் வலிமை வாய்ந்தவர்களே மேலும் வலிமை பெற்றுள்ளனர்; மெலிவுற்றவர்களோ மேலும் மெலிவுபட்டுள்ளனர். குலங்கள் பல்வேறு சாதிகளாகக் கிளைத்துப் பற்பல கலகங்களைச் செய்கின்றன. தமக்கு உற்ற துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு பிறர்படும் துன்பத்தைப் போக்கும் பொருட்டுக் குரல்கொடுப்போரும் செவ்விய நெறியைக் கடைப்பிடித்து ஒழுகுவோருமான சான்றோர் பெருமக்களுக்குத் தக்க பாதுகாப்பு இல்லை. இத்தகைய சீர்கெட்ட நிலையினும் இழிந்த மகிழ்ச்சியின் பொருட்டு மனக்கருத்தை விற்று நல்ல இயல்புகள் அழியப் பெறுவோரும் தீவினைகளைச் செய்யக் கூசாதவர்களும் கைப்பொருள் ஒன்றையே பெரிதெனக் கொண்டு பேணிக் காக்கும் அறியாமை மிக்க வாழ்வுடையோருமாக இருக்கும் மக்கள் நிலையை எண்ணி யாம் வருந்துகின்றமையான் என்றவாறு.

**விரிப்பு :**

இப்பாடல் புறப்பொருள் பற்றியது.

நாட்டின் பல்வேறு இழிநிலைகளையும், மக்களின் சிறுமைப் போக்கையும் எண்ணித் தாம் வருந்தும் நிலையை வெளிப்படுத்திப் பாடியது இப்பாட்டு.

***சாய்தலும் இல்லேம் ........... என்குவீராயின் :*** நிற்றலும் இருத்தலும் ஆகிய நிலைகளை இயங்குவதற்கு ஏற்றவை யாதலின் இயக்கந் தவிர்தலைக் குறிக்கக் கிடக்கும் நிலையைக் கூறினார். சாய்தல்-படுத்தல்.

மனக் கவலையின் மெய்ப்பாடு கண்கசிதல் ஆகலின் நனைவிழி எனப்பட்டது. க்வலையால் வெதும்பும் உள்ளம் அக் கவலையை எந்நிலையிலும் மறத்தலாகாமையின் 'மாய்தல் யாண்டையும் இலம்' என்றார். மாய்தல் -மறத்தல்.

உள்ளமும் உடலும் அமைதிபெற வொட்டாது வருத்துதலின் தோய்துயர் என்றார். தோய்தல்-செறிதல்

***குடிபுரந்து உவக்கும் கொற்றம் :*** அரசு குடிமக்களைப் புரத்தலாவது புறப்பகையான் வரும் போர்கள், அகப்பகையான் வரும் பூசல்கள், மற்றும் அதிகார முறைகேடுகள் இயற்கை ஊறுபாடுகள் முதலானவற்றை எதிர்கொண்டும் தடுத்து அடக்கியும் நெறிப்படுத்தியும் இழப்பீடு நல்கியும்

பாதுகாத்து வாழ்வித்தல். அன்றியும் மக்களின் அறிவு வளர்ச்சிக்கும் செயும் முயற்சிகளுக்கும் ஊக்கமளித்து உதவிபுரிதலுமாம்.

மக்களை இனிது வாழ்வித்தலே அரசின் மெய்யான வெற்றியா கலின் அதனான் வரும் மனமகிழ்ச்சி உவகை எனப்பட்டது.

*முடிபணிந்து உய்யுங் குடி* : குடிமக்கள் அரசுக்கு அடங்கி நடத்தலாவது அரசு வகுக்கும் அறச்சட்டங்கள் செயற்படவும், நலத் திட்டங்கள் நிறைவேறவும் அவற்றைக் கடைப்பிடித்தும் ஒத்துழைத்தும் வாழ்தல். உய்தல்-குற்றங் குறைகள் நீங்குதல். செய்தக்க அல்ல செய்தல் குற்றமும் செய்தக்க செய்யாமை குறையுமாம். முடி-அரசு.

இனி, முடிபணிந்து உய்யுங் குடியாவது அரசும் பணிந்து உய்யுமாறு விளங்கும் தலைமை சான்ற குடிமக்கள் எனினுமாம்.

*நிறையின் வாங்கிக் .......... வணிகர்* : நிறையின் என்பது குறையின் என்பதற்கு மறுதலையாக நிற்றலின் அளவின் மீறி மிகுதிப் பொருள் கொடுத்தது.

பேராசையான் நடுநிலை பிறழ்ந்து பிறரை ஏமாற்றிப் பொருள் குவிக்கும் குற்றவாளிகள் ஆதலின் இழிநிலை வணிகர்கள் கறை நெஞ்சத்துக் கள்வர் எனப்பட்டனர். ஈண்டுச் சுட்டப் பெறும் வணிகர் நிலை,

*கொள்வதூஉம் மிகைகொளாது*
*கொடுப்பதூஉம் குறைகொடாது*

எனப் பட்டினப் பாலை குறிக்கும் வணிகர் நிலைக்குத் தலைமாறாதல் காண்க.

*அஞ்சுடர் தவறினும்..........குன்றிய* : முறை பிறழாத இயக்கத்துக்குக் க்திரவனை எடுத்துக் காட்டாகக் கூறுதல் வழக்காதலின் 'அஞ்சுடர்தவறினும்' என்றார். இருள்நீக்கி அச்சந்தவிர்த்து எழுச்சியூட்டுதலின் கதிரவனை அஞ் சுடர் என்றார். செஞ்சொல் - நடுநிலையான தீர்ப்புரை.

*கூத்தும் கலையும் தீத்திறம் பட்ட* : நாடகக் கலை எல்லா நிலையினரையும் ஈர்க்கும் இயல்பு பற்றியும் - பாடல், உரையாடல், இசை, கூத்து, நடனம், ஓவியம், ஒப்பனை முதலான பல்வகைக் கலைகளையும் உள்ளடக்கி நிற்றல் பற்றியும் 'கூத்துங் கலையும்' என்ற விடத்துத் தனித்தெடுத்துச் சிறப்பித்து உரைக்கப்பட்டது.

கூத்து என்பது இசை தழுவிய ஆட்டத்தையும் நாட்டியம் என்பது இசைப்பாடல் தழுவிய மெய்ப்பாடு சான்ற நடனத்தையும் நாடகம் என்பது கதை தழுவிய நிகழ்ச்சியையும் சிறப்பாகக் குறிக்கும். குறிப்பினும்

ஈண்டுக் கூத்து என்பது மேற்காட்டியவாறு கலைகளினின்றும் தனித்து எடுத்துச் சிறப்பித்துரைக்கப்படுதலின் அது நாடகத்தையே குறித்தல் அறியப்படும். அன்றியும் அஃது இற்றை நிலையில் திரைப்படமாகவும் கொள்ளப்படும்.

*பூத்து உயர் கற்பின் ...... பூண்டார் :* கல்வி கேள்விகளினும் செல்வச் சிறப்பினும் எழில்நலங்கள் பிறவற்றினும் மேம்பட்டதாகவும் தெய்வத் தன்மையுடையதாகவும் போற்றப்படுதலின் கற்பு 'பூத்து உயர் கற்பு' எனப்பட்டது. அஃது இளமகளிர்க்கே சிறப்புடைமை பற்றி 'கற்பின் மடவர்' என்றார். மடவர்-இளமகளிர். அவர்தாமும் மனந்திரிந்து ஒப்பனையால் போலி முடியைப் புனைந்து கொள்ளும் நிலைக்கு இழிந்தனர் என்றார். புரைந்து - புரைபட்டு.

மகளிர் மனையாள், மனைவி, இல்லாள், இல்லத்தரசி என்றெல்லாம் சிறப்பிக்கப்படுதலின் 'மனை முடிகழற்றி' என்பதற்கு 'மனைக்குரிய ஆளுமையைக் கைவிட்டு' என்றாம். அவ்வாறன்றி 'இயற்கையான முடியைக் கத்தரித்து விட்டு' எனினுமாம். இவ்வாறே அழகு வேண்டி இயற்கையான பற்களைக் களைந்துவிட்டுப் பொய்ப்பல் கட்டிக் கொள்வாரும் பலர்.

*வலியோர் வலிந்தார் மெலியோர் மெலிந்தார் :* செல்வத்தானும் பிறவுடைமைகளானும் ஆளுமைநிலைகளானும் வலிமையுடையோரே தம் வலிவைப் பெருக்கிக் கொள்ளுதலும் அவற்றின் மெலிவுற்றோர் மேலும் மெலிவுறுதலும் வெளிப்படை.

*குலம் பலவாகிக் கலாம்பல விளைத்த :* நிலத்தானும் தொழி லானும் இயற்கையாய் ஒன்றி வாழ்ந்த மக்கட் குலங்கள் அயலவர் சூழ்ச்சியால் பிறப்பின் வந்தனவாகவும் உயர்வு தாழ்வு உடையனவாகவும் திரிக்கப்பட்டும் பல்வேறு சாதிகளாகப் பிரிக்கப்பட்டும் ஒவ்வொன்றினும் எண்ணற்ற உட்பிரிவுகள் விரிக்கப்பட்டும் தமக்குள் பகைத்து நின்று கலகம் விளைத்தல் கண்கூடு.

*தந்துயர் பொறைந்து........ ஏமும் இன்றே :* தந்துயர் பொறைந்து 'உற்ற நோய் நோன்றல்' என்றபடி தமக்குற்ற துன்பத்தைப் பொருட் படுத்தாமல் பொறுத்துக் கொண்டு. 'தமக்கென முயலா நோன்றாட் பிறர்க்கென முயலுநர்' என்றான் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி.

பொறைந்து - பொறுத்துக் கொண்டு. பொறை என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர் பொறைந்து என்று எச்சமாகி வினை வடிவு கொண்டது. கரைதல் - அழைத்துச் சொல்லுதல்.

நல்லனவெல்லாம் கடனெனக் கொண்டு ஒல்லும் வகை யெல்லாம் உயர்பணி செய்யும் சான்றோர் பெருமக்களும் அரம்பர்களின்

தாக்குதலுக்கு ஆளாக நேர்தலானும் தம் நற்பணிகளுக்கு உதவியும் துணையும் இன்றி அவற்றைக் கடைகொட்கச் செய்தற்கு இடர்படநேர்தலானும் 'சான்றோர்க்கு ஏமமும் இன்றே' என்றார்.

*புல்லென் உவகைக்கு ...... இரங்குகை யானே :* இழிநிலை மகிழ்ச்சியின் பொருட்டு மாந்தர்க்குச் சிறந்த மனக்கருத்தை விலைப் படுத்தலும், தீவினைகளைச் செய்யக் கூசாமையும் அறக்கொடினவாகலின் அவற்றைச் செய்வார்நிலை ஆசிரியரை வருத்துவதாயிற்று.

'பொருளாட்சிபோற்றாதார்க் கில்லை' என்றபடி வாழ்க்கைத் தேவையின் பொருட்டுப் பொருளும் போற்றத் தக்கதே யாயினும் அஃது ஒன்றனையே பெரிதெனப் போற்றித் தீவினைகளுக்கு இடமான அறியாமை இருளில் சிக்கி உழல்வோர் இரக்கத்துக்கு உரியராயினர்.

இரங்குகையானே சாய்தலும் இல்லேம் எனக் கூட்டுக !

இப்பாடல் *பொதுவியல் திணையும், முதுமொழிக் காஞ்சி* என்னுந் துறையுமாம்.



## 70 என்றுங் காண்குவம்

*குன்றுசீர் வைத்த கொடையி லாளரைத்*
*தின்றுயும் பொருட்டுத் தேய்கா லோயச்*
*சென்று கேட்குநர் அல்லேம் யாமே*
*அன்றுநாட் கவளம் அலைந்துண் மாரை*
*ஒன்றும் பெறுவே மல்ல மாயினும்*
*என்றுங் காண்குவம் இனிதே நெடுங்கரைத்*
*தெண்ணீர் நனையடி யேறி யடர்த்த*
*தண்புற் சின்னிழல் தங்குவ தன்றிக்*
*கரிநிழல் மடங்கற் படுத்தல்*
*விரிநீர் உலகத் தியாண்டு மிலானே!*

**பொழிப்பு :**

*யாம் உணவுண்டு உயிர் வாழும் பொருட்டு, மலைபோலும் திரண்ட செல்வத்தை வைத்திருந்தும் வள்ளன்மைக் குணம் இல்லாதாரை, எம் தேய்வுற்ற கால்கள் சோர்வுறுமாறு தேடிச் சென்று அவரிடத்துப் பொருள் வேண்டுவே மல்லேம். அற்றைநாள் உணவையும் பாடுபட்டுத் தேடியுண்ணுபவரிடத்து யாம் ஏதும் பெறுவேம் அல்லேம் ஆயினும் அவரை; மனமகிழ்வொடு காண்பேம். நெடிய கரையையுடை யாற்றின் தெளிந்த நீரில் நனைந்திருக்கும் படுகையின் கண்ணே ஏறிச்சென்று செறிந்த குளிர்ச்சி பொருந்திய பொதும்பரின் சிறுநிழலில் தங்குவதல்லாது, கரிந்த மரநிழலின்கண் படுத்தல் பரந்த கடலாற் சூழப்பெற்ற இவ்வுலகின்கண் யாங்கணும் இல்லையாதலின்.*

**விரிப்பு :**

*இப்பாடல் புறப்பொருள் பற்றியது*

*பெருஞ்செல்வராயினும் வள்ளன்மைக் குணம் இல்லாரை யாம் தேடிச் செல்லேம். வறியராயினும் பண்புநலம் உடையாரை என்றும் காண்பேம் என்னும் உள்ளக்கிடக்கையைப் புலப்படுத்துவதாக அமைந்தது இப்பாட்டு.*

*குன்று சீர்வைத்த கொடையிலாளரை* – மலைபோலும் திரண்ட செல்வம் பெற்றிருந்தும் வள்ளன்மைக் குணம் இல்லாதாரை.

திரண்ட பெருஞ் செல்வமேனும் பயனின்றிப் பாழ்படக் கிடத்தலின் அச் சிறுமை தோன்றக் குன்றுசீர் என்றார். குன்று என்னுஞ் சொல் வெளிப்படையாய்ப் பெயர்ப்பொருள் பயப்பினும், குறிப்பாய் வினைப்பொருள் தரும் நயங்கண்டு மகிழ்க.

உயரிய நோக்கமின்றி உயிர் வாழும் பொருட்டே வயிறு நிரப்புதல் என்னும் இழிவு தோன்றத் தின்று என்றார்.

*தின்று உயும் பொருட்டு ....* - யாம் உணவு உண்டு உயிர்வாழும் பொருட்டு

உய்தலாவது பசியான் வருஞ் சாவினின்றுந் தப்புதல்.

*தேய்கால் ஓயச் சென்று கேட்குநர் அல்லேம்யாமே* - தேய்வுற்ற கால்கள் ஓயுமாறு தேடிச்சென்று பொருள் வேண்டுவேமல்லேம் யாம்

அலைச்சலாய்ப் பலரிடத்துஞ் செல்லுதலின் தேய்கால் என்றும் பலகாலுஞ் செல்லுதலின் ஓய என்றுங் கூறினார்.

கேட்டல் என்னுஞ் சொல் செவிமடுத்தல் என்னும் பொருளதே யாயினும் இக்காலத்து வேண்டுகோளைக் குறிப்பதாக அது பெரு வழக்குப் பெற்றுள்ளமையின் கேட்குநர் என்னுஞ் சொல்லில் வேண்டற் பொருளில் நின்றது.

*அற்றை நாட் கவளம் அலைந்து உண்மாரை* - அற்றைநாள் சிற்றுணவையும் பாடுபட்டுத் தேடி உண்ணுபவரிடத்து.

அற்றைநாட் கவளம் அலைந்துண்ணல் செல்வச் சேமிப்பற்ற அவர் தம் வறிய நிலையைக் குறித்தது. 'அன்றாடங் காய்ச்சி' என்பது உலக வழக்கு.

*கவளம்* : சோற்றுத் திரளை - ஒருவாய்ச் சோறு என்னுமாறு அளவானும் சுவையானும் சிறுமைப் பொருள் பயந்து நின்றது.

*அலைந்து* – கடிதின் முயன்று தேடி

*ஒன்றும் பெறுவேம் அல்லம் ஆயினும்* – யாம் ஏதும் பெறுவேம் அல்லம் ஆயினும்

'ஒன்றும் பெறுவேம் அல்லம்' என்றமையான், யாம் பெறுமாறு அவர் ஏதும் உடையரல்லர் என்பதனைப் புலப்படுத்தினார். அன்றியும், அவர் வருந்தி யீட்டிய சிறுபொருளைத் தங்கட்டாயத் தேவைகளையும் மட்டுப் படுத்திக் கொண்டு எம்பால் வைத்த அன்பால் உவந்து வழங்கினும் அவர்தம் இன்னல்நிலை நோக்காது அதனைப் பெறும் வன்கண்மையுடையே மல்லேம் என்று கூறியதாகக் கொள்ளினும் அமையும்.

*தெள்நீர் நனையடி ஏறி* – தெளிந்த நீரின் கண்ணே நனைந்திருக்கும்

படுகையின்கண்ணே ஏறிச்சென்று

*நனைஅடி* - நீரில் நனைந்த நிலப்பகுதி; படுகை.

*அடர்த்த தண்புல் சில்நிழல் தங்குவது அன்றி* – செறிந்த குளிர்ச்சி பொருந்திய பொதும்பரின் சிறுநிழலில் தங்குவதல்லாது

*புல்* - புல்வளர்ந்த பொதும்பர்

*சில்* - சிறு சின்மை சிறுமை குறித்து நின்றது.

*கரிநிழல் மடங்கல் ...... யாண்டுமிலானே* - கரிந்த பெருமரங்களின் நிழலில் அரிமா தங்காது பரந்த நீர் சூழ் உலகில் எங்கும் இல்லையாதலின்

பொதும்பர் நிழல் சின்னிழல் எனப்பட்டமையால் கரிந்தமரம் மரம் பருமரம் என்பது பெறப்படும். கரிந்த மரத்தின் நிழல் கரி நிழல். மரம் வருவிக்கப்பட்டது.

அரிமா, தண்ணிய புன்னிழல் தங்குதன்றி நிழல்தரமாட்டாத கரிமரக் கானில் படுக்காது என்றமையின் வறியாரேனும் நன்னெஞ்சினாரை நாளுங் காண்பதன்றி குன்று சீர் வைத்த கொடையிலாளரைத் தேடிக் காணமாட்டேம் என்னும் கருத்தை உலகியல் நிகழ்ச்சியால் வலியுறுத்தினார்.

யாம் அரிமாவனையேம் என்றவாறு.

இப்பாடல் **பொதுவியல்** திணையும் **பொருண்மொழிக் காஞ்சி** என்னும் துறையுமாம்.



# 71 வேண்டுமென் நெஞ்சே!

*யாண்டவ னாயினும் மாண்டுப் பீடொடு*
*வேண்டுவ சுரக்கும் வியன்றமிழ்க் கல்வி*
*துறையறப் போகித் துணிந்து குறையற*
*வடித்துவந் தளிக்கும் வாயி னானை*
*மிடிந்தார்க் கிரங்குஞ் செவியி னானை*
*வாய்ந்தார்க் கருளுந் தோளி னானைத்*
*தோய்ந்தார்க் குரித்த மார்பி னானைக்*
*குணங்குயர் காட்சி வணங்குறு வாழ்வின்*
*சான்றோர்க் கினித்த சொல்லி னானை*
*ஈன்றோர் தவிர்க்கினும் வேண்டுமென் நெஞ்சே!*

**பொழிப்பு:**

*அவன் எவ்விடத்தானாயினும் மாட்சியமையால் செம்மாந் திருத்தலோடு தேவைப்படுங் கருத்தைத் தருகின்ற பெருமைசான்ற தமிழ்க் கல்வியைக் கற்றுத் தேர்ந்து முடிபு கண்டு, குறையின்றித் தெளிவுபட இனிது எடுத்துரைக்கும் வாயையுடையவனை; வறியார்பால் இரக்கங்கொண்டு அவர்தம் வேண்டுகோளை ஏற்கும் செவியையுடையவனை ஆற்றாமை வாய்ந்தவர்கட்கு அருள் செய்யும் தோளை யுடையவனை நட்புப் பொருந்தியவர்கட்கு உரிமையாக்கப்பட்ட மார்பை யுடையவனை, சிறு தெய்வங்களினும் மேம்பட்ட இறைமைக்காட்சியில் ஒன்றியவரும் உலகத்தவரால் வணங்கப்பெறும் மெய்வாழ்வினருமான சான்றோர் பெருமக்களுக்கு இனிமைபயக்கும் சொல்லைப் பேசுபவனைப் பெற்றோர் தவிர்த்தாலும் என் நெஞ்சம் விரும்புகிறது.*

**விரிப்பு:**

*இப்பாடல் அகப்பொருள் சார்ந்தது.*

*தலைமகன்பால் காதல்கொண்ட தலைவி, தன் பெற்றோர் அவனை மணமகனாக ஏற்காது தவிர்த்து வேறுமணம் பேச முற்பட்டகாலைத் தலைமகனின் கல்விச் சிறப்பும் சொன்வன்மையும் சான்றாண்மைப் பண்புகளும் எடுத்துக்கூறி அவனை விரும்பும் தன் காதல் நெஞ்சத்தைத் தோழிக்குப் புலப்படுத்துவதாக அமைந்தது இப் பாட்டு.*

*யாண்டு அவன் ஆயினும்* - அவன் எவ்விடத்தானாய் இருப்பினும்

*மாண்டுப் பீடொடு* - மாட்சிமையுடையனாகிச் செம்மாந்திருத்தலோடு.

மாட்சிமை - நற்குண நற்செயல்கள். பீடு -செம்மாப்பு

*வேண்டுவ சுரக்கும் வியன் தமிழ்* - தேவைப்படுங் கருத்துக்களை ஊற்றுப் போல் தொடர்ந்து சுரந்து கொண்டிருக்கும் பெருமை பொருந்திய தமிழ்.

அறிவியல் வளர்ச்சியால் கண்டுபிடிப்புகளும் புதுப்புனைவுகளும் நாளுக்குநாள் பெருகி; பன்னாட்டு, பலவின, பன்மொழித் தொடர்புகள் மிகுந்து; நாகரிகங்களின் போக்குமாறி; செய்தித் தொடர்புகள் பெரிதும் எளிமைப்பட்டிருத்தலின் அவற்றையெல்லாம் எதிர்கொண்டு, எந்நிலை வாழ்க்கைக்கும் எத்துறை அலுவலுக்கும் எவ்வகைப்பட்ட கல்வி, கலை, தொழில் முதலானவற்றுக்கும் பயன்படத்தக்கதாய்; எக்கருத்தையும் நுணுக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துச் சொல்லவும், எச் சிக்கலுக்கும் தீர்வுகாணவும் தேவையான சொல்வளமும் கருத்துவளமும் தழைத்து, மேற்கோள்களும், உவமைகளும், பலமொழிகளும் நிறைந்த இலக்கண இலக்கிய நூல்வழக்கும் என்றும் நிலவும் மக்கள் வழக்கும் உடையதாய் இருத்தலின் தமிழை வேண்டுவ சுரக்கும் வியன் தமிழ் என்று சிறப்பித்தார்.

*"இற்றைக் கியல்வன இனிமேல் எழுவன முற்றும் செந்தமிழ் மொழிக்குள் அடக்கம்" என்பது ஆசிரியர் கூற்று.*

*கல்வி அறப்போகித் துணிந்து* (கல்வியைக் கற்றுணர்ந்து முடிபு கண்டு. கல்வி துறை அறப் போகித் துணிந்து

தமிழ்க்கல்வியை நிறைவுறவும் ஐயந்திரிபுகளறவும் கற்றுணர்ந்த முடிபுகண்டு என்றவாறு.

*குறையற வடித்து உவந்து அளிக்கும் வாயினானை* - குறைபாடு இன்றியும் கேட்போர் தெளிவுறவும் இனிது எடுத்துரைக்கும் வாயை யுடையவனை.

அளித்தல்- கருத்தை வழங்குதல்.

*மிடிந்தார்க்கும் இரங்கும் செவியினானை* - வறுமையுற்றாற்போல் இரக்கங்கொண்டு அவர்தம் வேண்டுகோளை ஏற்கும் செவியை யுடையவனை.

இரங்குதலாவது இரக்கங்கொண்டு அதற்குத் தக உதவுதல். இரங்கத் தக்க மிடிந்தார்தம் வேண்டுகோளைச் செவிமடுத்துவிடின் அவன் தவறாது உதவுவான் என்னும் உறுதிப்பாட்டைப் புலப்படுத்துவார் அவன் செய்யும் உதவியைச் செவியின் மேல் ஏற்றிக் கூறினார். மிடி-வறுமை.

*வாய்ந்தார்க்கு அருளும் தோளினானை* - ஆற்றாமை வாய்ந்தவர்கட்கு அருள்செய்யும் தோளையுடையவனை.

ஆற்றாமை அவாய் நிலையால் வந்தது. ஆற்றாமை வாய்ந்தோராவார் நலிவுற்றோர்.

செயற்பாட்டுக்குரியது தோளாதலின் அருள் செய்தல் தோள்மேல் ஏற்றப்பட்டது. உற்றுழி உதவுதலைத் தோள்கொடுத்தல் என்னும் உலக வழக்கும் நோக்குக!

*தோய்ந்தோர்க்கு உரித்த மார்பினானை* - நட்புப் பூண்டார்க்கு உரியதாகிய நெஞ்சம் உடையவனை.

மனம் ஒன்றுபட்ட நிலையே நட்பாதலின் நட்புப்ண்டார் தோய்ந்தார் எனப்பட்டனர். தோய்தல்- ஒன்றுபடுதல்.

*குணங்கு உயர் காட்சி* - ஆவிகளாகிய சிறுதெய்வ நிலையினும் வேறுபட்டு உயர்ந்த இறைமைக் காட்சியைக் கண்டு. குணங்கு-சிறுதெய்வம்.

*வணங்கு உறு வாழ்வின் சான்றோர்க்கு* - உலக மக்களால் வணங்கப்பெறும் சான்றோர்க்கு.

*இனித்த சொல்லினானை* - இனிமையளிக்கும் சொல்லைப் பேசுபவனை

ஒருவன் அருளுணர்வும் நல்லொழுக்கமும் உடையானென்றும், இவன் நாட்டுக்கு நலஞ்செய்யும் வினையாளன் என்றும் இன்ன பிற சிறப்புடையானென்றும் நம்பிக்கை கொள்ளுதற்கு இடனான சொல் சான்றோர்க்கு இனிக்குஞ் சொல்.

மேல்வாயினானை என்றது அவன்றன் கல்விச் சிறப்பும் நாநலமும் பற்றியது என்றும், ஈண்டுச் சொல்லினானை என்றது அவன்றன் ஒழுக்கமும் வினைநலமும் பற்றியதென்றும் கொள்க!

இனி, வாயும் செவியும் தோலும் மார்பும் சொல்லும் உடையானை என்னாது வாயினானை, செவியினானை என்றாங்குத் தனித்தனியே கூறியது இயைபுத் தொடை நோக்கி என்க.

*இன்றோர் தவிர்க்கினும் வேண்டும் என் நெஞ்சே* - பெற்றோர் தவிர்ப்பினும் என் நெஞ்சு வேண்டுகின்றது.

யான் பெற்றோர் கருத்துக்கு மாறுபட விரும்பவில்லை யாயினும் என்நெஞ்சு எனது கட்டுப்பாட்டிலில்லை என்பாள் போல் யான் வேண்டுவல் என்னாது நெஞ்சின்மேல் ஏற்றிக் கூறினாள்.

இப்பாடல் *குறிஞ்சியாகிய அகத்திணையும் வேற்றார் வரைவு நேர்ந்துழி தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றது* என்னுந்துறையு மாம்.

# 72 இனிதுற நினைமே

*எழுந்தீ நாற்றம் இன்வளி பரத்தலும்*
*விழுந்துளி நச்சம் விரிபுனற் கலத்தலும்*
*அதிரொலி மென்செவிக் கழலெனப் படர்தலுங்*
*கதிரொளி விரிந்துயிர் கனத்தலு முண்மையின்*
*முன்னிய கோட்டம் மன்னுயிர்க் கெல்லாம்*
*மின்னுவ தாகலின் உன்னுவ தெவையுந்*
*தம்மிய வென்னா தமக்கும்*
*எம்மிய லோர்க்கும் இனிதுற நினைமே!*

**பொழிப்பு :**

எழுகின்ற தீயநாற்றம் இனிய காற்றில் பரவுதலும், விழுகின்ற துளிய ளவு நஞ்சு பரந்த நீரில் யாண்டும் கலத்தலும், இடிமுழக்கம் செவியின் வெப்பம் போல் பரவுதலும். கதிரவனின் ஒளி யாண்டும் விரிவுற்று அதன் வெப்பம் உயிரினங்களை யெல்லாம் சூடேற்றுதலும் இயல்பாய் இருத்தலின் ஒருவர் மனத்துக் கருதிய கோணல், நிலைபெற்ற உயிர்களுக் கெல்லாம் உள்ளத்தின்கட் பளிச்சிடுவது ஆகலின் மக்கள் மனத்தில் எண்ணுவன எவற்றையும் தம்முடைய எண்ணமே என்று கொள்ளற்க! யாவரும் தமக்கும் மற்றும் எவ்வகைப்பட்ட இயல்பு உடையோர்க்கும் நல்லன விளையுமாறு நினையுமின்!

**விரிப்பு :**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

காற்றினும் நீரினும், வானினும் பட்ட பொருள்கள் அவற்றினூடே யாண்டும் பரவுதல் காண்டுமாகலின் அவ்வாறே ஒருவர் மனத்துக் கருதும் எண்ணம் மனவெளியினூடே யாண்டும் பரவி மக்கள் மனத்திலெல்லாம் தோன்றும் ஆதலின் நம் மனத்துத் தோன்றுவனவெல்லாம் நாமே கருதுவன அல்ல என்பதை அறிதலோடு தமக்கும் பிறர்க்கும் நன்மை பயக்கும் எண்ணங்களை மனங்கொள்ளுமாறு அறிவுறுத்துவது இப் பாட்டு.

*எழும் தீ நாற்றம் இன் வளி பரத்தலும்* - எழுகின்ற தீயநாற்றம் இனிய காற்றில் யாண்டும் பரவுதலும். நறுமணமும் யாண்டும் பரவுவதே யெனினும் தீய நாற்றமே விரைந்து உணரப்படுதலின் அதனைக் கூறினார். நாற்றம் தீய

நாற்றத்தைக் குறிப்பினும் பண்டு நறுமணத்தையும் இரு மணத்தையுங் குறித்தமையின் தீ நாற்றம் என்று அடைமொழி புணர்த்துக் கூறினார்.

இன்வளி-நல்ல காற்று; பரத்தல் -பரவுதல்

***விழும் துளி நச்சம் விரிபுனல் கலத்தலும்*** - விழுகின்ற துளியளவு நஞ்சு பரந்த நீரில் எங்கும் கலத்தலும்.

ஆவியின் இயல்பு மேல்நோக்கி எழும்புதலும், நீர்மத்தின் இயல்பு கீழ்நோக்கி இழிதலுமாதலின் மேலையடியில் எழும் என்றவர் ஈண்டு விழும் என்றார்.

துளி - நீர்மத்தின் சிற்றளவு : மழைத் துளியளவு

நச்சம் - நஞ்சு. விரிபுனல் - பரந்துபட்ட நீர்

***அதிரொலி மென்செவிக்கு அழல் எனப் படர்தலும்*** - இடி முழக்கம் மெல்லிய செவியின்கண் தீப்போலப் பரவுதலும்.

அதிர்தல்- முழங்குதல். ஒலி-இடி. அதிரொலி என்றது இடி முழக்கத்தை.

மெல்லிய ஒலியையுங் கதுவுமாறு செவிப்பறை மென்மையானதாக இருத்தலின் மென்செவி என்றார் செவிக்கு - செவியின்கண்

விரைந்து பரவுதலுக்குத் தீ உவமையாக கூறப்பட்டது. அழல்-தீ; எனஉவம உருபு.

***கதிர்ஒளி விரிந்து உயிர் கனத்தலும்*** - கதிரவனின் ஒளி யாண்டும் பரவி உயிரினங்களுக்கு வெப்பமளித்தலும்.

கதிர்- கதிரவன்; கனத்தல்-கனற்றுதல்; வெப்பமூட்டுதல்.

***உண்மையின்:*** உலக இயல்பாய் இருத்தலால்.

***முன்னிய கோட்டம்........ மின்னுவது ஆகலின்*** - ஒருவர் மனத்துப்பட்ட கோணல் நிலைபெற்ற உயிர்கள் அனைத்திடத்தும் பளிச்சிடுவது ஆதலின்.

முன்னுதல்-கருதுதல்; மனத்தின் வினை. கோட்டம்-கோணல் ஒழுங்கின்மை; உடல்கள் அழிவன வல்லது உயிர்கள் அழிவற்றன என்னுங் கருத்தால் மன்னுயிர் என்றார். மன்னுயிர் -நிலை பெற்ற உயிர். மின்னல் வீச்சுப்போல் கருத்துகள் தோன்றுதலின் மின்னுவது என்றார். மின்னுவது - பளிச்சிடுவது.

ஒருவர் கருதும் கருத்து மாந்தர் அனைவர்தம் உள்ளத்திலும் தோன்றுகிறது எனப்படுதலின், தம் உள்ளத்துத் தோன்றுங் கருத்து இன்னொருவரது கருத்தின் தாக்கமாகவும் இருக்கக்கூடும் என்பார் இவ்வாறு கூறினார்.

*உன்னுவது எவையும் தம்மிய என்னா* - தம் மனத்துத் தோன்றும் கருத்துகள் அனைத்தும் தாமே கருதியன என்று கொள்ளற்க.

உன்னுவது-கருதுவது; கருதப்படும் கருத்துகள். தம்மிய - தம்முடையன; தாமே கருதியன என்னா-என்று கொள்ளற்க.

*தமக்கும் எம் இயலோர்க்கும் ......நினைம்:* தமக்கும் மற்றும் எத்திறத்தார்க்கும் நன்மை விளையுமாறு நினைக.

எம் இயலார்க்கும் -எவ் இயலார்க்கும். அம்மை-அவ்வை, செம்மை-செவ்வை முதலானவற்றுள் மகரம் வகரமிகத் திரிந்தாங்கு ஈண்டு வகரம் மகரமாகத் திரிந்தெனக் கொள்க.

இப்பாடல் *பொதுவியல் என்னும் புறத்திணையும்பொருண் மொழிக்காஞ்சி* என்னுந் துறையுமாம்.



# 73 இழிவறிந் துய்க

ஊருண் கூவல் தூருண் மண்டி
நீரிழி பட்டென யாவருந் தொட்டுப்
புதுக்கல் நந்த உணல்யா மென்றியர்
ஓதுக்கலர் நிரப்பின் ஒப்புர வாரை!
பதுக்கற் றிருவார் படுதுயர் முடைசேர்
முதுநீர்த் தேக்கம் மூடுநர் ஆங்க
அழிமென் றழுங்கா ராகலின்
இழிவறிந் துய்க இறைத்துண வீந்தே!

## பொழிப்பு

ஊர்மக்கள் குடிநீர் கொள்ளும் கிணற்றகத்தே கும்பியுங் கசடுகளும் மிக்கு நிறைந்து நீர் நலங்கெட்டது என்று ஊரார் யாவருங்கூடி அக் கிணற்றைத் தோண்டிப் புதுக்குதல் போல, ஒப்புரவாளர் வறுமைப்பட்ட விடத்து ஊரார் அவரையும் அழைத்து யாம் உண்போம் என்பர்; அவ்வாறன்றி அவரைப் புறக்கணித்து ஒதுக்குவாரல்லர். மற்று மிகுந்த துன்பத்தை செய்கின்ற தீய நாற்றம் வீசும் நெடுநாள் நீர் தேங்கி நிற்கும் குட்டையைத் தூர்த்து மூடுவாரைப் போலப் பதுக்கி வைத்த செல்வமுடையவர்கள் துன்பமுற்றவிடத்து அவர்தங் குடும்பம் அழிந்துவிடும் என்று வருந்துவாரல்லர். அதனால் செல்வத்தைப் பதுக்கி வைத்தலால் நேரும் இழிவினை யறிந்து யாவர்க்கும் வழங்கியும் உணவளித்தும் ஒப்புரவாற்றி உய்வு பெறுமின்!

## விரிப்பு

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

யாவர்க்கும் உதவியுந் துணையுமாய் நிற்கும் ஒப்புரவாளர் வறுமையுற்றவிடத்தும் ஊரார் அவரைப் புறக்கணியாது தம்மோடு உளப்படுத்திக்கொண்டு அவரைப் போற்றிக் காப்பர் என்றும், யார்க்கும் பயன்படாது செல்வத்தைப் பதுக்கி வைத்திருப்போர் துன்பமுற்றவிடத்து அவர் தங்குடும்பத்தின் அழிவு கருதி எவரும் வருந்தார் என்றும் எடுத்துரைப்பதோடு செல்வத்தைப் பதுக்கி வைத்தலின் இழிநிலையை அறிந்துணர்ந்து யாவர்க்கும் வழங்கியும் உணவளித்தும் ஒப்புரவாற்றி அறநெறியில் வாழுமாறு உலக மக்களுக்கு அறிவுறுத்துவது இப் பாட்டு.

சீர்கெட்ட காலையும் தூர்வாரிப் புதுக்கப்பெறும் குடிநீர்க் கிணறும், முடைநாற்றம் வீசுதலால் மூடித் தூர்க்கப் பெறும் முதுநீர்க் குட்டையும் இப்பாடலில் நிரலே ஒப்புரவாளர்க்கும் பதுக்கற் செல்வர்க்கும் உவமைகளாகச் சுட்டப்பட்டன.

***ஊர் உண் கூவல்:*** ***ஊருணி***

ஊர்-ஊர்வாழ்மக்கள். பிற உயிரிகளும் பயன்கொள்ளுமேனும் மேனிலை நோக்கி மக்கள் எனப்பட்டது. இது 'யாவருந் தொட்டு' என்பதனானும் அறியப்படும்.

உண்ணுதல் என்னும் பொதுவினையால் பருகுதல் மட்டுமின்றி அடுதலும் சுட்டப் பெற்றது.

கூவல்- கிணறு

***தூர் உள் மண்டி நீர் இழிபட்டு எனா:*** உள்ளே கும்பியும் கசடும் மிக்கு நிறைந்து நீர் நலங்கெட்டது என்று.

தூர்-கும்பியும் கசடும். கும்பியாவது நொதித்த சேறு.

மண்டுதல்- செறிவுற நிறைதல்.

***யாவரும் தொட்டுப் புதுக்குதல் நந்த:*** ஊர்மக்கள் யாவருங் கூடித் தூர்வாரிச் சீர்ப்படுத்துதல் போல.

தொட்டு- தோண்டி. புதுவதன்று ஆகலின் தோண்டுதல் தூர்வாருதலைக் குறித்தது.

புதுக்கல்- பழுதுபட்டதனைச் சீர்ப்படுத்துதல்.

நந்த - உவமஉருபு

***உணல் யாம் என்றியா:*** யாம் பகிர்ந்து உண்போம் என்று கூறுவர்.

என்றியர்- என்னியர் (என்று கூறுநர்) என்பது என்றியர் என நின்றது.

***நிரப்பின் ஒப்புரவாரை ஒதுக்கலர்:*** ஒப்புரவாளர் வறுமையுற்றவிடத்து அவரைப் புறக்கணித்து ஒதுக்கி விடார்; போற்றிக் காப்பர்.

நிரப்பு-வறுமை . மங்கல வழக்கு

ஒப்புரவாரை- ஒப்புரவாளரை ஒப்புரவாளராவார் உலக நடை யறிந்து பிறர்க்கு உதவிசெய்து வாழ்வோர்.

***படுதுயர் முடைசேர் முதுநீர்—மூடுநர் ஆங்க—***

மிகுந்த துன்பத்தைச் செய்கின்ற தீயநாற்றம் வீசும் நெடுநாள் நீர் தேங்கி நிற்கும் குட்டையைத் தூர்த்து மூடுவாரைப் போல

படுதுயர்-மிக்க துன்பம்

முடை- தீய நாற்றம்

*பதுக்கல் திருவார் அழிம் என்று அழுங்கார்-*

யாருக்கும் பயன்படாமல் பதுக்கிவைத்திருக்கும் செல்வத்தையுடையாரது குடும்பம் மிக்க துன்பமுற்றவிடத்து அழிந்து விடும் என்று ஊரார் வருந்தார்; அழிய விடுவர்.

பதுக்கல் என்றமையால் பிறர் அறியாதவாறு கரந்து வைத்திருத்தலும், அது முறையான வழியில் ஈட்டப்படாமையும் கொள்ளப்படும்.

செல்வமிருந்தும் அவர் துன்புறுதல் அஃது அல்வழியில் ஈட்டப் பட்டமையான் எனக் கொள்க[

அழிம்-அழியும் எனற்பாலது செய்யுள் நோக்கித் தொக்கு நின்றது. செய்யும் என்னும் வாய்பாட்டு வினையாதலின் குடும்பம் என்பது வருவித் துரைக்கப்பட்டது. அல்லாக்கால் திருவார் அழியும் என்பது பொருந்தாமை (தொல்.சொல்.) அறிக[

***கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்***
***உண்பதூஉம் இன்றிக் கெடும்***

என்றாங்கு ஈண்டுக் குடும்பத்தின் அழிவு சுட்டப்பட்டது. பதுக்கலுக்கு உடந்தையாய் இருந்தமையின் என்க!

***இழிவு அறிந்து இறைத்து உணவு ஈந்து உய்க:*** பதுக்கி வைத்தலால் படும் இழிவினை அறிந்து செல்வத்தை எல்லோர்க்கும் வழங்கியும் உணவு அளித்தும் உய்வுபெறுக.

இறைத்து எல்லோர்க்கும் வாரி வழங்கி. இவ்வாறு பொதுப்படக் கூறியவர் உணவு ஈந்து என்று தனித்தெடுத்துக் கூறியது அதன் சிறப்பு நோக்கி என்க.

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்*** என்னும் துறையுமாம்.



# 74 நுங்கே கிளிஞ்சில்

*நுரைதிரை சாய்த்த நுங்கேய் கிளிஞ்சில்*
*கரைசிறு மணலுட் கரப்பினு மொருகால்*
*அலைக்கை யகழும் அன்ன*
*உலைக்கு நெஞ்சீங் குய்வது மியல்பே!*

**பொழிப்பு:**

நுரைக்கின்ற அலை எற்றித் தள்ளிய பனை நுங்கு போலும் கிளிஞ்சில் கரையகத்து நுண்ணிய மணலின்கண் ஒருகால் மறைந்தாலும் அலையாகிய கையால் பிறிதொருகால் அகழ்ந்து வெளிப்படுத்தப் பெறுதல் போல மக்கள் நெஞ்சம் துன்பத்துட் புதையுண்டு வருந்தினும் அத் துன்பம் நீங்கப் பெறுதலும் இயல்பேயாம்.

**விரிப்பு:**

இப்பாட்டு புறப்பொருள் சார்ந்தது.

கடலலையின் பெருவீச்சால் கரைமணலுட் புதையுண்ட கிளிஞ்சில் மீண்டும் அலையால் அகழப் பெற்று வெளிப்படுதலைச் சுட்டிக்காட்டி, துன்பத்துள் தோய்ந்து இனித் தமக்கு உய்தியும் உண்டுகொல் என உழலும் நெஞ்சினார்க்கு ஆறுதல் கூறி மன எழுச்சியூட்டுமாறு அமைந்தது இப் பாட்டு.

*நுரைதிரை சாய்த்த* – நுரைக்கின்ற அலையால் எற்றித் தள்ளப்பட்ட

திரை நுரைத்தலால் அதன் எழுச்சியும் சாய்த்தலால் அதன் வீச்சும் உணரக் கிடந்தன. அது கடலலை யாதலும் உணரப்பட்டது.

***நுங்கு ஏய் கிளிஞ்சில்*** – பனை நுங்கு போலும் கிளிஞ்சில். பனை நுங்கு கிளிஞ்சிலுக்கு உவமையாகக் கூறப்பெற்றது ஆசிரியரின் கூரிய பார்வைக்கும் உவமைத் திறத்திற்கும் சான்றாகும்.

ஏய்- உவம உருபு

***கரை சிறு மணல் உள் ஒரு கால் கரப்பினும்:*** கரையகத்து நுண்ணிய மணலின் உள்ளே ஒருகால் மறைந்தாலும்.

கரை- கடற்கரை. யாற்று மணலினும் நுண்ணியாதாகலின் கடற்கரை மணலைச் சிறுமணல் என்றார்.

*கரைசிறுமணல் என்பதன்கண் எதுகை நோக்கி வல்லொற்று மிகாதாயிற்று. நீரால் கரைக்கப்படுதலின் இதுவும் வினைத் தொகை எனினுமமையும்.*

*கரத்தல்- மணலுட் புதைந்து மறைதல்*

***அலைக்கை அகழும் அன்ன*** *–அலையாகிய கை பிறிதொருகால் மணலை அகழ்ந்து புதையுண்ட கிளிஞ்சிலை வெளிப்படுத்துதல் போல.*

*அகழுதல்- தோண்டுதல். மணற் செறிவைக் கரைத்து உள்ளிருப்பை வெளிப்படுத்துதலின் அகழுதல் எனப்பட்டது. அவ்வினைக்கேற்ப அலை கையாக உருவகஞ் செய்யப் பெற்றது.*

***உலைக்கும் நெஞ்சு உய்வதும் இயல்பே*** *– ஈண்டுத் துன்பத்துட் புதையுண்டு வருந்தும் உள்ளம் அத்துன்பத்தினின்றும் நீங்கப் பெறுதல் இயல்பேயாம்.*

*உலைத்தல் - துன்புறுத்தப்படுதல். செயப்பாட்டுவினை செய்வினையாய் நின்றது.*

*உய்தல்- நீங்குதல்.*

*இப்பாட்டு* ***பொதுவியல்*** *என்னும் புறத்திணையும்* ***பொருண்மொழிக் காஞ்சி*** *என்னுந் துறையுமாம்.*



# 75 இல்லெலி

*கூரிள எயிற்றுக் குவிமுக இல்லெலி*
*போரிற் சாய்த்த புதுநெல் கொறிக்கும்*
*தொடரொலி படர்ந்த நெடுவல் லிரவின்*
*போக்குப் போலவன் வரவே*
*நோய்க்குநல் வரவிற் கொத்தது செலவே!*

**பொழிப்பு:**

கூர்மையான இளமைபொருந்திய பல்லையும் கூம்பிய முகத்தையும் உடைய வீட்டகத்து எலி, கதிர்க் குவியலினின்றும் உதிர்த்துத் திரட்டிக் கொணர்ந்த புதிய நெல்லைக் கொறிக்கும் தொடர்ந்த ஒலிபடர்ந்த நெடிய வலிமை பொருந்திய இரவின் செலவு போன்றது தலைமகனின் வரவு; மற்று என் நோய்க்கு நல்வரவு கூறி வரவேற்பது அவன்றன் செலவு.

**விரிப்பு**

இப்பாடல் அகப்பொருள் சார்ந்தது.

தலைமகன் பிரிந்து செல்லக் கருதியிருப்பதனை உணர்ந்த தோழி அதனைத் தலைமகளுக்குத் தெரிவிப்ப அவள் வருந்திக் கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.

***கூர்இள எயிற்றுக்.......இல்எலி:***- கூர்மையான இளமை பொருந்திய பல்லையும் கூம்பிய முகத்தையும் உடைய வீட்டு எலி.

எலியின் கொறித்தல் இப்பாடலில் சுட்டப்படுதலால் அதற்கேற்பப் பல்லின் கூர்மையையும் இளமையையும் கூறினார்.

குவிமுகம்- கூம்பிய முகம்

இல்லெலி- வீட்டில் வாழும் எலி. பிற இனங்களின்றும் வேறுபடுத்தற்கு இல்லெலி என்றார்.

***போரில் சாய்த்த புதுநெல்:*** கதிர்க் குவியலின்றும் திரட்டிக் கொணர்ந்த புதிய நெல்.

போர்- நெற்கதிர்க் குவியல். சாய்த்தல் -திரட்டுதல்.

***கொறிக்கும் தொடர் எலி:*** கடித்துத் தின்னுகின்ற தொடர்ந்த ஒலி.

*கொறித்தல்* - ஒவ்வொன்றாகக் கடித்துத் தின்னுதல். பொதுவாகக் கடித்தலைக் குறிக்கும் கறி என்னுஞ்சொல் ஒவ்வொன்றாகக் கடிக்கும் வேறுபாடு உணர்த்தற்குக் கொறி எனத் திரிந்தது.

*தொடர் ஒலி படர்ந்த:* தொடர்ந்த ஒலி பரவிய

புதுநெல் ஆதலின் பரபரப்போடு தொடர்ந்து கொறித்தது போலும்.

*நெடுவல் இரவின்.... வரவே* –நீண்ட வலிமை வாய்ந்த இரவின் செலவு போன்றது தலைமகனின் வருகை.

முன்னர்த் தலைவன் பிரிந்து சென்றிருந்த போது அவன் வரவை எதிர்நோக்கித் துயில் கொள்ளாது இரவிலும் விழித்திருந்த தலைவி அதனை நினைவுகூர்ந்து கூறினாள்.

இரவு நீண்டு செல்லுதலும் வலிமையுடைத்தாதலும் இல்லையாயினும் தலைவனைப் பிரிந்து தனித்திருந்தமையின்

*"ஒரு நாள் எழுநாள் போற் செல்லுஞ் சேட் சென்றார்*
*வருநாள்வைத் தேங்கு பவர்க்கு"* - என்றாங்கு இரவு நீண்டதாகவும் வலிமையுடையதாகவும் தோற்றியது எனக்கொள்க!

*நோய்க்கு நல்வரவிற்கு ஒத்தது செலவே* - அவன்றன் செலவு என்னைப் பற்றும் நோய்க்கு நல் வரவுகூறி வரவேற்பது போன்றது. நோயை வருக வருக. என்று அழைப்பது போன்றதாம்; நோய் விரைந்து பற்றுதற்கு ஏதுவாம் என்றவாறு.

தலைவன் வரவுக்கு இரவின் செலவும் அவன்றன் செலவிற்கு நோயின் வரவும் உவமைகளாகச் சுட்டப்பட்டுள்ள முரணணி காண்க!

இப்பாடல் ***பாலை*** என்னும் ***அகத்திணையும் பிரிவுணர்த்திய தோழி க்குத் தலைவி வருந்திக் கூறியது*** என்னுந் துறையுமாம்.



# 76 வியப்பினும் வியப்பே

*சென்றுநொந் தார்வழிச் செல்கிலர் இலரே*
*சென்றுய வென்றார் செவிகொள் ளலரே*
*கண்டுழித் தேர்ந்துங் கைப்பற் றலரே*
*தண்டிலா விழியிலி தவிப்பென உண்டலுக்*
*கொருதுறை யின்றிப் பொய்யுரை குயிற்றிக்*
*கரவுகைக் கொண்டே உறவு தழீஇ*
*ஓடுநீ ருருட்ட உருசிறுத் தழியும்*
*பீடுறு பெருங்கல் போலப் பிழையிலாது*
*உளமும் பேணலர்; உடலும் பேணலர்;*
*வளமுந் துறுத்தும் வாழ்வது மின்றி*
*எழுந்தலைந் தயின்றே திலராய்*
*விழுந்துயிர்ப் படங்கல் வியப்பினும் வியப்பே!*

**பொழிப்பு:**

முன்னர்த் துன்புற்றவர்கள் சென்ற வழியில் செல்லாதவர்கள் இலர்; இந் நெறியைக் கடைப்பிடித்தொழுகி ஈடேறுக என்ற சான்றோர்தம் அறிவுரையைக் கேட்டு நடந்தாரல்லர்; தாமே கண்டு நல்லதெனத் தெளிந்தகாலையும் அதனைக் கடைப்பிடித்து ஒழுகினாரல்லர்; ஊன்றுகோல் இல்லாத குருடன் செல்வழி யறியாது தவிப்பது போல உணவின் பொருட்டு ஒரு முறையுமின்றிப் பொய்யைப் புனைந்துரைத்தும் வஞ்சகச் செயல்களைக் கைக் கொண்டும் உறவாடி, ஓடுகின்ற யாற்றுநீரால் உருட்டிச் செல்லப் பெற்று வடிவம் சிறிதாகி அழிகின்ற, உயர்ந்து நின்ற பெரிய கல்லைப் போல; பிழையின்றி உள்ளத்தையும் உடலையும் போற்றிக் கொள்ளாதவராய், செல்வத்தைத் திரட்டிவைத்திருந்தும் அமைதியுற வாழாதவராய் எழுச்சிகொண்டு அலைந்தும் உண்டும் ஏதுமற்றவராய்ச் செயலிழந்து கிடந்து உயிரை விடுவது வியப்பான வற்றுளெல்லாம் வியப்பாம்!

**விரிப்பு:**

இப் பாட்டு புறப்பொருள் சார்ந்தது.

துன்பத்திற் கிடனான வழி என்று அறிந்து தவிர்க்காமலும், சான்றோர் கூற்றைக் கேட்டு நடவாமலும், தாமே கண்டு தெளிந்த நெறியையுங்

கடைப்பிடிக்காமலும் தவிக்கின்ற மக்கள், உணவின் பொருட்டு முறையேதுமின்றிப் பொய்யுரையும் வஞ்சக நடத்தையுங் கொண்டு உறவாடித் தம் உள்ளத்தையும் உடலையும் நெறிதவறாது போற்றிக் காவாமலும் செல்வத்தைத் திரட்டி வைத்திருந்தும் சிறப்புற வாழாமலும் முனைப்புற்று அலைந்து உண்டு ஏதுமில்லாதவராய்க் கிடந்து உயிர்விடுதல் கண்டு வியப்புற்றுப் பாடியது இப் பாட்டு.

*சென்று நொந்தார்...இலரே* - முன்னர்ச் சென்று துன்புற்றவர்கள் கடைப்பிடித்த வழி துன்பத்திற்கு இடனானது என்று அறிந்தும் அவ்வழியே யாரும் செல்லாமல் இல்லை.

அறிந்தும் செல்லுதலின் முரண்பாடு தோன்ற, அவ்வழியிற் செல்வாரும் உளர் என்பதனைச் செல்கிலர் இலர் என எதிர்மறை வாய்பாட்டாற் கூறினார்.

***சென்று உய என்றார் செவி கொள்ளலரே*** - இவ்வழியைக் கடைப்பிடித்து ஈடேறுக என்ற சான்றோர்தம் அறிவுரையையும் கேட்கின்றார் இலர்.

உய்க என்றார் - சான்றோர் செவிகொள்ளற் பாலனவாதலின் அறிவுரை என்பது பெறப்படும்.

கேட்கின்றார் இலர் என்பது கேட்டுச் செயற்படவில்லை என்னும் பொருட்டு.

***கண்டுழித் தேர்ந்தும் கைப்பற்றலரே*** - தாமே கண்டு தெளிந்த காலையும் அந்நெறியில் நடக்கின்றார் இலர்.

மேற்கூறியாங்குப் பார்த்துங் கேட்டும் அறிந்த வழியில் நடவாதது மட்டுமின்றித் தம் பட்டறிவாற் கண்டு தெளிந்த வழியிலும் நடவாதது வியப்புக்குரியதாயிற்று.

***தண்டிலா விழியிலி தவிப்பு என*** - ஊன்று கோல் இல்லாத குருடன் செல்வழி யறியாமல் தவிப்பது போல.

தண்டு- ஊன்றுகோல்

சான்றோர் கூற்றைக் கேளாமையின் ஊன்று கோல் இன்மையும், தன்வழியிற் செல்லாமையின் விழியின்மையும் கூறப்பட்டன.

என- உவமஉருபு.

***உண்டலுக்கு ஒரு துறை...உறவு தழீஇ:*** உணவு உண்டலின் பொருட்டு வரம்பின்றிப் பொய்யைப் புனைந்துரைத்தும் வஞ்சக நடத்தையை மேற்கொண்டும் உறவாடி.

மேற்கண்டாங்கு நெறியுற வாழாமல் உணவு தேடுதலையே பெரும்பாடாய்க் கொண்டமையின் உண்டலுக்கு என்றார். உணவுகொள்ளுதல் தேவையே எனினும் அதன் பொருட்டுப் பொய்யுங் கரவடமுங் கொண்டு போலிமையாய் உறவாடல் வியப்புக்குரிய தாயிற்று.

'பொய்மையும் வாய்மையிடத்த' என்பவாகலின் வாளா கூறாது துறையின்றி என்றார்.

துறை- முறையான வழி.

பொய்யை மெய்போலக் கூறுதலின் பொய்யுரைத்து என்னாது பொய்யுரை குயிற்றி என்றார்.

குயிற்றுதல்-இன்குரலிற் சொல்லுதல்.

உறவு தழீஇ-உறவினரோடு கூடிக் குலாவி

**ஓடுநீர் உருட்ட ..... பெருங்கல் போல:** ஓடுகின்ற யாற்று நீரால் உருட்டப்பட்டு வடிவம் சிறுத்து மறைந்தொழியும் உயர்ந்துநின்ற பெருங்கல் போல

யாவருங் காணுமாறு உயர்ந்து நின்ற பெருங்கல் யாற்றுநீர் விசையால் உருட்டிச் செல்லப்பெற்று உருட்டைக் கல்லாகவும், பரலாகவும், மணலாகவும், அயிராகவும் படிப்படியே வடிவஞ் சிறுத்துக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தொழிதல் போல், வாழ்வாங்கு வாழ்ந்து புகழ் நிறுவ வேண்டிய பெருமைசால் மாந்தன் நெறிவயிற் செல்லாது வயிறு வளர்த்தல் பொருட்டுச் சிறுமையுற்று அலைந்து செயலிழந்து இறந்தொழிதலை விளக்குதற்கு இவ்வுமை கூறப்பட்டது.

**பிழையிலாது உள்ளமும் ....பேணலர்:**

தவறுபடாது உள்ளத்தையும் போற்றிக் கொள்ளாதவராய், உடலையும் போற்றிக் கொள்ளாதவராய்.

உள்ளத்தைத் தவறுபடாமல் போற்றிக் கொள்ளலாவது, பொறாமை பேராசை முதலானவற்றுக்கு இடங் கொடாமையும், உடலைத் தவறுபடாமல் போற்றிக் கொள்ளுதலாவது மாறுபாடான உண்டியும் அளவின் மீறிய உண்டியும் கொள்ளுதலும் உண்டி கொள்ளாமலேயே தவிர்த்தலும் நோய்க்கு இடங்கொடுத்தலும் பிறிவுமாம். மாந்தப் பிறவிக்குச் சிறந்ததாகலின் உள்ளத்தைப் போற்றாமையை இடித்துரைத்தார். உள்ளத்தைப் பேணாதொழிதலோடு உயிர்வாழ்க்கைக்கு இடனான உடலைத் தானும் பேணாமை வியப்புக்குரிய தாயிற்று.

வளம்பேணுதல்-போற்றிக் காத்தல்

*வளம் முந்துறுத்தும் வாழ்வதும் இன்றி* - செல்வத்தை மிகுதியாகத் திரட்டிவைத்திருந்தும் அதன் பயன்துய்த்து வாழ்தல் இல்லாமல்.

வளம்- வாழ்க்கைக்குத் தேவையான பல்வகைச் செல்வங்கள்.

முந்துறுத்தல்- மேம்படுத்தல். மற்றையவரினும் அதிகமாகத் திரட்டி வைத்துக் கொள்ளுதல்.

செல்வத்தைத் திரட்டிவைத்திருத்தும் அதன் பயன் நுகர்ந்து வாழாமை வியப்புக்குரியதாயிற்று.

*எழுந்து அலைந்து அயின்று*: எழுச்சியுற்றுப் பொருட்கென அலைந்து உண்டு. அவா அடங்குதலின்றி மேன்மேலும் முயன்று திரிதலின் எழுந்து அலைந்து என்றார்.

உண்ணுதலை ஈண்டுக் குறித்தது அதன் சிறுமை கருதியென்க!

*விழுந்து உயிர்ப்பு ........ வியப்பே* - செயல் இழந்து கிடந்து உயிர்விடுதல் வியப்பானவற்று ளெல்லாம் வியப்பாம்.

உயிர்ப்பு அடங்குதல்- மூச்சுவிடும் வினை ஒய்தல்.

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருண்மொழிக் காஞ்சி*** என்னும் துறையுமாம்.



# 77 துய்யா வாழ்க்கை

*மருப்புநீண்டு முறுக்கமேறி*
*இருப்பகன்று மடியிறங்கி*
*நடைதாழ்ந்து மடைவிரும்பினும்*
*மையா யாண்டுங் காரா வாகா*
*துய்யா வாழ்க்கை தோயாநின்று*
*கூறையின்றிக் கீரைமிசைந்து*
*மெய்மெலிந்தே ஓச்சின்றிக்*
*கையற்றுத் துணைசோரினும்*
*மெய்யே நின்ற மேலோர்*
*பொய்யும் நினையார் புரையார் யாண்டே!*

**பொழிப்பு:**

கொம்பு நீளவளர்ந்து திருகுற்று, பின்பக்கம் அகலமுடையதாகி பான்மடி தாழ்ந்து, நடைதளர்ந்து, புல்லுணவை விரும்பினாலும் ஆமா எக்காலத்தும் எருமையாதல் இல்லை. நுகராத வாழ்க்கையிற் பொருந்தி நல்லாடை இல்லாமலும் கீரையையே உணவாக உட்கொண்டும் யாக்கை மெலிந்து வீசிநடக்கும் வீறின்றி, செயலறவுற்று, துணையாய் இருந்தோரும் நெகிழ்ந்தவிடத்தும் மெய்ந்நெறியின்கண் உறைத்து நின்ற சான்றோர் பொய்யை நினைக்கவும் மாட்டார், எக்காலத்தும் போலிச் செயல்களை மேற்கொள்ளவும் மாட்டார்.

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள்சார்ந்தது.

சான்றோர் பெருமக்கள் எத்துணை எளிய வாழ்க்கைக்கும் இன்னலுக்கும் ஆட்பட நேர்ந்தாலும் பொய்யும் போலியும் கைக்கொள்ளமாட்டார் என்று விளக்குவது இப்பாட்டு.

ஆமா யாண்டும் காராவாகாது; அது போலச் சான்றோர் யாண்டும் நிலைமாறார் என்னும் உவமை இப்பாடற் கருத்தை விளக்கி நிற்கின்றது. இஃது எடுத்துக் காட்டுவமை யாதல் நோக்கி யறிக.

*மருப்பு நீண்டு முறுக்க ஏறி* : கொம்பு நீளவளர்ந்து திருகுற்று.

மாட்டுக்குத் தலையின் கண் எடுப்பாக விளங்குவது கொம்பாகலின் அதனை முற்கூறினார். செறிந்த வள்ர்ச்சியால் திருகப்பெறுதலின் முறுக்கமேறி என்றார். கிளிக் கொம்பு, சாட்டைக் கொம்பு, வீணைக்கொம்பு, பறட்டைக் கொம்பு முதலியனவாக மாட்டின் கொம்பு உலக வழக்கில் பல்வேறு குறியீடுகளைப் பெறுதலானும் அதன் சிறப்பு அறியப்படும்.

*இருப்பு அகன்று ....மடைவிரும்பினும் :* இடை அகலமுற்றும், பான்மடி இறங்கியும், நடை தளர்ந்தும், புல்லாகிய உணவை விரும்பினாலும்.

இருப்பு-பின்புறம்.

மடி- பால்சுரக்கும் காம்புகளைக் கொண்டது.

மடை- உணவு. மாட்டுக்குரிய உணவாகிய தீனி சிறப்பாகப் புல்லேயாம். மேய்ச்சலை விரும்பினும் எனக் கொள்க.!

*மையா யாண்டும் காரா வாகா:* காட்டு ஆக்கள் எக்காலத்தும் எருமைகளாகமாட்டா.

மையா- காட்டுஆவு. காரா- எருமை.

*துய்யா வாழ்க்கை தோயா நின்று:* நுகர்தல் இல்லாத வாழ்க்கையின் கண் பொருந்தி நின்று.

உலகியல் இன்பங்களை நுகராத வாழ்க்கையைத் துய்யா வாழ்க்கை என்றார்.

தோயா நின்று- தோய்ந்து நின்று.

*கூறை இன்றி–* உடுத்திக் கொள்ளுதற்கு நல்ல ஆடையில்லாமல்.

கூறை - துணி.

*கீரை மிசைந்து:* கீரையை உணவாக உட்கொண்டு.

கீரையைத் துணைக்கறியாக உட்கொள்ளுதலின்றி முழு உணவாக உட்கொண்டு என்றவாறு.

*மெய்மெலிந்தே*–யாக்கை மெலிந்து

'என்பெழுந்து இயங்கும் யாக்கையர்' என்றாங்கு மேனி மெலிந்து.

*ஓச்சு இன்றி–* கைவீசி நடக்கும் வீறின்றி.

ஓச்சுதல்-வீசுதல்.

ஓச்சு என்பதற்குத் தலைநிமிர்பு எனப் பொருள் கொண்டு தலை தாழ உடற் கூனி எனக் கூறலுமாம்.

*கையற்று*—செயலறவுபட்டு.

கை- செயல்.

*துணை கோரினும்*— துணைவராயினார் தம் நிலையில் நெகிழ்ச்சி யுற்றாலும்.

*மெய்யே நின்ற மேலோர்*— மெய்ந் நெறியைக் கடைப்பிடித்து ஒழுகுதலில் உறைத்து நின்ற சான்றோர் பெருமக்கள்.

*பொய்யும் நினையார் புரையார் யாண்டே*— யாண்டும் பொய்யை நினைக்கவும் மாட்டார்; போலியாக நடக்கவும் மாட்டார்.

யாண்டும்- எக்காலத்தும், எவ்விடத்தும்.

பொய்மையை நினையார் என்றமையாற் மனத்தூய்மை சுட்டப் பெற்றது. மனத்தாலும் நினையார் ஆகலின் நாவால் பேசார் என்பது தானே போதரும்.

புரை -உள்ளீடின்மை. புரையார் என்றமையின் போலியான பொருளற்ற செயலைச் செய்யார் என்றவாறாயிற்று.

இப்பாடல் *பொதுவியல்* என்னும் புறத்திணையும் *பொருண்மொழிக் காஞ்சி* என்னும் துறையுமாம்.

இது *வஞ்சித்தளை விரவிய நேரிசை ஆசிரியப்பா.*



## 78 மாவுடக் கூர்ந்தோன்

*பல்கலை தெரித்த வல்லோ னாயினுஞ்*
*செல்வக் குவைதுயில் குரிசி லாயினும்*
*வெல்வோ னிறத்த விறலோ னாயினும்*
*மாவுடக் கூர்ந்தோன் போல*
*நாவடக் கில்லோன் நலியவும் படுமே!*

**பொழிப்பு:**

பல்வகைக் கலைகளையும் கற்றுத் தெளிந்த வல்லமையுடையோனாயினும், செல்வக்குவியலுக்கிடையே துயிலுகின்ற பெருமகனாயினும், தன்னை வெற்றி கொள்ளத் தக்க மாற்றாரை இல்லாத மாவீரனாயினும் யானையேற்றத்தை மேற்கொண்டவன் போல நாவையடக்கும் திறமில்லாதவன் துன்புறுத்தப்படுவான்.

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

கலைத்திறத்தால் சிறந்தோனாயினும், பொருள் வளத்தால் மிக்கோனாயினும், தறுக்கண்மையால் உயர்ந்தோனாயினும் ஒருவன் நாவடக்கம் உடையவனாய் இருத்தல் வேண்டும் எனவும் அல்லாக்கால் யானையேற்றம் மேற்கொண்டவன் அதனை அடக்கும் திறமிலியாயின் நலியப்படுமாறு போல நாவை அடக்க மாட்டாதவன் நலியப்படுவான் என வலியுறுத்துவது இப்பாட்டு.

***பல்கலை தெரித்த வல்லோன் ஆயினும்*** - பலவகைக் கலைகளையும் கற்றுத் தேர்ந்த வல்லமையுடையோனாயினும்.

தெரித்த -தெரிந்த என்பதன் வலித்தல் வேறுபாடு. இனி தெரித்த என்பதற்குப் பலருமறியுமாறு வெளிப்படுத்திக் காட்டிய எனினுமாம்.

***செல்வக் குவை துயில் குரிசில் ஆயினும்*** - பல்வகைச் செல்வங்களும் நிரம்பிய குவியலுக்கிடையே துயில் கொள்ளும் பெருமகன் ஆயினும்.

***குவை*** - குவியல்.

***வெல்வோன் இறத்த விறலோன் ஆயினும்*** - வெற்றி கொள்வோன் இல்லாத பெருவீரன் ஆயினும்.

வெற்றி கொள்வோன் இல்லார்தான் எதிரிலி.

இறத்த -நீங்கிய. இல்லாத.

விறலோன் -ஆற்றல் மிக்க வீரன்.

***மா உடக்கு ஊர்ந்தோன் போல*** - யானையை அடக்கும் திறமில்லாது யானையேற்றம் மேற்கொண்டு சென்றோனைப் போல.

மா-யானை.

உடக்குதல்-செலுத்துதல். மாவுடக்கு என்றது யானை யேற்றத்தை. மா வென்பது குதிரையுமாகலின் குதிரையேற்றம் என்னலுமாம். ஆயினும் அஃது ஈண்டைக்குச் சிறவாது: யானையேற்றம் ஊர்ந்தோன், யானையேற்றம் மேற்கொண்டோன் என்றவாறு.

யானையை அடக்கமாட்டாதவன் என்பது மேற்பொருளின் கண்நின்ற 'நாவடக்கில்லோன்' என்பதனாற் பெறப்பட்டது.

***நாஅடக்கு இல்லோன்*** - நாவை அடக்க மாட்டாதவன்.

நாவடக்கமாவது செருக்கொடும் வரம்பிகந்தும் பேசாமை.

***நலியவும் படுமே*** - பேச்சின் பயனை இழத்தலோடு வருத்தவும் பெறுவான். வருத்தவும் என்பதன் உம்மையால் பேசுதலாற் பெறத்தக்க பயனை இழத்தல் பெறப்பட்டது.

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருண் மொழிக்காஞ்சி*** என்னுந் துறையுமாம்.



# 79 குறிப்பறியாளே

*செவிக்கின் னாத விசையிசை யிலையே*
*குவிமுகிழ் மூக்கே லாதன கொடிதே*
*யானவை கொண்டாற் றான்விழைந் தென்னுதல்*
*மான நீவியள் தோழி*
*கோணா நெஞ்சக் குறிப்பறி யாளே!*

**பொழிப்பு:**

செவிக்குத் துன்பந்தரும் இசை இசையாகாது. குவிந்த மொக்குப் போலும் மூக்கு ஏற்றுக் கொள்ளாத வாகிய நாற்றமெல்லாம் துன்புறுத்தும் தகையவே. யான் அத்தகைய துன்பந்தரும் இசையைச் செவிமடுக்கவோ, நாற்றத்தை முகரவோ நேரின் அவற்றைப் பொறாது வருந்தும் என் தமக்குத்தலை நீக்குதல் பொருட்டு தானே விரும்பி என் நெற்றியைத் தக்கவாறு நீவிவிட்டவளாகிய என் தோழி என் கோணுதலுற்ற உள்ளக் குறிப்பை அறியாத வளாயினளே!

**விரிப்பு:**

இப்பாடல் அகப்பொருள் சார்ந்தது.

தலைமகன் ஒருவனிடத்துக் காதல் கொண்ட தலைமகள், அயலார் சிலர் மணம் பேச வந்தவிடத்து தனக்கு அஃது உடன்பாடு இல்லை யென்பதைத் தோழி உணரும்படி குறிப்பாகப் புலப்படுத்துமாறு அமைந்தது இப்பாட்டு.

***செவிக்கு இன்னாத இசை இசை இலையே*** - செவிக்குத் துன்பந் தரும் இசை, இசையே அன்று,

செவிக்கு இன்பம் பயப்பதே இசை எனப்படுதலின் அதற்கு மறுதலையாக இன்னாமை பயப்பது இசையன்றாம் என்றவாறு.

***குவிமுகிழ் மூக்கு ஏலாதன கொடிதே*** - குவிந்த மொக்குப் போலும் மூக்கு ஏற்றுக் கொள்ளாதனவாகிய நாற்றமெல்லாம் துன்பந்தருவது.

***யான் அவை கொண்டால்*** - யான் அத்தகைய துன்பந்தரும் இசையைச் செவிமடுக்கவோ, நாற்றத்தை முகரவோ நேர்ந்தால்.

*கொண்டால் என்றது கொள்ள நேரின் என்னும் பொருட்டு.*

***தான் விழைந்து என்நுதல் மான நீவியன் தோழி*** *- குறிப்பறிந்து தானே விரும்பி என்னுடைய நெற்றியைத் தக்கவாறு நீவியவள் என் தோழி.*

*தான் விழைந்து - யான் கூறாதவழியும் குறிப்பறிந்து தானே விரும்பி என்றவாறு.*

*பொருந்தாத புலனுகர்ச்சியால் வருந்துதலின் முதனிலையாவது தலைவலியே யாதலின் அதைத் தணித்தற்குத் தக்கவாறு நெற்றியை நீவிவிட்டவள் என் தோழி என்றாள். நுதல்-நெற்றி.*

***கோணா நெஞ்சக் குறிப்பு அறியாளே*** *- கோணுதல் இல்லாத உள்ளத்தின் குறிப்பை அறியாதவளாயினளே!*

*கோணா நெஞ்சம்-கற்புநெறி திறம்பாத நெஞ்சம். அறியாளே- அறியாதவளே என்னுமாறு ஏகாரம் வினாப் பொருள் பயந்தது எனக் கொள்ளினுமாம்.*

*செவிக்கு இன்னாத இசையும் மூக்கு ஏலாத மோப்பும் துன்பந்த தருதலைக் குறிப்பாலுணர்ந்து அதனைப் போக்கத் தானே விரும்பி நெற்றியை நீவிவிட்டவள் ஆதலின் உள்ளத்துக்கு ஏலாத இம் மணவினையைத் தவிர்ப்பாள் என்றவாறு.*

*கற்புநெறி திறம்பாத உள்ளத்துக்கு இஃது ஏலாதது என்னுங் குறிப்பால் அவள் தலைமகன்பால் காதல் கொண்டமையைத் தெரிவித்தாள்.*

*இப் பாடல் குறிஞ்சியாகிய அகத்திணையும்* ***அறத்தொடு நிற்றல்*** *என்னும் துறையுமாம்.*



# 80 இளநகை காண்குவன்

அடைவா யெஃகம் வலிகடை புடைப்பினும்
நடைமா றாதா யீண்டு கடுகல்
குவித்த அறுகொடு மென்புகை மணக்க
அவியற் காணம் நினைதியோ யானுந்
திதலைப் பொன்பொறி சுருக்கத் தொடுங்கும்
புதல்வற் பயந்த புனிற்றிள வயிற்றோள்
குளம்பொலி மடுத்துப் பூக்கும்
இளநகை காண்குவ னின்னொடு விரைந்தே!

**பொழிப்பு:**

வாயின்கட் பொருந்திய கடிவாளத்தை இழுத்தலானே கடைவாய் வீங்கப் பெறினும் செலவில் மாற்றமில்லாதோய்[ இவ்வாறு நீ விரைதல் என்னை? குவித்து ஊவக்கப்பெற்ற அறுகம் புல்லொடும் , மெல்லிய ஆவிமணங் கமழ அவிக்கப்பெற்ற கொள்ளினையும் நினைக்கின்றனையோ? யானும் நின்னொடு விரைந்து சென்று, தேமலாகிய பொன்னிறப் புள்ளிகள் தோற் சுருக்கத்தின் கண் மறைகின்ற, மகனைப் பெற்ற ஈன்றணிமையுடைய வயிற்றினளாகிய தலைமகள் நின் குளம்பு எழுப்பும் ஒலியைச் செவிமடுத்து மலரும் புன்னகையைக் காண்பேன்.

**விரிப்பு:**

இப்பாடல் அகப்பொருள் சார்ந்தது.

தலைமகன் ஒருவன் சேய்மைக்கண் சென்று மேற்கொண்ட செயலை நிறைவேற்றி மீளுங்கால் தான் இவர்ந்து வருங் குதிரை கடிவாளத்தை இழுத்துப் பிடிப்பினும் நடைதளராது விரைந்து செல்லக் கண்டு அதனை நோக்கித் 'தீனியை நினைந்து இவ்வாறு விரைகின்றனையோ, யானும் நின்னொடு விரைந்து சென்று நின் காலடி யோசையால் என் வரவுணர்ந்து மகிழும் தலைமகளின் புன்னகையைக் காண்பேன்' என்று கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.

***அடைவாய் எஃகம் வலி*** - வாயின்கட் பொருந்திய கடிவாளத்தை இழுத்தலானே.

அடைவாய்- வாய் அடை என மாறிக்கூட்டி வாயின்கட் பொருந்திய எனப் பொருள் கொள்ளப்பட்டது.

எஃகம்- இரும்பினான் ஆகிய கடிவாளம்.

வலி- இழுத்தல்.

***கடை புடைப்பினும் நடைமாறாதாய்*** - கடைவாய் வீங்கப் பெறினும் செலவு மாறாதோய்!

கடை- கடைவாய்; புடைத்தல்- வீங்குதல்; நடை- செலவு; 'கதி'.

மாறாதாய்- மாற்றமில்லாதோய்! குதிரையை முன்னிலைப்படுத்தி இவ்வாறு கூறினான்.

***ஈண்டு கடுகல்*** - இவ்வாறு விரைந்து செல்வதற்குக் கரணியம் என்னை?

மேல்,'நினைதியோ' என்பது நோக்கி ஈண்டு என்னை என்பது வருவித்துரைக்கப்பட்டது.

***குவித்த அறுகொடு*** - குவித்த அறுகம்புல்லொடும்.

குவித்த என்றமையால் புல்லின் மிகுதி கூறப்பட்டது.

***மென்புகை மணக்க அவியல் காணம்*** - மெல்லிய ஆவியின் மணங் கமழ வேகவைக்கப்பட்ட கொள்ளு.

புகை என்றது புகைபோலும் ஆவியை. காணம் -கொள்ளுப் பயறு.

***நினைதியோ*** - நீ நினைக்கின்றனையோ.

நீ - என்பது தோன்றா எழுவாய்.

கடிவாளத்தை இழுத்துப்பிடிப்பினும் நடைமாறாமல் விரைவதற்குக் கரணியம் இந்நினைவுதானோ என்றனன்.

***திதலைப் பொன்பொறி சுருக்கத்து ஒடுங்கும்*** - தேமலாகிய பொன்னிறமான புள்ளிகள், வயிற்றுச் சுருக்கத்தின் கண்மறைகின்ற.

திதலை-தேமல், பொன்பொறி- பொன்னிறப் புள்ளி.

சுருக்கம்- தோற் சுருக்கம்; தோலின் மடிப்பு.

***புதவல் பயந்த***- ஆண்மகவை ஈன்ற

***புனிறு இள வயிறோள்*** - ஈன்றணிமையுடைய மென்மையான வயிற்றையுடையவள்.

புனிறு-ஈன்றணிமை அது பதினாறுநாள் வரை என்பது உலக வழக்கு. மகப் பெற்ற மகளிர்க்குப் பதினாறு நாள் காறும் உடல் வலிமை

குன்றியிருத்தலின் அம் மென்மை இளமை எனப்பட்டது.

*வயிறோள்* - வயிற்றோள். ஈண்டு வயிறு என்பதன் கண்ணுள்ள வல்லெழுத்து இரட்டியாமை அதன் மெல்லிமை நோக்கிப் போலும்.

*குளம்பு ஒலி மடுத்து* - குதிரையின் காலடி ஓசையைக் கேட்டு.

குளம்பு- குதிரைக் காலின் அடிப் பகுதி. மடுத்து-செவிமடுத்து; கேட்டு.

தலைவன் வரவைத் தொலைவிலிருந்தே அறிவிப்பது அவன் ஊர்ந்து வரும் குதிரையின் குளம்பொலியாதலின் தலைவி அதனைச் செவிமடுத்து கூறப்பட்டது.

*பூக்கும் இளநகை* - மலருகின்ற புன்னகையை.

*யானும் நின்னொடு விரைந்து காண்குவன்* - யானும் உன்னுடன் விரைந்து சென்று காண்பேன்.

இரையை நினைத்து விரைகின்ற குதிரையை நோக்கி இவ்வாறு கூறினான்.

> "ஞாயிறு திங்கள் அறிவே நாணே
> கடலே கானல் விலங்கே மரனே
> புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
> அவையல பிறவும் நுதலிய நெறியாற்
> சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்
> சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்''
>
> (தொல்.செய்.201)

என்பவாகலின் ஈண்டுத் தலைமகன் பரிமாவை நோக்கிக் கூறுமாறு அமைந்தது இப்பாட்டு.

இப்பாட்டு முல்லை என்னும் அகத்திணையும் இடைச்சுரத்துத் தன் குதிரையை நோக்கிக் கூறியது என்னுந் துறையுமாம்.



# 81 குடுக்கைப் பசுங்காய்

குவடேய்ங் கூரை சுவடுபடப் பதிந்த
குடுக்கைப் பசுங்காய்ச் சுருட்கை போலப்
படர்கொள வலையுஞ் சுடர்க்கொடி நெஞ்சம்
இடர்பொறுந் தகைதில் பெரும! ஈனியர்
பொய்நிழல் வேட்டெனும் புரைசொன் மாற்றி
மொய்குழ னளைந்து முயங்கியாக் காலே!

**பொழிப்பு:**

மலைமுகடு போல் உயர்ந்து விளங்கும் கூரை தன் அடையாளத்தைக் கொள்ளுமாறு பதிந்திருக்கின்ற குடுக்கையாகும் பசுமை பொருந்திய காயையுடைய சுரைக்கொடியின் சுருளும் கையே போல், பற்றிப் படர்தற்கு அலைகின்ற ஒளிபொருந்திய கொடி போலும் தலைவியின் நெஞ்சம் துன்பத்தைத் தாங்கிக்கொள்ளும் ஆற்றலுடையதில்லை; பெருமகனே, பெற்றோர்தம் பொய்யான களைகண் விரும்பி யுறைகிறாள் என்னும் ஊரவர் பழியுரையை மாற்றித் தலைமகளின் அடர்ந்த கூந்தலை நீவி அவளொடு கூடாதவிடத்து.

**விரிப்பு:**

இப்பாடல் அகப்பொருள் சார்ந்தது.

தலைமகள்பால் களவு நிலையில் காதல் கொண்டொழுகும் தலைமகன் அவளை வரைந்து கொள்ளுதற்குக் காலம் நீட்டித்தானாக, தோழி அவனைநோக்கி, சுரைக்கொடியின் சுருட்கைபோல் கொழுநனைப் பற்றுதற்கு அலைகின்ற தலைமகளின் நெஞ்சம் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளும் தன்மையுடைய தன்று; 'இவள் பெற்றோரின் ஆதரவில் உறைதலையே விரும்புகிறாள்'. என ஊரவர் கூறும் பழியுரையைப் பொய்யாக்கி அவளை விரைவில் வரைந்து கொள்ளுக எனத் தூண்டுவதாக அமைந்தது இப் பாட்டு.

*குவடு ஏயும் கூரை சுவடுபட* - மலை முகடு போல் உயர்ந்து விளங்கும் கூரை தன் அடையாளத்தைக் கொள்ள.

வீட்டின் கூரை தொலைவிலிருந்தார்க்கும் தெரியுமாறு உயர்ந்து நிற்றலின் குவடு ஏய்ங் கூரை என்றார். குவடு - மலை முகடு; மலையுச்சி.

சுவடுபடுதலாவது காய் பறிக்கப்பட்ட பின்னும் அக்காய் பதிந்திருந்த இடம் தெரியக் கிடத்தல்.

*குடுக்கைப் பசுங்காய்* - குடுக்கையாகும் பசிய காய்.

காய் முற்றியபின் குடுக்கை யாதலின் காயைக் குடுக்கைக் காய் என்றார்.

குடுக்கை - சுரைநெற்று. உள்ளீடு முற்றக்காய்ந்து. காய் முற்றியபின் உள்ளீடின்றித் துளையாய் இருத்தலின் அது சுரைக்காய் எனப்பட்டது. சுரை- துளை.

*சுருள்கை போல* - சுரைக் கொடியின் முனையிலுள்ள சுருளும் கைபோல.

மேலே சுரைக்காய் என்றமையின் காயையுடைய கொடி வருவித்துக் கொள்ளப்பட்டது. சுரைக்கொடியின் முனையிலுள்ள சுருண்ட நாம்பு கைபோலப் பற்றிக் கொள்ளுதலின் சுருட்கை என்றார்.

*படர்கொள அலையும் சுடக்கொடி நெஞ்சம்* - படர்தற்கு அலைகின்ற ஒளிபொருந்திய கொடி போல்வாளின் நெஞ்சம்.

சுரைக்கொடியின் சுருட்கை போல் இச்சுடர்க்கொடியின் நெஞ்சம் கொழுநனைப் பற்றிக் கொள்ள அசைகின்றது என்க. படர்கொள- பற்றிப்படர. அலைதல்-நிலை கொள்ளாது ஆடி அசைதல்.

*இடம்பெறும் தகையது இல் பெரும* - துன்பத்தைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலுடையது இல்லை பெருமானே[

தலைமகள் துன்பத்தைத் தாங்கமாட்டாது உயிர்விடவும் நேரும் என்னும் அச்சக் குறிப்போடு பெரும என ஈண்டு விளித்தாள். பெருமகன் என்பதின்றும் மருவிய பெருமான் என்னுஞ் சொல் அண்மை விளியில் பெரும என ஆயிற்று.

*ஈனியர் பொய்நிழல் ..... மாற்றி* - பெற்றோர்தம் பொய்யான ஆதரவையே விரும்பி வாழ்கிறாள் என்னும் பழியுரையைப் போக்கி.

ஈனுதல் தாயின் வினையும், அதுபற்றி ஈன்றாள் என்பது தாய்க்கே தனிச்சிறந்த பெயருமாம். ஆயினும் ஈண்டு ஈனியர் என்பது பெற்றோர் என்னும் பொருளில் பொதுப்பட நின்றது.

இல் வாழ்க்கையை மேற்கொண்டு தலைவன் தலையளியில் இனிது வாழ வேண்டியவளாதலின் பெற்றோர் ஆதரவு பொய்நிழல் எனப்பட்டது.

வேட்டு-விரும்பி, - விரும்பியுறைகிறாள் என்றவாறு.

புரைசொல்- பழிச்சொல்; ஊரவர் பழித்துரைக்கும் சொல். மணமாகாத பெண்ணை இங்ஙனம் பழித்துரைத்தல் யாண்டுங் காண்கில மாதலின் இது தோழியின் புனைந்துரையாம்.

*மொய்குழன் அளைந்து முயங்கியாக் காலே* - தலைமகளின் அடர்ந்த கூந்தலை வருடிக் கூடாதவிடத்து.

அச்சங் களைந்து ஆறுதலளிப்பார்தம் மெய்ப்பாடாதல் பற்றிக் கூந்தலை வருடி அணையக் கூறினான்.

மொய்குழல்- அடர்ந்த கூந்தல்; அளைதல் வருடுதல். முயங்குதல் புணர்தல். முயங்காக்கால் என்பது செய்யுள் நோக்கி முயங்கியாக்கால் என நின்றது.

இப்பாடல் குறிஞ்சி என்னும் அகத்திணையும், தோழி தலைவிநிலை கூறித் தலைமகன்பால் வரைவு கடாயது என்னுந் துறையுமாம்.



## 82 மாணும் இளையோள்

*பிறர்மனந் தூக்கி இயல்வன செய்யுந்*
*திறங்கொள் எலுவ! திகைப்பறக் கேண்மோ*
*மனைக்கென் வேண்டுவ வென்பையின் மாண்டோர்*
*தனைக்குறிப் புணர்த்துத் தான்குறிப் பறிவே*
*பொழுதுசூழ் புணர்ந்து புலப்படுத் துணர்வே*
*பழுதுகண் டடங்கி விழுப்பத் துரைப்பே*
*படுவழிப் படுத்து விடுவழி விடுப்பே*
*வடுவில் கற்பின் நெடுநிலைக் காப்பே*
*என்றிவை மாணும் இளையோள்*
*வென்றிய நிலைக்கென் வேண்டுவல் வேறே!*

**பொழிப்பு:**

*பிறர்தம் மனநிலையை ஆராய்ந்து அவர்தமக்கு ஏற்ற உதவியைச் செய்யும் ஆற்றல் வாய்ந்த தோழனே, இல்லாளுக்கு வேண்டும் இயல்புகள் யாவை என்று வினவுவாயாயின் கூறுவேன், மயக்கமறக் கேட்பாயாக!*

*மாட்சி வாய்ந்த பெரியோர் தனக்குக் குறிப்பாக உணர்த்துதலைத் தான் விளங்கிக் கொள்ளும் குறிப்பறிவாற்றலும்; காலமும் சூழ்நிலையும் உணர்ந்து தன் உள்ளக் கிடக்கையைப் புலப்படுத்தும் உணர்வும்; குறைபாடு கண்டவிடத்து அதனை உடனே வெளிப்படுத்தாது அடங்கியிருந்து சிறப்பினைக் கூறுமாற்றால் கூறும் சொற்றிறமும்; பொருள் வருகின்றவழி அதனைப் பாதுகாத்து வைத்துச் செலவிடத் தேவையான விடத்து அதனைச் செலவிடும் பொருளாட்சித்திறமும்; குற்றமற்ற கற்பினைக் காத்துக் கொள்ளும் உயரிய தற்காப்பும் என்னும் இந் நற்குண நற்செயல்களில் சிறந்த இளைஞையின் வெற்றி நிலைக்கு யான் வேண்டத் தக்கது வேறு யாது உளது!*

**விரிப்பு:**

*இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.*

*மணஞ்செய்து கொள்ளுமாறு ஒருவனை அவன் தோழன் வற்புறத்தினானாக; நற்குண நற்செயல்களுடைய பெண்ணாயின் மணக்கத் தடையில்லை யென்று கூறியவன், பின்னும் அத்தகைய குணஞ் செயல்கள்*

தாம் யாவையென்று வினவுவாயாயின் கூறுவேன் என்று தொடங்கித் தன் கற்பனைப் பெண்டாட்டியின் பொற்புறு நலங்களைக் கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.

நன்மகளுக்குரிய அறிவாற்றலும், நா நலமும் பொருளாட்சித் திறமும், தற்காப்பு வல்லமையும் எத்தகையனவாய் இருத்தல் வேண்டும் என்பது இப்பாடலில் விளக்கியுரைக்கப்பட்டுள்ளது.

***பிறர் மனந் தூக்கி...திறங்கொல் எலுவ*** - மற்றையோர் மனநிலையை ஆராய்ந்து அவர்தமக்கு ஏற்ற உதவியைச் செய்யும் ஆற்றல் வாய்ந்த தோழனே!

வினைப்பாடு நோக்கிய ஆராய்ச்சியே தலையாயது ஆதலின் தூக்கி இயல்வன செய்யும் திறங்கொள் எலுவ என்றான். தூக்கி -ஆராய்ந்து. இயல்வன - பொருந்துவன. எலுவ- தோழனே!{

***திகைப்பு அறக் கேண்மோ*** - மயக்கமறக் கேட்பாயாக.

தோழனின் பொருட்டு மேற்கொள்ளத்தக்க செயல் யாது என்றறியாத நிலையில் இருந்தானை நோக்கித் திகைப்பு நீங்கக் கேண்மோ என்றான்.

எலுவ என்று விளித்தவன், அவன் போல்வாரையும் உள்ளடக்கிக் கேண்மோ எனப் பன்மையிற் கூறினான். தன் பெற்றோர் தூண்டுதலாலேயே தோழன் மணவினை குறித்துப் பேசுகின்றான் என்னும் ஊகத்தால் அவரை உள்ளடக்கிக் கூறினான் எனினுமாம்.

***மனைக்கு என் வேண்டுவ என்பையின்*** - மணமகளுக்கு வேண்டியன யாவை என வினவுவாயாயின்;

இக்காலத்து மணவினை முயற்சிகளிலெல்லாம் மணக் கொடையே பெரிதும் பேசப்படுதலின் இவ்வாறு கூறினான்.

மனை-மனைவி; ஈண்டு மணமகள். என்பையின் - என்பை ஆயின் எனற்பாலது இவ்வாறு நின்றது. யின் என்பது ஆயின் என்பதன் தலைக்குறையாகக் கொள்க!

***மாண்டோர் தனைக் ....... குறிப்பறிவே*** - மாட்சிமை வாய்ந்த பெரியோர் தனக்குக் குறிப்பாக உணர்த்துதலை தான் அறிந்து கொள்ளும் குறிப்பு அறிவு ஆற்றல்.

மாட்சி வாய்ந்த பெரியோராவார் பெற்றோரும் மற்றும் சான்றோரும், தக்க விருந்தினருமாம்.

***பொழுது சூழ்பு உணர்ந்து புலப்படுத்து உணர்வே*** - காலமும் சூழலும் அறிந்து தன் கருத்தை வெளிப்படுத்துகின்ற உணர்வு.

சூழ்பாவது இடமும், உடனிருப்போரும், ஒட்டிநிற்கும் வினையும், இடையூறும், விளைவும் பிறவுமாம்.

*பழுதுகண்டு அடங்கி விழுப்பத்து உரைப்பே* - குறைபாடு கண்டவிடத்துப் பொள்ளென அதனை வெளிப்படுத்தாது அடங்கியிருந்து சிறப்பினைக் கூறுமுகத்தான் வெளியிடுதல்.

விழுப்பம் - சிறப்பு.

*படுவழிப் படுத்து விடுவழி விடுப்பே* - பொருட் செல்வம் வருகின்றபோது அதனை முறையாகக் காத்துவைத்துச் செலவிடத் தேவையானவிடத்துச் செலவிடுதல்.

படுதல்- பொருந்துதல், வந்து சேர்தல்.

*வடுவில் கற்பின் நெடுநிலைக் காப்பே* - குற்றமற்ற கற்பென்னும் உயர்ந்த நிலையைத் தற்காத்துக் கொள்ளுதல்.

குற்றமற்ற கற்பு என்றது மனத்தாற் குற்றப்படாமையை. ஆதலின் அது நெடுநிலையினது என்றும் கூறப்பட்டது.

காப்பு - தற்காப்பு.

*என்று இவை மாணும் இளையோன்* - இவ்வாறு மேற்கூறப்பட்ட நற்குண நற்செயல்கள் நிறைந்த இளைஞையின்

*வென்றிய நிலைக்கு வேறுஎன் வேண்டுவல்* - இல்லற வெற்றி நிலைக்கு யான் வேறென்ன வேண்டுவேன்.

இப்பாடல் *பெருந்திணை* என்னும் புறத்திணையும், *கொண்மகள் மாண்பு* என்னும் புதுத்துறையுமாம்.



# 83 ஏகாச் சேர்க்கை

*ஐயிரு திங்கள் மெய்யற வருந்திப்*
*பையல் வீறலில் உயநோய் மறந்தெம்*
*ஆகக் கனப்பில் அணைத்தமிழ் தூட்டி*
*ஏகுநா ளெண்ணி இளவோ னாக்கிப்*
*போக விட்ட புறத்தெம் புகழ்கெட*
*ஏகாச் சேர்க்கை இணைந்தோ னாகித்*
*தளிமகண் நுகர்ந்து களிமிக மண்டி*
*வெளிதுயிற் படுக்கும் விழலைப் பேறென*
*முனையீன் றேமே தோழி*
*சினையில் வயிறியாச் செத்தழி யாமே!*

**பொழிப்பு:**

*தோழி! பத்து மாதங்கள் உடல்முழுதும் வருந்தி ஈன்று ஆண்மகவின் அழுகுரல் கேட்டு மகவுயிர்த்த துன்பம் நீங்கப்பெற்று உடற் சூட்டில் அணைத்துக் கொண்டு பாலூட்டி, கடந்து வரும் அகவையை எண்ணிப்பார்த்து, இளைஞனாய் வளர்த்து அவனை வெளியே செல்லவிட்ட எம் புகழ்கெடுமாறு கூடாநட்புப் பொருந்தினோன் ஆகி, பரத்தையினிடத்தே இன்பந்துய்த்துக் கள்ளை அளவிறப்பக் குடித்துத் தெருவில் உறங்கிக் கிடக்கின்ற விழல் போலும் வீணனை மகவென்று முன்னை ஈன்றனமே; கருவுறாத வயிற்றினளாக இறந்தொழியாமல்!*

**விரிப்பு:**

*இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.*

*வருந்தி யீன்று வளர்த்து ஆளாக்கப்பெற்ற தன் மகன் தம் குடும்பத்தின் புகழ்கெடுமாறு கூடா நட்புக் கொண்டும் பரத்தையிடத்தே இன்புற்றும் வரம்பின்றி மதுக்குடித்தும் தெருவில் உறங்கிக் கிடத்தல் கண்டு வருந்திய தாய் மலடியாகச் செத்தொழியாமல் இவ் விழல் போலும் வீணனை மகவாகப் பெற்றனமே என்று தன் தோழியொடு மனம் நொந்து கூறுமாறு அமைந்தது இப்பாட்டு.*

***ஐ இரு திங்கள் மெய் அறவருந்தி*** *- பத்துமாதக் காலம் உடம்பு முற்றும் வருத்தமுற்று.*

சுமந்ததும் ஈன்றதுமாகிய இருநிலையையும் உள்ளடக்கி மெய்அற வருந்தி என்றாள். அற-முழுவதும்.

*பையல் வீறலின் உய நோய் மறந்து* - ஆண்மகவின் வீறிட்ட அழுகுரல் கேட்டு மகப்பேற்றுத் துன்பத்தை மறந்து

ஆண்மகவு என்பது அந்நொடியில் அறிய வாய்ப்பில்லையாயினும் வீறிட்ட குரலாலேயே உணர்ந்தாள் போலும்! மகவு ஆதலின் பையன் என்னாது பையல் என்றாள். பையலைப் பயல் என்பது சிறுமைப்படுத்தப்பட்ட இற்றை வழக்கு.

வீறல்- வீறிட்டழுதல்.

மகப்பேற்றுத் துன்பம் உயநோய் எனப்பட்டது.

*ஆகக் கனப்பில் அணைத்து அமிழ்து ஊட்டி* - உடலின் வெதுவெதுப்பில் அணைத்துக் கொண்டு பாலமிழ்தைப் பருகுவித்து.

அமிழ்தாவது தாய்ப்பால். இதன் விளக்கத்தை ஆசிரியரின் *திருக்குறள் மெய்ப்பொருளுரையில்* காண்க!

ஆகம்- உடம்பு

*ஏகுநாள் எண்ணி* - நாள், மாதம், ஆண்டு என அகவைக் கணக்கீட்டால் மகனின் வளர்ச்சியை மகிழ்வுற எண்ணி.

கழிந்த காலம் வளர்ந்த நிலையைக் குறிப்பதாயிற்று.

ஏகுதல்- கடத்தல்.

*இளவோன் ஆக்கி* - கட்டிளம் பருவ இளைஞனாக வளர்த்து ஆளாக்கி.

பையலை இளைஞனாக வளர்த்த நிலையைச் சுட்டினாள்.

*போகவிட்ட புறத்து* - வெளியிலே அனுப்பி வைத்த அவ்விடத்தில்.

இளைஞனாகுங்காறும் தன் கண்காணிப்பிலேயே வளர்த்தவள் பருவமெய்திய நிலையில் கண்காணிக்கவியலாத வெளியிடத்துக்கு அனுப்பி வைத்தாள். போகவிட்ட புறத்து என்பதைப் புறத்துப் போகவிட்ட எனக் கூட்டுக.

*எம்புகழ்கெட* - எம் புகழ் கெடுமாறு

தன் கணவனையும் மற்றும் இளைஞனின் பாட்டன் பாட்டியரையும் உள்ளடக்கி எம் என்றாள்.

*ஏகாச் சேர்க்கை இணைந்தோன் ஆகி* - சேரக்கூடாத சேர்க்கையொடு பொருந்தியவனாகி.

ஏகத் தகாத சேர்க்கையை ஏகாச் சேர்க்கை என்றார். பெரும்பாலும் கள், சூது, வரைவின் மகளிர் தொடர்பெல்லாம் நண்பர்களாலேயே வருதலின் அவன் கெடுதலுக்குக் கரணியமான கூடா நட்பை ஈண்டுக் குறித்தார்.

*தளிமகள் நுகர்ந்து* - விலைமாதினிடத்தில் இன்பந் துய்த்து.

கோயிலில் தொண்டு செய்யப் புகுந்து நடனமாடத் தொடங்கி தேவரடியாரானோர் விலைமாதராய் இழிந்தாற்போலக் கோயிற்பெண்டிர் எனப்பொருள்படும் தளிமகளிரும் விலைமாதராயினர். தளி-கோயில்.

*களி மிக மண்டி* - மயக்கம் மிகுமாறு கள்ளை அதிகமாகக் குடித்து.

*களி* - கள்ளுண்ட மயக்கம்.

*மிக* - மிகுமாறு. - *மண்டி*- நிரம்பக் குடித்து.

*வெளியில் துயில்படுக்கும்* - தெருவில் உறங்குகின்ற

*விழலை* - விழல் போலும் புல்லனை.

விழல் - உள்ளீடற்ற பயிர்; புல் வகைகளுள் ஒன்று; பயன்பாடற்றது. 'விழலுக்கு இறைத்த நீர்' என்பது பழமொழி.

*பேறு என* - மகவு என-பிள்ளை என்று.

முனை ஈன்றனமே தோழி - *முன்னாளில் ஈன்றோமே, தோழி!* தன் கணவனையும் உள்ளடக்கி ஈன்றனமே என்று தோழியிடம் வருந்திக் கூறினாள்.

இது *வாகை* என்னும் புறத்திணையும் *மூதின்முல்லை* என்னும் துறையுமாம்



## 84 நல்லோர்க்கும் அஃதே

*புரைமிகு வுரைவாய்ப் புளிங்கள் நாற*
*முறையறப் பழகும் முழுமாந் தர்க்கும்*
*இமையா நோக்கின் எல்லை காக்கும்*
*அமையாத் தோளின் பூட்கை யோர்க்கும்*
*ஈன்றோ ரிசைதர வூன்றியோர் மணந்து*
*தலைநாட் புல்லிய கழியிள வோர்க்கும்*
*கைவளை யுகுப்ப விழிநீர் கழல*
*மெய்கெடத் தணந்த மெல்லிய லார்க்கும்*
*நெடுநிலை முன்றின் நிலாப்பனி நனைப்ப*
*அடுசுவர் ஒடுங்கும் அளியி னோர்க்கும்*
*இலையா கின்றே இரவே*
*நல்லோர்க்கு மஃதே நயந்திசின் நாடே!*

**பொழிப்பு:**

குற்றம் மிகுந்த சொற்களைப் பேசுகின்ற வாயினின்றும் புளித்த கள்ளின் நாற்றம் வெளிப்பட, யாவரிடத்தும் ஒழுங்கின்றிப் பழகும் முட்டாள்களுக்கும்; கண்ணிமையாது நோக்குதலால் நாட்டின் எல்லையைக் காத்து நிற்கும் எழுச்சி கொண்ட தோளையுடைய கொள்கை மறவர்கட்கும்; பெற்றோர்தம் ஒப்புதலோடும் தம் உள்ளத்து வரித்தாரை மணந்து முதல்நாளில் கூடிய மிக்க இளமையுடையார்க்கும்; முன் கை வளையலை நெகிழவிடவும், விழி நீர் வெளிப்படுத்தவும் யாக்கை பொலிவிழப்பவும், தம் வாழ்க்கைத் துணைவரைப் பிரிந்த மெல்லிய இயல்பினரான மகளிர்க்கும்; உயர்ந்த கட்டடங்களின் தாழ்வாரத்தே நிலாக்காலத்துப் பனி நனைத்தலால் பொருந்திய சுவரோரத்தில் குளிரால் ஒடுங்கிக் கிடக்கும் இரங்கத் தக்கார்க்கும் இராப்பொழுது இல்லா தொழிகின்றது. நாட்டு நலம் நாடிப் பாடுபடும் சான்றோர்க்கும் அந்நிலையேயாம்.

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

மன்பதையெல்லாம் செயலொழிந்து துயில்கொள்ளும் இராப் பொழுதில் கண்ணுறக்கங் கொள்ளாதார் இன்னின்னார் எனக் கூறி நாட்டு நலம் விழையும் நல்லோரும் உறங்கார் என்று கூறுவது இப்பாட்டு.

நாகரிக மறியா முட்டாள்களுக்கும் நாட்டின் எல்லை காக்கும் வீரர்களுக்கும் அற்றை நாள் மணந்த மணமக்களுக்கும் கணவரைப் பிரிந்த இளம் பெண்டிர்க்கும், குளிரில் நடுங்கும் ஏழைமையாளர்க்கும் இரவில் உறக்கமில்லை; பொது நல விழைவுடைய நன்மக்களுக்கும் அத்தகைய நிலையே என்றவாறு.

*புரைமிகு உரைவாய் ..... முழுமாந்தர்க்கும்* - குற்றம் மிக்க சொற்களைப் பேசுகின்ற வாயினின்றும் புளித்த கள்ளின் நாற்றம் வீச மற்றையோரிடத்து ஒழுங்குமுறையின்றிப் பழகுகின்ற முட்டாள்களுக்கும்

குற்றமிக்க சொற்களாவன பலுக்கும் முறையானும் பயக்கும் பொருளானும் குளறலும் உளறலுமான குற்றம் மிக்க சொற்கள். குடிமயக்கத்தால் என்ன பேசுகிறோம் என்ற கருத்தில்லாமலே பேசப்படுவன வாகலின் உள்ளீடற்ற சொற்களுமாம். புரை-குற்றம்; உள்ளீடற்ற.

புளிங்கள் - புளித்த கள். நாற - தீய நாற்றம் வீச.

முறையறப் பழகுதலாவது எவரிடத்தும் அவர்தம் தகுதி நிலைக்குப் பொருந்தாதவாறு பேசியும் நெருங்கியும் உறவாடுதல். முறையற - ஒழுங்கு முறையின்றி.

*இமையா நோக்கின் ...... பூட்கை யோர்க்கும்* - இமைமூடாத கருத்தொடுபட்ட பார்வையால் நாட்டின் எல்லையைக் காக்கின்ற எழுச்சியுற்ற தோளைவுடைய கொள்கை வீரர்க்கும். அமையா-எழுச்சி குன்றாத; பூட்கை-கொள்கை.

*ஈன்றோர் இசைதர ...... கழிஇள வோர்க்கும்* - பெற்றோர் ஒப்புதலளிக்க, தாம் காதல் கொண்டவரையே மணந்து முதல் நாளில் கூடிய மிக்க இளமை வாய்ந்தார்க்கும்.

ஊன்றியோர்-மனத்துப் பதித்த காதலர். தலைநாள்-முதல் நாள். புல்லிய- கூடிய, கழி -மிகுதி

*கைவளை உகுப்ப ...... மெல்லிய லார்க்கும்* - முன்கை வளையலை நெகிழவிடவும் கண் நீரை வெளிப்படுத்தவும் மேனி பொலிவிழப்பவும் கணவரைப் பிரிந்து தனித்துறையும் இளம் பெண்டிர்க்கும்.

*நெடுநிலை முன்றில் ...... அளியி னோர்க்கும்* - உயர்ந்த கட்டடங்களின் வெளிபுறத் தாழ்வாரத்தே நிலாக்காலத்துப் பனி நனைத்தலால் பொருந்திய சுவரோரத்தில் குளிரால் ஒடுங்கிக் கிடக்கும் இரங்கத் தக்கார்க்கும்;

வாழ வீடின்றிச் சாலையோரங்களில் குடியிருக்கும் மக்கள் இராப்பொழுதில் பூட்டிக் கிடக்கும் ஆங்குள்ள பெருங்கட்டடங்களின் வெளிப்புறத் தாழ்வாரத்தில் மழைக்கும் பனிக்கும் ஒதுங்கி ஒண்டிக்கிடக்கும் காட்சி ஈண்டுக் குறிக்கப்பெற்றுள்ளது.

*முன்றில் - கட்டடத்தின் வெளிப்புறத் தாழ்வாரம்.*

*அடுசுவர் - நிலத்தொடு பொருந்திய சுவர்; சுவரோரம்.*

*அடுதல் - பொருந்துதல்.*

*அளி - இரங்கத் தக்க நிலை.*

***இலை ஆகின்றே இரவே*** - இராப் பொழுது இல்லை ஆகின்றது

ஓய்வும் உறக்கமுங் கொள்ளுதற்கு இடனாய இராப்பொழுது *அவ்வாறின்மையின் இராப்பொழுதாய் இல்லாதாயிற்று.*

***நாடு நயந்திசின் நல்லோர்க்கும் அஃதே*** - நாட்டு நலன்விழையும் நன் மக்களுக்கும் அவ்வாறு இராப்பொழுது இல்லாதாயிற்று.

***"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்***
***நெஞ்சத் தவல மிலர்"***

- என்றாங்கு நல்லறிவுடைய பெருமக்கள் பொதுநலங் கருதிக் கவலுதலின் உறக்கங் கொள்ளாராயினார்.

*இசின் - அசைநிலை.*

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருண்மொழிக் காஞ்சி*** என்னும் துறையுமாம்.



# 85 கடமை மாமலை

காமரா சென்னுங் கடமை மாமலை,
தாமிணை காணா அரசியல் தந்தை,
தலைமையை ஆக்கிய தகுபெருந் தலைவன்,
குலைவுறா நெஞ்சின் கோதிலா அமைச்சன்
மக்களுக் குழைத்த மாபெருந் தொண்டன்
சிக்கலை யவிழ்க்குஞ் செயற்சீ ராளன்,
தமிழகத் தலைமையை வடவர்கள் ஒப்பும்
அமைவுக் குயர்த்திய ஆளுமை வல்லோன்,
எண்ணமும் பேச்சும் செயலோ டிணைந்த
உண்மை மாந்தனுக் கொருபே ருவமை,
தாழ்ச்சி நிலைக்குத் தனைத்தாழ்த் தாத
காழ்ச்செயல் மறவன், கரும வீரன்,
உலகம் வியக்க அரசியல் வானில்
நிலவிய நேர்மைக் கொள்கை நெடியவன்,
செல்வரைச் செலுத்தி ஏழையர்க் காக்கிய
சொல்வரை யிட்ட சோர்விலா வினைஞன்,
புகழுரை விரும்பாப் பொறுமையின் குன்றம்,
இகழுரை யில்லா ஆட்சியின் ஏந்தல்,
நல்லர சாட்சிக்குத் தன்னை நாட்டிய
இல்லறந் துறந்த நல்லறத் துறவி,
ஏழையர்க் குதவிய எளிமை வாழ்வினன்,
ஊழையும் உப்பக்கம் ஓட்டிய திறலோன்,
இலவயக் கல்வி எங்கும் நிறுவிய
வலவன் இவனை வாழ்த்துக நெஞ்சே!

**பொழிப்பு:**

காமராசர் எனப்படும் இயற்பெயரை உடையவனும் தன் கடமையை உணர்ந்து அதனைச் செய்து நிறைவேற்றுதற்கண் பெருமலைபோல் உயர்ந்து விளங்கியவனுமான பெருமகன், மக்களுள் யாரும் தமக்கு ஒப்பாக வைத்து எண்ணிப் பார்க்க இயலாதவாறு உயர்ந்த அரசியல் தந்தை; நாட்டின்

*தலைவரை உருவாக்கிய தகுதி வாய்ந்த பெருமை மிக்க தலைவன்; இடுக்கண் வந்தவிடத்தும் சிதறாத மனவுறுதி யுடையவன்; குற்றமற்ற அமைச்சன்; மக்களுக்காகப் பாடுபட்ட மிகப்பெருந் தொண்டன் ; கருத்துச் சிக்கல்களை ஆராய்ந்து தீர்வு காணும் செயலில் சிறப்புடையோன்;*

*தமிழ்நாட்டின் தலைமையை வடநாட்டவரும் ஒப்புக்கொள்ளும் நிலைக்கு அதனை உயர்த்திய ஆளுமைத்திறம் வாய்ந்தோன் ; எண்ணமும் சொல்லும் செயலொடு பொருந்திய உண்மை மாந்தனுக்கு ஒரு தனி எடுத்துக்காட்டாக விளங்கியோன்; இழிவான நிலைகளில் தன்னை இறக்கிக் கொள்ளாத, கடுஞ்செயல்களையுஞ் செய்து முடிக்கும் தறுகணாளன்; கருமவீரன் என்று சிறப்பிக்கப் பெற்றோன்;*

*உலக மக்கள் வியப்புறுமாறு அரசியல் என்னும் வானத்தின்கண் நிலவிய, நேர்மையைக் கடைப்பிடித்த உயர்ந்தோன்; செல்வர்களை ஏவி அவர்தம் செல்வத்தை ஏழையர்க்கு உதவச் செய்த, சொற்களை அளவோடு பேசும், மனம் சோர்வடையாத வினையாளன்; புகழுரையை விரும்பாத, பொறுமையின் குன்றம் போன்றோன்; பழிக்கப்படாத ஆட்சியை நடத்திய தலைவன்; நல்ல அரசாட்சிக்கெனத் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட இல்லறத்தை மேற்கொள்ளாதே துறந்த, நல்ல அறநெறியில் நடக்கும் துறவோன்; ஏழை மக்களுள் முன்னேற அவர்க்கு உதவி புரிந்த எளிமையான வாழ்வினன்; ஊழ்வினையைப் புறங்காட்டியோடச் செய்த ஆள்வினையாளன்; பள்ளிகளில் இலவயக் கல்வியைத் தமிழ்நாடெங்கணுந் தொடங்கிய திறப்பாடுடையான்; இப் பெருமகனை வாழ்த்துக நெஞ்சமே!*

**விரிப்பு:**

*இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.*

*இந்திய விடுதலைப் போராட்டத் தலைவர்களுள் ஒருவராகவும் தமிழ்நாட்டின் மேனாள் முதலமைச்சராகவும் அனைத்திந்திய பேராயக் கட்சியின் தலைவராகவும் விளங்கிய கருமவீரர் காமராசர் மறைவுற்ற காலை அவர்தம் அரும் பணிகளையும் பெருஞ் சிறப்புகளையும் நினைவு கூர்ந்து பாடியது இப்பாட்டு.*

***காமராசு என்னும்*** *- காமராசர் (காமராஜ்) எனப்படும் இயற்பெயரை யுடையவனும்*

***கடமை மாமலை*** *- கடமையை உணர்ந்து அதனைச் செய்து நிறைவேற்றுதற்கண் பெருமலைபோல் உயர்ந்து விளங்கியவனுமான பெருமகன்.*

***தாம்இணை காணா அரசியல் தந்தை*** *- மக்களுள் யாரும் தமக்கு ஒப்பாக வைத்து எண்ணிப் பார்க்க இயலாதவாறு உயர்ந்த அரசியல் தந்தை;*

அரசியல் தந்தை என்றது அரசியல் அமைப்பை உருவாக்கும் ஆற்றலாளன் என்பது கருதி.

***தலைமையை ஆக்கும் தகுபெரும் தலைவன்*** - அரசியலைத் தலைமை தாங்கி நடத்த வல்லாரை உருவாக்கும் தகுதி வாய்ந்த பெருந்தலைவன்.

ஆட்சியமைப்பிலும் கட்சியமைப்பிலும் பல்வேறு படிநிலைகளில் இருந்து செயல்படத் தக்க தலைவர்களை இனங்கண்டும், பயிற்சியளித்தும் அமர்த்தும் தகுதியுடையான் என்றார். இவ்வாறு தலைவர்களை ஆக்குந் திறத்தான் பெருந்தலைவன் என்றவாறு.

பண்டிதர் சவகர்லால் மறைவுக்குப் பிறகு இலால் பகதூர் சாத்திரி தலைமையமைச்சரானதும், அவ்வாட்சிக் காலத்திலேயே இந்திரா அம்மையார் அமைச்சராக அமர்த்தப் பெற்றமையும், சாத்திரியார் மறைவுக்குப் பின் இந்திரா அம்மையார் தலைமையமைச்சரானதும் இன்ன பிறவும் காமராசர் தலைவரை ஆக்கும் தலைவர் என்பதை மெய்ப்பிக்கும் சான்றுகளாம்.

***மக்களுக்கு உழைத்த மாபெரும் தொண்டன்*** - மக்களுக்காக உழைத்த மிகப்பெருந் தொண்டன்.

கோயிலுக்கும் மடத்துக்கும் குருமார்க்குந் தொண்டு செய்தலின்றி மக்களுக்காகத் தொண்டு செய்தவன் என்றலின் மாபெருந் தொண்டன் என்றார்.

***சிக்கலை அவிழ்க்கும் செயல் சீராளன்*** - கருத்துச் சிக்கல்களை ஆராய்ந்து தீர்வு காணும் செயலில் சிறப்புடையோன்.

சிக்கல் என்னுஞ் சொல் நூலில் விழுஞ் சிக்கலையே முதற்பொருளாகக் கொண்டதாகலின் அதற்கேற்ப அவிழ்க்கும் என்றார்.

***தமிழகத் தலைமையை ...... வல்லோன்*** - தமிழ்நாட்டினின்றுஞ் செல்லும் தலைமைத் திறம் வாய்ந்தாரை வட நாட்டவர்களும் மறுக்க வியலாது ஏற்றுக்கொள்ளும் அளவுக்கு உயர்த்திய ஆளுமைத் திறம் வாய்ந்தோன்.

தமிழ்நாட்டவரின் தலைமையை ஏற்றுக் கொள்ள வடநாட்டவர்கள் இயல்பாக இசையார் எனினும் அவர்களும் மறுக்க வியலாது ஒப்புமாறு ஆளுமைத் திறத்தால் உயர்த்தினான் என்க!

மூத்த தலைவர்கள் ஆட்சிப் பதவியைத் துறந்து கட்சிக்குத் தொண்டாற்ற முன்வரவேண்டும் என காமராசர் கொண்டுவந்த திட்டம் பண்டிதர் சவகர்லால் தலைமையமைச்சராக இருந்த ஞான்றே ஏற்றுக்கொள்ளப்பட்டு 'கா' (K) திட்டம் என்னும் பெயரில் செயலுக்கு கொண்டுவரப்பட்டமையும், காமராசர் அனைத்திந்திய பேராயக் கட்சியின்

தலைவராக அமர்த்தப்பட்டமையும், காமராசரிடத்தே பயிற்சி பெற்ற சி.சுப்பிரமணியம், இரா. வெங்கட்டராமன் முதலானோர் நடுவணரசில் பொறுப்பான பதவிகளில் அமர்த்தப் பெற்றமையும் பிறவும் எடுத்துக் காட்டுகளாம்.

*எண்ணமும் பேச்சும் ...... ஒருபேருவமை* - எண்ணமும் பேச்சும் செயலொடு பொருந்திய உண்மையான மாந்தனுக்கு ஒரு தனி உவமையாம்.

எண்ணிய பேசாமையும் பேசியதைச் செயற்படுத்தாமையுமே பெரும்பாலும் மக்களின் இயல்பாகக் காணக்கிடத்தலின் அவ்வாறன்றி எண்ணத்தையும் சொல்லையும் செயல்படுத்திக் காட்டியவன் என்றலின் உண்மை மாந்தனுக்கு ஒரு பேருவமை என்றவாறு.

*தாழ்ச்சி நிலைக்குத் தனைத்தாழ்த்தாத காழ்ச்செயல் மறவன்* - தன் தகுதிக்குக் குறைவான செயல்களில் ஈடுபட்டுத் தன்னைத் தாழ்த்திக் கொள்ளாத உறுதியான செயல் திறம் வாய்ந்த மாவீரன்.

காழ்ச்செயல்- உறுதியான செயல்.

*கருமவீரன்* - தனக்கென பயன் கருதாது செயல்படுதலின் கருமவீரன்.

*உலகம் வியக்க ...... கொள்கை நெடியவன்* - உலகமக்கள் வியப்புறுமாறு அரசியல் என்னும் வானத்தின்கண் நீண்ட காலமாக நிலவிய நேர்மைக் கொள்கைச் சிறப்பால் உயர்ந்தோன்.

*செல்வரை ஏவி ஏழையர்க்கு ஆக்கிய* - பெருஞ் செல்வர்களை ஏவி விட்டு ஏழை மக்களின் துயர்துடைக்கும் முன்னேற்றப் பணிகளுக்கும் உதவுமாறு ஆற்றுப்படுத்திய.

*சொல்வரையிட்ட* - சொற்களை அளவாகப் பயன்படுத்திப் சுருக்கமாகப் பேசிய.

*சோர்விலா வினைஞன்* - தோல்விகளைத் தழுவ நேர்ந்த போதும் சோர்வடையாது செயல்பட்ட வினையாளன்.

*புகழ்உரை விரும்பாப் பொறுமையின் குன்றம்* - யாரும் தன்னைப் புகழ்ந்து பேசுதலை விரும்பாத பொறுமையின் குன்றம் போன்றவன்.

*இகழ்உரை இல்லா ஆட்சியின் ஏந்தல்* - யாராலும் பழிக்கப்படாத ஆட்சியை நடத்திய தலைவன்.

*நல்அரசாட்சிக்கு ...... துறவி* - மக்கள் முன்னேற்றங்கருதும் நல்லஅரசாட்சி யின்கண் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட இல்லறத்தை மேற்கொள்ளாதே துறந்த நல்ல அறநெறியில் நடக்குந் துறவி.

*ஏழையர்க்கு உதவிய எளிமை வாழ்வினன்* - ஏழைமக்கள் முன்னேற அவர்கட்கு உதவிபுரிந்த எளிமையான வாழ்வினன்.

*ஊழையும் உப்பக்கம் ஓட்டிய திறலோன்* - ஊழ்வினையையும் புறங்காட்டி யோடச் செய்த ஆற்றலாளன்.

ஊழ்வினையின் பெயரால் காலங்காலமாக மேல்சாதியார்க்கு அடிமைகளாகவும், கல்வியறிவும் பதவி நலமும் அறியாதவராகவும், தலைமுறை தலைமுறையாக வரும் எளிய தொழில்களை வருந்திச் செய்தும் இன்னலுற்ற ஏழைஎளிய மக்கள் கல்வியறிவு பெற்றும் வேலைவாய்ப்புகள் பெற்றும் முன்னைத் தலைகளை முறித்தெறிந்து முன்னேறுதற்கான அடிப்படையாக, இராசாசி தொழிற்கல்வி என்னும் பெயரில் குலக்கல்வித் திட்டத்தைச் சூழ்ச்சியாகக் கொண்டு வந்த போது திட்டமிட்டு அதனை முறித்து வெற்றி கண்டமையின் ஊழையும் உப்பக்கம் ஓட்டிய திறலோன் என்றார்.

*இலவயக் கல்வி எங்கும் நிறுவிய வலவன்* - இலவயக் கல்வித் திட்டத்தைக் கொண்டுவந்து அதனை செயற்படுத்திய திறமையாளன்.

*நெஞ்சே இவனை வாழ்த்துக* - நெஞ்சே இவனை வாழ்த்துக!.

இப்பாடல் *பாடாண்திணை* எனும் புறத்திணையும் *இயன்மொழி* எனும் துறையுமாம்.



# 86 விழுபசிக் கெழுதும்

வளிநிலந் துறந்து விண்கோள் வெளவி
அளிமழை பொழித்துக் கனலி மாற்றிக்
கருமுழை திரளா வுருவகை தோற்றி
அருமுயிர் நிலைப்பை அவரவா நீட்டுந்
திறத்தோ ராயினும் பிறத்தோ ரெல்லாம்
இறத்தன் மாறார் இருக்கு ஞான்றையுங்
கட்புல னுள்ளுழிக் காட்சியு முளதால்
உட்செவி யுள்ளுழி யொலிக்கதுப் புளதால்
மோப்பொறி யுள்ளுழி யாப்புயிர்ப் புளதால்
உகலுட லுள்ளுழி உளமுள தாகலின்
எழுபசிக் கேறா முளத்து
விழுபசிக் கெழுத்தும் வேண்டுவ யாண்டே!

**பொழிப்பு:**

காற்று இயங்கும் இந் நில மண்டிலத்தை விட்டேறி வானத்துச் சுழலும் கோளைப் பற்றிக் குளிர்ச்சி பொருந்திய மழையைப் பொழிவித்து, கதிரவனின் இயல்பை மாற்றி இருளடர்ந்த மலைவிடரை திரட்சியான உருவமுடைய வகையில் தோற்றுவித்து அரிய உயிர்நிலைப்பை அது நீங்கும் காலத்தே அவர்தம் ஆசையை வெளிப்படுத்துமளவும் நீட்டித்து வைக்கும் திறமுடையோராயினும் இவ்வுலகில் பிறந்தோரேல்லாம் இறத்தலைத் தவிர்ப்பாரல்லர். வாழுங் காலத்தும் கண்ணாகிய புலன் இருக்குமட்டும் காணப்படும் காட்சியும் உண்டு, உள்ளிடமான செவி இருக்குமட்டும் கேள்வியும் உண்டு. மோத்தலுக்குரிய பொறியாகிய மூக்கு இருக்கு மட்டும் மூச்சை யிழுத்தடக்குதலும் வெளியிடுதலும் உண்டு. அழியத் தக்க உடல் இருக்குமட்டும் உள்ளமும் உண்டு; ஆதலின் எம் வயிற்றில் எழும் பசியைத் தணித்துக் கொள்ளும் பொருட்டு யாம் முயற்சி மேற்கொள்ளமாட்டோம்; உள்ளத்தின்கண் பொருந்திய மெய்யறிவுப் பசியினாலேயே முனைகின்றேம். யாம் விரும்புவன யாண்டு உள!

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

வானக்கோளைப் பற்றுதலும் மழைமுகிலைப் பொழிவித்தலும் கதிரவன் இயல்பை மாற்றுதலும் மலைவிடரைத் தூர்த்துயர்த்திக் கொடுமுடியாக்கலும் மூச்சுக்காற்றைத் தேக்கித் தாம் விரும்பியாங்கு நீட்டித்தலும் ஆகிய அரிய வினைகளைச் செய்யும் பேராற்றல் வாய்ந்த வராயினும் இவ்வுலகில் பிறந்தவரெல்லாம் இறத்தல் உறுதியாம். உடலில் கண்ணும் செவியும் மூக்கும் உள்ளமட்டும் காட்சியும் கேள்வியும் முகர்ச்சியும் உண்டு. ஆகவே யாம் வயிற்றுப்பசி தணிக்கும் எளிய முறையில் ஈடுபடேம். உள்ளத்ததான மெய்யறிவு நாட்டமுடையேம் என்று எடுத்துரைப்பது இப்பாட்டு.

*வளிநிலம் துறந்து விண் கோள் வெளவி* - காற்று இயங்கும் இந்த நில மண்டலத்தைவிட்டு மேலேறி வானக்கோளைப் பற்றி.

இந்நிலவுருண்டையின் மேல் குறிப்பிட்ட எல்லையளவே காற்று மண்டலம் உள்ளதென்றும் அதற்கப்பால் காற்றுமற்ற வெற்றிடமேயாம் என்றும் அறியப்படுதலின் வளிநிலம் எனப்பெற்றது.

*'வளிவழங்கும் மல்லன் மாஞாலம்'* என்றார் திருவள்ளுவரும்.

வளி-காற்று. வெளவி-பற்றி.

*அளிமழை பொழித்து* - குளிர்ச்சி பொருந்திய கார் முகிலை மழை பொழியச் செய்து.

அளி-குளிர்ச்சி. பொழித்து-பொழிவித்து.

*கருமுழை திரளா உருவகை தோற்றி* - இருளடர்ந்த மலைவிடரைத் தூர்த்து. கற்றிரளாக அதன் வடிவத்தை வகை மாற்றித் தோற்றுவித்து.

முழை-விடர்.

*அரும் உயிர்நிலைப்பை அவர் அவா நீட்டும் திறத்தோர் ஆயினும்* - உள்ளிழுத்து நிறுத்தப்பட்ட மூச்சுக் காற்றின் இருப்பை தாம் விரும்பியாடங்கு நீட்டிக்கும் ஆற்றல் வாய்ந்தவராயினும்.

*பிறத்தோர் எல்லாம் இறத்தால் மாறார்* - பிறந்தவரெல்லோரும் சாவதில் மாற்றமுறார்.

*இருக்கும் ஞான்றையும்* - விழுங்காலத்தும். ஞான்றை-காலம்.

*கண்புலன் உள்காட்சியும் உளதால்* - கண்ணாகிய புலன் உள்ளவிடத்துக் காணப்படுங் காட்சியும் உண்டு.

ஆல்-அசை.

*உள்செவி உள்உழி ஒலிக்கதுப்பு உளது* - உள்ளிடமான செவி இருக்கும்மிடத்து ஒலியைக் கதுவுதலும் உண்டு.

கண்ணும் மூக்கும் போலாது உள்வாங்கி யிருத்தலின் செவியை உட்செவி என்றார்.

கதுப்பு- கதுவு; பற்றுதல்

*மோப் பொறி உள்உழி யாப்பு உயிர்ப்பு உளதால்* - முகரும் பொறியாகிய மூக்கு உள்ளவிடத்து மூச்சு உள்ளிழுத்தலும் வெளியிடுதலும் உண்டு.

மோப்பொறி-மூக் யாப்பு - மூச்சை உள்ளிழுத்து நிறுத்துதல்.

*உகல் உடல் உள்உழி உளம் உளது ஆதலின்* - அழியத்தக்க உடல் இருக்குமிடத்து உள்ளமும் உள்ளது ஆதலினால்.

உகுதல்- அழிதல்.

*எழுபசிக்கு ஏறாம்* - வயிற்றில் தோன்றும் பசியைத் தணித்துக் கொள்ளும் பொருட்டு முயற்சியை மேற்கொள்ள மாட்டேம்.

ஏறாம் என்றது முயற்சிப்படியில் அடிவைக்க மாட்டேம் என்றாங்குக் கூறியது.

*உளத்து விழுபசிக்கு எழுத்தும்* - உள்ளத்தில் பொருந்திய மெய்யறிவுப் பசியினாலேயே முனைகின்றேம்.

எழுதும் என்பது விரித்தல் வேறுபாடுற்று எழுத்தும் என நின்றது.

விழுதல்- பதிதல்; பொருந்துதல். காதில் விழுந்தது என்றல் காண்க.

*வேண்டுவ யாண்டே* - யாம் விரும்புவன யாண்டு உள்ளன.

இப்பாடல் *பொதுவியல்* என்னும் புறத்திணையும் *பொருண்மொழிக் காஞ்சி* என்னும் துறையுமாம்.



# 87 தகவிலார் நோன்பு

*நூலோர் அழுந்திய உயர்வழிப் பொருந்தி*
*மேலோர் தாமென் றுட்பெற வுட்கி*
*முனிவுங் காய்வும் மூளா நேர்மையும்*
*இனியவர்க் கன்பும் இன்னார்க் கருளும்*
*ஓர்ங்கால் மனமும் மெய்யும் ஒடுங்கிக்*
*கூர்ந்தவ வொழுக்கி னேர்தலை நோற்புங்*
*கொண்டோ ராகி ஊண்டுயில் மறந்து*
*மண்டிய கல்வி மருவிலர்க் கீந்த*
*தீமையில் அறமும் பொருளும் இன்பமும்*
*ஓங்கிய புகழின் உயர்த்தோ*
*தாங்கிய செல்வத் தகவிலார் நோன்பே!*

**பொழிப்பு:**

விழுமிய நூல்களைப் பயின்றுணர்ந்த அறிஞர் பெருமக்கள் கடைப்பிடித்த உயரிய வாழ்க்கை நெறியைப் பொருந்தி, மேலோர் என்று தம்மையும் உட்படுத்திக் கொள்ளுதற்கு அஞ்சி, சினமும் வெறுப்பும் தோன்றாத செம்மையும். தமக்கு இனியரான தம்மைச் சார்ந்தாருக்கு அன்பும், மாறான பகைவர்கட்கு அருளும், ஆராய்ந்து பார்க்குமிடத்து உள்ளமும் உடலும் ஒடுங்கப் பெற்றுச் சிறந்த தவவொழுக்கத்திற்கு நேரிய மிக்கப் பொறுமையும் கொண்டவராகி, உண்டியும் உறக்கமுங் கொள்ளாது தம்மிடத்து நிறைத்த கல்வியைப் பகைவர்க்குக்குங் கற்பித்த குற்றமற்ற அறமும் பொருளும் இன்பமும் சிறந்த புகழைவிட மேலானதோ செல்வத்தை சுமந்திருக்கும், தகுதியில்லாதவர்கள் நோற்கும் நோன்பின் பயன்?

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

செல்வப் பெருக்கமுடைய, தகுதியற்றவர் சிலர் நோன்பு என்னும் பெயரில் ஆரவாரித்தல் கண்டு, சான்றாண்மையுடையார் தொண்டு வாழ்க்கையாற் பெறும் புகழைவிட அத் தகுதியிலாச் செல்வர்கள் கடைப் பிடிக்கும் நோன்பின் பயன் உயர்ந்ததாகாது என்று எடுத்துரைப்பது இப்பாட்டு.

*நூலோர் அழுந்திய உயர்வழிப் பொருந்தி* - விழுமிய நூல்களைப் பயின்று உணர்ந்த அறிஞர் பெருமக்கள் கடைப்பிடித்த உயரிய வாழ்க்கை நெறியில் பொருந்தி.

அழுந்திய-கடைப்பிடியாகக் கொண்ட.

*மேலோர் தாம் என்று உள்பெற உட்கி* - மேன்மக்கள் என்று தம்மையும் அவ் அறிஞரொரொடு உள்ளடக்கிக் கூறிக் கொள்ளுதற்கு அஞ்சி.

மேற்கூறிய அறிஞர்கள் வரிசையில் தம்மையும் இணைத்துக் கொள்ளுதற்கு நாணத்தால் அஞ்சி என்றவாறு.

உட்கி-அஞ்சி.

*முனிவும் காய்வும் மூளா நேர்மையும்* - சினமும் வெறுப்பும் தோன்றாத செம்மையும்.

சினமும் வெறுப்பும் நடுநிலை பிறழ்தற்கு ஏதுவாம் ஆதலின் அவை தோன்றாத நேர்மை என்றார்.

முனிவு-சினம். காய்வு- வெறுப்பு. மூளாத -தோன்றாத. நேர்மை - செம்மை; நடுநிலை.

*இனியார்க்கு அன்பும்* - தம்மைச் சார்ந்தவர்கட்கு அன்பும்.

எயன் அன்பாவது தொடர்புடையார்மாட்டு நிகழும் மனநெகிழ்ச்சி பவாகலின் இவ்வாறு கூறினார்.

*இன்னார்க்கு அருளும்* - தமக்கு இனியவர் அல்லாதவரான பகைவர்மாட்டு அருளும்.

அனைவர் மீதும் நிகழும் அன்பின் விரிவே அருளாதலின், இவ்வாறு கூறப்பட்டது.

*ஓர்ங்கால் மனமும் ..... நோற்பும்* - ஆராய்ந்து பார்க்குமிடத்து உள்ளமும் உடலும் ஒடுங்கப் பெற்றுச் சிறந்த தவ ஒழுக்கத்திற்குச் சமமான மிகுந்த பொறுமையும்.

இது எத்தகையது என்று இன்னொன்றொனொடு ஒப்பு நோக்கிக் கூறுதலின் ஓர்ங்கால் என்றார். ஓர்தல் - ஆராய்தல்.

*கொண்டோர் ஆகி* - உடையவராகி.

மேற்கூறிய அன்பும் அருளும் பொறுமையும் உடையாராகி என்றவாறு.

*ஊண்துயில் மறந்து* - உண்டியும் உறக்கமும் மறக்கப் பெற்று.

உயிர் வாழ்தற்குரிய கட்டாயத் தேவைகள் ஆதலின் உண்டியும் உறக்கமும் கூறினார். பிறவெல்லாம் தாமே யடங்கும்.

*மண்டிய கல்வி* - தம்மிடத்து நிறைத்துக் கொண்ட கல்வியை. மண்டுதல்-திணிதல்.

*மருவிலர்க்கு ஈந்த* - தம்மொடு ஒன்றாதார்க்கும் இரக்கத்தான் வழங்கி.

பகைவராயினும் அவருந் திருந்த வேண்டும் என்னும் இரக்க நெஞ்சால் அறிவுறுத்துதலின் ஈந்த என்றார். மருவிலர்-ஒன்னார்; பகைவர்.

*தீமைஇல்* - குற்றமற்ற

*அறமும் பொருளும் இன்பமும் ஓங்கிய புகழின்* - அறம் பொருள் இன்பங்கள் என்னும் பெருவாழ்வுக்குரிய கடைப்பிடிகளால் சிறந்த புகழைவிட.

*தாங்கிய செல்வத் தகவிலர் நோன்பு* - செல்வத்தைச் சுமந்திருப்போரான தகுதியற்றவர்கள் கடைப்பிடிக்கும் நோன்பு.

செல்வப் பெருக்கம் புலப்படுமாறு நோன்பு என ஆரவாரித்தலின் தாங்கிய செல்வம் ஈண்டுக் குறிக்கப்பட வேண்டியதாயிற்று.

*உயர்த்தோ* - உயர்ந்த தாகுமோ?

உயர்ந்ததாகாது என்றவாறு - ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு. இப்பாடல் ***பொதுவியல் என்னும் புறத்திணையும் பொருண்மொழிக் காஞ்சி*** என்னும் துறையுமாம்.



# 88 பெட்பொழி நெஞ்சே!

முதுசெம் பரத்தை முகங்குத் திட்ட
கொடுமுண் புரையக் கடுங்கண் நோக்கும்
ஊற்றிவாய் வெண்பூ வுன்மத் தன்காய்
மேற்றிகழ் குறுமுண் ணேய்முகக் கடுப்பும்
கருங்கற் பிளவைக் கரட்டுரை யிறுப்பும்
சுருங்கை யுளமும் முருங்கை யுரனும்
பெற்றியார்ப் பெரியோ ராக்கும்
பெற்றிய பொருளில் பெட்பொழி நெஞ்சே!

**பொழிப்பு:**

முதிய செம்பரத்தைச் செடியினது முனைகூர்மைப்பட்டு வளைந்த முள்போலும் வன்மைவாய்ந்த கண்ணின் பார்வையும், ஊற்றியைப் போலும் வடிவமைப்புக் கொண்ட வெண்ணிறப் பூவை யுடைய உன்மத்தன்காய் மேற்காணப்படும் சிறுமுள் போலும் முகத்தின்கண் கடுகடுப்பும், கருங்கற் பிளவு போலும் வாயினின்றும் வெளிப்படும் ஒழுங்கற்ற பேச்சும், சுருங்கை போலும் குறுகிய உள்ளமும் முருங்கை மரத்தைப் போலும் புல்லிய உடல் வலிமையும் கொண்ட இயல்புடையாரையும் பெரியோராய் உயர்த்திக் காட்டுகின்ற தன்மை வாய்ந்த பொருள்களைத் தேடுவதில் நெஞ்சத்துக் கொண்ட விருப்பத்தைக் கைவிடுவாயாக!

**விரிப்பு:**

இப்பாட்டு அகப் பொருள் சார்ந்தது.

தலைவியினிடத்துக் காதல் கொண்ட தலைவன் அவளை வரைந்து கொள்ளாது, பொருள்தேடும் பொருட்டுப் பிரிந்து செல்லக் கருதினானாக. அவன் பிரிவைத் தடுக்கும் நோக்கொடு தோழி அவனுக்குப் பொருளின் இழிவை உணர்த்துவதாக அமைந்தது இப்பாட்டு.

பொலிவிலாத் தோற்றமும், நயமில்லாப் பேச்சும் குறுகிய மனப்பான்மையும் வலிமையற்ற உடலுங் கொண்டாரையும் பெரியோர் என்னுமாறு உயர்த்திக்காட்டும் செல்வத்தை விரும்பற்க என்கிறாள் தோழி. அவள் கூறுவதன் நோக்கம் பிரிந்து செல்வதைத் தவிர்த்துக் தலைவியை வரைந்து கொள்ளவற்புறுத்துவதாம்.

*முது செம்பரத்தை ...... கடுங்கண் நோக்கம்* - முதிய செம்பரத்தைச் செடியினது முனை கூர்மைப்பட்டு வளைந்த முள்போலும் கொடுமை வாய்ந்த கண்ணின் பார்வையும்.

செம்பரத்தைச் செடியின் முள்ளென்றது அச்செடி முதிர்ந்த விடத்து அதன் கிளைகளில் முரடுபட்டுக் காணப்படும் கணுக்களையேயாம். ஆதலினாற்றான் முதுசெம்பரத்தை என்றார்.

முகம்-முனை. குத்திட்ட-கூர்மைப்பட்ட. கொடு- வளைவு. முண்- முள்.

*ஊற்றி வாய் வெண்பூ ..... முகக் கடுப்பும்* - ஊற்றியைப் போலும் வெண்ணிறப் பூவையுடைய உன்மத்தங்காயின் மேல் காணப்படும் சிறிய முள்போலும் முகத்தின் கடுகடுப்பும்.

உன்மத்தம் பூவுக்கு ஊற்றியை உவமையாகக் கூறினார். ஊற்றியாவது. நீர்மங்களைக் குடுவையில் ஊற்றுவதற்குப் பயன்படுத்தப்படும் வாயகன்றதும் அடியில் குழாயுடையதுமான கருவி (Funnel)

வாய், ஏய் என்பன உவம உருபுகள்.

*கருங்கல் பிளவைக் கரட்டு உரைஇறுப்பும்* - கருங்கல்லின் பிளவு போலும் வாயினின்றும் வெளிப்படும் ஒழுங்கற்ற பேச்சும்.

பிளவை- பிளவு. கரடு- ஒழுங்கற்றது. உரையிறுப்பு -பேச்சு.

*சுருங்கை உளமும்* - சுருங்கையைப் போலும் குறுகிய மனமும்.

சுருங்கை- இடுக்கு வழி. சுருங்கையின் வேறு வடிவமே சுரங்கம். மனம்-மனப்பான்மை.

*முரங்கை உரனும்* - முருங்கை மரம் போலும் புல்லிய வலிமையும்.

வலிமையின்மையைக் குறிக்க உள்ளீடற்ற முருங்கை மரத்தை உவமையாகக் கூறினார். இவ்வாறு கூறுவது உலக வழக்குமாம்.

பெற்றியார்- கொண்ட தன்மையினரை.

மேற்கூறியாங்குப் பார்வையும், முகத்தோற்றமும், உரையிறுப்பும் மனப்பான்மையும் உடல் வலிமையும் கொண்ட எனக் கூட்டுக.

*பெரியோர் ஆக்கும்* - பெருமை வாய்ந்தவராக உயர்த்திக் காட்டும்.

*'பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருள்'* என்றார் திருவள்ளுவர்.

*பெற்றிய பொருளில் நெஞ்சு பெட்பு ஒழி* - தன்மை வாய்ந்தனவாகிய பொருள்களைத் தேடுவதில் கொண்ட மன விருப்பத்தைத் தவிர்ப்பாயாக.

பெற்றிய-தன்மையுடையனவாய. பெட்பு -விருப்பம்.

*இப்பாடல் பாலை என்னும் அகத்திணையும், தோழி பொருள்பிரிவு உரைத்து வரைவுகடாதல் என்னும் துறையுமாம்.*

# 89 எய்ப்பில் வைப்பு

*வானத் தாயினுங் குன்றத் தாயினும்*
*மீனற் றிலங்கும் ஆழிய தாயினும்*
*முயல்வின் கொண்மர் பொருள்வேட் டோரே!*
*பயன்றெரி கல்லாப் பாடில மாக்கள்*
*அணிமைத் தாயினும் அஃதறி யாரே!*
*சுளகு கொறிக்கும் பாசுடல் நெடும்புழு*
*இணர்நறுந் தேறல் அறியாதா கின்றே!*
*கெடிறின மெச்சம் விழுங்குவ தன்றி*
*முத்தம் அயிறல் முப்பொழு திலையே!*
*வித்தும் வீசலின் விளைகொள் ளாதே!*
*அத்தகு விளைவும் அடிப்பற் றாதே!*
*எப்பொருள் மருங்கும் அப்புடைப் பயனே!*
*ஓடவிழ் செய்ய ஒளிதரு மணிப்போல்*
*தேடரு கல்வி வளனே செவ்விது!*
*ஆகலின் சான்றோ ரனப்பொதிந் தனரே!*
*ஓதுக ஓதுக; உன்னி ஓதுக;*
*ஏதமிற் செல்வஞ் சேதமிற் காக்க*
*ஏமச் செப்புழை இடுதல் போன்றே*
*எய்ப்பின் வைப்பாய் இருத்தினர் பொருளே!*
*உய்யல் வேண்டுவர் ஊன்றிக்*
*கொய்யல் முறையே; கொடுக்கலு மாங்கே!*

**பொழிப்பு:**

வானத்தே இருப்பதாயினும், மலையின் கண் இருப்பதாயினும், மீன்கள் வாழுதலில்லாத கடலின் ஆழத்தே இருப்பதாயினும் ஒரு பொருளை விரும்பியோர் தம் முயற்சியினால் அப் பொருளைக் கைக்கொள்வர். பொருளின் பயனை யறியாத முயற்சியற்ற மாக்கள் தம் அருகிலேயே இருப்பினும் அதனை அறியமாட்டார். இலையைக் கடித்துண்ணும் பசுமையான உடலையுடைய நீண்ட புழு பூவில் இருக்கும் நறுவிய தேனை அறியாததாய் இருக்கின்றது. மீன்வகை யெல்லாம் எச்சிலை விழுங்குவதல்லாமல் முத்தினை உட்கொள்ளுதல் எக்காலத்தும் இல்லை.

வித்தேயாயினும் வீசியெறியப்படின் முளைக்காது; ஒரோவழி முளைத்தெழினும் அது வேர்விடாது. எப்பொருளிடத்தும் முயற்சியின் அளவுக்கேற்பவே பயன்கிட்டும்; சிப்பியின் ஓடு உடைந்தவழி ஒளிவீசும் முத்துப் போல் தேடுதற்கு அரிய கல்விச் செல்வமே சிறந்தது; ஆதலினாலேயே சான்றோர் பெருமக்கள் அக்கல்விச் செல்வத்தைத் தம் உள்ளத்தினுள் நிறைத்துக் கொண்டனர். கற்க, கற்க; ஆராய்ந்து கற்க! குற்றமற்ற செல்வத்தை அழியாமல் காத்தற்கு அதனைக் காப்புப் பெட்டகத்துள் இட்டுவைத்தல் போல இளைத்த காலத்து உதவும் பொருளாகக் கல்வியை நெஞ்சகத்து இருத்திக் கொண்டனர். உலகத்தினின்றுந் தப்ப விரும்புவோர் மனம் தோய்ந்து கல்வியை முறையாகக் கொய்துகொள்க! பிறர்க்கும் வழங்குக!

விரிப்பு:

இப் பாடல் புறப் பொருள் சார்ந்தது.

ஒரு பொருளை விரும்புவோர் அஃது எத்துணைச் சேய்மையிலிருப்பினும் அருமுயற்சியாற் பெறத்தக்கதாயினும் முயன்று கைக்கொள்வர்; பொருளின் பயனறியாத சோம்பேறிகள் அரிய பொருள் அண்மையிலேயே இருப்பினும் அதனைக் கொள்ளார்; எளிய முயற்சியாற் செய்யப்பெறும் எச்செயலும் சிறந்த பயனைக் கொடாது; எப்பொருளிடத்தும் நாம் மேற்கொள்ளும் முயற்சிக்கேற்பவே பயனைப் பெறவியலும்; தேடுதற்கு அரிய கல்வியாகிய செல்வமே சிறந்தது; ஆகையாலேயே சான்றோர் கல்வியை உள்ளத்தே பொதிந்து கொண்டனர்; ஈடேற விரும்புவோர் கல்வியை உளந்தோய்ந்து கற்க; பிறரையும் கற்பிக்க என்று உலக மக்களுக்கு அறிவுறுத்துவது இப்பாட்டு.

***வானத்து ஆயினும் .......***: வானத்தே இருப்பதாயினும்

வான வெளியில் இயங்கும் பிறகோள்களிலோ செயற்கைக் கோள்களிலோ, ஊர்திகளிலே இருக்கும் பொருளாயினும் என்றவாறு. அன்றிக் கதிரவன் வெப்பமும், விண்கற்களும் , மழைமுகிலும் போல்வன எனினுமாம்.

***குன்றத்து ஆயினும்*** - மலையின்கண் இருப்பதாயினும் ***மீன் அற்று இலங்கும் ஆழியது ஆயினும்:*** மீன்கள் வாழுதல் இல்லாத கடலின் ஆழத்தே இருப்பதாயினும்.

***முயல்வின் கொண்மர் பொருள்வேட்டோரே*** - பொருளை விரும்பியோர் முயன்று கைக்கொள்வர்-

***பயன் தெரிகு அல்லாப் பாடு இல மாக்கள்*** - பொருளின் பயனை அறிய மாட்டாத முயற்சியற்ற மாக்கள்

நன்முயற்சிகளை மேற்கொண்டு வாழ்தலே சிறந்த மாந்த வாழ்க்கை யாதலின் அத்தகைய முயற்சியில்லாதாரை மாக்கள் என்றார். பாடு- முயற்சி. மாக்கள்-விலங்குகள்.

*அணிமைத்து ஆயினும் அஃது அறியாரே* - அண்மையில் இருப்பதாயினும் அதனை அறியார்.

*குளகு கொறிக்கும் பாசுடல் நெடும்புழு* - இலையைக் கடித்து உண்ணும் பசுமையான நீண்ட உடலையுடைய புழு.

கொறித்தலாவது ஒவ்வொன்றாகக் கடித்துத் தின்னுதல். கடித்தலைக் குறிக்கும் கறித்தல் என்னுஞ் சொல் சிறிய பொருள் வேறுபாட்டின் பொருட்டுக் கொறித்தல் என்று ஆகியுள்ளது.

குளகு-இலை.

*இணர்நறும் தேறல் அறியாது ஆகின்று* - பூவில் உள்ள நறுவிய தேனை அறியாததாக இருக்கின்றது.

இணர்-மலர்; நறும்- சிறந்த; தேறல்- தேன்.

*கெடிறு இனம் எச்சம் ..... முப்பொழுது இலையே* - மீனினம் எச்சிலை விழுங்குவது அல்லாமல் முத்தை உண்பது முக்காலத்திலும் இல்லை.

முக்காலத்திலும் இல்லை யென்றது எக்காலத்திலும் இல்லை என்றவாறு, முற்றுமை தொக்கது.

கெடிறு-மீன். எச்சம் - எச்சில். அயிறல்- உண்ணுதல்.

*வித்தும் வீசலின் விளைகொள்ளாதே* - வீசியெறியப் பட்டால் வித்தும் முளைக்காது.

முயன்று மண்ணை அகழ்ந்து ஊன்றி நீர்விட்டாலே முளைக்கின்ற வித்து முயற்சியின்றி மேலோட்டமாக வீசியெறியப்பட்டால் முளைக்காது என்பது. முயற்சி பற்றியே ஈண்டுக் கூறப்பெறுதலின் இயற்கைச் சூழல் வாய்த்துழி முளைத்தல் ஈண்டுப் பொருளன்றாம்.

*அத்தகு விளைவும் அடிப் பற்றாதே* - ஒரோ வழி அவ்வித்து முளைத்தாலும் வேர்விடாது.

*எப்பொருள மருங்கும் அப்புடைப் பயனே* - எப்பொருளிடத்தும் முயற்சியினிடத்துப் பயனே கிட்டும்.

மருங்கு, புடை என்பன இடம் பொருள் பற்றியன.

*ஓடு அவிழ்செய்ய ஒளிதரு மணிப்போல்* - சிப்பியின் ஓடு உடைந்தக்கால் ஒளிவீசுகின்ற முத்துப்போல்.

ஓடு- சிப்பியின் கூடு. அவிழ் செய்ய -உடைய. மணி -தொண்மணிகளுள் ஒன்றான முத்து.

*தேடு அரு கல்வி வளனே சிறந்தது* - தேடுதற்கு அரிய கல்வியாகிய செல்வமே தலையாயது.

கல்வி என்று ஈண்டுப் பொதுப்படக் கூறினும் அஃது உலகியற் கல்வி போலாது சான்றோர் உளம்பொதிந்த மெய்ம்மை சான்ற கல்வியைச் சிறப்பாகக் குறித்தலால் அது தேடுதற்கு அருமையுடைமை கண்கூடு.

*ஆகலின் சான்றோர் அனப் பொதிந்தனரே* - கல்விச் செல்வமே விழுமியது ஆகலின் சான்றோர் பெருமக்கள் அக் கல்வித் துறைகளை உள்ளத்தே பொதிந்து கொண்டனர்.

அன-அத்தகைய கல்வியின் துறைகள். பொதிந்தனர்- மனம்பற்றினர்.

*ஓதுக ஓதுக உன்னி ஓதுக* - கற்க; கற்க; மனம் ஒன்றிக் கற்க.

ஓதுதலாவது பலுக்கிப் படித்தல்; ஈண்டுக் கற்க என்னும் அளவில் நின்றது. உன்னி-மனம் ஒன்றி.

*ஏதம் இல் செல்வம் சேதம் இல் காக்க ஏமச்செப்புழை இடுதல் போல* - குற்றமற்ற செல்வத்தை அழியாமற் காக்கும் பொருட்டு அதனைக் காப்புப் பெட்டகத்தில் இட்டுவைத்தல் போல

சலத்தால் பொருள் செய்தே மார்த்தல் பசுமட்

கலத்துணீர் பெய்திரீஇ யற்று

என்றலின் ஈண்டுச் சேதமின்றிக் காக்கப்பட வேண்டிய செல்வம் ஏதமில் செல்வம் எனப்பட்டது.

ஏதம்- குற்றம்; சேதம்- அழிவு. ஏமம்-காப்பு. செப்பு- பெட்டகம்.

*எய்ப்பின் வைப்பாய் இருத்தினர் பொருளே* - இளைப்புக் காலத்து உதவும் பொருளாகக் கல்விச் செல்வத்தை மனத்தில் இருத்திக் கொண்டனர்.

வைப்பு- காத்துவைக்கும் பொருள்.

*உய்யல் வேண்டுவோர் ஊன்றிக் கொய்யல் முறையே* - துன்பத்தினின்றுந் தப்பிக்க விரும்புவோர் மனம் தோய்ந்து கல்வியை முறையாகக் கொய்து கொள்க!

முறையே கொய்தலாவது தக்காரை யடுத்தும் தகுநூல் தேர்ந்தும் படிமுறையாய்ப் பயிலுதல். பூக்கொய்து நிறைத்தல் போல் கல்வியைக் கொள்க என்பார் கொய்தல் என்றார். கொய்தலாவது மென்மையாகப் பறித்தல்.

*உய்யல்* - துன்பத்தினின்றும் தப்புதல்- ஈடேறுதல்.

*கொடுக்கலும் ஆங்கே* - அவ்வாறே கல்வியைப் பிறர்க்குங் கற்பிக்க!

கல்வியைப் பயிலுதற்கு அவாவுதல் போல் பிறர்க்குக் கற்பிக்கவும் அவாவுக என்பதாம்.

இப்பாடல் **பொதுவியல்** என்னும் புறத்திணையும் **பொருண்மொழிக் காஞ்சி** என்னுந் துறையுமாம்.



## 90 உளக்கனல்

*மருளாய் வாழி நெஞ்சே! அருளற*
*இருள்தோய் வழக்கின் இனநலந் தீய்க்கும்*
*நெறியலர் செல்வக் குறியெதிர் நினைந்து*
*பொறியின் மாக்கள் புன்செயல் விஞ்சும்*
*பெற்றிய ராகிப் பெரியோர்க் குழத்தல்*
*முற்றிய கொள்கை முழுநலந் தேக்கும்*
*நீரவர் உளக்கனல் நில்லா(து)*
*ஊரவர் திரளும் நாளுமொன் றுண்டே!*

(ஞா.தேவநேயனார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்றும் விலக்கப்பெற்ற காலை நெஞ்சு தேர்வுற எழுதி விடுத்த பாவோலை.)

**பொழிப்பு:**

பெரும, வாழி! நெஞ்சம் மயங்கற்க. அருளுணர்வின்றி ஆணவம் பொருந்திய வழக்கத்தினை யொட்டி, இனநலத்தை அழிப்பவரான கீழ்மக்கள் செல்வமாகிய கைமாறு கருதி, மனப்பொறியில்லாத விலங்குகளின் இழிசெயலினும் மேம்பட்ட தீவினை புரியுந் தன்மையுடைவராகி, அரிய பணி செய்யும் பெரியோர்க்குத் துன்பம் விளைத்தலால், திண்ணிய கொள்கைத் திறத்தினால் மக்களுக்கு முழுமையும் நலஞ்சேர்க்கும் தன்மையினார் உள்ளத்தின் கண் கனலுகின்ற தீ அடங்காது; ஆதலின் நாட்டு மக்களெல்லாம் திரண்டெழும் நாளும் ஒன்று உண்டு!

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

பாவலரேறு, தம் ஆசிரியப் பெருந்தகையான மொழி ஞாயிறு பாவாணர் அவர்கள் அருந்தமிழ்ப் பெரும்பணியாற்றச் சென்ற அண்ணாமலை பல்கலைக் கழகத்தினின்றும் பதவி விலக்கம் செய்யப் பெற்ற காலை, அதுபற்றி அவர் மனங் கலங்காதிருக்க வென்று தெளிவுறுத்தி எழுதி விடுத்தது இப்பாட்டு.

அருளுணர்வின்றியும் ஆணவத்தாலும், கைம்மாறு கருதி இனநலம் அழிக்கும் கடையர், விலங்கின் செயலையும் விஞ்சுமாறு பெரியோர்ப் பிழைத்துத் துன்பமிழைத்தலால், கொள்கை உரவோர் நெஞ்சத்துப் பற்றிய

நெருப்பு வாளாவிராது; நாட்டவர் திரண்டெழுந்து போராடும் நாளும் ஒன்று உண்டு என்று இப் பாட்டின் மூலம் தெளிவுறுத்துகிறார் பாவலரேறு.

*வாழி நெஞ்சே மருளாய்* - பெரும வாழி! மனம் மயங்கற்க!

பெரும என்பது தோன்றா எழுவாய். மருள்- மயக்கம். நெஞ்சு மருளாயாய் வாழி எனினுமாம்.

*அருள்அற* – அருளுணர்வு இன்றி.

யாருக்குந் தீங்கு செய்யாமையாகிய அருளுணர்வு இன்றி என்றவாறு:

*இருள் தோய் வழக்கின்* – ஆணவம் பொருந்திய வழக்கத்தினை யொட்டி

தாம் யாது நினைப்பினுஞ் செய்யலாம் என்னுஞ் செருக்கான போக்கையொட்டி. இருள்-ஆணவம்.

*இனநலந் தீய்க்கும்* – ஒருவரது தனிநலத்தை மாய்ப்பது மட்டுமல்லாது அவரால் கிட்டும் பொதுநலத்தையும் அழிப்பவரான

தந்நலத்தின் பொருட்டு இனநலத்தையும் அழிப்பவர் என்றார்.

*நெறியலர்* – நெறிப்பட ஒழுகாது தாம் மேவன செய்யும் கீழ்மக்கள்.

*செல்வக் குறியெதிர் நினைந்து* – செல்வமாகிய கைம்மாறு கருதி

குறியெதிர்வு - கைம்மாறு

*பொறியில் மாக்கள்* -- மனப்பொறி யில்லாத விலங்குகள். ஐம்பொறிகள் பெற்றிருப்பினும் 'ஆறறிவதுவே அவற்றொடு மனனே' என்றாங்குச் சிறப்புடையதான மனப்பொறியில்லாமையால் பொறியில் மாக்கள் என்றார்.

மாக்கள்- மக்கள் வடிவிலிருக்கும் விலங்குகள். அல்லது ஐயறிவே பெற்ற மக்கட் பிறப்பினர்.

*புன்செயல் விஞ்சும் பெற்றியர்ஆகி* – இழிசெயலினும் மேம்பட்ட தீவினை புரியுந் தன்மையுடையவராகி.

பெற்றி-தன்மை.

*பெரியோர்க்கு உழத்தல்* – பிறரால் செய்தற்கு அரிய நற்பணியைச் செய்பவரான பெரியோர்க்குத் துன்பம் விளைவித்தல்.

பெரியார்-பிறரால் செய்தற்கு அரியன செய்வார்.

'செயற்கு அரிய செய்வார் பெரியர்' என்றார் பெருநாவலர். மொழிநூன் மூதறிஞர் பாவாணர் மேற்கொண்ட அரும்பணியாவது 'செந்தமிழ்ச் சொற்பியல் அகரமுதலி' உருவாக்கும் பெரும் பணியாம்.

*உழத்தல்-துன்புறுத்தல்; துன்புறுத்தலின் என்றவாறு.*

***முற்றிய கொள்கை முழுநலந் தேக்கும் நீரவர்*** *— திண்ணிய கொள்கைத் திறத்தால் மக்களுக்கு முழுமையும் நலஞ்சேர்க்கும் இயல்புடையார்.*

*முற்றிய -முதிர்ந்த; செறிந்த.*

*முழுநலந் தேக்குதலாவது தந்நலம் கருதாதும் சிறிதேனும் தமக்கெனக் கொள்ளாதும் தம் பணியின் பயன் பொதுநலத்திற்கே சேர்த்தல். நீரவர்-தன்மையாளர்.*

***உளக்கனல் நில்லாது*** *— உள்ளத்தே துயரத்தால் மூண்ட நெருப்பு அத்துயரஞ் செய்தாரை அழிக்காமல் அணையாது.*

***ஊரவர்*** *— ஊர் தோறுமுள்ள நாட்டு மக்கள்.*

***திரளும்*** *— ஒன்று கூடி எழும்; எழுந்து போராடும்.*

***நாளும் ஒன்று உண்டு*** *— ஒரு நாள் உள்ளது.*

*நாளும் என்றது காலத்தில் அண்மைபற்றி. விரைவில் வருக என்பதாம். இப்பாடலிற் கண்டாங்குத் தென்மொழி அன்பர்கள் ஊர் ஊர் எங்கணும் பாவாணர்க்காகக் குரல் கொடுத்ததும், உலகத் தமிழ்க் கழகம் நிறுவப் பெற்றுப் பன்னூறு கிளைகள் பரப்பிப் பாவாணர்க்காக முழங்கியதும் ஊர்வலங்கள், கருத்தரங்குகள், மாநாடுகளெல்லாம் நடைபெற்றதும் உண்மை நிகழ்ச்சிகளாய் நிறைவேறின.*

*இப்பாடல் **பொதுவியல்** என்னும் புறத்திணையும் **புதுவகைத்** துறையுமாம்.*



## 91 உழையாதுண்மர்

*செடிகொடி மரனுஞ் சிப்பியுஞ் சங்குந்*
*துடியல் எறும்புந் தும்பியும் புள்ளும்*
*விலங்கு மென்றிவை வினைசெய் துயிர்த்தலோடு*
*இலங்கு மாந்தர்க் கியற்றலு மாக*
*இருகை யிருகால் இருகண் ணிருசெவி*
*ஒருவாய் ஒருவயி றுற்றவ ரெல்லாந்*
*தாந்தாந் தேடலுந் தாந்தமைப் புரத்தலும்*
*ஏந்துநீ ருலகத் தியற்கை யாதலின்*
*உழையா துண்மர் உருக்குறைந் திரந்து*
*பிழைப்போர் தம்மின் பிழைப்பா ரவரே!*

**பொழிப்பு:**

செடியே கொடியே மரமே என்னும் நிலைத்திணைகளும்; சிப்பியும் சங்கும் என நீந்துவனவாகவும், துடியலும் எறும்பும் என ஊர்வனவாகவும், தும்பியும் புள்ளும் எனப் பறப்பனவாகவும் விலங்கு என நடப்பனவாகவும் உள்ள இயங்கு திணைகளும் ஆகிய இருவகை உயிரிகளும் செயற்பட்டுத் தரம் உயிர்வாழ்தலொடும் விளங்குகின்ற மக்களுக்கு உதவுகின்றனவாகவும் இருப்ப, இருகண்ணும் இருசெவியும் ஒருவாயும் ஒரு வயிறும் கொண்டுள்ள மக்களெல்லாம் தாமே தமக்குத் தேவையானவற்றை முயன்று தேடலும் தம்மைக் காத்துக் கொள்ளுதலும் நீரால் ஏந்தப் பெற்றிருக்கும் இவ்வுலகத்து இயற்கையாய் இருத்தலின் உழைக்காமேலே உண்டு வாழ்பவர்கள் உடல் கூனிக் குறுகி இரந்து வாழ்வோரைவிட இழிவான பிழைப்பில் நிறைவுறு வோராவர்.

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

நிலைத்திணையும், இயங்குதிணையுள் நீந்துவனவும், ஊர்வனவும் பறப்பனவும், நடப்பனவும் ஆகிய பல்வகை அஃறிணை உயிரிகளும் தாந்தாம் வினைப்பட்டு வாழ்தலோடு, மாந்தப் பிறப்பினருக்கும் துணையாகி உதவுகின்றனவாக, மாந்தரும் முயற்சியாற் பொருள்தேடியும் தற்காத்துக் கொண்டும் வாழ்கின்றனர். இவ்வாறிருக்கும் உலக இயற்கைக்கு மாறாக மாந்தராய்ப் பிறந்தும் உழைக்காமலே உண்டு வாழ்பவர்கள், மானமின்றிக்

கூனிக் குறுகி இரந்து வாழ்வாரினும் இழிவான பிழைப்பினர் என அவரை இடித்துரைப்பதாக அமைந்தது இப்பாட்டு.

*செடிகொடி மரனும்* - செடியும் கொடியும் மரமும்.

செடி குத்துச் செடியும் பெருஞ்செடியும் எனவும், கொடி நீரில் படர்வதும் நிலத்தில் படர்வதும் கொம்பில் இவர்வதும் எனவும், மரம் குறுமரமும் பெருமரமும் என்பதோடு புறக்காழனவும் அகக்காழனவும் எனவும் பலவகைப் படுத்தலறிக!

*சிப்பியும் சங்கும்* - சிப்பி, சங்கு முதலான நீர்வாழ்வனவாகிய இயங்குதிணை உயிரிகள்.

*துடியல் எறும்பும்* - துடியலும் எறும்பும்.

துடியலும் எறும்பும் முதலாயின ஊர்வனவாகிய இயங்கு திணை உயிரிகள்.

துடியலாவது ஒருவகை எறும்பு.

உடுக்குப் போலும் உடலமைப்புடைய ஒருவகை ஊரி என்ப.

*தும்பியும் புள்ளும்* - வண்டும் பறவையும்.

வண்டும் பறவையும் முதலாயின பறப்பனவாகிய இயங்கு திணை உயிரிகள்.

*விலங்கு* - விலங்குகள்.

விலங்குகள் நடப்பன வகையைச் சேர்ந்த இயங்குதிணை உயிரிகள்.

*என்று இவை* - என்று சொல்லப்படும் உயிரிகளும்.

*வினை செய்து உயிர்த்தலோடு* - தாந்தாம் செயற்பட்டு உயிர் வாழ்வதோடு.

நிலைத்திணை உயிரிகளின் செயற்பாடுகளாவன காற்றை உறிஞ்சி வெளியிடுதலும், நீரை யுறிஞ்சி ஆவியாக விடுதலும் பூத்தலும் காய்த்தலும் பிறவுமாம்.

இயங்குதிணை உயிரிகளின் செயற்பாடு வெளிப்படை.

*இலங்கு மாந்தர்க்கு இயற்றலும் ஆக* - விளங்குகின்ற மக்களுக்கு உதவுவனவும் ஆக.

விளங்குதலாவது மேற்கூறிய ஓரறிவு உயிரிகள் முதல் ஐயறிவு உயிரிகள் ஈறான அனைத்து உயிரிகளினும் மேம்பட்ட ஆறாவதான மனப்புலனை யுடைமை.

அஃறிணை உயிரிகளெல்லாம் மாந்தர்க்கு உதவியாகச் செயற்படுதலும் பயன்தருதலும் வெளிப்படை.

*இருகை ..... இருகால் ...... உற்றவரெல்லாம்* - இரு கையும் இரு காலும் இரு கண்ணும் இரு செவியும் ஒரு வாயும் ஒரு வயிறும் உற்றவரான மாந்தரெல்லாம்.

அஃறிணை உயிரிகள் பற்பலவும் கையற்றனவாகவும், ஒருகை உடையனவாகவும், கையே காலாகக் கொள்வனவாகவும், நாற்காலும், அறுகாலும், எண்காலும் பல காலும் உடையனவாகவும் காலில்லாதன வாகவும்

'வேறு வேறு உருவும் வேறு வேறு இயற்கையும்

நூறு நூறு ஆயிரம் இயல்பினவாக - இருத்தலின்' மாந்தரை இவ்வாறு சுட்டினார் எனக் கொள்க!

*தாம் தாம் தேடலும் தாம் தமை..... இயற்கை யாதலின்* - தத்தமக்குத் தேவையானவற்றைத் தாந்தாமே தேடிக் கொள்ளுதலும் தாமே தம்மைக் காத்துக் கொள்ளுதலும் நீரால் ஏந்தப் பெற்ற இவ்வுலகத்தின் இயற்கையாக இருத்தலினால்.

உலகம் நீரால் சூழப்பெற்றிருப்பது அது நீரில் மிதப்பதுபோல் காட்சியளித்தலின் ஏந்து நீர் உலகம் என்றார். நீரை ஏந்தியுள்ள உலகம் எனினுமாம்.

***உழையாது உண்மர்*** - உழைக்காமலே வாளா இருந்து உண்போர்.

***உருக்குறைந்து இரந்து பிழைப்போர் தம்மின்*** - தம் உருவம் கூனிக்குறுகி இரந்து உயிர் வாழ்வோரினும்.

உருக்குறைதலாவது மானமின்றி மற்றையோரிடத்து உடல்கூனிக் குறுகி நிற்றல். பிழைப்போர் - உயிர் வாழ்வோர்.

***பிழைப்பு ஆர்வார்*** - இழிவான பிழைப்பில் நிறைவோர் ஆவர்.

ஆர்தல்- நிறைதல்

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருள்மொழிக் காஞ்சி*** எனும் துறையுமாம்.



# 92 இனிய நன்னாளே!

நெடுந்தொலை விலையே, கடுவணி மைத்தே;
உடுநீ ராடையில் வுலகம் ஒன்றெனப்
பனிக்கல் மிதவைப் பாடகழ்ந் துண்ணும்
நனிக்குற ளொருவனும், நடுமணற் பரவை
நீந்தக வடியுயர் நெடுங்கழுத் தொட்டை
ஏந்துபு புறமுடைத் தின்புன லருந்தும்
பாலை வாணனும், பனிமலை வதியனும்,
நீலலைக் குமரி நெடுங்கரை முகிழ்த்த
முதுகுடித் தமிழனும், மொய்நீர் வேலிப்
புதுத்தீ வுயிர்க்கும் புன்குர லொருவனும்,
அறிவறி யாவிருள் அடர்மரக் கான்மிசை
குறிகட வாவெய் கூர்வே லுயிருண
வீழ்மட மாந்தர் வெந்நீ குறிஞ்சிச்
சூழ்ந்துட லுண்ணும் பாழினத் தொருவனும்
தம்பிறப் பிறந்தே தமக்குள்
எம்பிறப் பென்னு மினியநன் னாளே!

**பொழிப்பு:**

'உடுத்துள்ள நீராகிய ஆடை தழுவிய இவ்வுலகத்துவாழ் மக்களெல்லாம் ஒன்று' எனுங் கொள்கையராகி, உட்புறத்துக் காண்டலாகிய உணவுச் செல்வங்களுக்காக மிதக்கின்ற பனிக்கட்டியை உடைத்து, உண்டுவாழும் பண்பினராகிய, மிகவும் குட்டையான மாந்தர் இனத்தானும்; மணற்கடலாகிய பாலைப் பரப்பின் நடுப்புறத்தே, நீந்திக் கடக்கும் அகன்ற அடிகளையும், உயர்ந்த நெடுமையான கழுத்தையும் உடையதான ஒட்டகத்தின், எடுத்து நின்ற புறமுதுகின் குமிழை உடைத்து, அதனுள் காக்கப்பட்ட இனிமையான நீரை அருந்தும் பண்பினராகிய பாலை நாட்டார் இனத்தானும்; பனிதோய்ந்து கிடக்கும் மலைகளில் வாழும் இனத்தானும்; நீல அலை தவழும் குமரி முனையின் நெடுமையான கடற்கரையில் வதியும் தொல்குடித் தமிழனும்; சுற்றிலுஞ் சூழ்ந்த நீரே வேலியாகி நிற்க, நடுவில் எழுந்த புதுமையான தீவின்கண் தோன்றிய அடங்கிய குரலையுடைய எளிய மாந்தர் இனத்தானும்; அறிவாலும் அறியப்படாமல் இருள்மண்டி அடர்ந்திருக்கின்ற மரங்கள் நிறைந்த

காட்டகத்தே, குறி பிழையாமல் எய்யும் கூரிய வேலானது உயிரை உண்ண, அடியற்று வீழும், அறியாமல் அங்கு வந்த மாந்தர் தம் சூடான குருதியை உறிஞ்சி, அவரைச் சூழ்ந்து அவர் உடலை உண்ணும் கொடும் பண்பு சான்ற இனத்தானும், தம்தம் பிறப்பும் நாடும் பழக்க வழக்கங்களும் கடந்து தமக்குள்ளே ஒருவரை யொருவர் 'எம் பிறப்பு' என்று கூறிக் கொள்ளும் அந்த இனிய நல்ல நாள் நெடுந்தொலைவில் இல்லையாக, மிகவும் குறுகிய கால எல்லைக்குள் வருவதே!

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

உலகின் பல்வேறு பகுதிகளிலும் வாழுகின்ற, நாட்டாலும் இனத்தாலும் நாகரிக நிலைகளாலும் வேறுபட்ட பற்பல மக்கள் பிரிவினரும் தம் வேற்றுமைகளை யெல்லாம் கடந்து உடன்பிறப்பு உணர்வோடு உறவாடும் நாள் மிக நீண்ட தொலைவில் இல்லை; மிக அண்மையிலேயே உள்ளது என்று கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.

இதனால் ஆசிரியரின் பரந்த மனப்பான்மையும் எதிர்கால நோக்கும் பிறவும் புலப்படக் காணலாம்.

***உடுநீர் ஆடை இவ்வுலகம்*** - உடுத்துள்ள நீராகிய ஆடை தழுவிய இவ்வுலகம்.

நிலம் ஆடையணிந் திருப்பதாகக் கூறுவது அதனைப் பெண்ணாக கற்பனை செய்யும் மரபுபற்றி யென்க!

***ஒன்று என*** - ஒன்று என்னுங் கொள்கையுடையவராகி

***பனிக்கல் மிதவைப் பாடு அகழ்ந்து உண்ணும்*** - உட்புறத்துக் காண்டலாகிய உணவுச் செல்வங்களுக்காக மிதக்கின்ற பனிக்கட்டியை உடைத்து, உண்டு வாழும் பண்பினராகிய.

பனிக்கட்டியை உடைத்து அதனுள்ளிருக்கும் உயிரிகளை உணவாகக் கொள்வோர் என்றவாறு; மிதவைப்பாடு மிதவைப்பட்டது; மிதப்பது.

***நனிக்குறள் ஒருவனும்*** - குட்டையான மாந்தர் இனத்தானும்

இவ்வாறு குறிப்பிடப் பெறுவோர் எக்கிமோக்கள் என்க.

குறள்- குறுகிய வடிவத்தையுடைய

***மணல்பரவை நடுநீந்து*** - மணற் கடலாகிய பாலைப் பரப்பின் நடுப்புறத்தே அதனை நீந்திக் கடக்கின்ற

பாலையைப் பரவை என்றமையால் அதைக் கடத்தற்கு நடத்தலை நீந்தல் என்றார்.

*அகல் அடி உயர் நெடும் கழுத்து ஒட்டை* - அகன்ற அடிகளையும், உயர்ந்த நெடுமையான கழுத்தையும் உடையதான ஒட்டகத்தின்

பாலையைக் கடத்தற்குரிய ஒட்டகத்தின் உடலமைப்பைக் கூறுவாராய் அதன் காலமைப்பை நோக்கி அகல் அடி என்றார். புல் பூண்டுகளற்ற விடத்து ஓங்கி நிற்கும் நிலைத்திணைகளில் உணவு கொள்ளுதற்கு ஏற்பவும் பாறைவிடர்களில் தேங்கி நிற்கும் நீரைப் பருகுதற்கு ஏற்பவும் அது நெடுங்கழுத்து உடையதாயிருத்தலின் அதனையுங் கூறினார்.

*ஏந்துபு புறம் உடைத்து இன்புனல் அருந்தும்* - எடுத்து நின்ற புறமுதுகின் குமிழை உடைத்து, அதனுள் காக்கப்பட்ட இனிமையான நீரை அருந்தும் பண்பினராகிய

நீரற்ற நெடுவெளியில் செல்லுங்கால் பயன்கொள்ளும் பொருட்டு ஒட்டகம் தன் முதுகிலுள்ள திமிலின்கண் நீரைத் தேக்கி வைத்திருத்தலின், தங்கொணா வேட்கையுள்ளவிடத்து ஒட்டகத்தின் மேல் ஊர்ந்து செல்வோர் அத் திமிலை உடைத்து அதனுள்ளிருக்கும் நீரைப் பருகும் இயல்பினரான.

திமில் குமிழ்போல் இருத்தலின் குமிழ் எனப்பட்டது. திமிலின்கண் இருக்கும் நீர் அதனைப் பருகுவார் உயிரைக் காத்தலின் அது இன்புனல் எனப்பட்டது.

*பாலை வாணனும்* - பாலை நாட்டார் இனத்தானும்

வாணன் - வாழ்நன்.

*பனிமலைவதியனும்* - பனி தோய்ந்து கிடக்கும் மலைகளில் வாழும் இனத்தானும்.

மக்கள் பதிந்து வாழுமிடம் பதி எனப்பட்டு, அப்பதி வதியெனத் திரிந்து, வாழ்தல் வதிதல் எனப்பட்டது. வாழ்வோன் வதியன் எனப்பட்டான். வதிதல் வசித்தல் என வேறு சென்று, வசிப்போன் வாசியாயினன்.

*நீலலைக் குமரி நெடுங்கரை முகிழ்த்த* - நீல அலை தவழும் குமரி முனையின் நெடுமையான கடற்கரையில் வதியும்

நீலஅலை என்றது கடலலை என்றற்கு.

*முதுகுடித் தமிழனும்* - தொல் குடித் தமிழனும்.

முதுகுடியாவது 'படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வருங்குடி' என்றாங்குத் தொன்மை மிக்க குடி

*மொய்நீர்வேலிப் புதுத் தீவு உயிர்க்கும்* - சுற்றிலுஞ் சூழ்ந்த நீரே வேலியாகி நிற்க, நடுவில் எழுந்த புதுமையான தீவின்கண் தோன்றிய

மொய்த்தல்-சூழ்தல் உயிர்த்தல்-பிறத்தல்

*புன்குரல் ஒருவனும்* - அடங்கிய குரலையுடைய எளிய மாந்தர் இனத்தானும்

*அறிவு அறியா இருள் அடர் மரக்கான்மிசை* - அறிவாலும் அறியப்படாமல் இருள்மண்டி அடர்ந்திருக்கின்ற மரங்கள் நிறைந்த காட்டகத்தே

*குறிகடவா எய்கூர்வேல் உயிர்உண* - குறி பிழையாமல் எய்யும் கூரிய வேலானது உயிரை உண்ண

*வீழ்மட மாந்தர் வெந்நீர் உறிஞ்சி* - அறியாமல் அங்குவந்த மாந்தர்தம் சூடான குருதியை உறிஞ்சி

ஏதமுள்ளமையை அறியாமல் வந்தமையின் மடமாந்தர் என்றார். கொலை செய்யப்பட்டவர் உடலை உடனே உண்டனர் என்பது தோன்ற அவ்வுடற் செந்நீர் வெந்நீர் எனப்பட்டது.

*சூழ்ந்து உடல் உண்ணும் பாழ் இனத்து ஒருவனும்* -

அவரைச் சூழ்ந்து அவர் உடலை உண்ணும் கொடும் பண்பு சான்ற இனத்தானும்.

*தம் பிறப்பு இறந்தே* - தம்தம் பிறப்பும் நாடும் பழக்க வழக்கங்களும் கடந்து

*பிறப்பாவது இனம்* - தமக்குள் எம்பிறப்பு என்னும்: தமக்குள்ளே ஒருவரையொருவர் 'எம்பிறப்பு' என்று கூறிக்கொள்ளும்

*இனிய நல்நாளே* - இனிய நல்ல நாள்

யாவரும் மகிழ்ந்து உறவாடுமாறு போரும் அழிவுற்ற நாளாதலின் இனிய நன்னாள் என்றார்.

*நெடும்தொலைவு இலையே கடுஅணி மைத்தே* - நெடுந்தொலைவில் இல்லையாக, குறுகிய கால எல்லைக்குள் வருவதே.

அணிமையை வலியுறுத்தற்கு எதிர்மறை வாய்பாட்டான் வரும் தொலைவுக்கு நெடுமை குறித்த அடையாற் பயனில்லை யாயினும் அது அணிநயமுற நின்றது.

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருண்மொழிக் காஞ்சி*** என்னுந் துறையுமாம்.

## 93 இறப்பினுஞ் சிறப்பே!

*இற்றைப் புரிந்திவர் ஏற்றற் குளரென*
*அற்றைப் பயந்திலள் எந்தாய் அழிவோர்க்*
*கொன்றுள் ளுவந்துயிர் புரந்திட ஒருவர்*
*என்றும் அழிந்திலர்; இல்லவ ரெனினும்*
*உலர்நா வூற ஒருகை நீரே!*
*சிலர்பலர் வெகுளினுஞ் சிறப்பில போற்றேம்*
*எவரிழி செய்யினு மேற்றன விகழேம்*
*பொன்றுவ பொன்றுவ; பொன்றில பொன்றா!*
*குன்றலும் வேறலுங் கொள்ளுநர் தகவே!*
*ஒன்றுவ தொன்றிலா தொழியினும்*
*என்றும் உண்டே இறப்பினுஞ் சிறப்பே!*

**பொழிப்பு:**

இன்று யாம் உதவி புரிய இவர் ஏற்றுக் கொள்ளுதற்கு உரியவர் என்று கருதி அன்று எம்மை ஈன்றாளல்லள் எம் தாய். இறக்கும் நிலையில் இருப்போர்க்கு ஒன்றினை மனமுவந்து அளித்து அவரைக் காப்பாற்றுதலாலே எக்காலத்தும் ஒருவர் அழிந்தாரல்லர்; தாம் வறுமையுற்றவரே யாயினும், பிறரது உலர்ந்த நா ஊறப்பெறுதற்கு அவரளிக்கும் ஒரு கை நீரே போதுமானது. ஆங்காங்குச் சிலரும் பலரும் வெகுண்டாலும் சிறப்பில்லாதனவற்றை யாம் போற்றுவேமல்லேம்; எத்தகையார் இழிவுபடுத்தினும் தகுதியானவற்றை யாம் இகழ மாட்டேம்; அழியத்தக்கன அழிவனவாம்; அழிவற்றன அழிய மாட்டா; தோல்வியுறுவதும் வெற்றி பெறுவதும் அவற்றை ஏற்போர்தம் தகுதியைப் பொறுத்தனவே. ஒருவர் அடையத் தக்கது அவர்பால் வந்து பொருந்தாவிடினும், அந்நிலையிலேயே அவர் இறந்தாலும் அவர்க்குரிய சிறப்பு எக்காலத்தும் உண்டு.

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

இக்காலத்து இவர் உதவி புரிதற்குரியார், இவர் பெறுதற்குரியார் என்று முன்னறிந்தோ விரும்பியோ யாரும் பிறப்பிக்கப்படவில்லை. துன்ப

நிலையில் உள்ளவர்கட்குச் சிறு உதவி செய்தலாலே அழிந்து போனவர் யாருமில்லை.

எவர் வெகுண்டாலும் யாம் சிறப்பில்லாதவற்றைப் போற்றுவே மல்லேம். எவர் இழிவுபடுத்தினும் சிறந்தவற்றை யாம் இகழேம்; தகாதன அழியும், தக்க அழியா. தோல்வியும் வெற்றியும் ஏற்போர் தகுதியைப் பொறுத்தனவே. பொருந்துவன பொருந்தாது ஒழியினும் யாம் இறப்பினும் என்றும் சிறப்பு உண்டு என்று எடுத்துரைப்பது இப்பாட்டு.

*இற்றைப் புரிந்து இவர் . . . எம்தாய் பயந்திலள்* – இன்று யாம் உதவி புரிய, இவர் ஏற்றுக் கொள்ளுதற்கு உரியவர் என்று கருதி அன்று எம்தாய் எம்மை ஈன்றாளல்லள்.

இன்ன காலத்து இன்னின்னார் ஈதற்கும் ஏற்றற்கும் உரியார் என்று யாரும் இவ்வுலகில் பெறப்படவில்லை என்றவாறு.

*இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்.*

என்றார் திருவள்ளுவரும்

புரிந்து- உதவிசெய்து; பயந்திலள் - ஈன்றாலல்லள்.

*அழிவோர்க்கு ஒன்று உள் உவந்து உயிர் புரந்திட* – இறக்கும் நிலையில் துன்புறுவோர்க்கு ஒரு பொருளை மனம் உவந்து அளித்து அவர்தம் உயிரைக் காப்பாற்றுதலாலே.

உவந்து - மகிழ்ந்து. ஈண்டு விருப்பத்தைக் குறித்தது.

*ஒருவர் என்றும் அழிந்திலர்* - ஒருவர் எக்காலத்தும் அழிந்தாரல்லார்.

எவரும் அழிவாருமல்லர் என்பது பெறப்படும்.

*இல்லவர் எனினும் உலர்நா ஊற ஒருகை நீரே* – தாம் வறுமையுற்றவரே யாயினும் பிறரது உலர்ந்த நா ஊறப்பெறுதற்கு அவர்க்கு அளிக்கப்பட வேண்டியது ஒரு கையளவு நீரே.

இல்லவர்- வறுமையுற்றார்; உலர்நா-வறண்ட நா

*சிலர் பலர் வெகுளினும் சிறப்பில போற்றேம்* – ஆங்காங்குச் சிலரும் பலரும் எம்மாட்டுச் சினந்தாலும் சிறப்பிலாதவற்றை யாம் போற்றுவேம் அல்லேம்.

சிலர்பலர் - ஓரிடத்துச் சிலரும் பிறிதோரிடத்துப் பலரும் எனக் கொள்க!

*எவர் இழி செயினும் ஏற்றன இகழேம்* – எவர் இழிவுபடுத்தினாலும் ஏற்புடையவற்றை யாம் இகழ்வேமல்லேம்.

***பொன்றுவ பொன்றுவ பொன்றில பொன்றா*** – அழியத்தக்கன அழியும்; அழியத் தகாதன அழியா!

உள்ளது சிறத்தல் என்னும் கூர்தலறக் கோட்பாட்டை இவ்வாறு விளக்கினார்.

***குன்றலும் வேறலும் கொள்ளுநர் தகவே*** – தோல்வியுறுவதும் வெற்றி பெறுவதும் அவற்றைக் கொள்வோர் தகுதியினாலேயே.

தோல்வியுறுவார் மனங்குன்றுதல் இயல்பாதலின் தோல்வியைக் குன்றல் என்றார். இது வெற்றியைக் குறிக்கும் கெலித்தல் என்பதன் மறுதலையில் வைத்து உணரப்படும்.

தகவே என்றமையான், தகவின்மையின் தோல்வியும் தகவுண்மையின் வெற்றியும் என்க!

வெற்றி தோல்வி என்றும் வழக்கிற்கு மாறாகத் தோல்வியை முற்கூறியது என்னை யெனின், மேல் பொன்றுவ, பொன்றில என வைத்த நிரல் நோக்கி யென்க!

வெல்தல் வேறல் எனப் புணர்ந்து நின்றது. வேறல் - வெற்றி.

***ஒன்றுவது ஒன்றாது ஒழியினும்*** – ஒருவர்க்கு வந்துறத் தக்கது வந்துறாது தவிரினும்

ஒன்றுவது - பொருந்துவது; வந்துறத்தக்கது. ஒன்றாது -வந்துறாது. ஒழியினும் - தவிரினும்

***இறப்பினும் என்றும் சிறப்பு உண்டே*** – அந்நிலையிலேயே அவர் இறக்க நேரினும் எக்காலத்தும் அவர்க்குரிய சிறப்பு உண்டு.

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருண்மொழிக் காஞ்சி*** என்னும் துறையுமாம்.



# 94 பொலங்கிளர் தாமரை

*புலம்புகோ யானே பொன்றுகோ யானே*
*நெருநல் வெண்முகை இன்றவிழ்ம் ஊங்குப்*
*பெருங்கட் படுவந் தூம்புநிறை உண்மெனக்*
*கருதிப் பொறிஞிமிறு கயந்தலைப் படுமுன்*
*நீர்வேட்டு நண்ணிய வயக்களிறு வாங்கிக்*
*கூர்ங்கோட் டேந்தி வழியிடை யூழ்க்கும்*
*பொலங்கிளர் தாமரைப் புதுமலர் புரைய*
*நலங்கெடப் புரிந்தவன் தோட்குக்*
*கலங்குயிர் சோரக் கலுழுமெந் நிலைக்கே!*

**பொழிப்பு:**

யான் புலம்பி அழுவேனோ, அன்றியான் இறந்தே ஒழிவேனோ! நேற்றைய வெண்ணிறப் போது இன்று மலரும், அதனிடத்தே மிகுந்த தேன் பொருந்தியிருக்கும், துளைக்கையால் உறிஞ்சி நிரம்ப உண்ணுதும் எனக் கருதிப் புள்ளிகளையுடைய வண்டு நீர்மடுவைச் சென்றடைதற்கு முன்னரே, நீர் பருக விரும்பி அவ்விடத்தை யடைந்த வலிமைசான்ற ஆண்யானை பறித்துத் தன் கூரிய மருப்பின்கண் ஏந்திச் சென்று வழியிடையே செவ்வியழிக்கப்பட்ட எழில் விளங்கு தாமரையாகிய நாண்மலர் போல என் நலங்கெடுத்தவனது தோளை மருவுதற்கு விருப்பமின்றி அஞ்சி உயிர் வாட்டமுற வருந்துகின்ற எம் நிலை குறித்து.

**விரிப்பு:**

இப்பாடல் புறப் பொருள் சார்ந்தது.

கன்னி யொருத்தியின் காதலன் அவளைக் கூடி மகிழ எண்ணி வந்தானாக. அவள் காத்திருந்த இடத்திற்கு வேறு வேலையாக வந்த பிறனொருவன் அவளைக் கண்டு வலிந்து பற்றிச் சென்று அவள் நலனுண்டு கற்பைச் சிதைத்தானாக, அதனை யறிந்த ஊரார் அவளை அவனுக்கே மணம்பொருத்த முற்பட்ட காலை அவள் வருந்தி யழுது கூறியதாக அமைந்தது இப்பாட்டு.

நாண்மலரில் தேனுண்ண நயந்தவண்டு நீர்மடுவை நண்ணுமுன்னரே நீர்வேட்டு அங்குவந்த வயக்களிறு ஒன்று அம் மலரைப் பற்றியிழுத்துச்

சென்று வழியிடை நலஞ்சிதைத்தது போல நலங்கெடுத்தவன் என்று அப்பெண் வாயிலாகக் கூறப்பெறும் உவமையின் மூலம் மேற்கூறியாங்கு அவள் நலஞ்சிதைக்கப்பட்ட செய்தி புலப்படுத்தப்பட்டுள்ளது.

***புலம்புகோ யானே பொன்றுகோ யானே*** – யான் தனித்திருந்து அழுவேனோ அன்றியான் இறந்தொழிவேனோ.

புலம்புதல்- தனித்திருத்தல்; தனித்திருந்து அழுதல் 'புலம்பே தனிமை. பொன்றுதல்-இறத்தல்.

***நெருநல் வெண்முகை இன்று அவிழும்*** – நேற்றைய வெண்ணிறப் போது இன்று மலரும்.

நெருநல்-நேற்று. முகை-போது. அவிழ்ம்- அவிழும். ஊங்குப் பெரும் கள் படூஉம் - அதன் பால் மிகுந்த தேன் பொருந்தியிருக்கும்.

கள்-தேன். படூஉம்-படும்; பொருந்தியிருக்கும். வண்டினது எதிர்பார்ப்பின் மிகுதியைக் காட்டி நின்றது.

***தூம்புநிறை உண்ம் எனக்கருதி*** – தும்பிக்கையால் உறிஞ்சி நிறைய உண்ணுதும் எனக் கருதி.

தூம்பு- துளைக்கை; வண்டின் தும்பிக்கை.

***பொறி ஞிமிறு கயந்தலைப் படுமுன்*** – புள்ளிகளையுடைய வண்டு நீர்மடுவை நண்ணும் முன்னரே.

பொறி-புள்ளி. ஞிமிறு-வண்டு. கயம்-நீர்நிலை. தலைப்படுதல்- வந்து சேருதல்.

***நீர்வேட்டு நண்ணிய வயக்களிறு*** – நீர் உண்ணுதலை விரும்பி அங்குவந்த வலிமை சான்ற ஆண்யானை.

வேட்டு- விரும்பி. நண்ணிய -வந்து சேர்ந்த. - வயம்-வலிமை. களிறு - ஆண்யானை.

***வாங்கிக் கூர்ங்கோட்டு ஏந்தி*** – வளைத்துப் பற்றித் தன்கூரிய கொம்பிலே ஏந்திச் சென்று. கோடு- கொம்பு.

***வழிஇடை ஊழ்க்கும்*** – வழியிடையே செவ்வியழிக்கப்பட்ட ஊழ்த்தல் செவ்வியழிக்கப்படுதல்.

***பொலங்கிளர் தாமரைப் புதுமலர் புரைய*** – எழில் விளங்கும் தாமரையாகிய நாண் மலர்போல.

பொலம்- அழகு. கிளர்தல்- விளங்குதல். நாள்மலர்- அன்றலர்ந்த மலர்; புதுமலர். புரைய-போல.

*நலம் கெடப்புரிந்தவன்* – என் நலத்தைக் கெடுத்தவனது

நலம் என்றது கற்பை. கெடப் புரிந்தவன் - கெடுத்தவன்.

*தோட்குக் கலங்கு* – தோளை மருதற்கு விருப்பமின்றி அச்சமுற்று. தோளை மருவுதலாவது - தழுவுதல்

*உயிர் சோரக்கலுழும் எம் நிலைக்கே* – உயிர்வாட்ட முறுமாறு வருந்துகின்ற எம் நிலைகுறித்து.

சோர்தல்-வாடுதல். கலுழ்தல்- வருந்துதல்.

புலம்புகோ யானே பொன்றுகோ யானே என்பதை ஈண்டுக் கூட்டிக் கொள்க!

தேன்வேட்டு வந்த சிறு கருந்தும்பி கயந்தலைப்படுமுன் நீர்வேட்டுவந்த பெருந்தும்பி பொலங்கிளர் தாமரையை நலஞ்சிதைத்த உவமை கைக்கிளைக்கண் வந்த உள்ளுறை உவமை யென்க!

நலஞ்சிதைத்தானுக்கு அவளை மணங்கூட்ட ஊரார் முற்பட்டமை எற்றாற் பெறுதும் எனின் அவன் தோட்குக் கலங்கி அவன் உயிர் சோரக் கலுழ்தலால் என்க.

இப்பாடல் *கைக்கிளை* யென்னும் புறத்திணையும் *புதுவகைத்* என்னும் துறையுமாம்.



# 95 பொற்புறு கொள்கை

நல்லியல் மாந்தர் நலங்கவர்ந் துண்ணும்
புல்லியர்ச் செகுக்கும் பூட்கை யோனே
உணர்வு நுண்ணிய உளமும் உளத்துப்
புணர்வு மன்னிய உரையும் உரைத்த
நிலைவினை பண்ணு மதுகையு நிவந்த
புலரா வாழ்வொடு பொருந்தினர் வயினே
தற்சூழ் பறிந்து தாமுயர் வுறுதலும்
பொற்புறு கொள்கைப் பூண்டுளி தளர்தலும்
யாண்டுங் காண்கில மாகலின்
வேண்டுங் கொன்மதி நுமக்கெழு விழைவே!

**பொழிப்பு:**

நல்ல இயல்பினையுடைய மாந்தரது செல்வத்தை வலிந்து கைப்பற்றி உண்டு வாழும் கயவர்களை அழிக்கும் கொள்கையாளனே! உணர்வு நுணுகியிருக்கும் மனமும், மனத்தொடு ஒன்றிப் பொருந்திய வாய்மொழியும், சொல்லிய சொல்லைச் செயற்படுத்தும் ஆற்றலும் உயர்ந்த வாடுதலில்லாத வாழ்வின் கண் பொருந்தியவரிடத்து, சூழ்நிலையை அறிந்து தாம் தம்மை உயர்த்திக் கொள்ளுதலும், உயர்ந்த கொள்கைப் பற்றினின்றும் சிறிதேனும் தளர்ச்சியுறுதலும் எங்கும் காணேம்; ஆதலின் நுங்கட்கு விருப்பம் தோன்றுதல் வேண்டுங்கொல்!

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

நன்மக்களின் செல்வத்தைச் சுரண்டியும் கொள்ளையடித்தும் உண்டு வாழும் கயவர்களை அழிப்பதையே கொள்கையாகக் கொண்டியங்கும் படையின் தலைவன் தன் படையைச் சார்ந்த வீரன் ஒருவனை நோக்கிக் கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.

***நல்இயல் மாந்தர் நலம் கவர்ந்து உண்ணும்*** - நல்ல இயல்புகளையுடைய மக்களது செல்வத்தை வலிந்து கைப்பற்றி உண்டுவாழும் கயவர்களை.

நல்லியல் மாந்தராவார் முறையான வழிகளில் முயற்சி மேற்கொண்டு

பொருளீட்டித் தம் வாழ்க்கை மற்றையோர்க்கும் பயன்படுமாறு வாழ்வித்து வாழும் ஒழுக்கந் தவறாத மக்கள்.

நலம்- செல்வம். செல்வம் எனப் பொதுப்படக் கூறினும் கைப்பொருளே யன்றி அறிவுச் செல்வமும், உழைப்புச் செல்வமும் பிறவுங் கொள்ளப்படும்.

கவர்ந்து என்றது நல்லியல் மாந்தர்க்கு நேரும் சூழ்நிலை நெருக்கடி களைப் பயன்படுத்திக் கொண்டு அவர் அறிந்தும் அறியாமலும் அவர்தம் செல்வத்தை வலிந்து கைப்பற்றிக் கொண்டு என்றவாறு.

உண்ணுதலாவது பசிதணிய உண்பதுமட்டுமன்று; இனிது நுகர்தலுமாம்.

***புல்லியர்ச் செகுக்கும்*** - கீழ்மக்களை அழிக்கின்ற.

புல்லியர்- கீழ்மைக் குணங்களுடையார். செகுத்தல்- அழித்தல்.

அழித்தலாவது மென்முயற்சியால் மட்டுமன்றி வன்முயற்சியாலும் கீழ்மக்கள் தம் கயமைக் குணங்களைக் கைவிட்டு மனந்திருந்தச் செய்தல்.

***பூட்கை யோனே*** - கொள்கையாளனே!

பூட்கை- உள்ளத்து உறுதியுறக் கொண்ட கொள்கை.

***உணர்வு நுண்ணிய உளமும்*** - உணர்வு நுணுகியிருக்கும் உள்ளமும்.

தம் முயற்சிகளைத் திறம்படச் செய்யவும் தற்காத்துக் கொள்ளவும் ஆழ்ந்த ஆராய்ச்சியில் ஈடுபடுதலின் இவ்வாறு கூறினார்.

***உளத்துப் புணர்வு மன்னிய உரையும்*** - உள்ளத்து உணர்வொடு பொருந்தி நிற்கும் சொல்லும்.

இவன் வாய்தந்தன கூறாது உள்ளத்து உணர்வொடு பொருந்தக் கூறுதல்.

***உரைத்தநிலை வினை பண்ணும் மதுகையும்*** - சொல்லிய நிலை செயற் படுத்தும் ஆற்றலும்.

வினை பண்ணுதலாவது செயற்படுத்தல். மதுகை-ஆற்றல்.

***நிவந்த புலரா வாழ்வொடு பொருந்தினர் வயினே*** - உயரியதும் வாடுதலில்லாததுமான வாழ்க்கையில் ஈடுபட்டவர்களிடத்தில்

புலரா வாழ்வாவது நாளுக்கு நாள் பிடிப்புத் தளராத வாழ்வு.

நிவந்த-உயர்ந்த. புலர்தல் -உலர்தல்; வாடுதல். வயின்-இடத்தில்.

*தற்சூழ்பு அறிந்து தாம் உயர்வு உறுதலும்* - சூழ்நிலையின் திறமும் வாய்ப்புகளும் அறிந்து அதைப் பயன்படுத்திக் கொண்டு தம்மளவில் தாம் மட்டும் முன்னேறுதலும்.

*பொற்புஉறு கொள்கைப் பூண்துளி தளர்தலும்* - சிறந்த கொள்கைப் பற்றினின்றும் சிறிதேனும் தளர்ச்சியுறுதலும்

பொற்பு- சிறப்பு. பூண்-பற்று. துளி- சிறிதளவு.

*யாண்டுங் காண்கிலம்* - எங்கும் யாம் காணேம்.

காண்கு இல்அம் - காண்கிலேம்; காணேம்.

*நுமக்கு விழைவு எழுதல் வேண்டும் கொல்* - நுங்கட் கெனத் தனியே விருப்பம் வேண்டுங்கொல்!

மேல் பூட்கையோனே என விளித்தவர் ஈண்டு நுங்கட்கு என்றது அவன் போல்வாரையும் உள்ளடக்கி என்க.

மதி-அசை.

இப்பாடல் *பாடாண்டிணை* யென்னும் புறத்திணையும் *நெடுமொழி வஞ்சி* என்னுந் துறையுமாம்.



# 96 ஆரிட ஆரும்

உவர்துளி குறையினும் உறைப்புறை மிகினும்
ஆநெய் நாறும் நறுங்குழை அடினும்
தவிர்தல் செய்தே, இகுளை! கவடின்றி
விழிதுவர்ப் பேறக் கடிமே! மொழியின்றி
அமைவேமைப் பின்னணைந்து தொங்குமுக மேந்தி
இமைபடரக் காந்தி இதழ்முத்திப் பிழைநோகும்
எம்ஐ தஞ்சுவை கூர எதிரிருந்தே
உய்வுணாப் பொதுள ஆரிட ஆரும
துய்நினை வயிலுங் கலைபயி லிடத்தே!

**பொழிப்பு:**

தோழி! உணவின்கட் சிறிதே உப்புக் குறையினும், அன்றிக் கார்ப்புச் சற்றே மிகுந்திருப்பினும்., ஆவின் நெய் நாறும்படி பொங்கல் சமைப்பினும் அவற்றை உண்ணாது விலக்கி, வஞ்சகமில்லாமல் சினந்து பேசுவார். மறுமொழி பேசாது அமைதியாய் இருக்கும் எம்மைப் பின்பு தழுவி; கவிழ்ந்த எம் முகத்தை நிமிர்த்தி, இமைகள் வருடுமாறு தன்முகத்தைப் பொருத்தி, வாயிதழில் முத்தி, தன் பிழைக்காக வருந்துகின்ற எம் தலைவர் தாம் விரும்பியுண்ணும் சுவை மிகுமாறு எதிரிலிருந்து உண்பிக்கும் உணவை நெருங்கியிருந்து ஆர் படைக்க உண்ணுவார்; முன்னர் நுகர்ந்த நினைவை மனங் கொண்டு கலைகள் பயிலும் இடத்தில்!

**விரிப்பு:**

இப்பாடல் அகப்பொருள் சார்ந்தது.

தலைமகன் மேற்படிப்பின் பொருட்டுத் தலைமகளைப் பிரிந்து வேற்றூர்க்குச் சென்றிருந்தானாக, அவன் கூடியிருந்த காலத்து, நிகழ்ந்த உணவுத் தொடர்பான நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்து, கலைபயிலிடத்தே அவர் சுவை மிகு உண்டியை அருகிருந்து ஆர் படைக்க உண்பார் என்று தலைமகள் தோழியிடத்தே வருந்திக் கூறுவதாக அமைந்தது இப் பாட்டு.

***உவர் துளி குறையினும்*** - உணர்வின்கண் உப்பு சிறிதே குறையுமாயினும்.

உவர்-உப்பு; துளி- சிறிதளவு.

*உறைப்பு உறை மிகினும்* - காரம் சிறிதே மிகுந்திருப்பினும். உறைப்பு - காரம் உறை; துளி - சிறிதளவு.

*ஆநெய் நாறும் நறும் குழை அடினும்* - ஆவின் நெய் வீச்சமுற நல்ல பொங்கல் சமைப்பினும்.

பொங்கல் நல்லதே எனினும் புத்துருக்கல்லாது சற்றே பழைய நெய்யைச் சேர்த்தமையால் எழுந்த நாற்றத்தால் அது ஏலாதாயிற்று.

நாறுதல் ஈண்டுத் தீய நாற்றத்தைக் குறித்தது. பொங்கல் நல்லதே என்பது நறுங்குழை என்பதனால் பெறப்படும்.

சோறுபோல் உதிரியாய் இல்லாது குழையச் செய்தலின் பொங்கல் குழை எனப்பட்டது. குழை என்பதனைக் கீரை எனக் கொண்டு அதற்கேற்ப உரைப்பினுமாம்.

*தவிர்தல் செய்தே* - உண்ணாது விலக்கி

*இகுளை* - தோழி!

*கவடு இன்றி விழி துவர்ப்பு ஏறக் கடிமே* - கள்ள மின்றிக் கண்சிவக்குமாறு எம்மைச் சினந்து பேசுவார்.

கவடு - வஞ்சகம்; வெறுப்பை மனத்தில் வைத்துக் கொள்ளாமை ஈண்டுக் குறிக்கப்பெற்றது.

*துவர்ப்பு* - சிவப்பு. கண்சிவத்தல் சினத்தின் மெய்ப்பாடு. கடிந்து பேசுதல் கடிதல் எனப்பட்டது. கடிம்-கடியும் என்பது தொக்கு நின்றது.

*மொழி இன்றி அமைவேமை* - மறுமொழி பேசாது அமைதியாய் இருக்கும் எம்மை.

தன்குற்றமுணர்ந்து, அவன் கடிந்து பேசுங்கால் உடனே மறுமொழி கூறாது அமைந்திருந்தது மட்டுமின்றி அவன் கடிந்தமைக்கு வருந்திப் பின்னும் அவனொடு உரையாடாமலே இருந்தாள் என்பதும் பெறப்படும்.

*பின் அணைந்து* - பிறகு வந்து தழுவிக் கொண்டு.

பின் என்பது காலம் பற்றியது.

*தொங்கு முகம் ஏந்தி* - கவிழ்ந்த எம் முகத்தை நிமிர்த்தி. புலவியால் முகங் கவிழ்ந்திருந்தாள் போலும்.

*இமைபடரக் காந்தி* - இமைகள் வருடுமாறு முகத்தைப் பொருத்தி.

படர்தல் - வருடுதல், காந்துதல்-ஒட்டுதல்.

*இதழ்முத்தி* - வாயிதழில் முத்தமிட்டு.

*பிழைநோகும் எம்ஜ* - தாம் கடிந்து பேசிய பிழைக்கு வருந்துகின்ற எம் தலைவன்.

*தம் சுவை கூர எதிர் இருந்தே உய் உணா* - தாம் விரும்பியுண்ணும் சுவை மிகுமாறு எதிரில் இருந்து யாம் உண்பிக்கும் உணவை.

தான் உண்பித்த உணவை நினைவுகூர்ந்தாளேனும் அவ் வுணவு ஈண்டு உணவு என்னும் அளவிலேயே நின்றது.

கூர்-மிக.

*உய் உணா* - உண்பிக்கும் உணவு. உய்- செலுத்து.

*பொதுளஆர் இட ஆரும்* - ஆர் நெருங்கியிருந்து படைக்க உண்பார்.

அவன் உண்டி குறித்து வினவினளேனும் அங்கே ஒரு பெண்ணிருந்து படைத்தலுங்கூடுமோ என்னும் எண்ணம் அவள் மனத்தை அருவுதலும் அறிப்படும். பொதுள- நெருக்கமாக.

*துய் நினைவு அயிலும் கலை பயில் இடத்தே* - முன்பு நுகர்ந்ததனைப் பற்றிய நினைவை மனங்கொள்ளும், கலைபயில் கழகத்தே.

தன்னைப் போலவே அவனும் பண்டு நுகர்ந்ததனை நினைவுகூர்வான் என்னும் எண்ணத்தால் இவ்வாறு கூறினாள்.

இப்பாடல் *முல்லை* என்னும் அகத்திணையும், *ஓதற்பிரிவுற்ற தலைமகனை நினைவுகூர்ந்து கிழத்தி தோழிக் குரைத்தது* என்னும் துறையுமாம்.



# 97 மாணுங்கடமையர்

*உற்றே மெனநீ பற்றிய ஞான்றே*
*முற்றும் நினக்கவள் உரியளங் குழலும்*
*கற்பின் மாணுங் கடமையள்; கரவின்று*
*நேர்ந்த காலையும் நெகிழ்ந்த காலையும்*
*ஊர்ந்தண் நினைவும் வினையும் ஒழுங்குறப்*
*பூணியற் பேணுந் தகையளே வாணுதல்!*
*அவளைப் பிரிவுறு மாயிடைப் பொழுதின்*
*குவளை விழிநீர் வார்தலை எண்ணாது*
*இன்னா வொழுக்கத்து நீயிவண் படுதல்*
*என்னமைந் துரைக்கினும் இழுக்கே; எலுவ!*
*ஆயுங் காலைச் சால்பிற்கு*
*நீயும் உரியை அவள்தனி யன்றே!*

**பொழிப்பு:**

காதலால் ஒன்றினேம் என்று நீ அவளை கைப்பிடித்த போதே முழுவதும் நினக்கே அவள் உரிமையுடையளாயினள். அழகிய கூந்தலையுடையளான அவளும் கற்பினால் மாட்சியமையுற்ற கடமையுடையாள். கள்ளமில்லாமல் நீ அவளொடு பொருந்தியிருந்த காலத்திலும் கைநெகிழ்ந்த காலத்திலும் உள்ளத்துப் பரவிய குளிர்ந்த நினைவும் அதற்கேற்ற செயலும் உடையளாய்ச் செம்மையாகக் கொழுநனைப் போற்றிப் புரக்கும் தகுதியுடையவளே ஒளி பொருந்திய நெற்றியை யுடையாள்; அவளை நீ பிரிவுற்ற அந்த இடைக்காலத்தே அவளுடைய குவளை மலர் போலும் விழியினின்றும் நீர் வழிதலை எண்ணிப்பாராது தீயொழுக்க முடையவனாய் நீ ஈண்டு இருத்தல் என்னவாறு அமைதி கூறினாலும் குற்றமேயாம். ஆராய்ந்து பார்க்குங்கால் நும் இல்லறம் பெருமையான் நிறைவுறுதற்கு நீயும் உரிமையுடையாய், அவள் நின்னின் வேறுபட்டவள் அல்லளே.

**விரிப்பு:**

*இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.*

தலைவனொருவன் தன் மனைவியைப் பிரிந்து கட்குடியுஞ் சூதாட்டமும் வரைவின் மகளிர் தொடர்பும் உடையவனாய்த் திரிதரக்

கண்ட சான்றோர் ஒருவர் அவன்றன் மனைவியின் பண்புநலன்களைப் பாராட்டிக் கூறி அவன்றன் பிழையையுஞ் சுட்டிக்காட்டி அறிவு கொளுத்துமாறு அமைந்தது இப்பாட்டு.

*உற்றேம் என நீ பற்றிய ஞான்றே* - யாம் இல்லற வாழ்க்கையில் பொருந்தினேம் என்று நீ அவளது கையைப் பற்றிய போதே.

ஞான்று-காலம்.

*முற்றும் நினக்கு அவள் உரியள்* - அவள் நினக்கே குறைவற உரிமையுடையள் ஆயினாள்.

முற்றும்- குறைவற; முழுமையாக.

***அம் குழலும் கற்பின் மாணும் கடமையள்*** - அவ்வாறு நினக்கே உரிமை பூண்டவளாகிய அழகிய கூந்தலை யுடைய அவளும் கற்பினால் சிறந்த கடப்பாடுணர்ந்து செய்யும் இயல்புடையாள்.

*கரவு இன்று நேர்ந்த காலையும் நெகிழ்ந்த காலையும்* - கள்ளமில்லாமல் நீ அவளொடு பொருந்தியிருந்த காலத்தும் கைநெகிழ்ந்த காலத்தும்.

கரவு- மறைவு, நேர்தல்-பொருந்துதல். நெகிழ்தல்-பிரிதல்.

***ஊர்ம் தண் நினைவும் வினையும்*** - உள்ளத்துப் பரவிய குளிர்ந்த நினைவும் அதற்கேற்பச் செயலும் உடையளாய்.

அன்பு நீரின் இயல்பினது ஆகலின் அன்பார்ந்த நினைவு குளிர்ச்சியுடையதாகக் கூறப்படும். ஊர்தல்-பரவுதல்-ஊரும் என்பது செய்யுள் நோக்கி ஊர்ம் என இடையே உயிர்கெட்டு நின்றது.

***ஒழுங்கு உறப் பூணியன் பேணும் தகையளே வான் நுதல்*** - முறையாகக் கொழுநனைப் போற்றிப் புரக்கும் தகுதியுடையவளே ஒளி பொருந்திய நெற்றியை யுடையாள்.

பூணியன் என்பது உரிமை பூண்டவன்; பூண்டான் எனப் பொருள்படுவதாகிய கணவனைக் குறிக்குஞ் சொல். கொண்டான் என்பது நோக்குக!

வாள் - ஒளி.

***அவளைப் பிரிவு உறும் ஆ இடைப் பொழுதின்*** - அவளை நீ பிரிவுற்ற அந்த இடைக்காலத்தே

***குவளை விழி நீர்வார்தலை எண்ணாது*** - குவளை மலர்போலும் அவள் கண்களினின்றும் நீர் வழிதலை எண்ணிப்பாராது.

வார்தல் - வழிதல்.

*இன்னா ஒழுக்கத்து நீ இவண் படுதல்* - தீயொழுக்கமுடையவனாய் நீ இங்கே இருப்பது. இன்னா ஒழுக்கமாவது சான்றோர் கடிந்த கட்குடியும் சூதாட்டமும் வரைவின் மகளிர் தொடர்பும் பிறவுமாம்.

*என் அமைந்து உரைக்கினும் இழுக்கே* - என்ன அமைதியைப் பொருந்தக் கூறினும் குற்றமாவதே.

அமைவு - ஏற்புறு கரணியம்; சமாதானம் என்பது வடசொல்.

*எலுவ* - இளந் தோழனே!

தோழன் எனப் பொருள்படும் எலுவன் எனுஞ்சொல் விளியேற்று நின்றது.

சான்றோர் கூற்றாகக் கொள்ளக் கிடத்தலின் இளந்தோழனே எனக் கொள்ளப்பட்டது.

*ஆயுங்காலை* - ஆராய்ந்து பார்க்குமிடத்து.

ஆய்தல் - நுணுகிப் பார்த்தல்.

*சால்பிற்கு நீயும் உரியை* - நும் இல்லறம் பெருமையான் நிறைவுற விளங்குதற்கு நீயும் உரிமையுடையாய்.

சால்பு - பெருமையின் நிறைவு.

*அவள் தனியன்றே* -அவள் நின்னின் வேறுபட்டவள் அல்லளே!

இப்பாடல் ***பெருந்திணை*** என்னும் புறத்திணையும் ***குறுங்கலி*** என்னும் துறையுமாம்.



# 98 யாக்கை உள்ளொளி

மடவை நடுமுள் ஏய்ங்குறு பின்னல்
அடர்த்திய பூவோ டாடிய காட்டும்
முற்றாச் சிறுமி முறுவலு முண்டேம்
பற்றாச் சீரை புனைவதுங் கண்டேம்
மொய்விழி நடவிரன் முனைந்துறழ் பெய்து
முத்தத் தடுக்கிய முல்லையந் தொடையல்
ஆடிமுன் னணிந்து பாடிய மடுத்தேம்
வகுமா வடுவிழி மகவேட் டாற்குப்
புகுமாண் கற்பொடு புதுநல மாந்த
ஈன்றோ ரீந்ததும் ஈரா னொருபெண்
தானினி தீன்ற தகைமையுங் கண்டேம்!
பெருமா மடந்தை வருகையும் போக்கும்
நெருநல் போலும் அம்ம! நிழலென
உருவும் உளத்ததே! உண்டுபோல் வாளே!
எம்பொடு பயின்றா ளெம்மொடு துயின்றாள்!
விம்மிய எமக்கு விம்மினள்! உவப்பின்
தாமே மிகுவள்; தம்பசி கரந்தெம்
ஆய்போ லருத்துவள் அக்கை யிலளே!
வரவு நோக்கிச் சிறாரை முடுக்கி
இரவு வேய்குழ லின்முகை நகைநாற
எம்மை மனையொடும் இளவோ ரேந்தி
மும்மையும் புரந்த முதுப்பிறப் பவளே!
யாண்டுகொல் ஈண்டே மாண்ட தமக்கை!
மீண்டுங் காணும் பேணுங் கொல்லோ!
அற்றே உண்டோர் குறிப்பே! முன்றில்
வற்றா நிலைநீர்க் குட்டத் துயர்கரை
ஆயே அழுமுகஞ் சாய்புன லவிழ
ஏயவட் காணா திரந்து குழற
மல்லன் ஒருவன் வல்லெனப் பாய்ந்தே

*ஈரச் சீரை இழிபுநீ ரோடும்*
*மீளக் கொணர்ந்த தீக்கனா வொன்றே!*
*பின்றையோர் யாமத்து முந்தை மாண்ட*
*தூவெண் கூறையோடு ஐயாய் விளங்கி*
*வாவென் குறிப்பின் இருவருந் தொடரப்*
*புறவூர் மருங்கிற் றமியனை நிறுத்தி*
*எமக்கை வலத்தோ ரிட்டுவா னேறிய*
*அமையாக் கனவோ அம்ம விரண்டே!*
*ஈங்கிவை நிறைமதி இரண்டி னெதிர்ந்த*
*யாங்கினி யமைவந் தாங்கிய நாளே!*
*சாக்குறி காட்டிய யாக்கை உள்ளொளி*
*மீக்குறி காட்டிக் கூட்டல் மெய்யென*
*ஒன்றிய நினைவின் யாமே*
*என்றுந் துயிலுவம் எதிர்கவின் கனவே!*

**பொழிப்பு:**

மடவை மீனின் உடல் நடுவிருக்கும் முள்போலும் சிறிய சடையின்கண் செறிவுறப் பூவைச் சூடிக்கொண்டவளாய் ஆடிக்காட்டும் இளஞ்சிறுமியின் புன்முறுவலையுங் கண்டேம்; அவள் அப் பருவங் கடந்து தனக்குப் பற்றாத சீலையை உடுத்திக் கொண்ட நிலையையுங் கண்டேம்; மொய்க்கின்ற விழிகளையுடைய அவள் நடனமாடும் விரல்களால் பூக்களைத் தலைமாறிச் சேர்த்து முற்றத்திலிருந்து தொடுத்த முல்லைமாலையைக் கண்ணாடிக்கு முன்னர் நின்று அணிந்துகொண்டு பாடிய பாட்டையுஞ் செவிமடுத்தேம்; பிளக்கப்பட்ட மாவடு போன்ற விழியையுடைய அவள் மகப்பேற்றை விரும்பிய கணவனுக்கு மனைவியாகப் புகுந்து மாட்சிமிக்க கற்பியல் வாழ்க்கையின் புதுமையான இல்லற இன்பந்துய்ப்ப, அவன்றன் பெற்றோர் ஈன்றாங்கு ஆண்மகவு இரண்டும் பெண் மகவு ஒன்றுமாகத் தான் இனிது ஈன்ற பெருமையையுங் கண்டேம்.

பேரிளம்பெண்ஆகிய அவள் வந்ததும் சென்றதும் நேற்று நிகழ்ந்தன போலுள்ளன; அம்ம! நிழல்போலும் அவடள் உருவமும் எம் உள்ளத்திலேயே உள்ளது. உயிருடன் வாழ்ந்து கொண்டிருப்பவள் போலவே எம் உள்ளத்தில் இருக்கின்றாள்.

எம்முடனேயே தானுங் கல்வி பயின்றாள்; எம்முடனேயே கண்ணுறங்கினாள்; யாம் விம்மி அழுதக்கால் எம் பொருட்டுத் தானும் அழுதாள்; யாம் மகிழின் அதுகண்டு அவளே பெரிதும் மகிழ்வாள்; தம்பசியை அடக்கிக் கொண்டு எமக்கு உணவூட்டும் அன்னையாரைப் போலத் தானும் எம்மை உண்பிப்பாள்; அவள் எம் அக்கையல்லள்.

எம் வருகையை எதிர்பார்த்திருந்து தன் பிள்ளைகளை ஆர்வமுறச் செய்து, கூந்தலின்கண், இரவே கட்டிவைத்த மொட்டுகள் மலர்ந்து மணங்கமழ எம்மையும் எம் துணைவியையும் வரவேற்றுக் குழந்தைகளைத் தூக்கி அணைத்துக் கொண்டு எம்மை நிறைவுறப் பேணிய தமக்கை அவள்!

எப்போது இங்கே வருவாள், இறந்துபட்ட அக்கை! மீண்டும் வருவாளோ! எம்மைப் போற்றுவாள் கொல்!

முன்னரே அவள் இறப்புப் பற்றிய குறிப்பொன்று உண்டு.

வீட்டின் முற்றத்தை யடுத்த நீர் வற்றாத கிணற்றின் உயர்ந்த கரையின்கண் அழுகின்ற எம் அன்னையின் முகத்தினின்றும் திரண்ட கண்ணீர் வழிய, வெளியே சென்றவளைக் காணாது அவர் வருந்தி நாக்குழற; வலிமை வாய்ந்தான் ஒருவன் விரைந்து அந் நீர்க்குட்டத்துட் பாய்ந்து நனைந்த சீலையோடும் ஒழுகும் நீரோடும் அவளை மீட்டுக் கொண்டு வந்த தீய கனவு ஒன்று.

பின்னையொரு நள்ளிரவில், முன்னை இறந்துபோன தூய்மையான வெள்ளைச் சீலையை யுடுத்திய எம் பாட்டியார் தோன்றி எம்மை நோக்கி வா என்று குறிப்பு காட்ட, யாங்கள் இருவேரும் அவரைத் தொடர்ந்தனமாக, ஊரின் புறம்பான பகுதியில் எம்மைத் தனியனாக நிறுத்தி எம் அக்கையைத் தம் வலப்புறத் தோளில் தூக்கிக் கொண்டு வானத்தின்கண் எழும்பிச் சென்ற, எம் மனத்தை உறுத்திய இரண்டாவதான கனவு மற்றொன்று அம்ம!

இவ்விரு கனவுகளும் இரண்டு மாதங்களில் நனவாய் நிகழ்ந்தன. அக்கொடுமையைச் சுமந்த நாளின் நினைவை இப்போது எங்ஙனம் பொறுத்துக்கொள்வேம்! சாவு பற்றிய அறிகுறி காட்டிய எம் உடலின்கண் பொருந்திய உள்ளொளி மேலை நிகழ்ச்சிகளையுணரும் அறிகுறி காட்டி எம்மை இறைமையில் பொருத்துதல் உண்மையில் நிகழும் என ஒருமையுற்ற நினைவோடும் யாம் நாளும் துயிலுகின்றேம். இனிய கனவு வாய்ப்பதாக!

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

பாவலரேறு அவர்களுடைய பெற்றோர் தம் முதன்மகவாகவும் மூத்த மகளாகவும் பிறந்து இளஞ்சிறுமியாகவும் படிப்படியே வளர்ந்த நிலையிலும் பாவலரேறு அவர்களால் அணுகியிருந்து காணப்பெற்று உடன்பயின்றும் உடன்துயின்றும் சிறந்திருந்த இராசம்மாள் என்னும் பெயருடைய அவர்தம் அக்கையார் மணஞ்செய்விக்கப் பெற்று மக்கள் மூவரை ஈன்றுபுரந்து பெற்று வாழ்ந்துவந்த நிலையில், பாவலரேறு அவர்கள் அத்தமக்கையார்

தொடர்பாக அடுத்தடுத்து இரு கொடிய கனவுகளைக் கண்டனராக, சாவுக்கு அறிகுறியான அவ்விரு கனவுகளும் இருமாத அளவில் நனவாயின. அக்கையார் மறைந்தார்.

கனவுநிலை அறிகுறி காட்டிய உள்ளொளி தம்மை மெய்ப்பொருட் காட்சியில் கூட்டுவித்தல் உறுதியென்றும் அத்தகைய கனவு எதிர்க என்றும் வேண்டுவதாக அமைந்தது இப்பாட்டு.

இராசம்மாள் அம்மையார் சிறுமியாக இருந்தது முதல் அவர் தம் மறைவு வரையிலான வளர்ச்சியும் வாழ்வும் தம் இளவல் பால் கொண்ட கழிபேரன்பும்; பாவலரேறு கண்ட இரு தீக்கனா நிகழ்ச்சிகளும், அவை நனவான கொடுமையும், பிறவும் நாற்பத்து மூன்று அடிகளில் ஆற்றொழுக்காய் நடக்கும் இவ்வகவற் பாவினுள் பாலவரேறு அவர்களால் அருஞ்சித்திரமாகத் தீட்டப்பட்டுள்ளன.

***மடவை நடுமுள் ஏய்ம்குறு பின்னல்*** - மடவைமீன் உடலில் நடுவிலிருக்கும் முள்போலும் பின்னலின்கண்,

சிறுமியின் பின்னலுக்கு மடவை மீனின் முள் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

ஏய்-உவம உருபு.

***அடர்த்திய பூவோடு ...... முறுவலும் கண்டேம்*** - செறிவுறப் பூவைச் சூடிக் கொண்டவளாய் ஆடிக் காட்டும் இளஞ்சிறுமியின் புன்முறுவலையுங் கண்டேம்;

***பற்றாச் சீரை புனைவதும் கண்டேம்*** - அவளுடைய உடலுக்குப் பொருந்தாத சீலையை அணிந்து கொண்ட காட்சியையுங் கண்டேம்;

சீலை பெரியதாகலின் உடலுக்குப் பற்றாதாயிற்று.

பற்றா- பொருந்தாத. சீரை-சீலை.

***மொய்விழி நடவிரல்.....மடுத்தேம்*** - வண்டுபோலும் மொய்க்கின்ற விழிகளையுடைய அவள் நடனமாடும் விரல்களால் பூக்களைத் தலைமாறிச் சேர்த்து முற்றத்திலிருந்து தொடுத்த முல்லை மாலையைக் கண்ணாடிக்கு முன்னர் நின்று அணிந்து கொண்டு பாடிக்காட்டிய பாட்டையும் செவிமடுத்தேம்;

மொய்த்தல் என்னும் வினைபற்றி வண்டு வரவழைக்கப்பட்டது. பூத்தொடுக்கும் பெண்களின் விரல் நடனமாடுவது போற் காட்சியளித்தலின் நடவிரல் என்றார். பூக்களைத் தலைமாற்றிச் சேர்த்தலை உறழ்பெய்து என்றார்.

அம்- தொடையில்- அழகிய மாலை

*வகுமர்வடு விழி ........ மாந்த* - மாவடுவைப் பிளந்தது போன்ற கண்ணையுடைய அவள் மகப்பேற்றை விரும்பிய கணவனுக்கு மனைவியாகப் புகுந்த மாட்சி மிக்க கற்பியல் வாழ்க்கையின் புதுமையான இல்லற இன்பந் துய்ப்ப

*ஈன்றோர் ஈந்ததும் ...... கண்டேம்* - கணவனின் பெற்றோர் ஈன்றாங்குத் தானும் இரு ஆண்மகவையும் ஒரு பெண் மகவையும் இனிது ஈன்ற பெருமையையுங் கண்டேம்.

*பெருமா மடந்தை வருகையும் போக்கும்* - பெருமை வாய்ந்த பேரிளம் பெண்ணாகிய அவள் வந்ததும் சென்றதும்

*நெருநல் போலும் அம்ம* - நேற்று நடந்தது போல உள்ளன அம்மா!

*நிழல் என உருவும் உளத்ததே* - நிழல் போலும் அவளுடைய உருவமும் என் உள்ளத்திலேயே உள்ளது.

*உண்டுபோல் வாளே* - உயிருடன் வாழ்ந்து கொண்டிருப்பது போலவே எம் உள்ளத்தில் இருக்கின்றாள்.

*எம்மொடு பயின்றாள்......துயின்றாள்.* - எம்முடனேயே தானும் கல்வி பயின்றாள். எம்முடனேயே தானும் கண்ணுறங்கினாள்.

பயின்றாள் என்பதற்குப் பழகினாள் எனினுமாம்.

*விம்மிய எமக்கு விம்மினள்* - யாம் விம்மி அழுதக்கால் எம் பொருட்டுத் தானும் அழுதாள்.

*உவப்பின் தாமே மிகுவள்* - யாம் மகிழின் அது கண்டு அவளே பெரிதும் மகிழ்வாள்.

*தம் பசி கரந்து எம்ஆய்போல் அருத்துவள்* - தம் பசியை அடக்கிக்கொண்டு எமக்கு உணவூட்டும் எம் அன்னையாரைப் போலத் தானும் எம்மை உண்பிப்பாள்.

*அக்கை இலளே* - அவள் எம் அக்கையல்லள்;

அன்னையேயாம் என்றபடி.

*வரவு நோக்கிச் சிறாரை முடுக்கி* - எம் வருகையை எதிர் பார்த்திருந்து தன் பிள்ளைகளை ஆர்வமுறச் செய்து,

அம்மான் வருகிறார்; மாமி வருகிறார் என்றும், நாளை இந்நேரம் வந்து விடுவார்; விடியற்காலம் வந்துவிடுவார் என்றும், உனக்குச் சட்டை

வாங்கி வருவார், ஊதல் வாங்கி வருவார் என்று மெல்லாம் ஆர்வமுறச் செய்து என்றவாறு.

*இரவு வேய்குழல் இன்முகை நகைநாற* - கூந்தலின்கண் இரவே கட்டி வைக்கப்பட்ட இனிய மொட்டுகள் சிரித்து மணங்கமழ.

நகை- சிரிப்பு- நாற- மணத்தைப் பரப்ப.

*எம்மை மனையொடும் இளவோர் ஏந்தி* - எம்மையும் எம் துணைவியையும் வரவேற்றுக் குழந்தைகளைத் தூக்கி அணைத்துக் கொண்டு

துணை- வாழ்க்கைத் துணை. - இளவோர் குழந்தைகள் ஏந்திஅணைத்துக் கொண்டு.

*மும்மையும் புரந்த முதுபிறப்பு அவளே* - எம்மை நிறைவுறப் பேணிய தமக்கை அவள் மும்மையும் என்பது முழுமையும் என்னும் பொருட்டு முதுபிறப்பு என்பதற்கு மூதாட்டி எனினுமாம்.

*யாண்டுகொல் ஈண்டே மாண்ட தமக்கை* - எப்போது இங்கே வருவாள் இறந்து பட்ட அக்கை

*மீண்டும் காணும் பேணும் கொல்லோ* - மீண்டும் வருவாளோ; எம்மைப் போற்றுவாள் கொல்!

*அற்றே உண்டுஓர் குறிப்பே* - முன்னரே அவள் இறப்புப் பற்றிய குறிப்பு ஒன்று உண்டு.

*முன்றில் வற்றா நீர்நிலைக் குட்டத்து உயர்கரை* - வீட்டு முற்றத்தை யடுத்த நீர்வற்றுதல் இல்லாத கிணற்றின் உயர்ந்த கரையின்கண்.

குட்டம் - கிணறு.

*ஆயே அழுமுகம் சாய்புனல் அவிழ* - அழுகின்ற எம் அன்னையாரின் முகத்தினின்றும் திரண்ட கண்ணீர் வழிய.

*ஏயவள் காணாது இரந்து குழற* - வெளியே சென்றவளைக்காணாது அவர் வருந்தி வேண்டி நாக்குழற

இரந்து என்றது தெய்வங்களையும் இறைவனையும் விளித்தும் கண்ணிற் கண்டாரைக் கூவியும் மகளைத் தேடித் தருமாறு வேண்டுதல்.

குழற- நாக்குழற

*மல்லன் ஒருவன் வல் எனப் பாய்ந்தே* - வலிமை வாய்ந்தா னொருவன் விரைந்து அந் நீர்க்கூட்டத்துட் பாய்ந்து.

வல் என்பது விரைவுக் குறிப்பு.

*ஈரச் சீரை இழிபு நீரோடும்* - ஈரமான சீலையோடும் ஒழுகும் நீரோடும்

*மீளக் கொணர்ந்த தீக்கனா ஒன்றே* - அவளை மீட்டுக் கொண்டு வந்த தீய கனவு ஒன்று.

*பின்றையோர் யாமத்து* - பின்னொரு நாள் நள்ளிரவில்

யாமம்- நள்ளிரவு

*முந்தை மாண்ட* - முன்னமே இறந்து போன

*தூவெண் கூறையொடு ஐஆய் விளங்கி* - தூய்மையான வெள்ளைச் சீலையையுடுத்திய எம் பாட்டியார் தோன்றி.

*வா என் குறிப்பின் இருவரும் தொடர* - வா என்ற குறிப்புக் காட்ட யாங்கள் இருவேரும் அவரைத் தொடர்ந்தனமாக.

*புறவூர் மருங்கின் தமியனை நிறுத்தி* - ஊரின் புறத்தே உள்ள பகுதியில் தமியேனை நிறுத்திவிட்டு.

புறவூராவது ஊர்ப்புறம். தமியனை-தனியாக எம்மை என்னும் பொருட்டு.

*எம் அக்கை வலத்தோள் இட்டுவான் ஏறிய* - எம் தமக்கையைத் தம் வலத்தோளில் தூக்கிக்கொண்டு வானத்தின்கண் எழும்பிச் சென்ற

*அமையாக் கனவோ அம்ம இரண்டே* - எம் மனத்தை உறுத்திய இரண்டாவது கனவு மற்றொன்று.

அமையா- மனத்தை உறுத்திய

அம்ம என்பது துன்ப நினைவுச் சுமையான் வந்த விளி.

*ஈங்கிவை நிறைமதி இரண்டின் எதிர்ந்த* - இவ் இரு கனவுகளும் இரண்டு மாதங்களில் நனவாய் நிகழ்ந்தன.

*யாங்கு இனி அமைவம் தாங்கிய நாளே* - அக்கொடுமையைச் சுமந்த நாளின் நினைவை இப்போது எங்ஙனம் பொறுத்துக் கொள்வேம்!

இப்போது எங்ஙனம் பொறுத்துக்கொள்வேம் என்றமையால் அற்றை நாள் கொடுமையினை உணரலாம்.

*சாக்குறி காட்டிய யாக்கை உள்ளொளி* - சாவு பற்றிய அறிகுறி காட்டிய எம் உடலின்கண் பொருந்திய உள்ளொளி.

*மீக்குறி காட்டி* - மேலை நிகழ்ச்சிகளை உணரும் அறிகுறி காட்டி.

மேலை என்றது காலத்தால் பண்டைய நிகழ்ச்சிகளையும் இடம் பற்றி இனிவரும் நிகழ்ச்சிகளையும் குறித்து நின்றது.

*கூட்டல் மெய்என* - இறைமையில் பொருத்துதல் உண்மையில் நிகழ்வதாம் என்று.

*ஒன்றிய நினைவில் யாமே* - ஒருமையுற்ற உணர்வோடும் யாம்

*என்றும் துயிலுதும் எதிர்க இன் கனவே* - நாளும் துயிலுகின்றேம். இனிய கனவு வாய்ப்பதாக!

இப்பாடல் *பொதுவியல்* என்னும் புறத்திணையும் *பொருண்மொழிக் காஞ்சி* என்னும் துறையுமாம்.



## 99. உள்ளுயிர் நெகிழ்ச்சி

*அறிவெனும் விரிசிற கார்ந்து நினைவெனும்*
*பொறிவண் டிமிரு முள்ளப் பொய்கையுள்*
*ஒளிச்சுடர் மன்னிய ஒருதனி மலரின்*
*மெய்யுணர் வென்னுந் தேறல் மாந்தி*
*ஐயநின் மயலுறப் பொய்வினை கழன்று*
*நிற்பாடி நிற்கண்டு உள்ளுயிர் நெகிழ்ந்து*
*சில்நெய் பெய்து நுண்டிரி மாண்ட*
*வல்வளித் துண்விளக்க மாகி*
*உள்நடுங்கி யொடுங்கும் ஒருவனீங் குண்டே!*

**பொழிப்பு:**

அறிவு எனப்படும் விரிகின்ற சிறகு பொருந்தி, எண்ணம் எனப்படும் புள்ளிகளையுடைய வண்டு முரலுகின்ற உள்ளமாகிய தடாகத்துள், ஒளிக்கதிர்கள் பொருந்திய ஒப்பற்ற பெருமலரின் மெய்யுணர்வு எனப்படும் தேனை ஆரஉண்டு, பெருமானே! நின்பேரின்பத்தில் திளைக்கின்றமையால் பொய்யான வினைகளெல்லாம் நீங்கப்பெற்று நின்னைப் புகழ்ந்துபாடி, நின்னை மனத்தாற் கண்டு உயிரகத்தே நெகிழ்ச்சியுற்றுச் சிறிதே நெய்யூற்றப் பெற்று மெல்லிய திரியிட்டு ஏற்றிக் காற்று வலிது இயங்குமிடத்தே வைக்கப் பெற்றுள்ள விளக்குப் போலாகி உள்ளம் நடுக்கமுற்று அமைந்திருக்கும் ஒருவன் ஈண்டு உளன்.

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் பற்றியது.

ஐய, அறிவொடு பொருந்திய நினைவினையுடைய உள்ளத்தின்கண் மெய்யுணர்வுற்றமையான் பொய்வினை கழன்று நின்னைப் புகழ்ந்துங் கண்டும் உயிர் நெகிழ்ச்சியுற்று நடுங்கி ஒடுங்குகின்ற ஒருவன் ஈங்கு உளன் என்று இறைவனை நோக்கிக் கூறுவதாக அமைந்தது இப்பாட்டு.

விரிந்த சிறகினையுடைய புள்ளி வண்டு ஒன்று தான் மிழற்றுகின்ற மலர்ப் பொய்கையில் ஒளிவீசித் திகழும் ஒருபெரு மலரின்கண் தேன் உண்டு மயங்கிய காட்சி யொன்றும், சிறிதே நெய்யூற்றி மெல்லிய திரியிடப் பெற்று ஏற்றிப் பெருங்காற்று வீசும் வெளியிடத்தே வைக்கப்பெற்ற

காட்சியொன்றும் ஆசிரியரின் கருத்தைத் தெளிவுறுத்தும் பொருத்தமான உருவகங்களாக இப்பாடலில் இடம் பெற்றுள்ளன.

முன்னதன்கண் அறிவே சிறகாகவும், நினைவே அதனையுடைய வண்டாகவும், மனமே அவ்வண்டு முரலும் மலர்ப் பொய்கையாகவும், நறுமலர்த் தேனே மெய்யுணர்வாகவும் உருவகம் செய்யப் பெற்றுள்ளன.

பின்னதன்கண் உடலே விளக்காகவும் நினைவே நெய்யாகவும் உயிரே திரியாகவும் மெய்யுணர்வே சுடராகவும் அலைக்கலைக்கும் உலக வாழ்க்கையே பெருங்காற்று வீசும் வெளியாகவும் கொள்ளுமாறு உருவகம் அமைந்துள்ளது.

*அறிவுஎனும் விரி சிறகு ஆர்ந்து* – அறிவு எனப்படும் விரியும் சிறகு பொருந்தி.

அறிவின் பரப்புக் கருதி அதனை விரிசிறகு என்றார்.

*நினைவு எனும் பொறிவண்டு இமிரும்* – நினைவு எனப்படும் புள்ளிகளையுடைய வண்டு முரலுகின்ற.

பொறி-புள்ளி. இமிர்தல்- ஒலித்தல்; முரலுதல்.

*உள்ளப் பொய்கையுள்* – உள்ளம் எனப்படும் குளத்துள்.

*ஒளிச்சுடர் . . . தேறல் மாந்தி* – ஒளி விளங்கப் பொருந்திய ஒப்பற்ற பெருமலரின் கண்ணுள்ள மெய்யுணர்வு என்னும் தேனையுண்டு

மன்னிய - பொருந்திய. ஒரு தனி - ஒப்பற்ற - பெரிய. தேறல் - தேன்.

*ஐய* - இறைவ.

ஐயன் என்னும் பெயரின் அண்மை விளி. இறைவன் எங்கும் நிறைந்திருத்தலை உணர்ந்தமையின் அண்மைவிளி போதுமானதாயிற்று.

*நின் மயலுற* – நின் அருளின்பத்திலே திளைத்தலால்.

மயல் - மயக்கம்; திளைத்தலின் விளைவு.

*பொய்வினை கழன்று* – பயனிலாச் செயற்பாடுகளினின்றும் விடுபட்டு.

கழன்று-நீங்கி; விடுபட்டு.

*நிற்பாடி நிற்கண்டு* – உன்னைப் புகழ்ந்து நின் அருட் காட்சியைக் கண்டுணர்ந்து.

காணுதலென்றது உணர்வில் தோய்தலை.

பாடுதல்-புகழ்தல்.

***உள்உயிர் நெகிழ்ந்து*** – உயிரின் உள்ளே நெகிழ்ச்சியுற்று.

நெகிழ்தல்- அன்பால் உருகுதல்.

***சில்நெய்பெய்து*** – சிறிதே நெய்யூற்றப்பட்டு.

சின்மை அளவாற் சிறுமை குறித்து நின்றது.

***நுண்திரி மாண்ட*** – மெல்லிய திரியால் சிறந்த.

சுடருக்கு இடமானமையின் 'மாண்ட' என்றார்.

***வல் வளித்து உண் விளக்கம் ஆகி*** – கடிது காற்று வீசும் வெளியிடத்தினுள் வைக்கப்பெற்ற விளக்கம் என்னுமாறு ஆகி.

வன்மை- கடுமை, வளித்துஉள்-காற்று வீசுவதான வெளியினுள்.

***உள்நடுங்கி ஒடுங்கும்*** – உள்ளம் நடுங்கி அமைந்திருக்கின்ற

உள்-உள்ளம் ; ஒடுங்குதல்-அமைந்திருத்தல்.

***ஒருவன் ஈங்கு உளன்*** – ஒருவன் ஈண்டு உளன்.

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருண்மொழிக் காஞ்சி*** என்னும் துறையுமாம்.



# 100 துய்ப்போர் ஆகுநர்

உயிரின் மாட்டே உடலின் இயக்கம்;
உளமும் அறிவும் உயிரை இயக்குப;
உளமும் அறிவும் ஒன்றினை யொன்று
தாமே இயக்கித் தம்மொடு பொருந்திய
எல்லாப் பொருளையும் இயக்கலே வாழ்க்கை!
வல்லமை இருபான் குறையுங் காலை
எல்லாந் தூக்கிய இறையவன் இயக்கும்
இல்லவன் என்பது கல்லார் கூற்றே!
இன்னவன் என்பது பேதையர் கூற்றே!
மண்பொருட் கூட்டும் நுண்பொருள் இயக்கமும்
எண்பொரு ளாய்ந்த திண்ணியர் அறிவர்;
உயிர்ப்பொருள் யாவும் ஒன்றொடு தொடரும்;
மெய்ப்பொருள் அதனதன் மேலே தூங்கும்;
பொய்ப்பொருள் மெய்யின் போலிகை; அவையவை
உய்பொருள் அறிந்தவை உழைபோ வாரே
துய்ப்போர் ஆகுநர் துவ்வார்
நைவார் ஆகுநர் நலிபிறப் பானே!

**பொழிப்பு:**

உயிரின் பொருட்டாகவே உடலின் இயக்கம் நிகழுகின்றது; உயிரை உள்ளமும் அறிவும் இயக்குவனவாம்; அவ்வுள்ளமும் அறிவும் தமக்குள் ஒன்றனை யொன்று ஆளுமைபுரிந்து தம்மைச் சார்ந்த எல்லாப் பொருள்களையும் இயக்குதலே வாழ்க்கை யெனப்படுவதாம்.

உள்ளமும் அறிவும் என்னும் இரண்டனிடத்தும், உயிரை இயக்குவதற்கான திறங்குன்றுமிடத்து அவ்வுயிர்களின் பொருட்டு யாவற்றையுஞ் தோற்றுவித்த இறையவன் அவற்றை இயக்குவான்.

இறைவனை இல்லாதவன் என்று மறுத்துரைப்பது மெய்ந்நூல்களைக் கற்றுணராதவர் கூறும் கூற்றாகும்; மற்று அவன் இருப்பை உடன்படினும் அவனை இன்னவன் என்று வண்ணித்துரைப்பது அறிவு விளங்கப் பெறாதவர் கூறும் கூற்றாகும்.

பருப்பொருளாகிய மண் முதலியவற்றின் சேர்க்கையும் நுண்பொருளாகிய உயிர்களின் இயக்கமும் பற்றிய கருத்துகளைத் தெளிவுபட ஆராய்ந்துணர்ந்த திறவோரே அறிவர் எனப்படுவோராவர்.

உயிர்ப்பொருள் ஒன்றொடு தொடர்ந்து இயங்கும். மெய்ப்பொருள் ஆளுமைநிலையில் அவ்வப் பொருள்களின் மீது பொருந்தியிருக்கும். பொயப்பொருளாவது உண்மைப்பொருளின் போலியேயாம்.

**விரிப்பு:**

இப்பாடல் புறப்பொருள் சார்ந்தது.

தலைப்பாடலான இறைநிலை வாழ்த்தில் 'ஒன்றிறை' என இந் நூறாசிரியத்தைத் தொடங்கிய ஆசிரியர் இடையே உலகியல் நிலைகளைப் பலபட விரித்துரைத்து உயிர்கள், இறைமையில் தோய்ந்து நிறைநிலை யெய்துதலை விளக்குவதாக அமைந்துள்ளது இவ்வீற்றுப் பாடல்.

உயிரின் இயக்கம் எத்தகையது என்றும், அதனொடுபட்ட இறையவன் இயக்கமாவது யாது என்றும், இறைவனை இல்லவன் என்றும் இன்னான் என்றும் கூறுவார்தம் கூற்றுகள் எத்தகையன என்றும், மெய்யறிவர் யாரென்றும், உயிர்கள் உய்யுமாறு யாங்ஙனமென்றும், துய்ப்போரும் துவ்வாரும் இன்னின்னார் என்றும் இப்பாடலின் கண் விளக்குகிறார் ஆசிரியர்.

***உயிரின் மாட்டே உடலின் இயக்கம்*** - உயிரின் பொருட்டாகவே உடலின் இயக்கம் நிகழ்கின்றது.

உயிரைச் சார்ந்தே உடல் இயங்குகின்றது. உயிர் கருத்தாவாய் நின்று உடலை இயக்குகின்றது என்றவாறு.

***உயிரை உளமும் அறிவும் இயக்குப*** - அவ்வுயிரை உளமும் அறிவும் இயக்குவனவாம்.

உடலை இயக்குமாறு உயிரைத் தூண்டுவன உளமும் அறிவுமாம் என்றவாறு.

உளமாவது உணர்வுநிலையே என்பது அறியப்படும்.

***உளமும் அறிவும் தாமே ஒன்றனை ஒன்று இயக்கி*** - உளமும் அறிவும் தமக்குள் ஒன்றனைப் பிறிதொன்று ஆளுமைபுரிந்து; உணர்வு மேலோங்குங்கால் அது அறிவை யடக்கியும், அறிவு மேலோங்குங்கால் உணர்வை அடக்கியும் ஒன்றனைப் பிறிதொன்று ஆளுமை புரிந்து என்றவாறு.

***தம்மொடு பொருந்திய எல்லாப் பொருளையும்*** - அவ் உளமும் அறிவும் தம்மால் உணரப்படுவனவும் அறியப்படுவனவுமான அனைத்துப் பொருள் களையும்.

புறப்புலன்களால் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியப்படுவனவும் உணரப்படுவவையுமான அனைத்துப் பொருள்களையும் என்றவாறு.

*இயக்கலே வாழ்க்கை* - துய்ப்பின் பொருட்டு இயக்குதலே வாழ்க்கை எனப்படுவாம்.

*வல்லமை இருபால் குறையும் காலை* - வாழ்க்கைக்கான ஆற்றல் உயிரிடத்து உளத்தானும் அறிவானும் குன்றியவிடத்து உடலையும், உளத்தொடும் அறிவொடும்பட்ட அனைத்துப் பொருள்களையும் இயங்குதற்கான ஆற்றல் உயிரிடத்துக் குறைவுற்ற காலை.

*எல்லாம் தூக்கிய இறைஅவன் இயக்கும்* - உயிரின் பொருட்டு உடலையும் பிற எல்லாப் பொருள்களையும் தோற்றுவித்த இறையாகிய அவன் உயிர்களை இயக்குவான்.

இறையவன் என்றமையால் மெய்யியல் நிலைபற்றி இறை என்றும், உலகியல் நிலைபற்றி அவன் என்றும் சுட்டினார் என்பது கொள்ளப்படும். இறையவன் என்பது ஒரு சொல் நீர்மைத்து.

*இல்லவன் என்பது கல்லார் கூற்று* - இறைவனை இல்லாதவன் என்று மறுத்துக்கூறுவது மெய்ந்நூல்களைக் கற்றுணராதார் கூறும் கூற்றாம்.

இது இன்மைக் கொள்கையரான நம்பாமதத்தாரைக் குறித்துக் கூறியது.

இறைவன் இல்லையென்போர் ஐயறிவும் ஐயறிவை யொட்டிய பகுத்தறிவும் மட்டுமே கொண்டு முடிபுகட்டி யுரைத்தலின் அது கல்லார் கூற்று என்றார். கல்லாராவார் மெய்ந்நூல்களைக் கற்று அறிந்து உணராதோர். மெய்ந்நூலறிவானும் மெய்யுணர்வானும் இறைவன் அறியப்படும் என்பது.

*இன்னவன் என்பது பேதையர் கூற்று* - இறைவனை இத்தகையோன் என்று கூறுவது அறிவுத் தெளிவில்லாதார் கூறும் கூற்றாம்

இது உண்மைக் கொள்கையரான நம்பும் மதத்தாருள் ஒரு சாரரைக் குறித்துக் கூறியது. இறைவன் இருப்பை உடன்படினும் இன்னவன் என்று வண்ணித் துரைத்தலால் அவரைப் பேதையர் என்றார்.

இன்னவன் என்பதாவது இன்ன வடிவினன், இன்ன நிறத்தினன் என்றும், இன்னின்ன சில இயல்புகளை யுடையான் என்று வரையறுத்தும் கூறுதலாம். இன்னும் அவன் இன்ன இடத்தினன் என்றும் ஆணென்றும் பெண்ணென்றும், மனைவி மக்களும் வைப்பாட்டியுங் கொண்டு குடும்பங் குடித்தனத்தோடு வாழ்கிறான் என்றும் பிறவாறும் கூறப்படுவன வெல்லாம் கொள்க.

***மண்பொருட்கூட்டும் ..... அறிவர்*** - மண்முதலிய பருப்பொருட்களின் சேர்க்கையான உலகின் இயல்பும் நுண்பொருள்களான உயிர்களின் இயக்கமும் பற்றி ஆய்ந்து தெளிபொருள் உணர்ந்த திறவோரே மெய்யறிவர் எனப்படுவோராவர்.

சிலரைக் கல்லார் என்றும் மற்றுஞ் சிலரைப் பேதையர் என்றும் சுட்டியமையின் மற்று அறிவர் தாம் யாவர் என வினா எழுதலின் அது நோக்கி இவ்வாறு கூறினார்.

மண்பொருள் கூட்டு என்றது உலகத்தைக் குறித்தல்.

***"நிலம் நீர் தீவளி விசும்போ டைந்தும்***
***கலந்த மயக்கம் உலக மாதலின்"*** - என்றலால் அறியப்படும்.

மண் முதலிய பருப்பொருள்கள் என்றது என்னை யெனின், பின்னையது நுண்பொருள் என்றமையின் என்க. மண்ணும் தீயும் நீரும் அல்லாத வளியும் வெளியும் பருப்பொருள்கள் அல்லவேனும் பூதங்களாதலின் அவ்வாறு சேர்த்துக் கூறப்பட்டது.

'மண்பொருட் கூட்டு' என்ற 'கலந்த மயக்கம்' பற்றி விரிப்பிற் பெருகும்.

***எண்பொருள் ஆய்ந்த*** - தெளிபொருளாக அவற்றை ஆய்ந்து உணர்ந்த

***உயிர்ப்பொருள் யாவும் ஒன்றொடு தொடரும்*** - உயிரிகளெல்லாம் ஓரறிவு முதல் ஆறறிவு ஈறான பாகுபாட்டை யுடையனவாகப் படிநிலை வளர்ச்சிபெற்றுத் தொடரும்.

ஒன்று- ஆறறிவின் முதலதான ஊறறிவு.

இனி, 'ஒன்று' என ஆசிரியர் இந் நூறாசிரியத்தின் முதற்பாடலின் தலைச் சொல்லாய் நின்ற இறையொடு ஒன்றித் தொடர்ந்து நிறைவுறும் எனினுமாம்.

***மெய்ப்பொருள் அதன் அதன் மேலே தூங்கும்*** - மெய்ப்பொருள், உயிர்ப் பொருள் ஒவ்வொன்றின் மேலும் ஆளுமையால் பொருந்தி நிற்கும்.

***பொய்ப்பொருள் மெய்யின் போலிகை*** - உலகத்துப் பொய்ப்பொருள் களெல்லாம் உண்மைப் பொருள்களின் போலி நிலைகளாம்.

பெயர் சுட்டப்படும் பொருள்களெல்லாம் நிலைபொருள் இயங்கு பொருள் எனவும், காட்சிப் பொருள் கருத்துப் பொருள் எனவும், நுண்பொருள் பருப்பொருள் எனவும், இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் எனவும், பிறவாறும் அமைந்த உண்மைப் பொருள்களே யாம். ஆதலின் பொய்ப்பொருள் என்பது ஏதுமில்லை. இல்லையாயின் பொய்ப்பொருள் எனப்படுவதுதான் என்னை யெனின் உண்மைப் பொருள்போல் புனையப்படுவனவேயன்றி வேறில்லை யென்க!

***உய்பொருள் அவை அவை அறிந்து*** - அவ்வாறு பல்வகைப்படத் தோற்றுவிக்கப்பட்ட பொருள்களான அவ்வவற்றின் இயல்புகளை அறிந்துணர்ந்து.

அவையவை என்றது அவைதாம் பற்பல வகைப்படுதல் நோக்கி. உய்பொருளாவது தோற்றுவிக்கப்பட்ட பொருள். உய் - செலுத்துதல்; பிறப்பித்தல்.

***அவைஉழை போவாரே*** - அவற்றினிடத்துத் தொடர்புகொண்டு இயங்குவோரே

போவார் என்பது இயங்குவார் என்னும் பொருட்டு. அதாவது வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் உதவியுந் துணையுமாய் நின்று வாழ்வித்து வாழ்வோர் என்பது.

உழை - இடத்து; ஏழனுருபு

***துய்ப்போர் ஆகுநர்*** - மெய்ந்நிலை நின்று உலக வாழ்க்கையை நுகர்வோர் ஆவர்.

துய்ப்போர் - இறைமையில் தோய்ந்து வாழ்வோர்.

***துவ்வார் ஆகுநர் நலி பிறப்பானே நைவார்*** - உலக வாழ்க்கையை மேற்கண்டாங்கு நுகராதார் பிறவியின் பயனை அறியாத நிலையான் வருந்துவோர்

நலி பிறப்பாவது மாந்தனாய்ப் பிறந்தும் இறைமையில் தோய்ந்து வாழும் மெய்ந்நெறியறியாதார்.

இப்பாடல் ***பொதுவியல்*** என்னும் புறத்திணையும் ***பொருண்மொழிக் காஞ்சி*** என்னும் துறையுமாம்.



# பின்னிணைப்பு

## 1

அளியல் யாமே புளிப்பிரை குற்றி
முளியற் றயிறென முறித்த வாப்பயன்
மாற்றி நெல்பெறு மாய்ச்சியர் மகனே
காற்றிற் கரந்து கவினறக் காயுந்
தகையவ ளவளே நீயே
முகைவிரீந் திதழை மோப்பிலா தோயே!

*திணை* - மருதம்
*துறை* - வரைவு நீட்டித்தவிடத்துத் தோழி தலைவற்குச் சொல்லியது.

## 2

ஆலங் கொழுவிலை அடுக்கத்துப் பெய்த
பால்கெழு வடிசில் மாலுற மிசைந்து
கொள்குறி யணங்கின் கூடல் விதும்ப
எள்குவேர்ப் பெருகினர் பெரிதே ஈங்கிருள்
அறற்படு பூங்குழல் வறற்படப் பறல
நிரல்வினை மாறிய நீருகு நனைவிழ
பொலங்கிளர் வாழை துனிமடல் அவிழ்த்து
நலந்தரு ஆநெய்க் கலந்துவை கொழுவும்
படையல் முன்னம் புடைபெய ராது
முன்றில் நோக்குநள் தென்றல் கிழித்த
விரியிலை துன்ன ஈர்க்கொடு விரையும்
இதுகொல் புலம்பறு நெஞ்சம்
முதிர்தரு பிரிவின் முயங்கிய துயரே!

# 3

உளப்போங் கல்லை ஊன்றிய விளக்கங்
கொளுப்போ லாயினு மொளிமிகு மெல்லி
உச்சி யூர்ங்கால் வெளிச்சுட ருகல்போல்
மிச்சை நிரப்பின் மிதந்தோ ரன்றி
வைப்புக் கையர் வழங்கல்
துய்ப்புந லரலது தூற்றுவர் ஞான்றே!

திணை - பொதுவியல்
துறை - முதுமொழிக்காஞ்சி

# 4

உள்ளுவன் கொல்லோ உருகுவன் கொல்லோ
கள்ளம் ஊறிய கடுஞ்சொல் வயினெம்
எள்ளறு கேண்மை இகழுங் கொல்லோ!
கோடா நட்பொடு தலைநாட் கொண்டு
வாடா நினைவின் எம்முழை வந்து
பூத்த யாப்பின் புதுக்கள் மாந்தி
உயிருவப் புண்ட மயர்வறு காட்சி
மீட்டும் மனங்கொள மகிழுங் கொல்லோ!
எவன்கொல் அறிகுவம்; அவனுளக் கிடக்கை!
தமிழ்க்குடி புகுந்த நெஞ்சென் றேமே!
அதுபுரந் தருஉங் கையென் றேமே!
பொருட்குவை மிகுந்த விறலோன் மருங்கில்
அருட்கொடை எதிர்ந்தீ ராண்டையின் றேமே!
தமியே மன்றித் தமிழ்க்குயிர் செகுக்கும்
எமையோர் சிலரும் முகம்புகுந் தனரே!
துவ்வாச் செல்வ மீமிசைத் துஞ்சும்
கௌவை கேள்வன்; கடுநெஞ் சினனே!
எளிதவன் வினையே! அளிதவன் நினைவே!
உண்ணும் புற்கையு மீத்த வெண்ணிப்

பொன்றிய சிதடன் போல்கை யானே!
யாண்டுகொண் டொளிக்கு மவன்பெறு வைப்பே;
பொல்லாக் கேண்மையின் புல்லுரை மகிழ்ந்து
நல்லார்க் கழன்ற நெஞ்சன்
எல்லார்க்கு முறுகரி இழந்த ஞான்றே!

(தமிழ் நிறீஇச் சான்றோர்ப் புரக்கவென்று அறங்கூறி அமைய, இசைந்து மாறிய புதுவைச் செல்வன் ஒருவனை, அவனுழை யிருந்து தணந்த காலை, முன்னிலைக் கேங்கிப் பின்னிலைக் கிரங்கிப் பாடியது)

## 5

ஊன்றிய வித்தே உள்ளீ டயின்று
தோன்றித் துலங்கிய பயனின் றொழியின்
மீட்டும் அதுபோல் நாட்டுவ திலரே!
தந்திறம் பிறர்க்கு நல்கா தாரை
எந்திரப் பாவையின் இயக்கம் என்னா
மயங்குவ ரன்றி மனப்பொறி மாண்டு
வயங்குபுலன் பெற்றார் என்னலும் வழுவே!
வித்தின் விரிந்த தத்துயிர்ப் பொருளே!
தத்துயிர்த் தோன்றிய எத்துவ வெளியே!
அவையிற் றெழுந்தன் றலைவுறு மாவே!
ஒவ்வொரு திரிபிற் கொவ்வொரு பொறியே!
செவ்விதின் இயல்நிலை எனவிரு திணையும்
தந்திறம் வழங்கித் தம்பிறப் பறிப்ப!
முந்தை விரிவின் முடிவிற் றோன்றிய
மாந்தர் பலரே மன்றிறம் பேணா
துயிர்த்தலு முண்ணலு முடுத்தலு மாகிப்
பயிர்ப்பறப் பிறப்பின் பயன்காட் டாரே!
வித்துக் குறையோ விளைநிலக் குறையோ
எத்திற மருங்குந் தோன்றப்
பத்துத் துலக்கமும் பழுநிய நிலைக்கே!

## 6

ஏவலன் மகனே! ஏவலன் மகனே!
சேவலங் கொண்டை சிலிர்ப்ப வடர்சிறை
எற்றிப் புடைத்தே இருள்கிழித் திசைக்குங்
கூவல் மடுத்துக் குறுந்துயில் கலைந்து
யாறு நடந்து நறுநீர் கொணர்ந்து
கன்று காட்டி ஆமடி கறந்து
நாளங் காடி நண்ணி மீளுற்று
மிச்சில் அயின்றே உச்சி யகன்று
சாய்கதிர் கண்டு மேய்புலம் நிரையொடு
சென்று மீண்டு சிறார்யா மகிழச்
சொல்லாடித் துயில்போக்கும் நுந்தை போல
எல்லிருங் கொண்டிரோ ஏவலன் மகனே!

## 7

ஒருபுடை அவலம் இம்மை உள்ளிப்
பெரும்படை தாக்கிய சிறுவூர் போலச்
சிதைவுறும் உளமும் உயிரொடும் உடலே!
புதைவுறும் உயிரும் உளத்தோ டுடலும்
ஒருபுடை மகிழ்ச்சி பெறுநிலை யுற்றன
இதுகாண் தோழி கவடி வாழ்க்கை
எய்யவும் இலாது பொய்யவும் இலாது
கவ்வலும் விடலும் உயிரொடு காலனே!

(இம்மையில் தலைவனின் முந்தி யிறப்பதும், அவனின் பிந்தி யிறப்பதும் மாறி மாறி எண்ணி வருந்தித் தலைவி தன் நெஞ்ச அவலத்தைத் தோழிக்குச் சொல்லியது.)

## 8

கேளே வேண்டெம் வரைவே யெந்தையுட்
கோளே தகவோர்க்குக் கொடையே கூர்ங்கண்

வாளே நெஞ்சை நாளும் போழ்வன
தோளே சூம்புவ வரைவெதிர்ந் தவன்வாய்ச்
சூளே பூச்சுழல் மிஞிறா
நீள விசைத்துயிர் நிறுத்துமுள வயினே!

## 9

சேண்கொணர்ந் தன்பின் சிமிழ்த்த செவ்வாய்
ஊண்பெய்து புரந்து பூஞ்சிறை பயிற்றி
வளிவான் போக்கிய கிளிமகட் போலக்
களிமணம் புகுத்திய மனைக்கிழாய் நீகேள்!
ஊசிவாய்ச் சேர்த்த ஊர்ஞ்சிதர்த் தேட்டையின்
மாசறு பாட்டின் மணிக்குவை மீதுகாண்!
கொட்புல னொருகாற் குறையிறந்து மாற்றிய
ஒட்புறுஞ் செல்வத் துட்கை யீதுகாண்!
ஆங்கது மாறி யறங்கொள விசையுநிற்
பூங்கை பற்றித் தூங்குகிடை யீதால்!
என்றிவை யாங்ஙன் என்றீ குறுநகை
குன்றி வித்தக் குன்று விளைக்கு
முந்தையர் திருத்திய மொய்ம்புல னிதுகாண்!
கழுத்துமணி யசைய விராமுழு தயின்றே
உழத்த துயரறு மெருத்த மிவைகாண்!
வாய்த்த முதற்கொடு வித்தி வருபயன்
றோய்த்த லெங்கட னாகுக தொடர் கொடீ
வரல்நனி காத்துக் குரவர்ப் பேணி
இரவோர்க் கருளி எனையுற் காக்கிச்
சான்றோர் தூநெஞ் சுவப்ப
ஊன்றுபுகழ் தேக்குதல் உறுங்கட னினக்கே!

## 10

தீதலர் தெரித்த தெள்ளுரை பல்கால்
ஓதலி னன்றே உயிருவந் தொன்றிப்

போதா யலராய் புடையவிழ்ந்து மலராய
காதலு முண்டு சாதலுங் கண்டது
கூதளங் கண்ணியின் விழிகள்
காதள வோடிக் கவ்விய போழ்தே!

## 11

தேமாங் கொழுந்தைத் துவர்வாய்க் கிளிகள்
ஏமத் தருந்திக் காமுற் றிணையும்
புறவூர்த் தோப்பின் புல்பொதி தொப்பை
மறக்குங் கொல்லோ தோழி
இறந்துநகர் நண்ணிக் கலைபயில் வோற்கே!

## 12

தொக்கின் தொகாது மிக்கின் மிகாது
நெக்குநெக் குருகு மையன் கேண்மை
எக்கால் தாழ்ப்பினு மிகவாக்
கொக்குப் போல்வது யானவற் குறியே!

## 13

நெகிழ்ந்த கைதொழச் செருத்தலை தாழக்
கனிந்த கிளவியோ டுள்ளங் கசிய
நினையார்க்கு மருளும் நெஞ்சோன்
எனையார்க்கு மிரங்குக இணைகவன் றாளே!

## 14

நெஞ்சுநல மழுகிய நஞ்சினார் தோற்றம்
பஞ்சுப் பொதியாப் பருமைத் தாயினும்

மணலுள் ஊன்றிய மரம்போல
கணத்துட் சாவது காவலை வீழ்த்தே!

## 15

நெடுங்கல் அடுக்கத்துக் கொடுங்கற் பிளவுற
முகம்படர்ந் தெழுந்த சேண்தூங்கு பலவின்
பருங்கனி வாங்கிய கருவிரற் கடுவன்
அயலுறை இளமான் அருந்தக் கொடுக்கும்
முதுபுகழ்ப் பறம்பின் நெருக்கத் தீரே!
ஒக்கல் நெடும்பசி களைதல் வேண்டித்
தக்கார் குறிப்பின் புக்கார் பலரே!
யானறி கிலனவ் வூன்வளர் வாழ்வே!
தானுங் கிளையும் ஆர்தல் நினையாது
குடியும் மொழியும் புரத்தல் வேண்டி
ஆறுபல முனைந்தே ஊறுபல உழன்றும்
மாறுகொளா மன்னென் மனனே; மயர்வறத்
தேர்வுறு திறனதன் திறனே! ஒள்ளியர்
பழுதறு கொள்கை பற்றலென் றுணையே!
அறம்பாய் செய்யுள் நெறிபல வித்துந்
திறந்தெரிந்து உய்த்தலும் ஆறே!
மறந்திலா நன்றி மதித்தலென் கடனே!

## 16

பசுந்தழை பொடிந்து விசும்ப ளாவி
நிலவொளி நிழலா விலவி னமர்ந்தே
அக்கூ வென்றிய அழற்கண் ஆந்தை
உட்கோ ளுரைக்குவென் கேண்மோ ஈண்டே
உண்ணுவன் கொல்லோ உறங்குவன் கொல்லோ
திண்ணெதிர் நினைவின் எம்மொடு வதியும்
மனையொடு மகிழ்வேன் கொல்லோ தினைத்தனை
வாழ்வென் காலமும் வீழ்ந்துபடா தாழ்ந்து

*சுற்றச் சூழ்ந்தெம் மக்கள் துயர்க்கு*
*முற்றத் தந்து மூச்சுஞ் செயலும்*
*ஒழுக்கத் துணர்த்து மன்னோ*
*அடுக்கத் தலறுநின் அகல்வாய்க் குறிப்பே!*

# 17

*பொறிமயங்கி அறிவயர*
*நெறிமறந்து நினைவகல*
*விரிவானில் விழிசெலுத்தி*
*அகல்நிலத்தே அடியூர்ந்து*
*குதிகடலிற் குடைந்தெழுந்தே*
*எப்புடையும் எம்மருங்கும்*
*முப்பொழுதும் நினைத்தேடி*
*அலைந்தலைந்துங் காணாமே*
*நிலைமடிந்து நெஞ்சொடிந்து*
*அருந்துயிலின் அணைப்புண்டு*
*வருந்துகையில் எமைவந்தே*
*பொருந்திப் புணர்ந்தஎம் ஐய,*
*மருந்துந் தந்தனை நீபயந்த மயற்கே!*

# 18

*மஞ்சள் மசித்துக் குங்கும மளவிச்*
*சந்தனத் தேய்வின் பன்னீர் குழைத்துப்*
*பூவுடல் பூசிப் புதுப்புன லாடிய*
*தேமற் பொலிந்த தெரிவையே எனினும்*
*ஒப்பிலா நெஞ்சின் உடலொடு முயக்கம்*
*உப்பிலா நரந்தம் போல*
*எவ்வதும் புளிக்குமென் இயம்புதி யோயே!*

*திணை* - குறிஞ்சி

*துறை* - தன்னை மணம் பேச வந்தான் தவிர்க்கத் தன் காதலை உள்ளடக்கித் தோழியிடம் தலைவி குறிப்புணர்த்தியது.

## 19

மனையறம் புரந்த மாண்தகு புலவோர்
புனையெழிற் பெண்டிர்ப் போற்றா தியல்பின்
சமைவுறு ஏற்றத் தமைந்தன காட்டக்
கயற்கண் பிறைநுதல் கனியிதழ் பல்முகை
அறற்குழல் துடிநுசுப் படிமரை மலரென
ஆரா வியற்கையொடு உய்த்தனர் புகன்றே!
யாங்குகொல் நின்னைப் பொய்ப்புகல் வதுவே
நின்னின் உயர்ந்தன்று பொன்னின் பாவை!
கண்ணின் மேய்ந்தன்று கயலே! கழுத்தே
சங்கின் எதிராது! பல்நாணு முகைக்கே!
எச்சிற் றுவரிதழ் இன்கனிக் கிளைப்ப;
சேவற் குடுமிச் செம்முது கலவன்
மேயுமை யறல்முன் குழலற வுதிரும்!
துடியினது ஒடுக்கின் நின்னிடை யொடுங்கும்!
அரசுப் பூவடி அடையுநின் னடியே!
அணுவின் அண்ணிய பேரா விறையால்
மண்ணுள் விளைந்து மன்னிய வெல்லாம்
தாந்தனி யெழிலொடு தாமிலங் குவபோல்
நின்னிடை மாழ்கிய எழில்நின் னஃதே!
என்றிறத் தானும் இலையிவ ணொப்பே!
அவையவை வயினே அவையவை உயர்வே!
நின்னெழில் நின்வயின் உயர்வே! நீயே
என்னொடு பொருந்தி யிணைத்தனை உயிரே!
ஒன்றிய இரண்டுள் உண்டொன்று சிறப்பே?
புதுமுறை மரபின் போற்றுவ தொழிந்த
இதுவோ பூண்டநங் காதல்
அதுவே யாகின் அணைகநம் முயிரே!

## 20

மின்னகம் புலந்தர மேனி மேயுநின்
கண்கய லசைவைக் கண்டுயர் வென்னா

ஒளியுமிழ் பிறைநுதல் ஊர்ந்தெழி வசைக்கு
நெளிகுழ லடர்த்த நிழலினி தென்னா
அகங்களி முகிழ்த்த கவின்குழிக் கன்னம்
வகுமாங் கதுப்பெயின் வாய்ந்தென உரையா
மதர்த்துப் பொங்குபு மாமைக் கோட்டகம்
விதிர்ப்புறத் தாங்கிடை வியத்தெனா நின்று
ஊன்கசிந் துயிர்நலம் உறிஞ்சக் குழைதருந்
தேன்கசி ஈரிதழ் தினல்வாழ் வென்று
செஞ்சீ ரடிதரச் சிலம்பு முனகலுந்
துஞ்சு வளக்கை துளும்பு கொஞ்சலும்
அழகீ தென்னோன் பழகிய ஞான்றை
எக்குடி மகளீர் என்றறிந் தக்குடி
ஒக்குமோ மேட்டிமை மகனையா னூர்கொள
மணந்தில னாயிற் றணந்திழி வாய்ப்பட
ஒவ்விலை நெஞ்ச மென்றோன் உகுவிழீ
செவ்விதின் ஆளன் எனயான் றேர்கிலன்
பெட்பெதிர் வந்தெனின் கட்புலன் மீளான்
ஒட்புளங் கேட்டினோ சான்றவ ருரைக்குக்
கொள்பொரு ளாகுவை குவையோ டுனைக்கொள
நினைத்தெனின் இழிமடி ஆணெனு நெறியோர்
தாமே மெய்நலிந் தீட்டுதல் தவிர்த்தே
ஏமம் மனைவழி யாம்பெறு மென்னார்
ஏயிவை மேவா தீண்டிவன் வந்தென்
ஆயுநர் இல்லா அறந்தவிர் மாக்கள்
வித்திய வேற்றுமை வீழ்ந்திழிந் திரியுங்
கல்லாப் பெண்ணேய்ங் கண்ணிலாப் பேதையின்
அல்லற் படுத்து மல்லற் கியாமே
பிறந்தே மல்லேம் பீடிலான் றன்னை
மறந்தும் நினைகொளா வினியே மாணொடு
காதல் கசியுங் கற்புளத் தடக்கித்
தீதறு நாணத் திரைநனி போர்த்து
வருந்துயர் வாளர்க்கு வாள்விழி காட்டிப்
பொருந்துந வாளர் பொன்றுநாட் பொருந்தித்

தண்டோட் டழுவ லல்லதைக்
கண்டோர் மயங்கல் காட்சியிற் கழன்றே!

*திணை - குறிஞ்சி*

*துறை - தலைமகனைத் தோழி ஐயுற்றுத் தலைவியைத் தெருட்டியது*

# 21

முகில்தொடு தெங்கின் முரலம் பாளை
உகிர்க்குறை யன்ன ஒள்வாட் சீவல்
தண்கட் சிதர்வொடு தளிர்தோள் தடவ
மொய்ம்புடற் சிலிர்க்குந் தொய்குழன் மடவீர்,
நெளிவிர லடுக்கு மிழ்படு கீற்றின்
ஒலியிணைந் துயிர்க்குங் களிதுள் மெல்லிசை
வலிவுறு நெஞ்சம் பின்ன
நலிவுறு மிவரடி வினைகெடல் நினைமே!

*திணை: குறிஞ்சி*

# 22

முப்புடை முந்நீர் முழக்கிடைப் படுத்த
தெப்பத் தன்ன திகழ்ஞா லத்து
மாந்தர் மாந்தர் என்மனார் மாந்தர்
முற்றிய உணர்வின் நெடும்பின் னெதிர்வை
ஒற்றி யுணர்வார், உறுவன சிறுகால்
முற்படத் தெளிவார், முளுங் காலை
உட்பட நினைவார், உழன்றறி வமைவார்,
பல்காற் பட்டும் உள்கா ரிவரோ
டொன்றும் ஒருமையும் உணரா ராகி
என்றும் பிறரோ டயங்குறு மாக்களென்
டறுவகைத் தோரோ! அதர்வகை நான்கே!
ஒன்றே,

இறப்பினும் அறவழி இகவாத் தலையே!
இரண்டே,
பிறர்க்கெனக் கவலாத் தனக்கெனும் பிழைப்பே!
மூன்றே,
முயற்சிக் குறைவின் பிறர்தலைச் சூழ்வே!
நான்கே,
முற்றும் முயல்வற முன்னோர் ஈட்டமும்
சுற்றப் பாடும் சூழ்ந்துணும் இழிவே!
ஈங்கிவை பயின்ற புகழும் ஆறே:
தம்மாற் பிறந்து தம்மொடு மாய்தலும்,
தம்மின் பின்றைத் தம்நாள் எஞ்சலும்,
தங்குடி நாள்வரை தம்பெயர் நிற்றலும்
தங்குலம் வாழ்தலை தஞ்சீர் பிறங்கலும்
தம்விளை வுறுந்தலை தம்புகழ் பரத்தலும்
உலகம் உள்ளுழி ஒளிர்தலும் அவையே!
என்றிவை நுணுகிய சான்றோர், ஈண்டே
வாழ்நாள் வடுப்படும் வழிபே ணலரே!
சூழ்வறிந் துய்யலின் தாழ்வறி கிலரே!
வாழ்வெனற் றம்புகழ் வாழ்வும்
வீர்வெனற் பொதியுடல் வீழ்வுமென் பாரே!

# 23

மெய்யறி நெஞ்சே உய்யுமா றிவணே!
கைபுனைந் தியற்றாக் கரணிய கருமமாய்
ஐயுறை பூதத் தாகலும் பரிதலும்
உய்யுயிர் உணர்தலும் உளம்விரித் தொளிர்தலும்
கற்பான் வந்த கவினுறு வாழ்க்கை
உவகையும் அவிகையும் உறழ்தலால் ஒடுங்கிக்
கவிழ்கன் னத்துக் கையிரண் டூன்றிச்
சூழ்பல காட்சிக்கு உள்ளம் சுண்டி
வீழ்நிலை தவிர்த்து விளங்குக இனனே!
காரிரு ளின்றிக் கதிரொளி யிலைபோல்

ஆரவ வின்றி அயன்மிசை யிலைபோல்
அழுகை யின்றி அருமகிழ் விலைபோல்
விழுகை யின்றி எழுகையும் இலைபோல்
எள்ளும் இழிவும் இகந்த ஒழுக்கமும்
கள்ளுங் களியுங் கயமையு நிறைந்தே
அடுவதும் அழிவதும் ஆகிப் புதுவதாய்க்
கெடுவ தின்றே உலகம் கீழ்மையுங்
கொலையுங் களவுங் கூடிய புனைவும்
புலையும் பொய்யும் உலகத் தியல்பே!

## 24

யாக்கைக் குளிரிகு நாக்கனல் வெக்கை
ஆக்கியோ ரொருவ ராயினுந் தெருமரப்
பெறுவோ ரிலரின் வெறுவா மாக
உறுவோர்க் கீக வுற்ற ஞான்றே!



## பிற்குறிப்புகள்

நூறாசிரியத்தின் மூலப் பாடல்கள் எழுதப்பெற்றிருந்த சுவடியில் இந்நூல் தொடர்பாகவும் பிறவாறும் எழுதி வைத்திருந்த குறிப்புகள் பல. அவை இங்கே தரப் பெறுகின்றன.

* நூறாவது பாடலாக எழுதப் பெற்றிருந்த ஒன்றிறை என்னும் பாடலை முதற்பாடலாக எடுத்துக் கொண்டு 'உயிரின் மாட்டே' எனத் தொடங்கும் தொண்ணூற்றொன்பதாம் பாடலை யொட்டி

"நூறாவது பாட்டாகக் கொள்க!"

என்று குறிக்கப் பெற்றிருப்பதோடு

"ஆங்கவ னருளா லிங்கிவ ணிற்றது"

என்னுங் குறிப்பும்- காணப்பெறுகின்றது.

பிற குறிப்புகளாவன.

'உயிரின் மாட்டே உடலின் இயக்கம் –உயிரே
நீருண் கனலா நிகழ்விலாப் பதுவாய்,
உளமும் அறிவும் உறுத்த வுறுவதுவே
உளமே அறிவே உவராய் நீராய்'

* "கதிரவன் சூட்டை உடலுட் புகுத்துவதும் சுவற்றுவதும் செய்தல் போல்"

*'நெடுந்தொலைமே' இப்பாடலையும் நூறாசிரியத்துட் சேர்க்க!
தெ.மொ.இயல்! பொங்கல் மலர்

* "காமரா சென்னுங் கடமை மாமலை"
- இப்பாடலையுஞ் சேர்க்க.

* "எண்ணலொன்று நாவால்
எடுத்துரைத்தல் மற்றொன்று
பண்ணலொன்று சாரும்
பயனொன்று -மண்ணுலகின்
மாந்த வினத்தின்
மதி நலத்தை என்னென்போம்
காந்து மனமறிமோ
கண்?"

*"பல உயிர்களின் ஓடம் இவன்!
உடல்களின் ஓடம் போலும்
உயிர்களின் ஓடம் இவன்!"



- ......

*உயர்செந் தமிழ்க்கே உறநின் றாரை*
*வெய்வேட் டெஃகம் விதிர்ப்பறத் தாங்கிக்*
*கொய்துயிர் துணித்தது கொலையோன் கோலே!*
*புன்றலைச் சிறாஅர் செந்நீர் ஆடியோன்*
*முந்நிற நெடுங்கொடி முன்றிலும் சிதைக!*
*அன்னோன் தாங்கிய அரசுஞ் சிதைக!*
*முற்றா இளவுயிர் தமிழ்க்கெனப் போக்கி*
*வற்றா நெடும்புகழ் வழிவழிக் கொண்ட*
*இளையோர் காத்த எந்தமிழ்*
*கிளையுறப் பொலிக குலைவிலா தினியே!*

*(நூறாசிரியம் 51)*

- ......

*குலக்கோ டரிந்து சமயக்கா லறத்துணித்துக்*
*கலக்குறு கொள்கைக் கடவுண் மறுத்தே*
*யாரும் யாவும் யாண்டுந் துய்மெனப்*
*புதுமை பொழிவித்துப் பொதுமை தழைவிக்கும்*
*அரியா ராகலி னவரே*
*பெரியா ரென்னும் பெயரி யோரே!*

*(நூறாசிரியம் 24)*

- .....

*யாண்டவ னாயினும் மாண்டுப் பீடொடு*
*வேண்டுவ சுரக்கும் வியன்றமிழ்க் கல்வி*
*துறையறப் போகித் துணிந்து குறையற . . .*
*குணங்குயர் காட்சி வணங்குறு வாழ்வின்*
*சான்றோர்க் கினித்த சொல்லி னானை*
*ஈன்றோர் தவிர்க்கினும் வேண்டுமென் நெஞ்சே!*

*(நூறாசிரியம் 71)*

---

தென்மொழி நூல் வெளியீட்டு விற்பனையகம்,
5, அருணாசலத் தெரு, சென்னை – 600 005.